# தமிழ்ச்சுவடி விளக்க அட்டவணை

முதல் தொகுதி

(1 முதல் 500 நூல்கள் வரை)


பதிப்பாசிரியர்

முனைவர் த. கோ. பரமசிவம்

தலைவர், ஓலைச்சுவடித்துறை

தொகுப்பாசிரியர்

முனைவர் வே. இரா. மாதவன்

புலவர் ப. வெ. நாகராசன்





தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்

தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடு ; 79-1 ISBN : 81-7090-088-3
(Set No)
81-7090-089-1

திருவள்ளுவர் ஆண்டு : 2018 - கார்த்திகைத் திங்கள் - நவம்பர் 1987

பதிப்பாசிரியர் : முனைவர் க. கோ. பரமசிவம்

பதிப்பு : முதற்பதிப்பு

விலை : உரூ. 85-00

அச்சு : தொன்போஸ்கோ அச்சகம், தஞ்சாவூர்.

இந்நூல் மைய அரசின் தில்லி, தேசிய ஆவணக்காப்பகம் வழங்கிய நல்கையின் வழி வெளியிடப்பெறுகிறது.

Published with the financial assistance of National Archives, Govt. of India, New Delhi.



# தமிழ்ப் பல்கலைக் கழகம்

தஞ்சாவூர்

## அணிந்துரை

தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் பல்வேறு பணிகளில் பண்டைத் தமிழ்ச் சான்றுகளைப் போற்றிப் பாதுகாப்பதும் அவற்றை வெளி உலகுக்குத் தெரியப்படுத்துவதும் ஒன்றாகும். தமிழகம் பழங்கால ஓலைச்சுவடிகளுக்குப் பெயர் பெற்ற ஒரு இடம் ஆகும். ஆயிரக்கணக் கான ஓலைச்சுவடிகள் தமிழகத்திலே இருப்பது வேறு எந்த நாட்டிலும் காணமுடியாத சிறப்பாகும். எனவே இவ்வோலைச் சுவடிகளைப் பாதுகாத்து அழியாத செல்வங்களாக வைப்பதும் அவற்றை அச்சில் வெளிக்கொணர்வதும் இன்றியமையாத ஒரு நல்ல தமிழ்ப்பணி யாகும். இத் தமிழ்ப்பணியைக் கருத்தில் கொண்டுதான் தமிழ்ப் பல்கலைக் கழகம் இதற்கெனத் தனி ஒரு துறையைத் தோற்றுவித் துள்ளது.

கடந்த ஒரு சில ஆண்டுகளாகத் தமிழ்ப் பல்கலைக் கழக ஓலைச் சுவடித் துறையின் வாயிலாக 3,000க்கும் அதிகமான சுவடிகள் தொகுக்கப்பட்டுள்ளன. இவற்றுள் பெரும்பாலானவை நல்ல மனம் கொண்ட அன்பர்கள் பலரால் அன்பளிப்பாகக் கொடுக்கப்பட்டவை. இவை அனைத்திற்கும் விளக்க அட்டவணை ஒன்று தயாரித்து வெளி யிடும் திட்டத்திற்குத் தில்லி தேசிய ஆவணக் காப்பகம் ரூ. 1,25,000 அளித்து உதவியது.

இத் திட்டத்தின் வாயிலாக உருவாகியுள்ள நூல்களே இப்போது வெளி வருபவை. இரண்டாயிரம் சுவடிகளைப் பற்றிய விவரங்களை இந்நான்கு தொகுதிகளும் கொண்டுள்ளன. இது நிச்சயமாகத் தமிழ் ஓலைச்சுவடி ஆராய்ச்சியில் ஈடுபட்டுள்ள அறிஞர்களுக்கும் பொது மக்களுக்கும் பயன்படுவதாகும்.

இத் திட்டத்திற்கு நல்கை வழங்கிய தில்லி தேசிய ஆவணக் காப்பகத்தார்க்கும் இத்திட்டத்தில் இயக்குநராகவும், பதிப்பாசிரியராகவும் இருந்து அண்மையில் ஓய்வு பெற்ற பேராசிரியர் மு. சண்முகம் பிள்ளை அவர்களுக்கும் அதன்பின்னர் இத் திட்டத்தை நிறைவேற்றிய முனைவர் த. கோ. பரமசிவத்திற்கும் என்னுடைய பாராட்டுக்கள்.

தொகுப்புப் பணியில் ஈடுபட்ட முனைவர் வே. இரா. மாதவன், புலவர் ப. வெ. நாகராசன் மற்றும் இத் திட்டம் நிறைவேற ஒத்துழைப்பு நல்கிய அலுவலர் அனைவர்க்கும் என் பாராட்டுக்களும், வாழ்த்துக்களும் உரியன.

*தமிழ்ப் பல்கலைக் கழகம்,*
*தஞ்சாவூர்.*
*நவம்பர் 10, 1987*

ச. அகத்தியலிங்கம்

# உள்ளுறை

## தில்லி, தேசிய ஆவணக்காப்பக நல்கைத்திட்டம் - 1986-87

*இத்திட்டத்தில் பணியாற்றியோர்*

1. பேராசிரியர் மு. சண்முகம் பிள்ளை,
முன்னாள் சுவடிப்புலத் தலைவர்

2. முனைவர் த. கோ. பரமசிவம்,
தலைவர், ஓலைச்சுவடித்துறை

3. முனைவர் வே. இரா. மாதவன்,
விரிவுரையாளர், ஓலைச்சுவடித்துறை

4. முனைவர் சா. கிருட்டிணமூர்த்தி,
விரிவுரையாளர், ஓலைச்சுவடித்துறை

5. புலவர் ப. வெ. நாகராசன்,
தொழில் நுட்ப உதவியாளர், ஓலைச்சுவடித்துறை

6. திரு. சி. இலட்சுமணன்,
தொழில் நுட்ப உதவியாளர், ஓலைச்சுவடித்துறை

# பதிப்புரை

அன்றைய அழகு தமிழை, இன்றைய நிலைக்கும் நாளைய அறிவியல் சூழலுக்கும் தக்கவாறு உருவாக்கும் அரிய பெரிய பணியில் தமிழ்ப் பல்கலைக் கழகம் ஈடுபட்டுள்ளது. மொழிக்கென உருவாகும் பல்கலைக் கழகங்களுள் தமிழ்ப் பல்கலைக் கழகம் முதன்மையானது. சீரிய முறையில் திட்டமிட்டுச் செவ்வனே வளர்க்கப்பெற்று வருவது. அன்றைய அழகு தமிழின் அறிவையும் ஆழத்தையும் இலக்கியச் செறிவையும் இனிய பண்பையும் உயர்தனித்தன்மையையும் நாம் உணர்ந்து கொண்டால்தான் நாளைய தமிழைச் செவ்வனே உருவாக்கிச் செம்மொழியாக அறிவியல் மொழியாக அதை வளர்க்க இயலும். இவ்வரிய பணிக்கு முதல் அடிப்படை நம் முன்னோர்தம் அறிவுக் கருவூலங்களாம் ஓலைச்சுவடிகளைப் போற்றிப் பாதுகாத்தல் ஆகும். இதனை முறையாகச் சிந்தித்த தமிழ்ப் பல்கலைக் கழகம் பழமையைப் போற்றிப் பாதுகாக்கவேண்டும் என்னும் உயர்ந்த எண்ணத்தில் ஐந்து புலங்களுள் ஒன்றாகச் சுவடிப் புலத்தை உருவாக்கிச் சிறப்பித்தது.

## ஓலைச்சுவடித் துறையின் நோக்கம்

ஓலைச்சுவடித்துறை சுவடிப்புலத்தின் சிறப்பு வாய்ந்த மூன்று துறைகளுள் ஒன்றாகும். இத் துறை இரண்டு நோக்கங்களை அடிப்படையாகக் கொண்டு நிறுவப்பெற்றது. ஒன்று இதுவரை வெளிவந்துள்ள நூல்களைச் சுவடி ஆய்வு செய்து வேண்டிய ஆய்வுக் குறிப்புகளுடன் பாட நுண்பதிப்பாக மீண்டும் வெளியிடல். இரண்டு இதுவரை வெளிவராத நூல்களைச் சுவடி ஆய்வு செய்து வேண்டிய ஆய்வுக் குறிப்புகளுடன் வெளியிடுதல். இந்த இரண்டு நோக்கங்களுக்கும் துணைசெய்யும் வண்ணம் ஆங்காங்குப் போற்றிப் பாதுகாப்பாரின்றி அழிந்து சிதறும் தமிழ்ச்சுவடிகளைத் தேடித் தொகுத்துப் பாதுகாக்கும் சுவடி நூலகம் ஒன்றை இயக்குதல் வேண்டும். இந்த அடிப்படையில் அமைக்கப்பெற்ற ஓலைச்சுவடித்துறை இன்று வரை 2100 தமிழ்ச் சுவடிகளைத் தேடித் தொகுத்துள்ளது.

நம்மிடம் எவ்வளவோ உயரிய இலக்கிய இலக்கணங்கள் இருந்தன. இசை நாடகம் முதலிய நுண்கலை நூல்கள், மருத்துவம், சோதிடம் போன்ற வாழ்வியல் நூல்கள், கட்டடக்கலை, சிற்பக்கலை போன்ற

பொறியியல் நூல்கள் மற்றும் பல அறிவியல் நூல்கள் எத்தனை எத்தனையோ நூல்கள் முன்பு இருந்தன. இப்போதும் போற்றுவாரின்றி மூலை முடுக்குகளில் இருக்கின்றன.

ஆயின் அவற்றுள் பல நூல்களின் அருமை பெருமை உணராது ஆற்றில் போட்டும் நெருப்பில் கொளுத்தியும் நம் அறியாமை காரணமாக நாம் அழித்துவிட்டோம். முறையாகப் பாதுகாக்க முடியாமல் கறையானுக்கும் பிற பூச்சிகளுக்கும் இரையாக அழிந்த நூல்கள் பல. இயற்கை செயற்கை அழிவுகளினின்றும் தப்பிப் பிழைத்து இந்நாளில் நூல்வடிவில் வெளிவந்து வாழும் நூல்கள் மிகச் சிலவே.

சென்ற நூற்றாண்டிலும் இந் நூற்றாண்டின் தொடக்கத்திலும் வாழ்ந்து பதிப்பாசிரியப் பெருமக்களாக விளங்கிய சி. வை தாமோதரம் பிள்ளை, ஆறுமுக நாவலர், டாக்டர் உ. வே. சாமிநாதையர், பேராசிரியர் ச. வையாபுரிப்பிள்ளை போன்றோர் தொகுத்துப் பயன் படுத்திய சுவடிகளுள் பலவற்றை நாம் இன்று காண முடிவதில்லை. ஒரு சமயம் அவர்கள் கண்களில் கண்ட சுவடி மறுமுறை தேடிப்போகும் போது அவர்களுக்கே கிட்டவில்லை. இந்த நூற்றாண்டின் சில ஆண்டுகளிலேயே சுவடிகள் மிக விரைவாக அழிந்து மறைந்துவிட்டன என்று எண்ணும்போது வேதனை மிகுகிறது. பதிப்பாசிரியப் பெரு மக்கள் கண்டு போற்றிப் பாதுகாத்து அச்சிட்ட சுவடிகளின் நிலையே இது என்றால், இனி நம் அறிவுக்கும் வாராத சுவடிகளின் நிலை என்னவாயிருக்கும்? அறிவியல் யுகத்தில் வாழும் நாம் இனியாவது இவ்வாறெல்லாம் அரிய சுவடிகள், நூல்கள் அழியா வண்ணம் பாதுகாக்க வேண்டாமா?

மொழிக்கென உருவாக்கப்பெற்ற இத் தமிழ்ப் பல்கலைக் கழகம் இதனை ஆழமாகச் சிந்தித்து உலகெங்குமுள்ள தமிழ்ச் சுவடிகளைத் தேடித் தொகுப்பதிலும் அட்டவணை செய்வதிலும் அதிக அக்கறை செலுத்தி வருகிறது.

## சுவடித் தொகுப்பு

ஓலைச்சுவடிகள் இருக்குமிடங்களையறிந்து ஆங்குச் சென்று உரியவர்பால் கலந்துரையாடி அவற்றை அன்பளிப்பாக - நன்கொடையாகப் பெற்றுவந்து தொகுப்பது என்றும், அரிய சுவடிகளை விலை கொடுத்துப் பெற்றாவது பாதுகாப்பது என்றும் முடிவு செய்தது ஓலைச் சுவடித் துறை. அந்த வகையில் தொகுக்கப்பெற்ற சுவடிகளே இன்று சுவடி நூலகத்தில் காட்சியளிக்கின்றன.

இத் தொகுப்புப் பணியில் துணைபுரிந்த தமிழ் அன்பர் பலராவர். தமிழ்ப்பல்கலைக் கழகத்தில் ஓலைச் சுவடித்துறை நிறுவப் பெற்றுள்ளது என்பதை அறிந்த அளவிலேயே அவர்கள் தங்களிடமிருந்த சுவடிகளை அன்பளிப்பாக வழங்க முன்வந்தனர். முன்னாள் மாண்புநிறை துணைவேந்தர் முதுமுனைவர் வ அய். சுப்பிரமணியம் அவர்கள் தம்மீது சுமத்தப்பெற்ற பல்வேறு பொறுப்புகளுக்கிடையேயும் ஓலைச் சுவடிகளைத் தேடித் தொகுப்பதிலும் ஆர்வம் காட்டி வந்தார்கள். இத்துறையை முறையாக அமைக்கத் தொடங்குமுன்பே அவர்கள் பல சுவடிகளைத் திரட்டி வைத்திருந்தார்கள் என்பது இங்கே குறிப்பிடத் தக்கதாம்.

அவர்கள் தந்த ஊக்கம் காரணமாக இத்துறையினர் தமிழ்ச் சுவடி வைத்திருப்போர் பலரை அணுகி, அவற்றை இப் பல்கலைக் கழகத்திற்கு வழங்குமாறு கேட்டுக்கொண்டனர். அதே போன்று திருக்கோயில்கள், திருமடங்கள் போன்ற சமய நிறுவனங்களிடம் சென்றும் சுவடிகளை வேண்டிப்பெற்றனர். சிலர் தங்களிடம் சுவடி இல்லாதிருந்தும் சுவடியை வைத்திருப்பாரின் பெயர், முகவரி முதலியவற்றைக் கொடுத்து 'அங்குச் சென்றால் கிடைக்கும்' 'இங்குக் கேட்டால் பெறலாம்' என்று ஆற்றுப்படுத்தித் துணைபுரிந்தனர். சுவடி வைத் திருப்போர் சிலர் வறுமை காரணமாக அவற்றை விலை மதிப்பிட்டு வழங்க முன்வந்தனர். சுவடிகளைத் தேடித் தொகுத்துப் பாதுகாப் பதில் முனைப்பாக இருந்த தமிழ்ப் பல்கலைக் கழகம் அத்தகு சூழல் களிலும் பின்வாங்கவில்லை. உரிய விலையை மதிப்பிட்டு வழங்கிச் சுவடிகளைப் பெற்றது. சுவடிகள் எங்கே கிடைத்தாலும் தமிழகத்தின் மூலை முடுக்குகளுக்கும் பட்டி தொட்டிகளுக்கும் கூட சென்று அவற்றை பெற்றுவர முனைந்துள்ளனர் இத்துறையினர். தமிழகத்துக்கு அப்பால் கிடைக்கும் சுவடிகளுக்காகவும் ஏங்கித் தவமிருக்கின்றனர் என்றால் அது மிகையாகாது.

இவ்வாறு தேடித் தொகுக்கப் பெற்ற சுவடிகள் முறையே தூசி துடைக்கப் பெற்று, ஒழுங்காக (ஏடுகள்) அடுக்கப் பெற்று, நைந்த கயிறு சட்டங்களை மாற்றி, அவற்றிலுள்ள நுண்கிருமி, பூச்சிகளைக் கிருமி நீக்கப் பேழை (Fumigation Chamber) யில் வைத்துப் பூச்சிக்கொல்லி மருந்துகளால் அழித்துத் தூய்மை செய்யப் பெறுகின்றன. இனியும் பூச்சிகள் சேர்ந்து அரித்து ஒழிக்காதவாறு பாதுகாக்கும்வண்ணம் காப்பு எண்ணெய் பூசி அவை மேலும் செப்பம் செய்யப் பெறுகின்றன. அவ்வாறு செப்பம் செய்யப் பெற்ற சுவடிகள் முறையே பதிவேடுகளில் நூலின் பெயர், நூலாசிரியர் பெயர், அளவு, சுவடி நிலை, அன்பளிப்பாளர் பெயர், முகவரி, நாள் போன்ற விவரங் களுடன் பதிவு செய்யப்பெற்றுச் சுவடிநிலைப்பேழைகளில் நூலக வரிசை எண் கொடுக்கப்பெற்று அடுக்கிப் பாதுகாக்கப் பெறுகின்றன.

## சுவடி விளக்க அட்டவணை

இவ்வாறு தமிழன்பர் பலரின் அன்பாலும் ஆக்கத்தாலும் தொகுக்கப்பெற்ற சுவடிகளின் விளக்க அட்டவணையே இப்பொழுது வெளிவருகின்றது. நூலகங்களின் தலையாய பணி நூல்களைத் தேடித் தொகுப்பதோடு நின்றுவிடாது, அவற்றை ஆய்வாளர் பயன்படுத்தும் வண்ணம் வழங்க வேண்டும். இருக்கின்ற நூல்கள் எவை ? எந்நிலையின ? எச்சிறப்பின ? போன்ற விவரங்களை வெளியிட்டு, ஆய்வாளர் பால் படித்தறிய வேண்டும் என்ற உந்துதலையும் உருவாக்க வேண்டும். இப்பணியைச் சிறக்கச் செய்யும் நூலகமே பயன்படும் நூலகமாக, வாழும் நூலகமாக, இயக்கமுள்ள நூலகமாகக் கருதப் பெறும்.

அந்த வகையில் இத் துறையின் சுவடி நூலகமும் தன்னிடமுள்ள நூல்கள், சுவடிகள்பற்றிய விவரங்களை வெளியிட முனைந்தது. கணிசமான அளவுக்குச் சுவடிகள் சேர்ந்தபின் அவற்றை முறையாக விளக்க அட்டவணைகளாக வெளியிட வேண்டும் என்று எண்ணிக்கொண்டிருந்தது. அப்போது தேசிய ஆவணக் காப்பகம் சுவடிகளைத் தேடித் தொகுக்கவும், பாதுகாத்துப் பராமரிக்கவும் அவற்றைப் பதிப்பித்து வெளியிடவும் நல்கை வழங்கும் திட்டங்களை வரவேற்று ஊக்கப்படுத்தும் நிலை தெரியவந்தது. உடனே தமிழ்ச் சுவடி விளக்க அட்டவணைகளைத் தொகுதிகளாக வெளியிடும் திட்டம் ஒன்றை உருவாக்கித் தேசிய ஆவணக் காப்பகத்தின் நல்கை வேண்டி, தில்லிக்கு அனுப்பப் பெற்றது. அவர்களும் இத் திட்டத்தை ஊக்குவிக்கும் வண்ணம் உடனே நல்கை வழங்கினர். இத் திட்டத்தின் வழி வெளிவரும் முதல் தொகுதி இதுவாகும்.

இத்திட்டத்தின் வழி 500 நூல்கள் பற்றியவிவரங்களைக் கொண்ட தொகுப்பு ஒரு தொகுதியாக 2000 நூல்கள் பற்றிய விவரங்கள் தொகுக்கப் பெற்று நான்கு தொகுதிகளாக வெளிவருகின்றன. முன்னாள் சுவடிப்புலத்தலைவரும் ஓலைச்சுவடித்துறைத் தலைவருமான பேராசியர் மு. சண்முகம்பிள்ளையவர்கள் தாம் பொறுப்பில் இருந்த காலம் வரை இத்திட்டத்தின் இயக்குநர் பொறுப்பைக் கவனித்து வந்தார்கள். இம்முதல் தொகுதியின் தொகுப்புப் பணியில் இத் துறையின் விரிவுரையாளர் முனைவர் வே. இரா. மாதவன் அவர்களும் தொழில் நுட்ப உதவியாளர் புலவர் ப. வெ. நாகராசன் அவர்களும் ஈடுபடுத்தப்பெற்றனர். தொகுப்பு முறை பற்றியும் இடம் பெற வேண்டிய விவரங்கள் பற்றியும் இத்துறையின் ஆய்வுக்குழு உறுப்பினர் அனைவரும் பல்வேறு ஆக்கப் பூர்வமான கருத்துகளை வழங்கினர். அந்த வகையில் உருவாக்கப் பெற்றனவே இத் தொகுதிகள்.

## முதல் தொகுதி

இத் தொகுதியில் இடம் பெற்றுள்ள சுவடிகளில் அடங்கிய நூல்களின் எண்ணிக்கை 500 ஆகும். சுவடி விளக்க அட்டவணைத் தொகுதிகள் ஆசிரியர் வகையினாலோ, நூல் பொருள் வகையினாலோ, காலவகையினாலோ முறையாக்கப் பெற்றனவல்ல. நூலக வரிசை எண்ணில் அமைந்த வரிசை முறையிலேயே அடைவு செய்யப் பெற்றுள்ளன. பல்வேறு ஆசிரியர்களின் நூல்கள், பல்வேறு பொருளைச் சார்ந்த நூல்கள், பல்வேறு காலத்தில் மலர்ந்த நூல்கள் என இதன் கண் பலதரப்பட்ட நூல்கள் இடம் பெற்றுள்ளன. ஓர் ஏட்டில் அமைந்த நூல் முதல் 367- 462 ஏடுகளில் அமைந்த சுவடி வரை அளவிலும் வேறுபாடு கொண்டனவாகவே உள்ளன. இது போன்றே இன்னும் பல தொகுதிகள் வெளிவந்த பின்பு ஆசிரியர் வாரியாகப் பொருள்வாரியாக நூல்கள் அடைவு செய்யப்பெற்றுத் தொகுதிகளாக வெளியிடப் பெறுதல் தகும். இப்போதைய தொடக்க நிலையில் இம்முயற்சியே போதுமெனக் கருதப்பெற்றமையும் ஈண்டுக் குறிக்கத் தகுவதாம்.

இத் தொகுதியில் தொல்காப்பியம் போன்ற சங்க நூல்களும் திருக்குறள், பிற பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் போன்ற நீதி நூல்களும், தேவாரம், திருவாசகம் முதலிய சைவத் திருமுறைகளும், பிற்காலச் சிற்றிலக்கியங்கள், இலக்கணங்கள், தனிப்பாடல்கள், நாட்டுப்பாடல் முதலிய மொழி நூல்களும் மிகுதியான மருத்துவ, சோதிட நூல்களும் இடம் பெற்றுள்ளன. முழுமையான சுவடிகள் முதல் குறைப்பட்ட நூல்கள், பழுதடைந்த சுவடிகள், முற்றிலும் படிக்க முடியாது சிதைந்த நூல்கள் வரை சுவடியின் நிலையிலும் பலதரப்பட்ட நிலைகளைக் காணக்கூடும்.

## முதல் தொகுதியின் சிறப்புகள்

இத் தொகுதியில் காணப்பெறும் சுவடிகள்-நூல்கள் பலவற்றுக்குச் சிறப்புக் குறிப்புகள் தரப்பெற்றுள்ளன. மாற்றுச் சுவடிகள் காணும் இடங்கள், அச்சான விவரம் ஆகிய அச் சிறப்புக்குறிப்புகள் பிற தொகுதியில் இடம் பெற்றுள்ள சுவடிகளுக்குத் தர இயலாமல்போய் விட்டன. கால நெருக்கடியும் தமிழ்நூல்களின் விவர அட்டவணைகள் கிடைக்காமையுமே அதற்கான காரணங்கள்.

மாற்றுச் சுவடிகள் காணும் இடங்கள் என்ற குறிப்பில் தமிழக, இந்தியச் சுவடி நூலகங்களில் காணப்பெறும் சுவடி விவரத்துடன் இந்தியாவைக் கடந்த நிலையில் — வெளிநாடுகளில் இருப்பதாக அறிய முடிந்த சுவடிகள் விவரமும் தரப்பட்டிருப்பது இத் தொகுதியின் குறிப்பிடத்தக்கச் சிறப்பாகும்.

நம் தமிழ்ச் சுவடிகள் ஆங்கிலேயர் காலத்துக்கு முன்பும் கிறித்தவப் பெரியோர்களாலும் வணிகர்களாலும், வெளிநாடுகளுக்குக் கொண்டு செல்லப்பட்டு அங்கே நூலகங்களில் சேர்க்கப்பெற்றன. பல சுவடிகள் தனியாரிடம் புதையுண்டு போயின. அவற்றின் விவரங்கள் அறிந்து கொள்ள முடியாமல் உள்ளன. தமிழகத்தில் உள்ள சுவடிகளின் நிலையை அறிந்துகொள்வதே கடினமாக உள்ள சூழலில் அங்குள்ள சுவடிகள் பற்றி எவ்வாறு அறிதல் கூடும் ?

## வெளிநாடுகளில் காணப்படும் ஓலைச்சுவடிகள்

மேஜர் அ. கிருட்டிணமூர்த்தி அவர்கள் தொகுத்து வைத்திருந்த 'ஐரோப்பிய நூலகங்களில் தமிழ்ச் சுவடிகள்' என்னும் அட்டவணையைக் கொண்டு இங்குள்ள பல சுவடிகளுக்கு மாற்றுச் சுவடிகள் அங்கே இருப்பது கண்டுபிடிக்கப்பெற்றது.

தொல்காப்பியம் முதலிய பழைய இலக்கண நூல்கள் முதலாக இடைக்கால பக்தி இயக்க இலக்கியங்கள், பிற்காலச் சிற்றிலக்கியம், நீதிநூல்கள் வரை பல சுவடிகள் ஐரோப்பிய நூலகங்களில் காணப்பெறுகின்றன. வெண்பாப் பாட்டியல்—33 என்னும் நூல் பிப்பிலியோதிக் நேஷனல், பாரிஸ், பிரான்ஸ் நாட்டில் காணப்படுகிறது. சீவகசிந்தாமணி—392 என்னும் காப்பியமும் அங்கே காணப்படுகிறது. மேலும் திருவுந்தியார் 65, திருக்களிற்றுப்படியார் 66, சிவஞான சித்தியார் 68, பதார்த்தகுண சிந்தாமணி, இறையனார் களவியல்—306 போன்ற நூல்களும் அங்கே காணப்படுகின்றன. அருணாசலபுராணம் என்னும் நூல் 395 பாட்லியன் லைப்ரரி, ஆக்ஸ்போர்டிலும், பிப்பிலியோதிக் நேஷனல் பாரிஸிலும், அப்சாலா யுனிவர்ஸிடி லைப்ரரி, ஸ்வீடனிலும், எதினோகிராபிகல் மியூசியம், ஸ்வீடனிலும் காணப்படுகிறது. நைடதம்—29 என்னும் நூல் பிரிட்டிஷ் மியூசியம், லண்டனிலும், தி லைப்ரரி ஆப் தி கேம்பிரிட்ஜ் யுனிவர்சிடியிலும், பாட்லியன் லைப்ரரி ஆக்ஸ் போர்டிலும், தி ராயல் லைப்ரரி, டென்மார்க்கிலும் காணப்படுகின்றது.

ஆத்திசூடி—400, உலக நீதி -402, அரிச்சுவடி—404 போன்ற எளிய நூல்கள் இந்தியா ஆபீஸ் லைப்ரரி, பிரிட்டிஷ் மியூசியம், தி லைப்ரரி ஆப் ஏசியாட்டிக் சொசைட்டி போன்ற லண்டன் நகர நூலகங்களில் காணப்படுகின்றன. இந்நூல்கள் தி ராயல் லைப்ரரி டென்மார்க்கிலும், பிப்பிலியோதிக் நேஷனல் பாரிசிலும் கூட காணப்படுகின்றன. திருவிளையாடற்புராணம்—414 பாட்லியன் லைப்ரரி ஆக்ஸ்போர்டிலும், பிப்பிலியோதிக் நேஷனல் பாரிஸிலும் காணப்படுகிறது. இங்கே

கைவல்ய நவநீதம் —460, பகவத் கீதை - 152 முதலான தமிழ்ச் சுவடிகளும் காணப்படுகின்றன. இத்தகு அரிய செய்திகளை இத் தொகுதியிலுள்ள சுவடி விவரங்கள் சிறப்பாகத் தருகின்றன.

## அச்சு விவரம்

இத் தொகுதியில் இடம் பெற்றுள்ள சுவடி நூல்களுள் பெரும்பாலானவற்றுக்கு அச்சான விவரம் தரப்பட்டிருக்கிறது. தொல்காப்பியம், திருக்குறள் முதலிய பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள், சைவத் திருமுறைகள் போன்ற நூல்களின் அச்சான விவரம், பல பதிப்புகள் கண்ட விவரம் பலரும் நன்கறிந்தமையால் அவை இங்குச் சுட்டப் பெறவில்லை. ஆயின் பலரும் அறியாது ஒரு பதிப்பு மட்டுமே வந்த நூல்கள், இப்பொழுது கிட்டுவதற்கு அரிய நூல்கள் ஆகியவற்றின் அச்சான விவரம் இயன்றவரையில் தொகுக்கப்பெற்று இங்குச் சுட்டப் பெற்றுள்ளது. பதார்த்த குண சிந்தாமணி—25 திருப்பேரூர்ப் புராணம் 64, துகளறுபோதம் - 78, திருவாவடுதுறைக் கோவை-82, அதிசயமாலை - 212, நிட்டை விளக்கம்—214, சித்தராரூட நொண்டிச் சிந்து—252 போன்ற நூல்களுக்கு அச்சான விவரம் தரப்பெற்றுள்ளது.

ஒரு நூல் இன்னும் அச்சாகவில்லை என்பது தெளிவாக அறியப் பெற்ற சூழலில் மட்டும் அந்நூலின் அச்சாகாத விவரம் இத்தொகுதியில் குறிக்கப்பெற்றுள்ளது. பழனி தண்டாயுதபாணி பிள்ளைத் தமிழ் - 398, பெரிய நாயகி அம்மன் பிள்ளைத் தமிழ் - 355, வீரகுமார நாடகம்—394, வீரையன் அம்மானை - 62, கடவுளந்தாதி - 465 போன்ற நூல்கள் இத்தகையன.

பலநூல்கள் புதியனவாகக் காணக்கிடக்கின்றன. பாபவிநாசத் தலபுராணம்—209, திருப்பாதிரிப்புலியூர்த் தலபுராணம் — 124, விளத்தொட்டிப் புராணம்—93, நலங்குப் பாடல்கள் - 483, பினாங்கு தண்ணீர்மலை வடிவேலன் பதிகம்—472 வங்காளம் தண்டபாணி பதிகம்-473, மன்மதன் கதை - 132, காசி மகத்துவம் - 103 போன்றன இத்தகு நூல்களாம் இவற்றுள் சில குறைநூல்களாகக் காட்சியளிக்கின்றன. பெரும்பாலான நூல்களுக்கு அச்சில் எத்தனை பக்கம் வரும் என்ற செய்தி கொடுக்கப்பட்டுள்ளது.

அண்மையில் வெளிவந்த சுவடிநூல்களின் விவரம் மிகத் தெளிவாக இத்தொகுதியில் குறிக்கப்பெற்றுள்ளது. சுவடியிலிருந்து முதன் முறையாகத் தமிழ்ப் பல்கலைக் கழகம் இவற்றை (1985 - 86-ல்) வெளியிட்டு மகிழ்ந்தது. திருவேங்கடச் செழியன் நன்னெறி—318, கங்காதரச் செழியன் வண்ணம்—329, தாகந்தீர்த்த செழியன்

பிள்ளைத் தமிழ்—320, திருவாணிவாது—321, செழியதரையன் கோவை—323, தாகந்தீர்த்த செழியன் மஞ்சரி—358, அகத்தியர் குழம்பு—491 ஆகிய நூல்களே அவை. அவற்றுள் அகத்தியர் குழம்பு என்னும் மருத்துவ நூல் நீங்கலாகப் பிற 'செழியதரையன் பிரபந்தங்கள்' என்னும் தொகுப்பாக வெளியிடப்பெற்ற சிறப்புடையனவாம்.

அச்சுக்கு வராத நூல்களுள் சில மிகச் சிறந்த பொருளும் நயமும் கொண்டிலங்குவனவாகத் தெரிகின்றன. ஆயின் அவை குறைச் சுவடிகளாகக் காணப்படுவதும் சிதைந்த நிலையில் காணப்படுவதும் வருத்தந் தருவதாக உள்ளது.

'குமாரசாமி நளன் அம்மானை'—28 என்னும் நாட்டுப் பாடல் நூல் ஒன்று குறைச்சுவடியாகக் காட்சி தருகிறது. இச்சுவடி ஒவ்வொரு பக்கமும் 3 பத்திகளாகப் பிரித்து எழுதப் பெற்றுள்ளது. அந்நூலின் சில அடிகள் வருமாறு :

'கொங்குகொழு விஞ்சிமஞ்சள் குத்திப் பறித்துருட்டி
தெங்கு கமுகுபலாச் செண்பகமுந் தானுருட்டி
களிறுங் கடமாவுங் கன்றுகளுந் தானுருட்டி
வழிமறித்த வோடைவெள்ளம் வானமட்டு மேபிடுங்கி'

இக்காட்சி நாட்டு மக்களுக்கு எளிய சொற்களால் ஆற்று வெள்ளத்தைச் சித்திரித்துக் காட்டுவதாம்.

அழகிய அச்செழுத்துப் போலவே எழுதப்பெற்றுள்ள காசி மகத்துவம்—103 என்னும் நூலும் மன்மதன் கதை—132 என்னும் நாட்டுப் பாடலும் வீரையன் அம்மானை—62 என்னும் நாட்டுப் பாடலும் கீதாசாரத் தாலாட்டு—446, 447 என்னும் நூலும் குறைச் சுவடிகளாகக் காட்சி தருகின்றன. இவற்றை ஆய்வு செய்து வெளியிடுவது மொழி வளர்ச்சிக்கும் இலக்கிய வளத்திற்கும் மிக்க பயனுடையதாக அமையும் என்றால் அது மிகையாகாது.

இவ்வாறே இத்தொகுதியில் இடம் பெற்றுள்ள மருத்துவ சோதிட நூல்கள் பல இன்னும் அச்சு வடிவம் பெறவில்லை. மருத்துவ நூல்கள் பல அகத்தியர், போகர், சட்டைமுனி, கயிலாசமுனி, கோரக்கர், புலிப்பாணி, தேரையர், நந்தீசர் போன்ற சித்தர்களின் பெயரால் அமைந்துள்ளன. அவற்றுள் பெரும்பாலன குறைச் சுவடிகளாகக் காட்சி தருகின்றன என்பது வருத்தம் தரும் செய்தியாகும். எனினும் அவற்றிலுள்ள பல செய்திகள் வெளிவரின் அது தமிழுக்கும், மருத்துவ உலகுக்கும் பெரிதும் பயன்தருவதாகும்.

## பிற்குறிப்புகள் தரும் சிறப்புச்செய்திகள்

சுவடி நூல்களில் அமைந்துள்ள பிற்குறிப்புகளினின்று பல்வேறு சுவையான செய்திகளை நாம் அறிந்து மகிழலாம். சில சுவடிகளில் முற்குறிப்புகளும் பிற்குறிப்புகளுமான இரண்டு குறிப்புகள் காணப்படுகின்றன. பொதுவாக முற்குறிப்புகளும் பிற்குறிப்புகளும் நூலின் பெயர், நூலாசிரியர் பெயர், அதை ஏட்டில் எழுதியவர் பெயர் முகவரி, காலம் போன்ற சிறப்புச் செய்திகளைத் தருவனவாம்.

'ஈசுர நாம சம்வச்சரம் சாலிவாகன சகாத்தம்
1799 க்குச் சரியாகச் செல்லா நின்ற கொல்லம் 1053 ஆம்
வருஷம் தட்சணாயனமாகிய தனுரவி (மார்கழி) 25-ந் தேதி
சோமவாரமும் பூர்வபட்சத்துச் சதுர்த்தி திதியுஞ் உதய
நட்சத்திரமும் சித்தநாமயோகமும் வணசிவா கரணமும்
அமுர்த கடிகையும் மீன லக்கினமுஞ் சாத்துமீக வேளையும்
சூரிய ஓரையும் கூடிய இந்தச் சுபயோக சுபதினத்தில்'

(எழுதத் தொடங்கியது) இது முற்குறிப்பாகும் (சிவஞான சித்தியார் சுபக்கம்-137) இதே நூலின் பிற்குறிப்பு பின்வருமாறு காணப்படுகிறது.

'வெகுதானிய சம்வத்சரம் சாலிவாஹன சகாப்தம் 1800-க்குச் சரியாகச் செல்லா நின்ற கொல்லம் 1053-ஆம் வருடம் உத்தராயண மாகிய மேஷரவி (சித்திரை) 13 ஆம் தேதி புதன் வாரமும் அமரபச் சத்து அட்டமி திதியும் உத்திராட நட்சத்திரமும் சாத்திய நாமயோக மும் பாலவ கரணமும் அமுர்த கடிகையும் மேஷலக்கினமுந் தாமச வேளையும் புதவோரையும் கூடிய இந்தச் சுபயோக சுப தினத்தில் (நிறைவேறியது). இது ஒரு சுவடி எழுதுவதற்கு 5, 6 திங்கள் தேவைப் பட்ட நிலையையும் காட்டுகிறது

### ஆங்கில ஆண்டு

இவ்வாறு ஆண்டு, திங்கள், நாள் முதலிய விவரங்களைத் தமிழ் முறைப்படி தரும் சுவடிகளுடன் பிற்காலத்தின் சில சுவடிகள் ஆங்கில ஆண்டு முறையையும் குறிப்பிடுகின்றன. '1864 ஆம் வருடம் டிசம்பர் மாதம் 23 ஆம் தேதிக்குச் சரியான வருடம் மார்கழி மாதம் 10-ஆம் தேதி மங்கள வாரம் எழுதிமுடிந்தது. முற்றும்' (தன்வந்திரி வைத்தியம்—269).

கலைமகள் விழா கொண்டாடும் நாளில் (சரஸ்வதி பூசை, ஆயுத பூசை) சுவடிகளைப் படி எடுப்பதும் புதிய சுவடிகளில் எழுதுவதும் சிலரிடம் வழக்கமாக இருந்தன என்பதை ஒரு சுவடி நமக்குக்

கூறுகிறது. '1901 ஆம் வருஷம் அக்டோபர் மாதம் 19-ந் தேதி தமிழ் பரிதாபி வருஷம் ஐப்பசி மாதம் 3 ஆம் தேதி சனிக்கிழமை சரஸ்வதி பூசைத்தினம் எழுதி முடிந்தது' அகத்தியர் சாலம் 288.

## பாடலால் பிற்குறிப்பு

மேற்குறித்த செய்திகள் அழகிய கவிதை வரிகளால் சுட்டப் பெற்றுள்ளமையைச் சில சுவடிகளில் நாம் காணலாம். திருக்குறள் —307 உரையுடன் கூடிய ஒரு சுவடி இவ்வாறு பிற்குறிப்பைச் சித்திரித்துள்ளது.

'முயங்குசீர்ச் சாலி வாகன சகாத்த
மொழியுமா யிரத்தெழு நூற்று
முப்பதிற் றுப்ப ராபவ வருடம்
முந்துசீர் அயனதக் கணத்தில்
சயங்கொளு மாடி மதியறு நான்கில்
தண்மதி யிலகுபூ ரணையும்
சனிதின மொண்மி யைசவு பாக்கியந்
தயங்குபத் திரைபுணர் சுபநாள்
கயங்களின் மடவார் முகமுழு மதியைக்
கண்டுதா மரைமலர் முகிழ்க்கும்
கட்டழகு அமைந்த திருக்கழுக் குன்றில்
களித்துவாழ் சைவசித் தாந்தர்
நயங்கொளும் பரம குருஅருள் புதல்வன்
நல்திரு வள்ளுவர் குறட்கு
நாவலர் பரவு பரியின்மே லழகர்
நவிலுரை யெழுதிவைத் தனனே'

இப்பாடல் செய்திகளைக் கலை உணர்வுடன் எவ்வாறு வெளியிடுவது என்பதைக் காட்ட வல்லதாம். கதிரவனைக் கண்டு மலர்வது தாமரை. ஆயின் இக்கவிஞனோ பெண்களின் அழகிய நிலவு போன்ற முகத்தைக் கண்டு தாமரை மலர்ந்ததாகக் காட்டுகிறார். திருக்கழுக்குன்றத்துத் தாமரை மலர்கள் நிலவைக் கண்டும் மலரும் போலும்.

## சுவடிகளுக்குப் பண்டாரம்

இக்காலத்தின் நூலகம் போன்று அக்காலத்தும் நூலக அமைப்புடன் சுவடிகள் தொகுக்கப்பெற்றுப் பாதுகாக்கப் பெற்ற செய்தியை ஒரு சுவடி குறிப்பாகச் சுட்டுகிறது. அதனை அவர்கள் பண்டாரம்

என்று குறிப்பிட்டு மகிழ்ந்தனர். 'சரஸ்வதி பண்டார்' என்று பிற மொழிகளிலும் சுவடி நூலகங்கள் அழைக்கப்படுவதை நாம் இங்கு ஒப்பு நோக்கலாம்.

'பிலவங்க வருஷம் பங்குனி மாதம் 30-ஆம் தேதி மங்கள வார நாள் கூர்மபுராணம் எழுதி நிறைவேறியது. முற்றும். தருமபுரம் ஞான சம்பந்த குரு சுவாமி ஆகம பண்டாரத்து ஏடு'

(கூர்மபுராணம்-234)

திருமுறைகள், சாத்திரங்கள் போன்ற சமய நூல்களுக்காகத் தனியே (பொருள் வாரியாக) அவை பிரிக்கப்பெற்ற செய்தியை 'ஆகம பண்டாரம்' என்ற சொல் தருதல் காணத்தகும். இக்காலத்து நூலகங்களின் நூல்களில் அந்நூலகத்தின் முத்திரை, எண், பொறிக்கப் படுவதுபோல அக்காலத்தும் சுவடிகளில் இத்தகு குறிப்புகள் இடம் பெற்றமையை இச்சுவடி நிறுவுதல் நோக்கத்தக்கதாம்.

## படி எடுத்தலும் பிழை திருத்துதலும்

இத் தொகுதியிலுள்ள சில சுவடிகளின் பிற்குறிப்புகள் நூல்களை— சுவடிகளைப் படி எடுத்துப் போற்றியமையைக் காட்டுகின்றன. எழுதியபின்பு பிழைதிருத்தங்களை மேற்கொண்டு செப்பம் செய்தமையைக் காட்டுகின்றன.

அகத்தியர் திருமந்திரம்—8 என்னும் சுவடி முன்பு எழுதப் பெற்றிருந்த சுவடி ஒன்றைப் பார்த்து எழுதியதாகக் காணப்படுகிறது.

'பிங்கள வருடம் மார்கழிமாதம் 22-ஆம் தேதி
ஞாயிற்றுக்கிழமையிலான சுவடியைப் பார்த்து எழுதப்
பட்ட தேதி - குரோதன வருடம் பங்குனி மாதம்
2 ஆம் தேதியில் எழுதி முடிந்தது'

இராமாயண வசனம் - 3 என்னும் மற்றொரு நூலிலும் இது போன்றதொரு செய்தி காணப்படுகிறது

'இந்த ராமர் கதையை எழுதினபேர், படித்தபேர், கேட்டபேர் ஆல், அறுகுபோல் வேரூன்றி மூங்கில் போலன்ன சுத்தம் முசியாமல் வாழ்க' ... ....

'பார்த்திப வருடம் ஆவணி மாதம் 29 ஆம் தேதி காவலூரிலிருக்கும்
ராமுபிள்ளை மகன் சொக்கலிங்கம் பிள்ளை மகன் சங்கிலியா
பிள்ளை ராமாயணம் எழுதி முகிந்தது. முற்றும்.
இந்த ராமர் கதையை எடுத்து எழுதினபேர்,

படித்தபேர் திருப்பக்கொண்டுவந்து வாங்கின பேரிடத்திலே
கொடுத்துவிடவும். கொடுக்காத வரையில் நரகமே கதி'

என்று குறிப்பிடுகிறது. இதில் 'எடுத்து எழுதின பேர்' என்னும் குறிப்பு சுவடிகளை இரவல் பெற்றுச்சென்று படி எடுத்தெழுதும் வழக்கம் இருந்ததைக் காட்டுகிறது.

சுவடிகளில் நூல்களை எழுதிய பின்பு அவற்றை முறையே படித்துப் பார்த்து, திருத்திச் செப்பம் செய்து வைக்கும் நிலையைப் பலசுவடிகள் சுட்டுகின்றன

'விபவ வருஷம் மாசிமாதம் 23-ஆம் தேதி எழுதி முடிந்தது.
குமாரசாமித் தம்பிரான் புத்தகம். சோமசுந்தரக் கடவுள்துணை.
இவ்வருஷம் பங்குனி மாதம் 9-ஆம் தேதி முழுமையும் பிழையறப்
பார்த்து முடிந்தது'

என்ற பிற்குறிப்பைத் திருவாசக ஏடு - (84) ஒன்று தருகின்றது.

சில சுவடிகளில் இக்குறிப்பு இடம் பெறாமலேயே திருத்தங்கள் காணப்படுகின்றன தட்சிணாமூர்த்தி அட்டகம் - 476 என்னும் நூல் முழுவதும் எழுதப்பெற்றபின் திருத்தப்பட்டதாகக் காணப்படுகிறது. இவ்வாறே சிவஞானபோதம் - 239 என்னும் நூலிலும் ஆங்காங்குப் பல திருத்தங்கள் காணப்படுகின்றன. மாதவச் சிவஞான முனிவரே இச்சுவடியை எழுதியவராகத் தோன்றும் வண்ணம் அச்சுவடியின் பிற்குறிப்பு காணப்படுகிறது

'சிவஞான சுவாமிகள் திவ்வியத் திருக்கரத்
தெழுத்தென்றே அளவிலாத மகிழ்வுற்றிருக்கின்றேன்
பிரமாதி கார்த்திகை மாதம் 16-ஆம் தேதி'

என்று அக்குறிப்பு முடிகிறது. எழுதியபின் உரையாசிரியராகிய அவர் தம் திருக்கரத்தாலேயே திருத்திச் செப்பம் செய்திருப்பர் போலும்!

சில சுவடிகளின் பிற்குறிப்பில் எடுத்துப் படித்தவர்கள் பிழை பார்த்துக் கொடுக்கவேண்டும் என்ற வேண்டுகோளையும் நாம் காணலாகும். வீரகுமார நாடகம்—394 என்னும் நூலில்,

'பிங்களவருஷம் வைகாசி மாதம் 14-ஆம் தேதி
கரூர் தாலுக்கா அப்பிபாளையங் கிராமம்
சொக்கப்பட்டியிலேயிருக்கும் பாப்பாநாயகன் மகன்
குமாரனாகிய ரங்கப்ப நாயகன் வீரகுமார
நாடகம் என்னவென்றால் இதை எடுத்தவர்கள்
படித்துப்பார்த்து இதில் பிழை இருந்தால் திருத்திக்
கொடுக்க வேண்டும்'

என்றகுறிப்பு காணப்படுகிறது. நூற்செம்மையில் நம்மவர் காட்டிய ஆர்வத்தையும் அக்கறையையும் இவை தெளிவாகக் காட்டுகின்றன.

## சுவடிப்பற்று

இவ்வாறு எழுதப்பெற்றும், எழுதுவிக்கப்பெற்றும் சிறந்த உடைமையாகக் காக்கப்பெற்ற சுவடிகளின்பால் நம்மவர் கொண்டிருந்த பற்று அளவிடற்கரியதாகும். படிப்பதற்காகவும், எழுதுவதற்காவும் சுவடிகளை இரவல் பெற்றுச் சென்ற நண்பர்கள் அவற்றைத் திருப்பிக் கொடுக்காமலும் இருந்திருப்பர். கடன் பெற்ற நூல்களைத் திரும்பக் கொடுக்காத நண்பர்கள் அக்காலத்தும் மிகுந்திருந்தனர் போலும். கீழ் வரும் பிற்குறிப்புகள் இதனைச் சுட்டுதல் நோக்கத்தகும்.

'இந்தச் சித்தராரூடம் — (286) எடுத்தவர்கள்
பார்த்துக் கொண்டு சந்தோஷமாய்க் கொடுத்துவிடவும்
கொடுக்காவிட்டால் காராம்பசுவைக் கொன்ற பாவத்தை
யெல்லாம் ஒப்புக் கொண்டு போகக்கடவது. இந்தச்
சுவடி சாஸ்திரம் முத்தய்யபிள்ளை குமாரன் முத்து
சாமிப்பிள்ளை எழுதிச் சொந்தமாய் வைத்துக்கொண்டது.
ஆகையால் சுருராய்க் கொடுத்துவிடவும்'

'இந்தத் திருப்புகழ்ச் சுவடியை யாராவது எடுத்தாலும்
அல்லது படித்தாலும் இதன்மேல் எழுதியிருக்கும்
பேருடையவர் யாரோ அவர்வசம் கொடுத்துவிட
வேண்டியது. இல்லாவிட்டால் புவியின்கண் விளங்கும்
புண்ணிய க்ஷேத்திரமாகிய காசிமாநதியிலே போய்க்
காராம்பசுவை அறுத்துச் சாப்பிட்டால் எவ்வளவு
தோஷமோ அவ்வளவு தோஷம் வந்து சாரும்' (திருப்புகழ் — 133)

இக் குறிப்புகள் தமிழர்களின் சுவடிப்பற்றையும் நூலுடைமைக் காதலையும் நம்மவர்க்கு எடுத்துக்காட்டும் திறத்தன என்றால் மிகையாகாது.

## நூற்பயனும் நோக்கமும்

இச் சுவடிகளில் அமைந்த சில நூல்களின் பிற்குறிப்பில் அந்நூற் பயனும் நோக்கமும் சுட்டப் பெற்றுள்ளமையும் காணத்தகுவதாம். இராமாயண வசனம்—6 என்னும் நூலில்,

'அந்தப்படிக்கு இராமகதை எழுதினபேரும்,
வைத்திருந்து படிக்கிறபேரும்.... கிற கதையை

அசங்கதங்கள் பண்ணாமல் இன்பமாகக் கேட்கிறபேரும்
எந்நேரமும் இராமாவென்கிற பேர்களுக்கும் லட்சுமி
கடாட்சமுண்டாய் சகல பாக்கியமு மனுபவித்து
வைகுண்டம் பெறுவார்களென்றவாறு'

என்ற பயன் கூறப்பட்டுள்ளது. மற்றொரு சுவடியில் (பெரிய புராணம் — 14) நூல் எழுதப்பெற்றதன் நோக்கம் விவரிக்கப்பெற்றுள்ளது.

'இந்தப் பெரிய புராணம் காசிமடத்திலிருக்கிற
நாயன்மார் அர்ச்சனை செய்து வாசித்து சுப்பிரமணிய
முதலியார் அவர்கள் சதாகாலமும் விசுவநாத சுவாமி
விசாலாட்சி அம்மன் பாதாரவிந்தங்களிலே நீங்காம
லிருக்கத் தக்கதாக அனுக்கிரகம் செய்து அழகப்பனுக்குச்
சிவபக்தி வரத்தக்க அனுக்கிரகம் செய்து ரெட்சிக்கவும்'

என்று அக் குறிப்பு காணப்படுகிறது.

இவ்வாறு அமைந்துள்ள சுவடிகளை 18 வகை பொருட்பிரிவில் இத்துறை பகுத்துக் கொண்டுள்ளது. அப்பகுப்பு முறையில் இம்முதலாம் தொகுதியின் கண் இலக்கணச் சுவடிகள் 20, உரைநடை இலக்கியம் 5, காப்பியம் 50, சிற்றிலக்கியம் 28, சைவத்திருமுறை 21, சோதிடம் 14, தத்துவம் 64, தலபுராணம் 25, நாட்டுப்பாடல் 4, பதினெண்கீழ்க்கணக்கு 6, பல்வகை நூல்கள் 16, பாட்டும் தொகையும் 1, பிற தோத்திரங்கள் 10, மருத்துவம் 59, மாந்திரீகம் 6, மெய்கண்ட சாத்திரம் 13 என்ற அளவில் சுவடிகள் இடம் பெற்றுள்ளன இவை பற்றிய விவரங்களை இனி நூலுள் காண்போமாக.

## பெயர் தெரியா நூல்களும் பிழைதிருத்தமும்

இத் தொகுதியில் நூற்பெயர் தெரியாத நூல்களும் ஆசிரியர் பெயர் தெரியாத நூல்களும் கணிசமான அளவில் இடம் பெற்றுள்ளன. அவற்றை இனங்காட்ட வேண்டி அந்நூற்பொதிசெய்திகளை-பொருள்களை உட்கொண்ட தலைப்புகளைத் தொகுப்பாசிரியர் வழங்கியுள்ளனர். மருத்துவச் செய்திகள், மருத்துவம், சோதிடநூல், சோதிட குறிப்புகள் எனப் பொதுப்பட அத்தலைபப்புகள் இலங்குவதைக் காணலாம். ஆசிரியர் பெயர் தெரியாத நூல்களுக்கு ஆசிரியர் பெயர் குறிப்பிடப் பெறவில்லை.

எவ்வளவு நுட்பமாக ஆழ்ந்து கவனித்து வந்த போதும் அச்சுப் பிழைகள் ஏற்பட்டிருப்பது தவிர்க்க இயலாததாகி விட்டது. அப்பிழைகளைச் சுட்டிக் காட்டத் தவறினால் நூற்பாடங்களிலும், எண் குழப்பங்களிலும் ஆய்வாளர் சிக்கித் தவிப்பர். எனவே அவற்றை முறையாக

எடுத்துக் காட்ட வேண்டுவதைப் பெருங்கடைமையாகக் கருதி இத் தொகுதியின் இறுதியில் பிழை திருத்தப்பட்டியல் ஒன்றும் இணைக்கப் பெற்றது. ஆய்வாளர் இதனைப் பயன்படுத்தி நூலைச் செப்பமாக்கிக் கொள்ள அன்புடன் வேண்டுகிறேன்.

## நன்றியுரை

ஓலைச்சுவடித் துறையின் நூலக வளர்ச்சிக்கும் சுவடி விளக்க அட்டவணைத் தொகுதிகளுக்கும் மூலகாரணமாக விளங்குவது தமிழன்பர்களின் நல்லெண்ணமே ஆகும். இத்துறைக்கு அவர்கள் தமிழ்ச் சுவடிகளை அன்பளிப்பாக, நன்கொடையாக வழங்காதிருப்பின் சுவடி நூலகம் ஏது? சுவடி அட்டவணைதான் ஏது? எனவே அவர்களுக்கு முதற்கண் நன்றி செலுத்துவதே சிறப்பாகக் குறிக்கத்தக்கதாம்.

தமிழ்ப் பல்கலைக் கழக ஓலைச்சுவடித் துறைக்குத் தமிழ்ச்சுவடி களை அன்பளிப்பாக வழங்கியவர் பலராவர். திருக்கோயில்கள், திரு மடங்கள் போன்ற சமய நிறுவனங்கள் முதலாகத் தனிப்பட்ட புலவர் குடும்பத்தினர் வரை இக்கொடையில் இடம் பெற்றுள்ளனர். ஓலைச் சுவடிகளுக்காகத் தனிப்பட்ட ஒரு துறையை உருவாக்கிச் சிறப்பித் திருக்கும் தமிழ்ப் பல்கலைக் கழகத்தின்பால் அவர்கள் நம்பிக்கை கொண்டு தங்களிடமிருந்த சுவடிகளின் பாதுகாப்பு, பராமரிப்பு ஆகிய வற்றுடன் அவை வெளிவரவேண்டுமே என்ற அக்கறையில் அவற்றை அன்பளிப்பாக வழங்கியுள்ளனர். அவர்களின் நம்பிக்கையை உறுதி செய்யும் வண்ணம் இத்துறை அவர்களிமிருந்து பெற்ற தமிழ்ச் சுவடி களை அறிவியல் முறைப்படி தூய்மை செய்து, பூச்சி நீக்கம் செய்து, காப்பு எண்ணெய் பூசி, பாதுகாப்பதுடன் இன்று அவற்றின் விளக்க அட்டவணையையும் வெளியிட்டு மகிழ்கின்றது. பின்வரும் அன்பர்கள் இத்தொகுதியிலுள்ள சுவடிகளை அன்பளிப்பாக வழங்கியவர்களாவர். அவர்கள் அனைவருக்கும் ஓலைச்சுவடித்துறை நன்றியையும் பாராட் டையும் தெரிவிப்பதோடு அவர்கள் பெயரை இங்குச் சுட்டுவதில் பெருமையும் பூரிப்பும் கொள்கிறது.

## சுவடி நன்கொடையாளர் பட்டியல்

**(எண்கள் : சுவடிகளின் தொடர் எண்கள்)**

**அடிகளாசிரியர் திரு சித்தநாதர் ஆதீனம், குகையூர், தெ. ஆ. மா. 178 – 217**

**அய்யாசாமிக் கவுண்டர், ஒடுக்கத்தூர், வ. ஆ. மா. 87—92**

இராஜன் பாபு, ஆர். எஸ். வடக்குச் சித்திரை வீதி, ஸ்ரீரங்கம். 144—177
கணபதி. கே. எஸ். திருநெல்வேலி. 97
கந்தசாமி. து. சின்னசேலம், சேலம் மாவட்டம். 251 –260
கோவிந்தராஜு ஞ. ஆர். மானோஜியப்பா வீதி, தஞ்சாவூர். 1, 7—11, 18—24, 33—52
சண்முகம். கொடுமுடி. பொறியாளர், பொதுப்பணித்துறை, சேலம். 250
சிவபெருமான். அ. சித்தநாதர் ஆதீனம், குகையூர், தெ. ஆ. மா. 218 –238, 327—339
சின்னப்பநயினார். கே. சி. கள்ள குளத்தூர். தெ. ஆ. மா. 240—243
சுப்பைய செட்டியார். நா. இராயபுரம், புதுக்கோட்டை. 239
சோணாசலம், திரிபுர சுந்தரி நகர், தஞ்சாவூர். 2–6, 12, 25 –32
நடராசன் பெ. நத்த மாங்குடி, திருச்சி மாவட்டம். 340—346
நாகரத்தினம். வே. சோமாண்டார் குடி; கள்ளக்குறிச்சி. 53
வேங்கடராமையா கே. எம். திருப்பனந்தாள், தஞ்சை மாவட்டம். 54
ஸ்ரீகாசிமடம், திருப்பனந்தாள், தஞ்சை மாவட்டம். 13, 17, 55—86, 93 –96, 98 –143, 244 –249
ஸ்ரீபாலைய சுவாமிகள் திருமடம், கரந்தை, தஞ்சாவூர். 261 –326

தமிழ்ச்சுவடி விளக்க அட்டவணையின் தொகுப்புப்பணி மற்றும் பொருள் அடக்க அமைப்பினைத் துறையினருடன் விவாதித்து இந்த வகையில் உருவாக்க, தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் முன்னாள் துணை வேந்தர் முதுமுனைவர் வ. அய். சுப்பிரமணியம் அவர்கள் பெரிதும் துணைநின்றார்கள். அடிப்படை நிலைகளை அமைத்துத் தந்ததோடு அவ்வப்போது ஊக்கிவந்த அப் பெருந்தகையார்க்கு ஓலைச்சுவடித் துறையின் நன்றி என்றும் உரியதாகும்.

தாம் பொறுப்பேற்றுக்கொண்ட நாள் முதலாக இத்திட்டத்தின் வளர்ச்சி சிறப்பாக அமையவேண்டி, அவ்வப்போது ஊக்கியும், ஆணை வழங்கியும், பாராட்டியும் துணை நின்றவர் மாண்புநிறை துணை வேந்தர் முனைவர் ச. அகத்தியலிங்கம் அவர்கள் ஆவார்கள். அவர்கள் தம் பல்வேறு பணிகளுக்கிடையே இத்தொகுதிகளை உற்று நோக்கிச் சிறந்த அணிந்துரை ஒன்றையும் வழங்கியிருக்கிறார்கள். அவர்களின் அயராத அன்புக்கும் ஆக்கத்திற்கும் இத்துறை பெரிதும் நன்றி பாராட்டும் கடப்பாடுடையதாகும்.

தமிழ்ச்சுவடி விளக்க அட்டவணைத் தொகுதிகளின் வெளியீட்டுப் பணி தில்லி, தேசிய ஆவணக்காப்பக நல்கைத் திட்டமாக நடைபெற்று வருகிறது. இத் திட்டத்திற்காக ஆவணக்காப்பகம் ரூ. 1, 25, 000/-

நல்கை வழங்கி ஊக்குவித்தது. எஞ்சிய செலவைத் தமிழ்ப் பல்கலைக் கழகம் ஏற்றுக் கொண்டது. நல்கை வழங்கிச் சிறப்பித்த தில்லி, தேசிய ஆவணக் காப்பக இயக்குநர் அவர்களுக்கு இத்துறை நன்றி பாராட்டும் கடமையுடையதாம்.

நல்கை பெறுவதற்கான திட்ட வரைவினை முறைப்படி அமைக்க ஆணை வழங்கியும், உடனிருந்து ஊக்கியும், திருத்தியும், தொகுப்புப் பணியினைத் திறம்படக் கண்காணித்தும் வந்தவர் முன்னாள் சுவடிப் புலத்தலைவர் பேராசிரியர் மு. சண்முகம்பிள்ளையவர்கள் ஆவார். அவர்தம் சுவடிக்காதலும் பயிற்சியுமே இத் தொகுதிகளுக்கு மூலமாக அமைந்தன. தாம் பொறுப்பில் இருந்த காலம்வரை, ஏன் அதற்குப் பின்பும் இத் தொகுதிகள் வெளிவருவதில் ஆக்கமும் ஊக்கமும் அளித்து அச்சுப்பணியை உற்று நோக்கி உயர்த்தியவர் அவரே என்றால் அது மிகையாகாது. இம்முதல் தொகுதிக்கு மிகச் சிறந்த ஆய்வு முன்னுரை ஒன்றை அவர் வழங்கியிருக்கிறார். அந்த ஆய்வு முன்னுரை சுவடி யியலை ஒட்டு மொத்தப் பார்வையில் நம் கண்முன் சித்திரமாக்கும் அரிய உழைப்பைக் காட்டுவதாம். அம் முன்னுரை இத் தொகுதி களுக்குப் பெருஞ்சிறப்பளிப்பதாகும். அவர்தம் இனிய வழிகாட்ட லுக்கு என் நன்றியும் வணக்கமும் என்றும் உரியன.

முன்பே குறித்தவண்ணம், இத் தொகுதியின் தொகுப்புப்பணியை மேற்கொண்டும் இடையிடையே என்னுடன் அச்சுப்படிவங்களைத் திருத்தி உதவியும் சிறக்கப் பணி புரிந்தவர்கள் இத்துறையின் விரிவுரை யாளர் முனைவர் வே. இரா. மாதவனும், தொழில் நுட்ப உதவியாளர் புலவர் ப. வெ. நாகராசனும் ஆவர். அவர்தம் தொடர்ந்த உழைப்பு என்றும் பாராட்டும் சிறப்புடையதாம். குறிப்பாக முனைவர் வே. இரா. மாதவன் அவர்கள் தாம் நியமனம் பெற்று இத் துறையில் சேர்ந்தநாள் முதலாக இப்பணியில் கண்ணுங்கருத்துமாக உழைத்தமை பெரிதும் பாராட்டற்குரியதாம். அவர் தொகுப்புப் பணியில் ஈடுபட்ட துடன் அட்டவணைகள், இணைப்புகள் ஆகியவற்றை உருவாக்கியும் திருத்தியும் பெரிதும் உதவினார்.

இத் திட்டத்தின் தொடக்கக் காலத்தில் முனைவர் சா. கிருட்டிண மூர்த்தி அவர்களும் தொகுப்புப்பணியில் ஈடுபட்டுச் சிறக்கப் பணிபுரிந் துள்ளார். இம்முதல் தொகுதியின் அச்சுப்பணியினை அச்சகத்திற்கு நேரில் சென்று கவனித்து வரும் பொறுப்பை இத்துறையின் தொழில் நுட்ப உதவியாளர் புலவர் ப.வெ. நாகராசன், திரு.சி. இலட்சுமணன் ஆகியோர் கவனித்து வந்தனர். இந்நால்வரின் அயராத உழைப்பிற்கும் ஊக்கத்திற்கும் நான் நன்றியையும் பாராட்டையும் தெரிவிக்கக் கடமைப் பட்டுள்ளேன்.

இத் தொகுதியை நல்லமுறையில் அச்சிட்டுத் தந்தவர்கள் தஞ்சாவூர் தொன்போஸ்கோ அச்சுக்கூடத்தார் ஆவர். அச்சகத்தாரின் ஒத்துழைப்புக்கு, குறிப்பாக திரு. ஆரோக்கியசாமி அவர்களுக்கு என் நன்றியும் பாராட்டும் உரியன.

இந்தத் தமிழ்ச்சுவடி விளக்க அட்டவணை தொடரும் பணியாகும். இத்துடன் இரண்டாம் தொகுதியும், மூன்றாம் தொகுதியும், நான்காம் தொகுதியும் வெளிவருகின்றன. இத்தொகுதிகள் தமிழாய்வாளர்க்கும், மொழிநூல் வரலாறு முதலியவற்றை ஆராய்வார்க்கும் குறிப்பாகச் சுவடி ஆய்வோர்க்கும் பெரிதும் பயன்படவிருக்கின்றன. இத் தொகுதியின்கண் காணப்பெறும் பிழைகளையும் இனி மேற்கொள்ள வேண்டிய திருத்தங்களையும் அறிஞர் உலகு சுட்டிக் காட்டுமேல் அவர்களுக்குப் பெரிதும் நன்றி பாராட்டும் கடப்பாடுடையேன் ஆவேன்.

த. கோ. பரமசிவம்

தமிழ்ப் பல்கலைக் கழகம்.
தஞ்சாவூர்.
நவம்பர் 10, 1987.

# முகவுரை

## சுவடி

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட சங்கப்பாடல்கள் முதலாகப் பல்வேறு காலங்களிலும் தோன்றிய தமிழ்நூல்களை நாம் இன்று பெறுவதற்குத் துணைபுரிந்தவை காலந்தோறும் எழுதப்பெற்று வந்த தமிழ்ச்சுவடிகளேயாம். புலவர்களும் அவர்களிடம் பயின்ற மாணவர்களும் நூல்களை எழுதிப் போற்றிப் படித்து வந்ததனால்தான் நூல்களுக்குப் பற்பல சுவடிகள் அமைவனவாயின.

சுவடி என்பது ஓலைகளில் எழுத்தாணிகொண்டு எழுதப்பெற்ற நூல்களையே குறிக்கும். முன்னை நாளில் ஓலை ஒன்றே நம் நாட்டில் எழுதுபொருளாய்ப் பயன்பட்டவற்றுள் சிறப்பிடம் பெறுகிறது. இதற்கு நாட்டுப்பனையோலைகளும் சீதாளவோலை எனப்படும் கூந்தற்பனை யோலைகளும் பயன்பட்டன. நாட்டுப்பனையோலைகளில் எழுதப் பெற்ற சுவடிகளே மிகுந்து காணப்படுகின்றன. கூந்தற்பனை யோலைகள் நாட்டுப்பனையோலைகளினும் அகலமானவை. எனவே இதில் அதிகமான வரிகள் எழுதப்பெற்றுள்ளமை காணலாம்.

## சுவடி சேர்த்தல்

இளமையான மெல்லிய ஓலைகள் எழுதுவதற்குப் பயன்படா; அதுபோலவே மிக முற்றிய ஓலைகளும் பயன்படா. பழுப்புநிறம் பெற்ற பழுத்த பனையோலைகளைக் கொண்டுவந்து அவற்றைப் பதப்படுத்துவர். பின் நீண்ட தனியோலைகளின் குறுகிய அடி நுனி களை நீக்கி, ஓலைகளின் நரம்பைக் கழித்து ஒரே அளவாக ஓலை களை அமைத்துக்கொள்வர். இதனை 'ஓலைவாருதல்' என்று சொல்லுவர். இவ்வாறு அமைக்கப்பெறும் வெள்ளோலைகளின் தொகுப்பே சுவடி.

## சுவடிப்புத்தகம்

வெள்ளோலைகளில் கயிறு கோப்பதற்காக வட்டவடிவத்தில் துளையிடுவர். சிறிய சுவடியாயின் மூன்றிலொரு பாகத்தில் இடப் பக்கம் அமைப்பர். நீண்ட சுவடியாயின் மையத்தைக் கணக்கிட்டு அதன் இடப்பக்கமும் வலப்பக்கமும் இரு துளையிடுவர். இதழ்களை ஒன்றுசேர்க்கத் தடித்த நூற்கயிற்றில் அவற்றைக் கோப்பர். ஏடுகள் நழுவி விழுந்துவிடாமல் தடுக்கக் கயிற்றின் மேற்பக்கம் பனை யோலை ஈர்க்குத் துண்டினைப் பிணைப்பர். இதற்குக் 'கிளிமூக்கு' என்பது பெயர். இதற்குத் துளையிட்ட செப்புக்காசையோ சோழி யையோ பயன்படுத்துவதும் உண்டு. கயிற்றில் கிளிமூக்குச் சேர்த்தபின் ஏடுகளை ஒன்றுகூட்டி அக் கயிற்றால் ஏட்டின் அடிமுதல் நுனிவரைச் சுற்றிக்கட்டுவர். இதுவே தனிச் சுவடிப்புத்தகம். இதனைப் 'பொத் தகம்' என்றும் சொல்வதுண்டு.

'பலவி னியைந்தவும் ஒன்றெனப் படுமே
அடிசில் பொத்தகம் சேனை யமைந்த
கதவம் மாலை கம்பல மனைய'

என ஆசிரியர் அகத்தியனார் இதழ்கள்பல சேர்ந்தது பொத்தகம் என்ப தனை எடுத்துரைக்கிறார்.

இரு துளையிடும் சுவடிகளில் இடப்பக்கம் நூற்கயிறு கோத்து வலப்பக்கம் மெல்லிய குச்சியைச் செருகிச் சுவடி தொய்யாமல் சேர்ப்பர். இதற்கு இரும்பினாலாகிய நீண்ட கம்பியையும் பயன்படுத்துவது உண்டு. சுவடியில் செருகப்பெறும் இந்த ஆணிக்கு 'நாராசம்' என்பது பெயர். இந் நாராசம் தலையில் குமிழ் போன்ற கொண்டை அமைப் புடையதாகும். நாராசம் செருகும் சுவடிகளில் இடப்பக்கம் கோத்த நூலை நாராசத்தின் கொண்டையில் கட்டுவர்.

சுவடியின் தொடக்கத்திலும் முடிவிலும் சில வெற்றேடுகளைக் காப்பாகக் கோப்பர். இதனால் இருபுறத்தும் எழுத்துச்சுவடிகள் பழுது படாமல் இருக்கும். இந்த நாளில் புத்தகங்களுக்கு அட்டைக்கட்டுச் செய்வதுபோலச் சுவடிகளின் இருபுறமும் அதே அளவான மரச்சட்டம் துளையிட்டுச் சேர்ப்பர். பனைமட்டைகளும் மூங்கில் பத்தைகளும் இதற்குப் பயன்படுவது உண்டு. செம்பு முதலியவற்றாலான உலோகத் தகடுகளையும் சிலர் இதற்குப் பயன்படுத்தியுள்ளனர். மேலே சுவடிக் காப்பாக அமையும் சட்டங்களில் பூ வேலைப்பாடு போன்ற உருவங்களைப் பொறித்தலும் உண்டு. எழுதுவதற்காகத் தயாரித்த ஓலைச்சுவடியை 'வெள்ளோலை' என்றும் 'வெற்றேடு' என்றும் குறிப்பிடுவர்.

## நூலறிபுலவர்

நாளடைவில் அச்சுப்புத்தகம் முதலியவற்றையும் சுவடி என்று குறிப்பிடுவது வழக்கமாயிற்று. சுவடிப்புத்தகங்களை 'நூல்' என்று குறிப்பிடும் வழக்கமும் பழமையானதே. இசை, நாட்டியம், சோதிடம், மருத்துவம், போன்ற கலை நூல்களையும் நூல் என்னும் பெயரால் குறிப்பிட்டு வந்துள்ளனர். இதனால் கற்றோர்க்கு 'நூலறி புலவர்' என்பதும் ஒரு பெயராயிற்று.

## கலைமகள் கையில் புத்தகம்

கல்விக்கு அடிநிலைக் கருவி சுவடி நூல்களாகிய புத்தகங்களே. எனவே கலைமகள் திருக்கையில் புத்தகம் ஓர் அணிகலனாக நிலை பெறுவதாயிற்று.

'புத்தகமும் ஞானத்து முத்திரையும் பொற்பளிங்கும்
வைத்த கமண்டலமும் வன்னிகையும்—முத்தின்
வடங்கொண்ட தோளினாள் வந்தென் மனத்தே
இடங்கொண்டாள் நீங்கிற் றிடர்'

என வரும் பாரதவெண்பாவில் காணும் கலைமகள் காப்புச் செய்யுளில் அவளுடைய திருக்கரத்தில் அமைந்த புத்தகத்தை முதலில் எடுத்துக் கூறுவது காணலாம். 'வன்னிகை' என்பது எழுதுகோலைக் குறிக்கும். ஆக ஏடும் எழுத்தாணியும் கலைமகளுக்கு அணிகலன்களாகின்றன என்பது தெரிய வரும். கம்பராமாயணப் பாயிரத்திலும் கலைமகள் வாழ்த்து, 'பொத்தகம் படிகமாலை' எனப் புத்தகத்தை முதன்மையாக வைத்துப் பாடப்பெற்றிருத்தலும் நோக்கத்தகும்.

## புத்தகத்தில் பதிவுசெய்தல்

இலக்கிய இலக்கண சாத்திர நூல்கள், கணக்குகள் முதலிய எல்லாமே முன்னாளில் சுவடிப்புத்தகத்தில் எழுதிப் போற்றப்பட்டன. பட்டினத்தடிகள் சிவபெருமானை நோக்கிப் பாடிய துதிப்பாடல் ஒன்றில் பெருமான் பார்வதியைத் திருமணம் செய்த நாளில், அத் திருமணத்திற்கு வந்திருந்தவர் பெயருடன் தம் பெயரையும் அந்தப் புத்தகத்தில் எழுதிக் கொள்ளுமாறு வேண்டுகிறார்.

'உரிமையிற் பாடித் திருமணப் பந்தருள்
அமரர் முன்புகுந் தறுகு சாத்திநின்

தமர்பெயர் எழுதிய வரிநெடும் புத்தகத்து
என்னையும் எழுத வேண்டுவல்'

(பதினொராந். கோயில் நான். 4 : 20-23)

என்பது பட்டினத்தாரின் வேண்டுதலாகும்.

பத்திசெய்து வாழ்வாரையும் அல்லாரையும் இறைவன் குறித்து வைக்கிறான் என்றும், அவ்வாறு அவன் எழுதும் புத்தகம் '*கீழ்க்கணக்கு*' எனப்படும் என்றும் திருநாவுக்கரசர் தேவாரத்தில் குறிப்பிடுகிறார்.

தொழுது தூமலர் தூவித் துதித்துநின்று
அழுதுபோற்றி அரற்றுகின் றாரையும்
பொழுது போக்கிப் புறக்கணிப் பாரையும்
எழுதும் *கீழ்க்கணக்*கின்னம்பர் ஈசனே.

(தேவா. 5 : 21 : 8)

இவ்வாறாக எழுதும் சுவடிப் புத்தகங்கள் எல்லாக் காலத்தும் செய்திக் களஞ்சியங்களாகத் திகழ்ந்தன என்பது தெளிவாம்.

## எழுத்தாணி

ஓலையில் எழுதுவதற்கு அடி பருத்தும் நுனி சிறுத்தும் கூராயுள்ள எழுத்தாணியையே பெரிதும் பயன்படுத்துவர். இதற்குக் 'குண்டெழுத் தாணி' என்பது பெயர். மடக்குக் கத்தியுடன் சிறிய எழுத்தாணியும் சேர்த்துக் கத்திபோல மடக்கிவைத்து வேண்டும்போது நிமிர்த்தி எழுதப் பயன்படும் எழுத்தாணியும் நடைமுறையிலிருந்தது. இதற்கு 'மடக்கு எழுத்தாணி' என்பது பெயர்.

## சுவடிகளில் எழுதும் முறை

ஓலைச்சுவடிகளில் எழுதும் முறையும் சிறப்பாக அமைந்திருக்கக் காணலாம். இப்பொழுது நாம் காகிதத்தில் எழுதும்போது ஓரங்களில் இடம்விட்டு எழுதுதல்போல ஓலையின் இடமும் வலமும் இடம்விட்டு எழுதுவர். இடக்கையால் சுவடியைப் பிடித்துக்கொண்டு வலக் கையால் எழுத்தாணி பிடித்து எழுத்துகளைப் பொறிக்கும் கலை ஒரு தனிக்கலையே. தட்டச்சுப்பொறிகளில் எழுத்துவரிகள் பொறிக்கப் பொறிக்கக் காகிதம் நகர்ந்து செல்வதுபோல் ஓலையும் விரலசைவால் நகர, வைத்த கை வாங்காமலேயே எழுத்தாணியால் எழுதிக் கொண்டிருப்பர், மெல்லிதான பனையோலையில் இருபக்கமும் எழுதுவர். ஓலையின் இடப்பக்க வெற்றிடத்தில் ஏடுகளின் வரிசை

யைக் குறிக்க எண்ணிடுவர். தொடக்கத்தில் நூற்பெயர் மட்டுமோ நூற்பெயரும் ஆசிரியர் பெயருமோ இடப்பக்க முதலிற் காணப்படும். நூற்பெயர் மட்டுமன்றி நூலின் உட்பகுதிகளாகிய படலம், சருக்கம் முதலியவற்றின் பெயர்களையும் இடப்பக்கம் தொடக்கத்தே எழுதுதல் உண்டு. நூற்பகுதிகளின் முடிவில் இன்ன பகுதி முடிந்தது என்றும் நூல் முடிவில் இன்ன நூல் முற்றுப்பெற்றது என்றும் குறிப்பிடுவர்.

ஏடெழுதியோரில் சிலர் ஏட்டின் தொடக்கத்தில் அந் நூலுக்கு எவ்வகையிலும் இயைபில்லாத கடவுள் வாழ்த்துச் செய்யுட்களை எழுதி வைத்தலும் உண்டு. இவை பெரும்பாலும் எழுதுவோரின் வழிபடு கடவுளைப் பற்றியதாய் அமையும். இவ்வகையான பாடல்களை நூலுக்குப் புறம்பாகத் தனியேட்டில் எழுதிவைத்தலே பெரும்பான்மை.

ஏடுகளில் எழுதும்போது வரிகள் கோணாமல் நேர்நேராய் ஒன்றற் கொன்று சம இடைவெளியுடையனவாய் எழுதிச் செல்லுகின்ற பாங்கு நம்மை வியக்கச் செய்யும். சில ஏடுகளில் வரி எண்களைக் குறிக்க 1, 2, என்னும் தொடர் எண் முதலிலும் முடிவிலும் தரப்படுதலும் காணப்படுகிறது. தொடர்ந்த வரிகளாய்ச் சொல்லுக்குச் சொல் இடைவெளியின்றி எழுதிச் செல்வதே பெரும்பாலும் காணப்பெறும். எனினும் சிறுபான்மையாகச் சிற்சில சுவடிகளில் நூற்பா அம்மானைப் பாடல் போன்றவற்றைப் பத்திபத்தியாய் அமைத்து எழுதுதலும் காணப்படுகிறது.

தொடர்ந்து பாடல்களை எழுதிச் செல்லும்போது ஒவ்வொரு பாடலுக்கும் தொடர்எண் தருகின்றனர். இதனைக் கொண்டு பாடல்களின் முதல் இறுதிகளை எளிதில் காண இயலும். நூலின் ஒருபகுதி முடிந்ததும் இன்ன பகுதி முற்றும் என்று குறிப்பிடுவர். நூலின் ஒரு பகுதி முடிந்ததும் மேலே சுட்டியாங்கு முடிவுக்குறிப்பு எழுதி அடுத்த பகுதியைத் தொடர்ந்து தொடங்குதலும் காணப்படும். இவ்வாறு இடையில் தொடங்கப்பெறும் புதுப்பகுதியின் தலைப்பு இடப்பக்க ஓர வெற்றிடத்தில்தான் அமைகிறது. சில ஏடுகளில் நூலின் ஒரு பகுதி முடிந்து மேலும் எழுத வெற்றிடம் மிகுந்திருப்பினும் அதனை விடுத்துப் புதிய பகுதியை அடுத்துவரும் பக்கத்தில் தொடங்குதலும் காணப்படுகிறது.

## ஏட்டின் முடிவுக்குறிப்பு

நூலின் முடிவில் நூல் முடிந்தது என்னும் குறிப்புடன் யாரால், யாருக்காக, எந்த நாளில் எழுதிமுற்றுவிக்கப்பெற்றது என்னும் குறிப்புகளும் பெரும்பான்மைச் சுவடிகளில் ஏடெழுதுவோரால் தரப்படு

கின்றன. நூல் முடிவுக் குறிப்பில் நூற்பெயருடன் ஆசிரியர் பெயரும் உடன் தரப்படுதலும் உண்டு. சிலர் இன்ன நாளில் தொடங்கி இன்ன நாளில் முற்றுப்பெற்றது என்னும் காலக்கணக்குத் தருகின்றனர். ஆனால் பெரும்பான்மை ஏடுகளில் முற்றுப்பெற்ற நாள்தான் தரப்படு கிறது. காலக்குறிப்பில் ஆண்டு, மாதம், திதி, கிழமை முதலிய குறிப்புகள் இடம்பெறுகின்றன. இவற்றால் குறித்ததொரு ஏடு எழுதப்பெற்ற காலம் நமக்குத் தெளிவாகிறது. இவ்வாறு ஏட்டின் முடிவில் தரப்பெறும் இத்தகைய குறிப்புகள் அந்தச் சுவடி பற்றிய வரலாற்றோடு நூலாசிரியர், ஏடெழுதியோர் முதலியோர் வரலாறுகளும் அறியத் துணை செய்கின்றன. தொடக்கத்தில் வழிபடு கடவுளை வணங்கியாங்கு நூலின் முடிவிலும் இன்ன தெய்வம் துணை, இன்ன தெய்வம் சகாயம் என்றவாறுள்ள குறிப்புகளும் பல ஏடுகளில் உண்டு.

## ஏட்டெழுத்து

ஏட்டின் எழுத்து வடிவங்களைப் பார்க்கும்போது அவை எவ்வளவு அழகாய் முத்துமுத்தாய் ஒருமைப்பாடுடைய உருவம் பெற்றனவாய் உள்ளன என்பதும் காணத்தக்க ஒன்று. நூல்களை ஓலைச்சுவடிகளில் எழுதிப் போற்றிய அந்நாளில் அதனை ஒரு பெருங்கலையாகவே நம்மனோர் வளர்த்து வந்தனர். ஏட்டில் கையெழுத்துத் தெளிவாக எழுதப் பயிலாதவனைச் சான்றோர் கடிந்துரைத்துள்ளனர்.

'வெண்பா இருகாலிற் கல்லானை வெள்ளோலை
கண்பார்க்கக் கையால் எழுதானைப்—பெண்பாவி
பெற்றாளே பெற்றாள் பிறர்நகைக்கப் பெற்றாளே
எற்றோமற் றெற்றோமற் றெற்று'

என்னும் ஒளவை மூதாட்டியின் வாக்கு இதற்குச் சான்றாம். ஓலையில் எழுதியபின் எழுத்துகள் விளங்க மஞ்சள், மை என்னும் குழம்புகளுள் ஒன்றை அதன்மேல் பூசுவர். பின் வெள்ளைத்துணியினால் ஏட்டின் பக்கங்களை அழுத்தித் துடைப்பர். இதனால் இக் கலவைகள் எழுத்துப் பொறிப்புகளில் படிந்து எழுத்துகளை நன்கு துலங்கச்செய்யும்.

பரஞ்சோதி முனிவர் சந்திரனின் தோற்றம் பற்றிய பாடல் ஒன்றில் வானத்தை ஏடாகவும், அதில் விளங்கும் விண்மீன்களை அவ்வேட்டில் பொறித்த எழுத்துகளாகவும், அவ்வெழுத்துகளின் மேல் இருளாகிய மை தடவி, நிலவாகிய வெள்ளாடையால் துடைப்பவனைப் போலக் கடலிலிருந்து வெண்கதிர் வீசிச் சந்திரன் தோன்றினான் என்கிறார்.

'சேய தாரகை வருணமாத் தீட்டிய வானம்
ஆய வேட்டினை இருளெனும் அஞ்சனம்தடவி
தூய வாணிலா என்னும்வெண் தூசினாற் றுடைப்பான்
பாய வேலையில் முளைத்தனன் பனிமதிக் கடவுள்'
(திருவிளை. பரிநரி. 9)

ஏட்டில் எழுத்தாணியால் எழுதி, அதன்மேல் மை தடவி, அந்த மை நன்கு படிய வெள்ளைத் துணியால் துடைக்கும் வழக்கத்தினை இப் பாட்டில் உருவகமாகப் பரஞ்சோதி முனிவர் எடுத்தியம்பியுள்ளமை காணலாம். வருணம் என்றால் எழுத்தாம் ; அஞ்சனம் என்பது மை ஆகும்.

## ஏடுவாசிக்கத் தனிப்பயிற்சி

ஓலைச்சுவடிகளில் எழுத்து, வரிகள் முதலியன ஒரே சீரான அமைப்பில் அழகுறக் காணப்பட்டாலும் அவற்றை வாசிப்பதற்குத் தனிப்பயிற்சி வேண்டும். முக்கியமாக ஏடுகளில் புள்ளிபெறும் மெய்யெழுத்துகளுக்குப் புள்ளி இடப்படுவதில்லை என்பது கவனிக்கத் தக்கது. இதனால் ஓர் எழுத்து மெய்யா, உயிர்மெய்யா என்பது எளிதில் உணரக் கூடியதாயிராது. கொம்பு பெறும் எழுத்துகளில் குறில், நெடில் வேற்றுமையின்றி ஒரு மாதிரியாகவே காணப்படும். காலாக எழுதப்படும் 'ா' வுக்கும் 'ர' என்னும் இடையெழுத்திற்கும் வேற்றுமை தெரியமாட்டா. வல்லின றகரத்தினோடு நகரத்திடை வேற்றுமையும் மிக நுட்பமாகக் கவனிக்கத்தக்கதாயிருக்கும். எல்லாம் கால் போலவேதான் தோற்றமளிக்கும். ஐகாரத்தைக் குறிக்க இடப்படும் 'ை' இரட்டைச் சுழிக்கும் இரண்டு சுழி 'ண' என்னும் எழுத்திற்கும் வேற்றுமை காண்பதும் அரிது. இவ்வாறே, ல, வ-க, ச, த, வடிவ வேற்றுமைகளும் கூர்ந்து காணத் தக்கனவாயிருக்கும். கு, டு, ரு,-து, நு, லு, று. னு போன்ற மிக நுணுகிய வேறுபாடுடைய எழுத்துகளும் உருவ ஒற்றுமையால் திகைக்க வைக்கும்.

ஏடுகளில் காணப்படும் கையெழுத்துகளிலும் ஒருவர் கையெழுத்துப் போல மற்றொருவர் கையெழுத்து இருப்பதில்லை. எந்தெந்த எழுத்தை ஏடெழுதியோர் எத்தகைய வடிவத்தில் அமைத்துச் செல்கிறார் என்பதும் சுவடி முழுமையாய்ப் பார்த்துத் தீர்மானிக்கப் பட வேண்டியதாயிருக்கும். ஆதலால் ஏட்டில் எழுதிய எழுத்துகளை வாசிப்பதற்குத் தனித்திறனும் பயிற்சியும் வேண்டும்.

## செய்தியோலை

சங்க காலத்தில் எழுத்துக்கலை சிறப்புற்றிருந்தது. கல்லில் பொறித்து வைக்கும் அளவிற்கு அக்கலை வளர்ந்திருந்தது. செய்தி தெரிவிக்க ஓலையில் எழுதி அதற்குக் காப்பாக உறையிட்டு அரக்கு முத்திரையிடுதல் பற்றிய குறிப்பு ஒன்று கலித்தொகையில் காணப் படுகிறது.

'துகள்தபு காட்சி அவையத்தார் ஓலை
முகடு காப்பு யாத்துவிட் டாங்கு' (கலி. 94 : 42-43)

என்பது செய்தியோலையைச் சுட்டுகிறது. இதற்கு நச்சினார்க்கினியர் ''துகள் அறுகின்ற அறிவினையுடைய அவையிலுள்ளார் திரட்சி பொருந்தின ஓலையின் தலையைக் கட்டி அதன் தலையிலே அரக்கிலச் சினை இட்டு விட்டாற்போல'' என்று விளக்கம் எழுதுதலும் நோக்கத்தகும்.

மாதவி கோவலனைப் பிரிந்து வருந்தியிருந்த காலத்து, அவள் தன் உள்ளக்கிடக்கையை ஓலையில் எழுதி, அந்த முடங்கலைக் கோசிகன் என்னும் அந்தணனிடம் தந்து, கோவலனைத் தேடிக் கண்டு சேர்ப்பிக்க வேண்டுகிறாள். அந்த அந்தணனும் அவ்வாறே ஓலை யுடன் பல இடமும் சென்று இறுதியில் கோவலனைக் கண்டு மாதவியின் முடங்கலை அவனிடம் தருகிறான். ஓலை பெற்ற கோவலன் அதனைப் பிரித்துப் பார்த்துச் செய்தி தெரிந்துகொள் கிறான். இந் நிகழ்ச்சி குறித்து இளங்கோவடிகள்,

'இருந்துய ருற்றோள் இணையடி தொழுதேன்
வருந்துயர் நீக்கென மலர்க்கையின் எழுதிக்
கண்மணி யனையாற்குக் காட்டுக என்றே
மண்ணுடை முடங்கல் மாதவி ஈத்ததும்
ஈத்த ஓலைகொண்டு இடைநெறித் திரிந்து
தீத்திறம் புரிந்தோன் சென்ற தேயமும்
வழிமருங் கிருந்து மாசற உரைத்தாங்கு
அழிவுடை உள்ளத் தாரஞ ராட்டி
போதவிழ் புரிகுழல் பூங்கொடி நங்கை
மாதவி யோலை மலர்க்கையின் நீட்ட
உடனுறை காலத்து உரைத்தநெய் வாசம்
குறுநெறிக் கூந்தல் மண்பொறி உணர்த்திக்
காட்டிய தாகலின் கைவிட லீயான்
ஏட்டகம் விரித்தாங் கெய்திய துணர்வோன்-''
(சிலப். புறஞ்சேரி. 73-86)

என்று பாடியுள்ளார். இங்கே செய்தியோலை 'முடங்கல்' எனப்பெயர் பெறுதலும் அது சுருட்டப்பெற்று இலச்சினை இடப்பெற்றிருந்தது என்பதும் தெரியவரும். மாதவி முடங்கலை 'மாதவி யோலை' என்று கவிஞர் குறிப்பிடுதலும் நோக்கத்தக்கது.

செய்தி எழுதப்பெற்ற ஓலைக் கடிதத்தைச் சுருட்டி முத்திரையிட்டு அனுப்புவதால் செய்தியோலை 'முடங்கல்' என்னும் பெயர்பெறுவதாயிற்று. இது 'ஓலைச்சுருள்' என்றும் வழங்கப்பெறும்.

பாடலாக அமையும் ஓலைச் செய்தியை ஓலைத்தூக்கு என்றும் சீட்டுக்கவி என்றும் வழங்குவர். சீவகசிந்தாமணியுரையில் நச்சினார்க்கினியர் கடிதச் செய்தியை 'ஓலைப் பாசுரம் (சீவக. 2147-உரை) என்று சுட்டியுள்ளார். திருவாலவாயுடையார் எழுதிய சீட்டுக்கவி 'திருமுகப் பாசுரம்' என்னும் பெயரால் பதினொராந்திருமுறையில் முதற்கண் விளங்குதல் காணலாம். பிற்காலச் சோழருடைய ஆட்சியில் மன்னரின் தலைமைச் செயலாளர் 'ஓலைநாயகம்' என்றும் பெயர் பெற்றிருந்தமை கல்வெட்டுகளால் தெரியவருகின்றது.

## நீட்டோலை

அரசனுடைய ஆணை தாங்கிய ஓலை 'நீட்டோலை' எனப்படும்.

'கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும்
அவையல்ல நல்ல மரங்கள்—சவைநடுவே
நீட்டோலை வாசியா நின்றான் குறிப்பறிய
மாட்டாத வன்நன் மரம்'

என ஔவையார் பாடலில் அரசனால் தரப்படும் நீட்டோலை பற்றிய குறிப்பு உள்ளது. பின்னாளில் அழகிய பாண்டியபுரம் பெரியவீட்டு முதலியார் ஓலைகளில் திருவிதாங்கூர் அரசரின் அரசாணைகள் 'நீட்டு' என்னும் பெயரால் குறிக்கப்பெறுதலும் இங்கு ஒப்புக்காணத்தகும்.

## மாணாக்கர்-ஓலைக் கணக்கர்

'அன்னாய் இவன் ஓர் இள மாணாக்கன்' எனக் குறுந்தொகையில் (33) தலைமகள் பாணன் ஒருவனைக் குறிப்பிடுவதாக வந்துள்ளது. எனவே, மாணாக்கருள் தொடக்க நிலையினர் இளமாணாக்கராகவும் பயிற்சி முதிர்ந்தவர் மாணாக்கராகவும் குறிப்பிடப்பெற்றனர் என்பது தெரியவரும். எழுத்துகளை எழுதி மை தடவிய ஓலைச்சுவடிகள் மாணாக்கர் கற்பதற்குப் பயன்பட்டன. 'மையாடல் ஆடல் மழபுலவர்'

(பரி. 11 : 88) என்பதனால் மை பூசிய ஓலைச் சுவடியைக் கற்பதற்குக் கருவியாகப் பயன்படுத்தியமை தெரியவரும். ஓலைச்சுவடிவழி அந்நாளில் கல்வி பயின்று வந்தமையால் மாணவர்களை 'ஓலைக்கணக்கர்' என்னும் ஒருவழக்கும் ஏற்படலாயிற்று.

'ஓலைக் கணக்கர் ஒலியடங்கு புன்செக்கர்
மாலைப் பொழுதில் மணந்தார் பிரிவுன்னி
மாலை பரிந்திட்டு அழுதாள் வனமுலைமேல்
கோலஞ்செய் சாந்தந் திமிர்ந்து.' (நாலடி. 40 : 7)

இந் நாலடியார்ப் பாட்டில் பள்ளியிற் பயிலும் மாணவர் படிப்பொலி அடங்கிய மாலைப்பொழுது குறிப்பிடப்படுவதால் பகல் முழுமையும் அம் மாணவர்கள் பயின்றுவந்தமை வெளிப்படும்.

## சுவடித்தூக்கு

பள்ளிக்கு மாணவர் எடுத்துச் செல்லும் சுவடித்தூக்குப் பற்றித் தமிழ் விடு தூதுடையார் குறிப்பிட்டுள்ளார்.

'எண்முதலா கப்பகரு மீரா றெனும்பருவம்
மண்முதலோர் செய்து வளர்க்குநாள்—கண்மணிபோற்

பள்ளிக்கூ டத்தசையாம் பற்பலதொட் டிலிற்கிடத்தித்
தள்ளிச் சிறார்கூடித் தாலாட்டி—உள்ளிவரு

மஞ்சட் குளிப்பாட்டி மையிட்டு முப்பாலும்
விஞ்சப் புகட்ட மிகவளர்ந்தாய்—மஞ்சரையே

பன்னியொரு பத்துப் பருவமிட்டு நீவளர்த்தாய்
உன்னை வளர்த்துவிட வொண்ணுமோ?
(தமிழ்விடுதூது 23-26)

இங்கே மஞ்சட்குளிப்பாட்டல், மையிடல், முப்பாலைப் புகட்டல் குழந்தைக்கும் சுவடிக்கும் பொது. படிக்கத் தொடங்குகையில் எழுதிய ஏட்டில் மஞ்சட் பூசுதலும், பின்பு எழுத்து விளங்க மைக்காப்புச் சாத்துதலும் நாட்டு வழக்கமாகும். குழந்தைக்குத் தாய்ப்பால், பசுவின் பால், ஆட்டின் பால் என்னும் மூவகைப் பாலைப் புகட்டுவது உண்டு. சுவடியோ அறம், பொருள், இன்பம் என்னும் முப்பாற் பொருளையும் கொண்டதாகவே அமையும்.

## கேட்டு எழுதி ஓதி வாழ்வார்

இந்நாளில் மாணவர்க்கு உணவு, உடை, புத்தகம், எழுதுகோல் போன்றவற்றை நன்கொடையாக வழங்குதல் போலவே அந்நாளிலும் மக்கள் உதவி வந்தனர் என்பதைப் பின்வரும் ஏலாதிப் பாடல்வழி அறியலாகும்.

ஊணொடு கூறை எழுத்தாணி புத்தகம்
பேணொடு எண்ணும் எழுத்துமிவை—மாணொடு
கேட்டெழுதி ஓதிவாழ் வார்க்கீந்தார் இம்மையான்
வேட்டெழுத வாழ்வார் விரிந்து (ஏலாதி 83)

'கேட்டு எழுதி ஓதி வாழ்வார்' என்றது பள்ளியில் பாடம் ஓதும் மாணவர்களையே. இவர்கள் கேட்டு எழுதி ஓதி வந்ததன் பயனால் வழிவழியாகத் தமிழ்ச் சுவடிகள் நாட்டில் எங்கும் பெருகலாயின.

## ஏடு எழுதுவோர்

சங்ககாலப் புலவர்களுள் ஒருவர் எழுத்தாளன் சேந்தன் பூதனார் என்னும் பெயருடையார். இவர் பாடிய பாடல்கள் அகநானூறு (84, 207), குறுந்தொகை (80, 206), நற்றிணை (69, 269) ஆகியவற்றில் இரண்டிரண்டு காணப்படுகின்றன. இவருக்கு 'எழுத்தாளன்' என்னும் பெயர் பாடல்களைப் பாடியமையேயன்றி நூல்கள் பலவற்றைப் படியெடுத்தமையாலும் ஏற்பட்டிருக்கலாம். ஏட்டில் நூல்கள் முதலியவற்றை எழுதியோர், 'எழுத்தாளர்' என்னும் சிறப்புக்குரியராகின்றனர். தமிழ்ச் சுவடிகளை எழுதிப் போற்றுவோரும் எல்லாக் காலத்தும் இருந்து வந்துள்ளனர். பிறர் பொருட்டு ஏடு பெயர்த்து எழுதித் தருதலைத் தொழிலாகக் கொண்டிருந்தோரும் அங்கங்கே இருந்தனர். அதனால் நூல்கள் பலவிடத்தும் பரந்து சென்று பயன்பட ஏதுவாகியது.

## திருக்கோயில்களும் திருமடங்களும்

முன்னாளில் திருக்கோயில்களும் சமயச்சார்பான திருமடங்களும் கல்வி நிலையங்களாகவும் விளங்கியதுண்டு. மாணவர் பலர் இங்கெல்லாம் தங்கியிருந்து கல்வி பயின்றனர். ஆகவே இத்தகு நிலையங்களில் சுவடிகள் பல இருத்தல் இயல்பே. தில்லைச் சிற்றம்பலக் கோயிலிலிருந்து தேவாரத் திருமுறைகளை அநபாய சோழன் கண்டெடுத்து உலகிற்குத் தந்தார் என்பது வரலாறு. திருவாவடு

துறை, தருமபுரம், சித்தாமூர், துறையூர், விருத்தாசலம், திருப்பனந்தாள், மதுரை, செப்பறை, வானமாமலை முதலிய ஊர்களில் உள்ள சமயஞ்சார்ந்த திருமடங்களில் சுவடிகள் பல காணப்படுகின்றன. திருப்பனந்தாள் காசி மடத்திலுள்ள தமிழ்ச் சுவடிகள் அனைத்தும் தமிழ்ப் பல்கலைக் கழகச் சுவடி நூலகத்திற்கு வந்து சேர்ந்துள்ளன. மதுரைத் திருஞானசம்பந்தர் ஆதீனத்திலிருந்த சுவடிகள் மதுரைக் காமராசர் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைக்குத் தரப்பட்டுள்ளன ஏனைய மடங்களில் உள்ள சுவடிகள் தக்க முறையில் பராமரிக்கப்படவில்லை என்றே தோன்றுகிறது. மருத்துவம், சோதிடம் ஆகியவற்றைத் தொழிலாகக் கொண்டிருந்த குடும்பங்களில் அப் பொருள்கள் பற்றிய சுவடிகள் பலவாக உள்ளன.

## ஏட்டில் எழுதிவந்த காலம்

காகிதமும் அச்சு யந்திரமும் பெருகப் பெருக ஏட்டில் எழுதும் நிலை குறைந்து வரலாயிற்று. 1876 ஆம் ஆண்டுவரை வாழ்ந்த மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் காலத்தில் ஏட்டில் எழுதும் பழக்கம் பரவலாயிருந்ததென்பது தெரியவருகிறது. ஒரே மாதிரியாக அமைந்த வெற்றேட்டுச் சுவடிகளில் நூல்களை எழுதி வைத்துக் கொள்வதில் பிள்ளையவர்கள் பெருவிருப்புடையராயிருந்தனராம். மகாவித்துவான் அவர்கள் பாடியபோது மாணவர்கள் அதனைக் கேட்டு எழுதிய நிகழ்ச்சிகள் அவர்தம் சரித்திரத்தில் காணப்படுகின்றன. பழைய நூல்களை ஏடுகளிலிருந்து காகிதத்தில் பெயர்த்து எழுதும் நிலையும் சென்ற நூற்றாண்டில் புலவர்களிடையே புகுந்துவிட்டது. இதற்கு முக்கிய காரணம் ஏட்டிலிருந்து பழைய நூல்களை அச்சுக்குக் கொண்டுவர அறிஞர் பலரும் முயன்றமைதான்.

## பதிப்பாசிரியரிடம் வந்த நூல்கள்

அச்சுநூல்கள் 16 ஆம் நூற்றாண்டு முதலாகத் தமிழகத்தில் ஏற்பட்ட போதிலும் பண்டைத் தமிழ் இலக்கணம், இலக்கிய நூல்கள் அச்சுருவம் பெறத் தொடங்கியது 19 ஆம் நூற்றாண்டில்தான். ஓரிரு நூல்களை அச்சிட்டாரும் பற்பல நூல்களை அச்சிட்டாருமாகப் பலர் பதிப்புப் பணியில் ஈடுபட்டுவரலாயினர். இவர்களுள் சென்னைக் கல்விச்சங்கப் புலவர்கள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர்.

பற்பல நூல்களை அச்சிட்ட பதிப்பாசிரியர்களுள் யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர், களத்தூர் வேதகிரி முதலியார், தாண்டவராய முதலியார், நயநப்ப முதலியார், விசாகப்பெருமாளையர்,

இராமாநுஜக்கவிராயர், இராசகோபாலப்பிள்ளை, திருமயிலை சண்முகம்பிள்ளை, சுன்னாகம் குமாரசாமிப்பிள்ளை, சி. வை. தாமோதரம்பிள்ளை, வீராட்சிமங்கலம் சிவன்பிள்ளை, டாக்டர் உ.வே. சாமிநாதையர், நமச்சிவாய முதலியார், சேதுசமத்தான மகாவித்துவான் ரா. இராகவையங்கார், பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை முதலியோர் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கோர் ஆவர். இவர்கள் எல்லாரும் பற்பல ஓலைச்சுவடிகளைத் தொகுத்து வைத்துப் போற்றுவாராயினர். 1956-ல் மறைந்த பேராசிரியர் வையாபுரிப் பிள்ளையவர்கள் 336 சுவடிகளைச் சேர்த்துவைத்திருந்தனரென்றால் அவருக்கு முற்பட்டோராகிய ஏனையோர் எத்தனையோர் நூற்றுக் கணக்கான சுவடிகளைச் சேர்த்து வைத்திருக்க வேண்டும் அன்றோ? பேராசிரியர் வையாபுரிப் பிள்ளையவர்கள் தொகுத்த சுவடிகள் இப்பொழுது கல்கத்தாத் தேசிய நூலகத்தில் பாதுகாப்பாக வைக்கப் பட்டுள்ளன. டாக்டர் உ.வே. சாமிநாதையர் தேடித்தொகுத்த ஆயிரக்கணக்கான சுவடிகளை அவர் பெயரால் சென்னையிலே பெசண்டுநகரில் இருக்கும் நூலகத்தில் வைத்துப் போற்றி வருகின்றனர். ஏனையோர் தொகுத்த சுவடிகளின் கதி என்ன? அவர்கள் காலத்திற்குப்பின் சிதறுண்டுபோயிருக்கும். அருமை அறியாமல் அழியவிட்டவரும் பலரே.

## தனியார் பெருந்தொகுப்பு

யாழ்ப்பாணம் சுவாமிநாத பண்டிதர் தேவாரம் அடங்கல் முறையைத் தலமுறைப்படி அமைத்து அச்சிட்டவராவர். இவர் சென்னை ஜார்ஜ் டவுன் பகுதியில் தாம் வாழ்ந்திருந்த வீட்டிலே சுவடிகளை மிகுதியும் தொகுத்து வைத்திருந்தாராம். இவர்தம் தொகுப்பைப் பேராசிரியர் வையாபுரிப் பிள்ளையவர்கள் நேரில் பார்த்தமைபற்றித் தெரிவித்ததுண்டு. பண்டிதர் காலத்திற்குப் பின் அச் சுவடிகள் அழிந்துபட்டமைபற்றிப் பேராசிரியர் சொல்லிச்சொல்லிப் பலகால் வருந்தியதுண்டு. சுவாமிநாதபண்டிதரைப் போல எத்தனையோ பண்டிதர்களிடமிருந்த சுவடிகளும் காலப்போக்கில் சிதைவுற்றுப் போயின என்பதும் எண்ணியெண்ணி இரங்கத்தக்கதாகும்.

## சுவடி நாட்டம் குறைதல்

காகிதம் எழுதுபொருளாகப் பயன்பட்டபோது பழஞ்சுவடிகளைக் காகிதத்திலும் பெயர்த்து எழுதிப் போற்றுவாராயினர். சென்ற நூற்றாண்டில் காகிதப் புழக்கமும் அச்சு யந்திரங்களும் மிகுதிப்படவே

தமிழ் நூல்கள் ஏட்டிலிருந்து அச்சுப்படிவமாக மாறத்தொடங்கின. அச்சில் வந்தபின் நூல்களை எளிதில் பெறவும் ஏட்டில் எழுத்துகளை நிதானித்துப் படிப்பது போலன்றி விரைவாக வாசிக்கவும் இயன்றது. ஆகவே, அச்சில் வந்த நூல்களின் சுவடிகளில் கற்றோரின் கவனம் செல்லவில்லை.

## ஏடுகளின் சிதைவு

ஏட்டுச் சுவடிகளின்வழிப் படிக்கும் நிலை மாறியபோதே அவற்றின் சிதைவிற்கும் அழிவிற்கும் வித்திட்டாயிற்று. ஏட்டுச் சுவடியில் எழுத்தாணி கொண்டு எழுதும் பழக்கமும் வரவரக் குறைந்துவந்தது. அதனால் புதிய சுவடிகள் எழுதிவைக்கும் நிலைமையும் மாறிவிட்டது. ஒருசிலர் தாம் போற்றும் நூல்களைக் காகிதத்தில் படியெடுத்தும் கற்கலாயினர். பெரும்பாலான இடங்களிலும் இருந்த சுவடிகள் போற்றுவாரின்றி மூலைமுடுக்குகளில், பெட்டி பேழைகளில் அடைபட்டுப் பரண்களில் சிறைப்பட்டுவிட்டன. இவ்வாறு கவனிப்பாரின்றிக் கிடந்த சுவடிகள் பூச்சி புழுக்களுக்கும் எலிகளுக்கும் கறையானுக்கும் இரையாயின. சுவடிகளின் அருமை அறியாத மக்கள் அவற்றை நீருக்கும் நெருப்புக்கும் இரையாக்கி மகிழ்ந்தனர். இத்தகைய இன்னல்களையெல்லாம் தாண்டி இந்நாளிலும் சுவடிகள் அங்கங்கே இருந்துவருவது வியப்புத்தான்.

## சுவடிகள் விரைவில் மறைந்த காட்சி

ஒருசமயம் பார்த்த சுவடிகள் பிறிதொரு சமயம் காணாமற் போனதும் உண்டு. இத்தகைய அனுபவங்கள் பலவற்றை டாக்டர் சாமிநாதையர் அவர்கள் தம் 'என் சரித்திர'த்தில் குறிப்பிட்டுள்ளார். ஒருசமயம் திருவாவடுதுறை மடத்தில் வளையாபதிச் சுவடியைப் பார்த்தார்களாம். பின்னொருகால் சென்றபோது அந்தச் சுவடி குறித்த இடத்தில் இல்லையாம். இது குறித்து டாக்டர் ஐயர் அவர்கள் எழுதியுள்ள செய்தி மிகவும் உருக்கமாயுள்ளது.

> "சீவகசிந்தாமணியோடு சேர்ந்து ஐம்பெரும் காப்பியங்களென்று வழங்குபவை சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி என்பன. இவற்றுள் சிலப்பதிகாரம் மணிமேகலை என்னும் இரண்டு நூல்களின் ஏட்டுப்பிரதிகள் என்னிடம் இருந்தன. வளையாபதி, குண்டலகேசி என்னும் இரண்டும் கிடைக்கவில்லை. பிள்ளையவர்கள் இருந்தகாலத்தில் திருவாவடுதுறை மடத்துப் புத்தகசாலையில் வளையாபதி

ஏட்டுச் சுவடியை நான் பார்த்திருக்கிறேன். அந்தக் காலத்தில் அத்தகைய பழைய நூல்களில் எனக்குப் பற்று உண்டாக வில்லை. அதனால் அந்நூலை எடுத்துப்பார்க்கவோ பாடம் கேட்கவோ சந்தர்ப்பம் நேரவில்லை. பழைய நூல்களை ஆராயவேண்டுமென்ற மனநிலை என்பால் உண்டானபிறகு தேடிப்பார்த்தபோது அந்தச் சுவடி மடத்துப் புத்தகசாலையில் கிடைக்கவில்லை. தமிழ்நாடு முழுவதும் தேடியும் பெற்றிலேன். எவ்வளவோ நூல்கள் அழிந்தொழிந்து போயின என்று தெரிந்து அவற்றிற்காக வருத்தமடைவது என் இயல்பு. ''கண்ணினால் பார்த்த சுவடி கைக்கெட்டாமல் போயிற்றே'' என்ற துயரமே மிக அதிகமாக வருத்தியது. 'கண்ணிலான் பெற்றிழந்தான் எனவுழந்தான் கடுந்துயரம்' என்று கம்பர் கூறிக்கும் துயருக்குத்தான் அதனை ஒப்பிடவேண்டும்''.

(என் சரித்திரம், பக். 626)

இச் செய்தியைப் படிப்பவரும் கேட்பவருமாகிய தமிழன்பர் களுக்கும் ஐயரவர்கள் அடைந்த மனத்துயரம் நிச்சயம் ஏற்படும்.

பிங்கல நிகண்டினை முதன்முதல் 1890-ல் அச்சிட்டு வெளிப் படுத்திய வீராட்சிமங்கலம் தி. சிவன்பிள்ளையவர்கள் இனித் தாம் பதிப்பிக்க இருக்கும் நூல்களாக வளையாபதி, பன்னிருபடலம், இசை மரபு, பரதசூடாமணி, இசைநுணுக்கம் என்பனவற்றைக் குறிப் பிட்டுள்ளார். 14 ஆம் நூற்றாண்டில் திரட்டப்பட்டதாகக் கருதப்படும் புறத்திரட்டில் 66 வளையாபதிச் செய்யுட்கள் சேர்ந்துள்ளன. இசை பற்றிக் குறித்தவை அடியார்க்குநல்லார் முதலிய உரைகாரர் மேற் கோளாக எடுத்தாண்டவை. புறப்பொருள் வெண்பா மாலைக்கு மூலமான முதல்நூல் பன்னிருபடலம். இத்தகைய அரிய நூல்கள், 1890ஆம் ஆண்டுவரை பதிப்பாசிரியர் சிவன் பிள்ளையவர்களிட மிருந்த நூல்கள், இன்றுவரை நமக்குக் கிட்டாதே போய்விட்டன. எங்காவது ஒளிந்திருந்து நமக்கு இன்று கிட்டினால் பெரும்பேறே.

## தகடூர் யாத்திரை

சி.வை.தாமோதரம் பிள்ளையவர்கள் தொல்காப்பிய எழுத்ததிகார நச்சினார்க்கினியர் உரைநூலின் (1891) பதிப்புரையில் ''தகடூர் யாத்திரை முதலியன விரைவில் வெளிவரும்'' என்று குறிப்பிட்டுள்ளார். தகடூர் யாத்திரை என்பது அதிகமானுக்குரிய தகடூரின்மேல் சேரமான் படையெடுத்துச் சென்ற வரலாற்றைக் கூறுவது. இந்நூலினைக் குறித்துப் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் தாம் எழுதிய தொல்

காப்பிய உரையில் சுட்டியுள்ளனர். புறத்திரட்டில் இந்நூற் செய்யுட்கள் 44 காணப்படுகின்றன பதிப்புமேதை தாமோதரம்பிள்ளையவர்களிடமிருந்த இந்நூற் பிரதி அவர்தம் காலத்திற்குப்பின் என்னவாயினதோ? நூல் முழுமையும் நமக்கு இதுவரை கிட்டவே இல்லை.

திருநெல்வேலி கவிராஜ ஈசுவரமூர்த்தியா பிள்ளைவர்கள் வீட்டில் டாக்டர் ஐயரவர்கள் ஏடுகளைப் பரிசோதித்த போது தகடூர் யாத்திரைச் சுவடி நாங்குனேரியில் ஒருவருக்குக் கொடுக்கப்பட்டதாக ஒரு குறிப்பினைக் கண்டார்கள். இப் பழஞ்சுவடியைத் தேடி நாங்குனேரிக்கும் ஐயரவர்கள் சென்றார்கள்; சுவடிதான் கிட்டவில்லை.

''பிற்காலத்தில் நாங்குனேரியில் நான்குமுறை
ஏடு தேடியபோதும் தகடூர் யாத்திரை
கிடைக்கவேயில்லை. பழைய நூல்கள் பல
இந்த உலகத்தைவிட்டு யாத்திரை செய்துவிட்டதைப்
போல அந்த அருமையான நூலும் போய்விட்டது
என்றுதான் நினைக்கிறேன்'' (பக். 639)

என்று டாக்டர் ஐயர் அவர்கள் தம் 'என் சரித்திரத்தில்' குறிப்பிட்டுள்ளார்.

சென்ற நூற்றாண்டில் பதிப்புப் பணியில் ஈடுபட்டிருந்த அறிஞர்களிடமிருந்த நூல்கள்கூட இன்று கிட்டாத நிலையாயிற்று. அவர்கள் காலத்திற்குப்பின் அச் சுவடிகள் எங்கெங்கு எவரெவரிடம் கைம்மாறிப் போயினவோ !

## நாககுமார காவியம்

நாககுமார காவியம் என்பதை ஐஞ்சிறுகாப்பியத்துள் ஒன்றாகத் தாமோதரம்பிள்ளையவர்கள் குறிப்பிட்டுள்ளார். இந்நூலுக்குச் சில ஆண்டுகளுக்கு முன் (1973) கையெழுத்துப் பிரதி ஒன்று தச்சாம்பாடி சின்னசாமி நயினார் அவர்களிடமிருந்து எனக்குக் கிடைத்தது. இதனை ஆதாரமாக வைத்துச் சென்னைப் பல்கலைக் கழக வெளியீடாக நான் பதிப்பித்தேன். ஆயினும் இதற்குரிய மூலச்சுவடி இன்னும் கிட்டியபாடில்லை. இதுபோன்றே இவர் அளித்த 'திருமேற்றிசையந்தாதி' என்னும் காகிதப் பிரதியைக் கொண்டு சென்னைப் பல்கலைக் கழக வெளியீடான அப்பாண்டைநாதர் உலாவின் பின் இணைப்பாக இந்நூலைப் பதிப்பித்தேன். இதற்கும் மூலச்சுவடி கிட்டவில்லை. மதுரைத் தமிழ்ச்சங்கச் சுவடி விவரப்பட்டியலில் இந்நூற் சுவடி குறிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் இப்பொழுது சங்கத்துள்ள

சுவடிகளில் இது காணப்பெறவில்லை. இந்நூற் சுவடி தக்க பாதுகாப்புடன் வையாமையாலோ எடுத்துச் சென்றவர் திருப்பித்தராமையாலோ அங்கு இல்லாமற் போயிற்று.

## சுவடி ஓர் அருங்காட்சியகப் பொருள்

இத்தகு சூழ்நிலைகளில் சுவடி என்பது எப்படியிருக்கும் என்று பாராதார் இன்றைய தலைமுறையில் பலராவர். பார்த்தாலும் எடுத்து வாசிக்க அறிந்தவர் தொகை மிகமிகக் குறைவு. அருங்காட்சியகப் பொருளாய் அருகிக் காணப்பெறும் சுவடிகளைத் தேடித்தொகுத்து அழியவிடாமல் பாதுகாப்பது மிகமிக இன்றியமையாததாகும்.

## ஆறுமுகநாவலரின் அறிவுரை

தமிழ்ப் பதிப்புக் கலை முன்னோடிகளுள் முதல்வராக விளங்குபவர் யாழ்ப்பாணத்து நல்லூர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலராவர். நாவலர் பெருமான் 1860 ஆம் ஆண்டு தாம் வெளியிட்ட திருக்கோவையார் உரை நூலின் அனுபந்தமாகச் சுவடிகளின் நிலைபற்றியும் தமிழ் வளர்ச்சிக்குச் செய்ய வேண்டும் பணிகள் பற்றியும் அறிவுரை வழங்கியுள்ளார். நாவலர் பெருமானின் நல்லுரை வருமாறு :

> ''முற்காலத்தில் உள்ள மகிமை பொருந்திய புலவர்களாலே தமிழிற் செய்யப்பட்ட நூல்களுள்ளும் உரைகளுள்ளும் அளவில்லாதவைகள், அச்சிற் பதிப்பிக்கும் வழக்கம் இல்லாமையால் இறந்து போயின. இறவாது இக்காலத்தில் எஞ்சியிருப்பவைகளும் கையெழுத்துப் பிரதிகளாலே எழுத்தும் சொல்லும் மிகுந்தும் குறைந்தும் பிறழ்ந்தும் திரிந்தும் பலவாறு பிழைபட்டனவாய்ச் சிலவிடங்களில் மாத்திரம் அருகி வழங்குகின்றன. அவைகளுள் யாதாயினும் ஒன்றைக் கற்க விரும்புவோர் அது இருக்கும் இடம் ஆராய்ந்தறிதல் அரிது. நெடுநாளாகச் செய்த பெருமுயற்சியினாலே பெற்றாலும், எழுதவல்லார் கிடைத்தல் அரிது. கிடைத்தாலும் எழுத்துக் கூலி மிகப் பெரிதாதலால் எழுதுவித்துக்கொள்ளுதல் அரிது. எழுதுவித்துக்கொண்டாலும் ஒத்துப் பார்வையிட்டுக் கொள்ளுதல் அரிது. ஒத்துப் பார்வையிட்டுக்கொண்டாலும் கற்கும்போது பிழையற ஓதுதலும் பொருள் துணிதலும் கூடாமையால் விளையும் வருத்தம் மிகப் பெரிது. ஒரு நூலைக் கற்றற்கே இப்படிக் காலநீட்டமும், பெரு

முயற்சியும், பொருட்செலவும், வருத்தமும் உளவாயின் சில வாழ்நாளையும் அதற்குள்ளே பல பிணிகளும் கவலைகளையு முடைய சிற்றறிவினராகிய மனிதர்கள் சில காலத்திலே பல நூல்களைக் கற்று வல்லராதல் எப்படி ? இதனாலன்றோ நமது தேசத்தாருக்குத் தமிழ்க்கல்வியிலே விருப்பமும் முயற்சியும் வரவரக் குறைகின்றன. இவ்வேதுவினால் இப்பொழுது எஞ்சியிருக்கும் நூல்களும் விரைவின் இறந்துவிடும் என்பதற்கு ஐயமில்லை. ஆதலால், யாவருக்கும் எளிதிற் பயன்படும் பொருட்டு முக்கியமாய் உள்ள நூல்களையும் உரைகளையும் பலவிடங்களினின்றும் வருவிக்கப்பட்ட பல பிரதிகளைக் கொண்டு ஒருவாறு பரிசோதித்துப் பிரகடனஞ் செய்ய வேண்டும்.

செய்யுள் வடிவாகிய நூல்களும் அவைகளின் உரைகளும் கற்று வல்லவர் சிலருக்கன்றி மற்றவர்களுக்குப் பயன்படாவாம். ஆதலால், விவேகமில்லாதவர்களுக்கும் விவேகமுள்ளவர்களுக்கும் இங்கிலிக் பாஷையைக் கற்றலிலும் லௌகிகங்களைச் செய்தலிலும் தங்காலத்தைப் பெரும்பான்மையும் போக்குகிறவர்களுக்கும், பெண்களுக்கும் பயன்படும்பொருட்டு, நீதி நூல்களையும் சரித்திரங்களையும் சமய நூல்களையும் லௌகிக நூல்களையும் வெளிப்படையாகிய வசனநடையிற் செய்து அச்சிற் பதிப்பித்துப் பிரகடனஞ் செய்தல் வேண்டும். கல்விப் பொருளொடு செல்வப்பொருளும் ஒருங்குடைய மகிமை பொருந்திய மடாதிபதிகளும் பிரபுக்களும் நமது தமிழ்நாட்டிலும் தமிழ்ப் பாஷையிலும் அபிமானமுடையவர்களாகித் தங்கள் தங்களால் இயன்ற உதவி செய்து இம் முயற்சிகளை நிறைவேற்றுவார்களாயின் நமதுநாட்டிலே எம்மொழியினும் இனிய நமது தமிழ் மொழி வளர்ந்தோங்குமே.''

நூல்களைப் பதிப்பித்தலும் எல்லார்க்கும் பயன்படும் வகையில் அவற்றை வெளியிடுதலும் வேண்டும் என நாவலர் தரும் அறிவுரை தமிழ்வளர்ச்சி நோக்கில் சிறப்பான ஒன்றாகும்.

## தாமோதரம்பிள்ளை அறைகூவல்

சென்ற நூற்றாண்டிலே தொல்காப்பியம், கலித்தொகை, வீரசோழியம், இறையனாரகப் பொருள், சூளாமணி முதலிய பல நூல்களை ஏட்டுச்சுவடிகளைக் கொண்டு ஆராய்ந்து அச்சில் பதிப்பித்தவர் யாழ்ப்பாணம் சி. வை. தாமோதரம்பிள்ளை அவர்களாவர். சுவடிகளைத் தொகுத்து ஆராய்ந்த இவர் தாம் 1887 ஆம் ஆண்டு

வெளியிட்ட கலித்தொகையின் பதிப்புரையில் நாட்டில் உள்ள ஓலைச் சுவடிகளின் அவலநிலையை நன்கு எடுத்துக்காட்டியுள்ளார். சுவடிகளை விரைந்து பெற்று நன்கு பாதுகாக்க வேண்டும் என்று தமிழ் மக்களை அறைகூவி அழைத்து அவர் உரைத்த உரைகளை இங்கே காண்போம்.

''ஏடு எடுக்கும்போது ஓரஞ் சொரிகிறது. கட்டு அவிழ்க்கும் போது இதழ் முரிகிறது. ஒற்றை புரட்டும்போது துண்டு துண்டாய்ப் பறக்கிறது. இனி எழுத்துக்களோ என்றால், வாலுந் தலையுமின்றி நாலுபுறமும் பாணக்கலப்பை மறுத்துமறுத்து உழுது கிடக்கின்றது.

''பழைய சுவடிகள் யாவும் கிலமாய் ஒவ்வொன்றாய் அழிந்து போகின்றன. புது ஏடுகள் சேர்த்து அவற்றை எழுதி வைப்பாரும் இலர். துரைத்தனத்தாருக்கு அதின்மேல் இலட்சியம் இல்லை. சரஸ்வதியைத் தம்பால் வகிக்கப்பெற்ற வித்வான்களை அவள் மாமி எட்டியும் பார்க்கிறாளில்லை. திருவுடையீர்! நும்கருணை இந்நாட் தவறினால் பின்பு தவம் புரிந்தாலும் ஒரு தரம் அழிந்த தமிழ் நூல்களை மீட்டல் அரிது. யானை வாய்ப் பட்ட விளம்பழத்தைப் பின் இலண்டத்துள் எடுத்துமென்? ஓடன்றோ கிட்டுவது? காலத்தின் வாய்ப்பட்ட ஏடுகளைப் பின் தேடி எடுப்பினும் கம்பையும் நாரசமும்தான் மீரும்.

... ...... ........... ...........

''சங்கம் மரீஇய நூல்களுள் சில இப்போதுதானும் கிடைப்பது சமுசயம்........எத்தனையோ திவ்ய மதுரகிரந்தங்கள் காலாந் தரத்தில் ஒன்றன்பின் ஒன்றாய் அழிகின்றன. சீமான்களே! இவ்வாறு இறந்தொழியும் நூல்களில் உங்களுக்குச் சற்றாவது கருணை பிறக்கவில்லையா! ஆச்சரியம்! ஆச்சரியம்! அயலான் அழியக் காண்கினும் மனந் தளம்புகின்றதே. தமிழ்மாது நும் தாயல்லவா? அவள் அழிய நமக்கென்னென்று வாளா இருக்கின்றீர்களா? தேசாபிமானம் மதாபிமானம், பாஷாபிமானம் என்று இவை இல்லாதவர் பெருமையும் பெருமையாமா? இதனைத் தயை கூர்ந்து சிந்திப்பீர்களாக''.

பிள்ளையவர்களின் உருக்கமான உரைகள் நமது உள்ளத்தைக் கிளர்ந்தெழச் செய்யும் பேராற்றல் பெற்றவை. இத்தகு அறைகூவல் வெளிப்பட்டுக் கிட்டத்தட்ட ஒரு நூறு ஆண்டுகள் ஆகிவிட்டன. இந்நாளில் சுவடிகளின் நிலைமையைக் கேட்கவா வேண்டும்? அவை புதைபொருள் போல எங்கெங்கோ அடைபட்டுக்கிடக்கின்றன. அவையெல்லாம் இயற்கைக் கோளாறுகளால் பழுதுபடும் முன்னம் தேடிக் காப்பது அறிஞர் கடமை.

## ஓலைச் சுவடிகளின் நிலை

ஏறத்தாழ நானூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட ஓலைச்சுவடிகள் இப்பொழுது கிடைப்பது அரிது. தக்க பாதுகாப்புடன் வைக்கப்பெற்ற சுவடிகளே நீண்டநாள் நிலைத்திருக்கக்கூடும். எவ்வளவு பாதுகாப்பாக வைத்திருப்பினும் முந்நூறு ஆண்டுகளுக்குள் சுவடி பழுது பட்டுவிடுவது இயற்கை. பழுதான சுவடிகளை மீட்டும் படியெடுத்து வைத்துப் போற்றுவது முன்னையோர் வழக்கமாயிருந்தது.

நூற் சுவடிகளைப் பொறுத்தவரை 17 ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்ட சுவடிகளைக் காணக்கூடவில்லை. கல்கத்தா தேசிய நூலகத்தில் உள்ள சுவடிகளுள் 1611-ல் எழுதப்பெற்ற சீவகசிந்தாமணிச் சுவடி காலப்பழமை வாய்ந்தது. அந் நூலகத்தில் மேலும் 1682-ல் எழுதப்பெற்ற நன்னூல் விருத்தியுரையும், 1702 ஆம் ஆண்டில் எழுதப்பெற்ற திவாகரமும் காணப்படுகின்றன. இங்கே தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் தொகுக்கப்பெற்ற சுவடிகளுள் காலப்பழமையுடையதாய்க் காணப்படுவது இராமநாதபுரம் சேதுசமத்தான மகா வித்துவான் ரா. இராகவையங்கார் திருமாளிகையிலிருந்து பெற்ற கம்பராமாயணப் பாலகாண்டச் சுவடி. இது கொல்லம் 832, அதாவது 1657 இல் எழுதப்பெற்றதாகும்.

## ஆவணங்கள்

ஆவணங்களாக உள்ள ஓலைகள் காலப்பழமையுடையதாய் இருத்தல் கூடும். இவ் ஆவணங்கள் நீண்ட பனையோலைகளில் எழுதப்பட்டுக் காணப்படுகின்றன. சுவடிகள் பல்வேறு வடிவங்களில் அமைவதுபோல இவ் ஆவணங்கள் இல்லை ; எல்லா இடங்களிலும் முழு நீள ஓலைகளாகவே உள்ளன.

கவிமணி தேசிகவிநாயகம்பிள்ளையவர்கள் கொல்லம் 448-ல் அதாவது கி. பி. 1273-ல் எழுதப்பெற்ற ஓலை ஆவணம் பற்றிய செய்தியைப் பத்திரிகை வாயிலாக வெளியிட்டுள்ளார். இந்த ஓலை எழுத்தின் தமிழ்நடை கி. பி. 12, 13 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சோழபாண்டியர் கல்வெட்டுகளை ஒத்ததாகும் என்றும் சுட்டியுள்ளார். நாஞ்சில் நாட்டில் திருவிதாங்கூர் அரசரின் பிரதிநிதியாய் இருந்த அழகிய பாண்டிபுரம் பெரியவீட்டு முதலியார் ஓலைகளுள் பலவற்றைப் பரிசோதித்து, 'முதலியார் ஓலைகள்' என்னும் பெயரில் பத்திரிகை வழி இவர்கள் வெளிப்படுத்தியுள்ளார்கள்.

தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் நூற் சுவடிகளோடு ஆவணங்களும் தொகுத்து வைக்கப்பட்டுள்ளன. கும்பகோணம் சாரங்கபாணி சுவாமி கோயில் ஆவணங்கள் முதலில் பெறப்பட்டன, இவை கோயில் நடைமுறை, விழாக்கள், கோயிலின் சிறப்பு நிகழ்ச்சிகள் முதலிய பலவற்றையும் தெரிவிப்பன.

அடுத்துச் செங்கற்பட்டு மாவட்ட ஆட்சியர் அலுவலகத்திலிருந்து 160 பெருஞ்சுருணைகளாக ஆவணங்கள் பெறப்பட்டன. இவை பல கிராமங்கள், கோயில்கள், மக்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகள் முதலிய பலவற்றையும் தெரிவிக்கும் குறிப்புகளைக் கொண்டவை. நில சம்பந்தமாக வாங்குதல், விற்றல், அடைமானம் வைத்தல் போன்ற பல்வேறு வகையான ஆவணங்களும் உள. இவற்றுட் பலவும் 1800 ஆம் ஆண்டையடுத்துப் பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற் பகுதியைச் சார்ந்தனவாக உள்ளன. நாடு, மக்கள், சமுதாயம், பொருளாதாரம் போன்ற பல்வேறு குறிப்புகள் இந்த ஆவணங்களில் பொதிந்துகிடக்கின்றன. எனவே, நூற் சுவடிகளைப் போன்றே ஆவணங்களும் நன்கு போற்றிக் காக்கப் படுதல் வேண்டும்.

## சுவடிகளைப் போற்றுகை

கல்விக்கு உறுதுணையான சுவடிகளை மக்கள் போற்றிப் பாது காத்துவருதல் எல்லாக் காலத்தும் நடைபெறும் பணியாகும். முன்னாளில் ஏட்டுப்புத்தகங்களைத் தொகுத்துப் பாதுகாத்து வந்த வழக்கத்தை நாலடியாரில் வரும் பாடல் ஒன்று தெரிவிக்கிறது.

> புத்தகமே சாலத் தொகுத்தும் பொருள்தெரியார்
> உய்த்தகம் எல்லாம் நிறைப்பினும்—மற்றவற்றைப்
> போற்றும் புலவரும் வேறே பொருள்தெரிந்து
> தேற்றும் புலவரும் வேறு (நாலடி. 318)

என்னும் பாடல் 'புத்தகமே சாலத்தொகுத்தும்' என்று சுட்டுவதால் நூற் சுவடிகளைத் தொகுத்துவந்த வழக்கம் தெரியவரும். தொகுத்த சுவடிகளை நன்கு போற்றியும் வந்தனர்; கற்றும் பயனடைந்தனர். இச் செய்திகளை, 'போற்றும் புலவரும் வேறே பொருள் தெரிந்து தேற்றும் புலவரும் வேறு' என்னும் பகுதி வெளிப்படுத்துகிறது. எனவே, கல்வியில் நாட்டமுடையோர் சுவடிகள் பலவற்றைத் தொகுத்து வைத்துக் கற்றுப் பயனடைந்தனர் என்பது விளக்கமாம். ஆகவே, அந்நாளில் கற்றுவல்ல புலவர்களிடத்தில், கல்விபோதித்து வந்த ஆசிரியர்களிடத்தில் சுவடி நூலகம் இருந்து வந்தது என்பது தெளிவு.

## புலவர் இல்லமே நூலகம்

டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்களுக்குப் பழந்தமிழ்ச் சுவடி பலவும் கிட்டியது மிதிலைப்பட்டி அழகிய சிற்றம்பலக் கவிராயர் இல்லத்திலிருந்துதான். அதனால்தான் கவிராயருடைய இல்லத்தைத் 'தமிழ்க் கோயில்' என்று ஐயரவர்கள் தம்முடைய 'என் சரித்திர'த்தில் குறிப்பிடுவாராயினர்.

மேலும் ஐயரவர்கள் 'தமிழ்க் கோயில்' என்று போற்றிப் புகழ்ந்தது திருநெல்வேலி கவிராஜ ஈசுவரமூர்த்திப் பிள்ளை இல்லமாகும். இந்த இல்லத்தில் உள்ள சுவடியறை பற்றி ஐயரவர்கள் குறிப்பிடுவதாவது :

> ''மேலை வீதியிலுள்ள கவிராஜ ஈசுவரமூர்த்திப் பிள்ளை வீட்டில் புத்தக அறை இருந்தது. அதுதான் அவர்கள் பரம்பரை வீடு, புத்தக அறையைத் திறந்து காட்டினார்கள். பார்த்தவுடன் என் உடம்பு சிலிர்த்தது. 'தமிழ்ச் சங்கத்தில்' முன்பு இப்படித்தான் சுவடிகளை வைத்திருந்தார்களோ என்று வியப்படைந்தேன். ஏட்டுச் சுவடிகளை அடுக்கடுக்காகவும் ஒழுங்காகவும் வைத்திருந்தார்கள். சுவடிகளைக் கட்டி வைத்திருந்த முறையே திருத்தமாக இருந்தது. புழுதி இல்லை ; பூச்சி இல்லை. ஏடுகள் ஒன்றோடொன்று கலக்கவில்லை. தமிழ்த் தெய்வத்தின் கோயில் என்று சொல்லும்படியாயிருந்தது அவ்விடம்''
>
> (என் சரித்திரம், பக். 637)

இவ்வாறு சுவடிகளை நன்கு பேணிப் போற்றிய புலவர்கள் குடும்பங்களும் அந்நாளில் நம் நாட்டில் அங்கங்கே இருந்தன.

## கவிராயர் குடும்பங்கள்

புலவர் பரம்பரையினர் சிலர் வழிவழிப் புலமையாளராய் இருந்ததும் உண்டு. இத்தகு குடும்பத்தினர், 'கவிராயர்' எனப் போற்றப் பெற்றனர். கவிராயர் குடும்பங்கள் ஸ்ரீவைகுண்டம், ஆழ்வார் திருநகரி, தென்காசி, சேற்றூர், திருநெல்வேலி முதலிய பல ஊர்களில் இருந்தன. இக் குடும்பத்தினர் தம் பெயருடன் கவிராயர் என்னும் சிறப்புப் பெயரையும் சேர்த்து வழங்கினர். திரிகூடராசப்பக் கவிராயர், திருப்பாற்கடனாதன் கவிராயர், தாயவலந்தீர்த்தான் கவிராயர், சுப்பிரமணியக் கவிராயர், கந்தசாமிக் கவிராயர் என்று இவ்வாறு பலர் இருந்தமை குறிப்பிடத்தக்கது. இத்தகு கவிராயர் குடும்பங்களில் நிரம்பியிருந்த சுவடிகள் காலகதியில் சிதறுண்டு கரைந்துவிட்டன,

என்றாலும் எச்சங்கள் தமிழகத்தில் அங்கங்கே இருக்கலாம். இப்பொழுதும் மூலைமுடுக்குகளிலிருந்து அவ்வப்போது சிற்சில சுவடிகள் கிட்டிவருகின்றன.

## தமிழ்நாட்டுக்கு வெளியே

தமிழ்ச் சுவடிகள் அண்டை மாநிலமான மலையாளம், தெலுங்கு, கன்னட நாட்டுள்ள சில நூலகங்களில் இடம்பெற்றுள்ளன திருவனந்தபுரத்தில் அரண்மனை நூலகத்தில் தமிழ்ச் சுவடிகள் இருந்து வந்தன. இவையெல்லாம் இப்பொழுது கேரளப் பல்கலைக் கழகத்தில் தனி நூலகமாக வைத்துப் போற்றப்பட்டு வருகின்றன. இங்கே மூவாயிரத்திற்கு மேற்பட்ட தமிழ்ச் சுவடிகள் இடம் பெற்றுள்ளன. கன்னட நாட்டு மேல்கோட்டைச் சமஸ்கிருத ஆராய்ச்சி நிலையத்தில் தமிழ்ச் சுவடிகளும் உள்ளன. இந்நாட்டுப் பிற நூலகங்களிலும் தமிழ்ச் சுவடிகள் சில இருக்கலாம். தெலுங்கு நாட்டில் திருப்பதி வேங்கடேசுவரப் பல்கலைக் கழகம். ஆந்திரப் பல்கலைக் கழகம் ஆகியவற்றிலும் தமிழ்ச் சுவடிகள் பல உள்ளன. சமயச் சார்பான திவ்வியப்பிரபந்தம், புராணங்கள், காவியங்கள் போன்றவற்றைத் தெலுங்கு, மலையாள லிபிகளில் எழுதிக் கற்றாரும் உளர். கல்கத்தாத் தேசிய நூலகத்தில் பேராசிரியர் வையாபுரிப்பிள்ளையவர்கள் தொகுத்துவைத்திருந்த சுவடிகள் இடம் பெற்றுள்ளன. இலங்கை, மலேசியா முதலிய கீழை நாடுகளிலும் தமிழ்ச் சுவடிகள் உள்ளன.

## ஐரோப்பாவில் தமிழ்ச் சுவடிகள்

கிட்டத்தட்ட நானூறு ஆண்டுகளுக்கு முன்னால் தமிழகத்திற்கும் ஐரோப்பிய நாடுகளுக்கும் அரசியல் தொடர்புகள் ஏற்பட்டபோது இங்குள்ள ஓலைச்சுவடிகளை மேனாட்டார் தத்தம் நாடுகளுக்கு எடுத்துச்செல்லத் தொடங்கினர். 18 ஆம் நூற்றாண்டிலேயே ஏட்டுச் சுவடிகள், பழைய ஆவணங்களைத் திரட்டும் முயற்சியில் ஐரோப்பியர் இறங்கினர். ஐரோப்பிய நாட்டு நூலகங்கள், அருங்காட்சியகங்கள், ஆவணக்களரிகள் ஆகியவற்றில் இந்திய மொழிச் சுவடிகள் இடம் பெறலாயின. மேற்கு ஜெர்மனி ஹைடல்பர்க் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப்பணி புரியும் டாக்டர் அ. தாமோதரன் அவர்கள், 'ஐரோப்பாவில் தமிழ் ஓலைச்சுவடிகள்' என்பது குறித்து அண்மையில் எழுதியுள்ளார். அவர் தமது உரையில்,

> ''தமிழகத்திலிருந்து எடுத்துச் செல்லப்பட்ட ஏராளமான ஓலைச் சுவடிகள் பிரிட்டன், பிரான்சு, டென்மார்க், கிழக்கு ஜெர்மனி,

மேற்கு ஜெர்மனி, போர்த்துகல், இத்தாலி, நெதர்லாண்ட், ஆஸ்திரியா, ஸ்விட்சர்லாந்து, நார்வே, ஸ்வீடன், ரஷ்யா ஆகிய பல்வேறு நாடுகளில் உள்ள நூலகங்களில் பாதுகாக்கப் பட்டு வருகின்றன'' என்றும், ''என்னுடைய மதிப்பீட்டின் படி சுமார் 2000 தமிழ் ஓலைச்சுவடிகள் நிச்சயமாக இருக்கும்'' என்றும் குறிப்பிட்டுள்ளார்.*

## மேஜர் அ. கிருஷ்ணமூர்த்தியார் தொகுப்பு

மேஜர் அ. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் தமிழ்நாடு அரசினர் கல்லூரிகளில் பேராசிரியராகவும், முதல்வராயும் இருந்து ஓய்வு பெற்றுள்ளார். இப்பொழுது தஞ்சாவூர் இராசப்பா நகரில் வாழ்ந்து வருகிறார். இவர் சில ஆண்டுகளுக்குமுன் ஐரோப்பா முழுதும் சுற்றுப்பயணம் செய்து அங்கங்கேயுள்ள சுவடிகளின் விவரங்களையும் தொகுத்து வந்தார். ஐந்து தொகுதிகளாகத் தட்டெழுத்தில் சுவடி விவரம் அமைத்துள்ளார். லண்டன் இந்தியா ஆபீஸ் லைப்ரரி தொடக்க மாக, 'தி லைப்ரரி ஆப் தி ஓரியண்டல் இன்ஸ்டிட்யூட் ஆப் யு. எஸ் எஸ். ஆர். அகாடமி ஆப் சைன்ஸ், லெனின்கிராட் யு. எஸ். எஸ். ஆர்.வரை 46 நிறுவனங்களிலுள்ள சுவடிகள்பற்றிய விவரங்களைத் தந்துள்ளார். இவர் எழுதியுள்ள செய்திகள் அனைத்தும் ஒவ்வோ ரிடத்தும் உள்ள சுவடிகளை நேரில் பார்த்து எடுத்த குறிப்புகளாகும். இவருடைய தொகுப்பில் ஏறத்தாழ 3000 சுவடிகளைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

## மெக்கன்ஸி தொகுப்பு

கர்னல் மெக்கன்ஸி என்பார் 1782-ல் இந்தியாவுக்கு வந்தார். முதலில் பொறியாளராகச் சென்னையில் பணிபுரியத் தொடங்கிய இவர் பின்னர் இந்திய நிலக்கணிப்பு உயர் அலுவலராயுமிருந்தார். இவர் இந்திய மொழிகளிலுள்ள பழஞ்சுவடிகள், ஆவணங்கள், வரலாற்றுக் குறிப்புகள், நாணயங்கள் முதலியவற்றை வரலாற்று நோக்குடன் திரட்டினார். இறுதியில் இவர் கல்கத்தாவில் வாழ்ந்த தனால் இவர் திரட்டிய பொருள்களும் அங்கிருந்தன.

---

*மேதகு கி. பழனியப்பனார் பவழமாலை—'ஐரோப்பாவில் தமிழ் ஓலைச்சுவடிகள்' என்னும் கட்டுரையில் (பக். 207—215) பல குறிப்பு கள் உள்ளன.

## அரசாங்கச் சுவடி நிலையம்

மெக்கன்ஸியின் மரணத்துக்குப்பின் (1821) இவருடைய மனைவியிடமிருந்து கிழக்கிந்தியக் கம்பெனியார் 1821-ல் பதினாயிரம் பவுனுக்கு அவர் திரட்டிய பொருள்களை வாங்கினர். கிழக்கிந்திய அலுவலகத்தில் டாக்டர் லெயிடன் என்பாரும் பழஞ்சுவடிகளைத் திரட்டி வைத்திருந்தார். இவற்றிற்கு வில்சன் என்பார் விவர அட்டவணை ஒன்று தயாரித்தார். இவரும் பல சுவடிகளைச் சேர்த்து வைத்திருந்தார். இவற்றுள் ஒரு பகுதி இலண்டனிலுள்ள இந்திய அலுவலகத்திற்கு அனுப்பப்பட்டது; மற்றொரு பகுதி கல்கத்தாவிலேயே வைக்கப்பட்டது.

தக்காணம் தொடர்பான சுவடிகள் சென்னைக்குக் கொண்டுவரப்பட்டன. 1844-ல் கிழக்கிந்தியக் கம்பெனி அலுவலகத்தில் பாதுகாக்கப்பெற்ற சுவடிகளும் சென்னை இலக்கியச் சங்கத்திற்கு மாற்றப்பெற்றன பிரௌன் என்பார் தொகுத்த சுவடிகளும் இச்சங்கத்திற்குத் தரப்பட்டன. இத்தொகுப்புகள் கீழ்த்திசைச் சுவடி நிலையமாக 1870-ல் சென்னை மாநிலக் கல்லூரியில் உருப்பெற்றது. இதுவே பின்னர் சென்னைப் பல்கலைக் கழகக் கட்டடத்தில் இடம்பெறலாயிற்று.

இந்தத் தமிழ்நாட்டு அரசாங்கச் சுவடி நிலையத்தில் மேன்மேலும் கிடைக்கும் சுவடிகளும் அவ்வப்போது இணைக்கப்பெற்றன. இங்குள்ள 66000 சுவடிகளில் தமிழ்ச்சுவடிகள் ஏறக்குறைய 13000 ஆகும். இங்குச் சுவடிகளைத் தக்கவண்ணம் பாதுகாத்துவருகின்றனர். இங்கு 19000க்கு மேற்பட்ட அச்சு நூல்களும் உள்ளன. ஆதலால் இந்த நூலகம் ஆய்வாளருக்குப் பெரிதும் பயன்படுவதாகும்.

## சரசுவதி மகால்

சென்னை அரசாங்கச் சுவடி நிலையத்தினும் காலத்தால் முற்படத் தோன்றியது தஞ்சைச் சரசுவதி மகால் சுவடி நூலகமாகும். 16ஆம் நூற்றாண்டில் தஞ்சையை ஆண்ட நாயக்கமன்னர் இங்குள்ள அரண்மனையைக் கட்டியதோடு அதன் ஒரு பகுதியில் நூல் நிலையம் ஒன்றையும் நிறுவியிருந்தனர். இதில் தமிழ், தெலுங்கு, வடமொழி முதலிய மொழிகளில் எழுதப்பெற்ற சுவடிகளைச் சேர்த்து வைத்தனர். பின் வந்த மராட்டிய மன்னர் ஆட்சியிலும் இந்நூலகம் வளர்ந்து வந்தது.

1798-ல் பட்டத்திற்கு வந்த இரண்டாம் சரபோஜி மன்னர் கல்விக்காகப் பெருந்தொண்டாற்றியவர். இவர் இந்நூலகத்தை மிகவும் விரிவுபடுத்தினார். இசைத்துறை, மருத்துவத்துறைகளிலும் வியக்கத்தக்க பணிகளைச் செய்வித்தார். பல்லாயிரக்கணக்கான அச்சு நூல்களையும் வாங்கித் தாம் படித்துத் தம் கையெழுத்திட்டு நூலகத்தில் சேர்த்து வைத்தார். இந் நூலகத்தை இவர் உலகறியச் செய்த காரணத்தால், 'தஞ்சை மன்னர் சரபோஜியின் சரசுவதி மகால் நூல் நிலையம்' என்று வழங்கிவரலாயினர். மாநில மத்திய அரசு களின் ஆதரவுடன் இந் நூலகம் நன்கு நடைபெற்றுவருகிறது. இந்நிலையம் ஆராய்ச்சியாளருக்கு ஓர் அரிய கருவூலமாகும். இங்குள்ள சுவடிகளுள் 1264 தமிழ் நூல்களுக்கு விளக்க அட்ட வணைகள் வெளியிடப்பட்டுள்ளன.

## மதுரைத் தமிழ்ச் சங்கம்

பாண்டித்துரைத் தேவர் அவர்கள் பாற்கர சேதுபதிகளுடன் கூடி 1901-ல் நிறுவிய மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் தொடக்க நாளிலேயே பழஞ்சுவடிகளுக்கும் அச்சு நூல்களுக்குமாகப்'பாண்டியன் புத்தகசாலை' நிறுவப்பெற்றது. சங்கத்திற்காக அந்நாளில் புலவர் பலர் ஓலைச் சுவடிகள் தேடித் தொகுத்துவரலாயினர். அங்கே இடையில் நேர்ந்த தீ விபத்தில் ஒருபகுதிச் சுவடிகள் அழிந்துபட்டபோதிலும் இப் பொழுதும் நூற்றுக்கணக்கான சுவடிகள் இருந்துவருகின்றன.

## சாமிநாதையர் நூல்நிலையம்

புலவர் பெருமக்களுள் ஒருசிலர் தொகுத்த சுவடிகளும் தனி நூல் நிலையங்களாக இப்பொழுது உருப்பெற்றுள்ளன. டாக்டர் உ. வே. சாமிநாதையர் தொகுத்து வைத்திருந்த சுவடிகளும் நூல்களும் அவர் காலத்திற்குப்பின் கலாக்ஷேத்திரத்தில் தனி நூல் நிலையமாக உருப் பெற்றது. இப்பொழுது சென்னை பெசண்ட் நகரில் டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம் சிறந்ததொரு ஆராய்ச்சி மையமாக விளங்கிவருகிறது. இங்கே ஏறத்தாழ 2300 ஓலைச் சுவடிகள் உள. 700 காகிதப் பிரதிகளும் காணப்படுகின்றன. இவற்றிற்கான விளக்க அட்டவணைகளை நூல்நிலையத்தார் வெளியிட்டிருக்கின்றனர்.

## பல்கலைக் கழகங்களில் சுவடி

திருவனந்தபுரத்தில் திருவிதாங்கூர் மன்னர் அரண்மனையில் சுவடி நிலையம் ஒன்று அமைந்திருந்தது. இதுவே இப்பொழுது கேரளப்

பல்கலைக் கழகம் சார்ந்த சுவடி நிலையமாய் விளங்குகிறது. இங்கு 3281 தமிழ்ச் சுவடிகள் உள்ளமை தெரியவருகிறது இவற்றுள் பெரும் பாலனவும் அச்சில் வெளிவந்தவை அச்சில் வராதவை சிலவே.

அண்ணாமலைப் பல்கலைக் கழகம், மதுரைக் காமராசர் பல்கலைக் கழகம் ஆகியவற்றிலும் பன்னூறு சுவடிகள் இடம் பெற்றுள்ளன தெலுங்கு தேசத்திலுள்ள ஆந்திரப் பல்கலைக் கழகம், உசுமானியாப் பல்கலைக்கழகம், திருப்பதி வேங்கடேசுவராப் பல்கலைக் கழகம் ஆகியவற்றிலும் சுவடிகள் பல உள்ளமை தெரியவருகிறது. மதுரைத் திருஞானசம்பந்தர் ஆதீனத்திலிருந்த சுவடிகள் மதுரைக் காமராசர் பல்கலைக் கழகத்தில் இடம் பெற்றுள்ளமை கருதற்பாலது. இவற்றி லுள்ள சுவடி விவரங்கள் இதுவரை அச்சில் வெளிவரவில்லை.

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சென்னையிலே தரமணிப் பகுதியில் உள்ள உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்திலும் இப்பொழுது இருநூறுக்கு மேற்பட்ட சுவடிகள் சேர்க்கப்பட்டுள்ளன. திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் மடத்துச் சுவடிகள் இவற்றுள் பேரளவினதாகும். இங்கே சுவடியியலை மாண வர்களுக்குக் கற்பிக்கும் பணியும் சில ஆண்டுகளாகச் சிறப்பாக நடை பெற்று வருவது மகிழ்ச்சிக்குரியதாகும்.

## தேசிய நூலகம்

பேராசிரியர் வையாபுரிப் பிள்ளையவர்கள் சேர்த்து வைத்திருந்த முந்நூறுக்கும் மேற்பட்ட சுவடிகள் அவர் காலத்திற்குப் பின் தேசிய நூலகத்திற்கு நன்கொடையாக வழங்கப்பெற்றன. சுவடிகளோடு இவர் நூலகத்திலிருந்த 2500 க்கும் மேற்பட்ட அச்சு நூல்களும் கையெழுத்துப் படிகளும் அங்கே தனியாக வைத்துப் போற்றப்பட்டு வருகின்றன. இங்குள்ள சுவடி விவரங்கள் என்னால் சென்னைப் பல்கலைக் கழக வழி தனி நூலாக வெளியிடப்பட்டது. நூலகத்தாரும் சுவடி விளக்க நூல் ஒன்று சில ஆண்டுகளுக்கு முன்னர் வெளியிட் டுள்ளனர்.

## பேரூர்க் கல்லூரி

எழுமாத்தூர் புலவர் தெய்வசிகாமணிக் கவுண்டர் அவர்கள் திரட்டி வைத்திருந்த சுவடிகளை அவர் மறைவிற்குப்பின் கோயமுத்தூரை அடுத்த பேரூர்த் தமிழ்க் கல்லூரியில் வைத்துப்பேணி வருகின்றனர்.

## ஆசியன் ஸ்டடீஸ் நிறுவனம்

அண்மையில் சென்னையில் திருவான்மியூரில் நடைபெற்றுவரும் இந்த ஆய்வு நிறுவனத்திலும் சுவடிகள் பல சேர்த்துவைக்கத் தொடங்கியுள்ளனர் இங்கேயும் இப்பொழுது நூற்றுக்கு மேற்பட்ட சுவடிகள் உள்ளன.

## தனியார் தொகுப்பு

திருச்சிற்றம்பலம் அறிஞர் மு. அருணாசலம், நீதிபதி செங்கோட்டு வேலன், மர்ரே ராஜம் போன்றோரிடம் சுவடித் தொகுப்புகள் இருந்து வருகின்றன. ஆழ்வார் திருநகரி பெரியன் ஸ்ரீநிவாஸையங்கார் திருமாளிகையிலும், மதுரை இறையியற் கல்லூரி போன்ற நிறுவனங்களிலும் சுவடிகள் பல உள்ளமை தெரியவருகிறது.

## சமய நிறுவனங்கள்

திருவாவடுதுறை மடம், தருமபுர மடம், துறையூர் வீரசைவமடம், விருத்தாசலத்திலுள்ள வீரசைவ மடம், சித்தாமூர் ஜைனமடம், திருவாமாத்தூர் தண்டபாணிசுவாமிகள் மடம், சிதம்பரம் ஈசானிய மடம், முதலிய சமய நிறுவனங்களிலும் சுவடிகள் பலவாக உள்ளன.

## தொல்பொருள் ஆய்வுத்துறை

தமிழ்நாடு-தொல்பொருள் ஆய்வுத் துறையினருக்கு மாவட்டங்களில் கிளை அலுவலகங்கள் உள்ளன. இவ் அலுவலகத்தார் அண்மையில் சில ஆண்டுகளாக அந்தந்த மாவட்டங்களில் தமக்குக் கிட்டிய சுவடிகளைத் தேடித் தொகுத்து வருகின்றனர். இத் தொல்பொருள்துறையில் இதுவரையில் பன்னூறு சுவடிகள் சேர்ந்திருத்தல் கூடும்.

## தமிழ்ப் பல்கலைக் கழக-ஓலைச்சுவடித்துறை

1981 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 12ஆம் நாள்—அறிஞர் அண்ணாதுரை பிறந்தநாளில் தஞ்சாவூரிலே தமிழ்ப் பல்கலைக் கழகம் தமிழக அரசினால் தோற்றுவிக்கப் பெற்றது. இஃது ஓர் ஆராய்ச்சிப் பல்கலைக் கழகம். இங்கேயுள்ள ஐந்து புலங்களுள் ஒன்று சுவடிப் புலம். இப் புலத்தில் ஓலைச்சுவடித்துறை, அரிய கையெழுத்துச்

சுவடித்துறை, கல்வெட்டுத்துறை என மூன்று துறைகள் உள்ளன. இப் பல்கலைக் கழகம் ஒன்றில்தான் சுவடிகளின் ஆராய்ச்சிக்காக ஒரு துறை தனியாக ஏற்படுத்தப்பட்டிருக்கிறது.

ஓலைச்சுவடித்துறை மேற்கொண்டுள்ள பணிகளுள் ஒன்று இப்பொழுது கிட்டும் சுவடிகளைத் தொகுத்து வைத்துத் தக்கமுறையில் பாதுகாத்தல், அடுத்து இதுவரை வெளிவாராத சுவடிகளைப் பரிசோதித்து அச்சிட்டு வெளியிடுதல், செவ்விய முறையில் திருத்தமுற அச்சிடப் பெறாத நூல்களைக் கிட்டும் சுவடிகளுடன் ஒப்புநோக்கிப் பல்வேறு வகையான ஆய்வுக் குறிப்புகளுடன் வெளிப்படுத்துதல். இவ்வகையில் இப்பொழுது பழந்தமிழ்ச் சங்க நூலாகிய குறுந்தொகைக்கு ஆய்வுப் பதிப்பு வெளியிடப்பட்டுள்ளது. அடுத்துக் குறுந்தொகையுடன் பிற சங்க நூல்களை ஒப்பிட்டு ஒப்புமைப் பகுதி அமைக்கும் பணியும் நிறைவுபெற்றுள்ளது நற்றிணையின் ஆய்வுப் பதிப்புப்பணி நடைபெற்றுவருகிறது.

இதுவரை அச்சில் வாராத சேதுசமத்தான மகாவித்துவான் ரா. இராகவையங்கார் எழுதிய ஆத்திசூடியுரை வெளியிடப்பட்டுள்ளது. ஓலைச்சுவடிகளிலிருந்து ஆய்ந்து பதிப்பித்த நூல்களுள் 'சீவேந்திரர் சரிதம்', 'செழியதரையன் பிரபந்தங்கள்' என்பவை குறிப்பிடத்தக்கன.

பாஞ்சாலங் குறிச்சிப் பெருவீரன் செகவீரபாண்டிய கட்டபொம்மு துரை பேரில் அமைந்த கலியுகப்பெருங்காவியம் என்பது 3008 பாடல்கள் கொண்ட பெருங்காவியம். இக் காவியச்சுவடி இதுகாறும் வெளிவாராத நூல்களுள் ஒன்று ; வரலாற்றுச் சிறப்புடையது. இக் காவியச் சுவடியின் ஆய்வு இப்பொழுது நடைபெற்றுவருகிறது.

## சுவடித்தொகுப்பு

சுவடிகளைத்தேடித் தொகுப்பதிலும் இத் துறை முனைந்து செயற்பட்டு வருகிறது. தமிழகத்தின் பல பாகங்களிலிருந்தும் சுவடிகள் அவ்வப்போது வந்த வண்ணமாயுள்ளன. இதுவரை 2362 சுவடிகள் சேர்ந்துள்ளன. இவற்றுள் தமிழ்ச் சுவடிகள் 1512 ; பிற மொழிச் சுவடிகளின் எண்ணிக்கை 850 ; தமிழ்ச்சுவடிகள் தவிரக் கிரந்த எழுத்தில் அமைந்த சுவடிகள் 788. மலையாள மொழிச் சுவடி 9, தேவநாகரி 7, தெலுங்கு 46 ஆகியவையும் உள்ளன.

இதுவரை தொகுக்கப்பட்டுள்ள சுவடிகளுள் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவை பல. திருப்பனந்தாள் காசிமடத்திலிருந்து பெறப்பெற்ற

சுவடிகள் 151. ஸ்ரீரங்கம் டாக்டர் ஆர். இராஜன்பாபு அவர்கள் தந்த சுவடிகள் 103. கரந்தை ஸ்ரீபாலையஞானதேசிகர் திருமடத்துச் சுவடிகள் 67. சென்னை திரு ஜி ஜி. கனஷ்யாம்தாஸ் அவர்கள் அனுப்பிய சுவடிகள் 77. இராமநாதபுரம் சேதுசமத்தான மகாவித்து வான் ரா. இராகவையங்கார் திருமாளிகையிலிருந்து பெற்ற சுவடிகள் 51. இங்கே ஓலைச்சுவடித்துறையில் இணைப்பேராசிரியராக இருந்த திரு. அடிகளாசிரியர் அளித்தவை 41.

## சுவடிப்பாதுகாப்பு

சுவடிகள் இத் துறைக்கு வந்தவுடன் பேரேட்டில் யாரிடமிருந்து எந்த நாளில் பெறப்பட்டது என்னும் குறிப்புகள் பதிவு செய்யப்பெறு கின்றன. பின், வந்த சுவடிகளின் நைந்துபோன கயிறுகளை மாற்றியும், பாதுகாப்புக் கட்டைகளைச் சேர்த்தும் தூசி போக்கியும் வைக்கப்படுகின்றன. பின் பூச்சிகளை அழிக்கும் காப்பு எண்ணெய் பூசப்படுகின்றது. பூச்சிகளைப் போக்கும் இரசாயன மருந்திட்ட பெட்டிகளில் வைத்தும் சில சுவடிகள் தக்கமுறையில் பாதுகாக்கப்படு கின்றன. மேலும் மேலும் சுவடிபற்றிய தகவல் தருபவர்களுடன் தொடர்புகொண்டு சுவடிகளைத் திரட்டும் பணியும் இடையறாது நடைபெற்றுவருகிறது.

## சுவடி விவரம் தொகுத்தல்

சுவடிகளைத் தேடித் தொகுப்பது ஒருபாலாக, அவற்றைக் காப் பாற்றி அவை பற்றிய விவரங்களையும் வெளியிட்டால்தான் கல்வி யாளர் பயன்படுத்த இயலும். எந்த ஒரு பொருளையும் வகை தொகை செய்து உரிய இடங்களில் வைத்துப் போற்றுதல் வேண்டும். அவ்வாறு செய்தால்தான் சுவடிகளை எளிதில் எடுத்துப் பயன்படுத்த இயலும். அச்சுப்புத்தகங்கள் அடங்கிய நூலகம் போன்றே சுவடி நூலகத்திலுள்ள சுவடிகளும் பொருள் அடிப்படையில் வகைப்படுத்தி வைக்கப்படுதலும் வேண்டும்.

சுவடிகள் மேலும் மேலும் வந்து வளர்ந்து கொண்டிருக்கின்ற இந்தச் சுவடி நிலையத்தில் எடுத்த எடுப்பிலேயே பொருள்வகையில் சுவடிகளைப் பாகுபடுத்தி வைத்தல் இயலாததாகும். சில சுவடிகளில் ஒரு நூலுடன் வேறுபொருள் பற்றிய நூல்களும் இணைந்திருப்பதும் உண்டு. அவற்றைத் தனித்தனிப் பிரித்து எடுத்தால் குழப்பம் நேரவும் கூடும். பிரித்து எடுக்காமலே சுவடி எண் குறிப்பிட்டு உரிய பொருட் பகுதியில் சேர்த்து வகைப்படுத்தலாம்.

## தமிழ்ச் சுவடி விளக்க அட்டவணை

சுவடிகள் ஒவ்வொன்றையும் பற்றிய விரிவான செய்திகள் தரப் பட்டால்தான் குறித்ததொரு நூல் பற்றிய விவரங்கள் தெரிய இயலும். சுவடிகள் இங்கு வந்து சேர்ந்த கால அடைவிலேயே அச் சுவடிகள் பேரேட்டில் பதியப்பட்டுக் காணும் வரிசை முறையிலேயே எடுத்து வேண்டும் விளக்கங்கள் அமைக்கப்படுகின்றன. பல்பொருள் கலந்து வரும் இவ் வரிசையில் சுவடி விளக்கம் அமைத்துப் பொருள் பற்றிய தனி அட்டவணைச் சேர்க்கையில், அப்பொருள்வகையில் உரிய ஏடுகள் எண் குறிப்பினால் சுட்டப்பட்டுள்ளன. ஒருபொருள் பற்றிய ஏடுகள் எவையெவை என்பதனை எளிதில் இதன்வழிக் கண்டு கொள்ளலாம்.

நூல்களைச் சுவடி விளக்க அட்டவணை நமக்கு அறிமுகப்படுத்து கின்றது. பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு, ஐம்பெருங்காப்பியம், ஐஞ்சிறுகாப்பியம், திருமுறைகள், சைவசாத் திரங்கள் என்று இவற்றை நம் முன்னையோர் வகுத்துப் பாடல்களின் வழியும் உரை வழியும் சுட்டியுள்ள குறிப்புகள் ஒருவகையில் பார்ப்பின் சுவடி விளக்கங்களே. அரசாங்கச் சுவடி நிலையம், சரசுவதிமகால் நூல் நிலையம், டாக்டர் சாமிநாதையர் நூல் நிலையம் ஆகியவற்றில் உள்ள சுவடிகளுக்கு விளக்க அட்டவணைகள் வெளிவந்துள்ளன. ஏட்டிலேயே சுவடி விவரம் எழுதப்பெற்ற குறிப்புச்சுவடி சரசுவதிமகால் நூல் நிலையத்தில் உள்ளது கி பி. 1801 ஆம் ஆண்டு எழுதப்பெற்ற பனையோலைச் சுவடியில் தமிழ்த் துறைச் சுவடிகளின் பட்டியல் தெலுங்கு லிபியில் உள்ளது. பின்பு கி பி 1842 ஆம் ஆண்டு வரகப் பய்யர் உத்தரவின்பேரில் மோடி எழுத்தில் இந்நூலகச் சுவடிகளின் பட்டியல் சுவடியில் எழுதப்பட்டிருக்கிறது. கி. பி. 1857-ல் பனை யோலைச் சுவடியில் தொகுக்கப்பெற்ற ஒரு பட்டியலும், நோட்டுப் புத்தகத்தில் எழுதப்பெற்ற ஒரு பட்டியலும் ஆக இரண்டு உள்ளன. அச்சில் இந்நூல்நிலையச் சுவடி விவரம் வெளிவந்தது 1925 ஆம் ஆண்டிலாகும். சுவடி விவரங்களை ஏட்டில் எழுதிப் போற்றிய சிறப்பினை இந்நூல் நிலையம் பெற்றுள்ளது. இது வரலாற்றுச் சிறப்புடைய ஒன்றாகும்.

## சுவடி விளக்க அட்டவணை

சுவடிகளைப் பெயரளவில் அறிவிப்பது சுவடிப்பெயர் அட்டவணை யாகும். பெயரை மட்டும்கொண்டு ஒரு நூலை அளவிட்டுவிட முடியாது. நூலின் உள்ளடக்கமும் நன்கு தெளிவுற விரிவாகத் தெரிவிக்கப்பட

## தமிழ்ச் சுவடி விளக்க அட்டவணை

சுவடிகள் ஒவ்வொன்றையும் பற்றிய விரிவான செய்திகள் தரப் பட்டால்தான் குறித்தவொரு நூல் பற்றிய விவரங்கள் தெரிய இயலும். சுவடிகள் இங்கு வந்து சேர்ந்த கால அடைவிலேயே அச்சுவடிகள் பேரேட்டில் பதியப்பட்டுக் காணும் வரிசை முறையிலேயே எடுத்து வேண்டும் விளக்கங்கள் அமைக்கப்படுகின்றன. பலபொருள் கலந்து வரும் இவ் வரிசையில் சுவடி விளக்கம் அமைத்துப் பொருள் பற்றிய தனி அட்டவணைச் சேர்க்கையில், அப்பொருள்வகையில் உரிய ஏடுகள் எண் குறிப்பினால் சுட்டப்பட்டுள்ளன. ஒருபொருள் பற்றிய ஏடுகள் எவையெவை என்பதனை எளிதில் இதன்வழிக் கண்டு கொள்ளலாம்.

நூல்களைச் சுவடி விளக்க அட்டவணை நமக்கு அறிமுகப்படுத்து கின்றது. பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு, ஐம்பெருங்காப்பியம், ஐஞ்சிறுகாப்பியம், திருமுறைகள், சைவசாத் திரங்கள் என்று இவற்றை நம் முன்னையோர் வகுத்துப் பாடல்களின் வழியும் உரை வழியும் சுட்டியுள்ள குறிப்புகள் ஒருவகையில் பார்ப்பின் சுவடி விளக்கங்களே. அரசாங்கச் சுவடி நிலையம், சரசுவதிமகால் நூல் நிலையம், டாக்டர் சாமிநாதையர் நூல் நிலையம் ஆகியவற்றில் உள்ள சுவடிகளுக்கு விளக்க அட்டவணைகள் வெளிவந்துள்ளன. ஏட்டிலேயே சுவடி விவரம் எழுதப்பெற்ற குறிப்புச்சுவடி சரசுவதிமகால் நூல் நிலையத்தில் உள்ளது கி பி. 1801 ஆம் ஆண்டு எழுதப்பெற்ற பனையோலைச் சுவடியில் தமிழ்த் துறைச் சுவடிகளின் பட்டியல் தெலுங்கு லிபியில் உள்ளது. பின்பு கி பி 1842 ஆம் ஆண்டு வரகப் பய்யர் உத்தரவின்பேரில் மோடி எழுத்தில் இந்நூலகச் சுவடிகளின் பட்டியல் சுவடியில் எழுதப்பட்டிருக்கிறது. கி. பி. 1857-ல் பனை யோலைச் சுவடியில் தொகுக்கப்பெற்ற ஒரு பட்டியலும், நோட்டுப் புத்தகத்தில் எழுதப்பெற்ற ஒரு பட்டியலும் ஆக இரண்டு உள்ளன. அச்சில் இந்நூல்நிலையச் சுவடி விவரம் வெளிவந்தது 1925 ஆம் ஆண்டிலாகும். சுவடி விவரங்களை ஏட்டில் எழுதிப் போற்றிய சிறப்பினை இந்நூல் நிலையம் பெற்றுள்ளது. இது வரலாற்றுச் சிறப்புடைய ஒன்றாகும்.

## சுவடி விளக்க அட்டவணை

சுவடிகளைப் பெயரளவில் அறிவிப்பது சுவடிப்பெயர் அட்டவணை யாகும். பெயரை மட்டும்கொண்டு ஒரு நூலை அளவிட்டுவிட முடியாது. நூலின் உள்ளடக்கமும் நன்கு தெளிவுற விரிவாகத் தெரிவிக்கப்பட

வேண்டும். சுவடி விளக்க அட்டவணையில் நூலாசிரியர் பெயர், நூற்பெயர், சுவடியின் அமைப்பும் அதன் நிலையும், நூலின் தொடக்கம் முடிவு பற்றிய குறிப்புகள், நூலைப்பற்றி ஏடெழுதியோர் எழுதிய சிறப்புச் செய்திகள், அச் சுவடிபற்றிய பிற செய்திகள் முதலியன எல்லாம் அமைதல் வேண்டும். இந்தச் சுவடி விளக்க அட்டவணை ஏனையோர் வெளியிட்ட செய்திகளை விடவும் அதிகமான செய்திகள் கொண்டதாயும், பார்ப்பவர்க்கு அவை தெளிவுறத் தெரியும் வகையிலும் வகைப்படுத்தி ஆக்கப்பெற்றுள்ளது. இந்தச் சுவடி விளக்க அட்டவணை ஏழு பொதுக் கூறுகளாகப் பகுத்து விவரங்கள் தொகுக்கப் பெற்றுள்ளன. அவையாவன : 1. நூலகக் குறிப்புகள் ; 2. உள்ளீடு அதாவது நூல் விவரம் ; 3. சுவடியின் தோற்றக் கூறுகள் ; 4. சிறப்புச் செய்திகள் ; 5. பிற செய்திகள் ; 6. மாற்றுச் சுவடிகள் காணும் இடம் ; 7. வெளியீட்டுச் செய்திகள்.

1. நூலகக் குறிப்புகள் என்பதில் தமிழ்ப் பல்கலைக் கழகச் சுவடிகளுக்குத் தரப்பட்டுள்ள தொடர் எண்ணும் அதனோடு பொருள் தொடர்பான பகுப்பு எண்ணும் சுட்டப்படுகின்றன. தொடர் எண் என்பது இந் நூலகத்துள்ள சுவடி வரிசை எண்ணைக் குறிப்பதாகும். இந்த எண்ணைக் கொண்டே இந் நூலகச் சுவடிகளைப் பார்வையிட இயலும். ஒரே சுவடியில் பல நூல்கள் இருப்பின் அவை 1—1, 1—2, 1—3 எனக் குறிக்கப்பட்டுள்ளன. பொருட்பகுப்பு எண் என்பது இந் நூலகத்திலுள்ள சுவடிகளின் பொருளடிப்படையிலான எண்ணிக்கையைக் குறிப்பதாகும். இங்குள்ள நூற் சுவடிகள் 18 பொருள்களில் பகுத்தறியப்பட்டுள்ளன. அவற்றின் விவரம் வருமாறு :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1) | க. | பாட்டும் தொகையும் | 10) | ம. | உரைநடை இலக்கியம் |
| 2) | ங. | பதினெண்கீழ்க் கணக்கு | 11) | ய. | சிற்றிலக்கியம் |
| 3) | ச. | இலக்கணம் | 12) | ர. | நாட்டுப்பாடல் |
| 4) | ஞ. | மெய்கண்ட சாத்திரம் | 13) | ல. | மருத்துவம் |
| 5) | ட. | தத்துவம் | 14) | வ. | சோதிடம் |
| 6) | ண. | சைவத்திருமுறை | 15) | ழ. | மாந்திரீகம் |
| 7) | த. | பிறதோத்திரங்கள் | 16) | ள. | நீதிநூல் |
| 8) | ந. | காப்பியம் | 17) | ற. | பல்வகை நூல்கள் |
| 9) | ப. | தலபுராணம் | 18) | ன. | திவ்வியப்பிரபந்தம் |

இப் பொருட்பாகுபாடு ஒவ்வொன்றும் க முதல் ன வரையான 18 குறிப்பெழுத்துகளால் குறிக்கப்பட்டுள்ளன. இந்தக் குறிப்

பெழுத்தின் அடியிலுள்ள எண்ணானது குறிப்பிட்ட பகுப்பிலுள்ள சுவடிகளின் தொடர் எண்ணிக்கையைக் குறிப்பதாகும் (எ-டு க/1, க/2, க/3)

2. உள்ளீடு என்னும் நூல் விவரப் பகுதியில் நூலாசிரியர் பெயர், நூற்பெயர், நூலின் பொருள் ஆகியவை முறையே முதற்கண் சுட்டப் பெறுகின்றன. அடுத்து நூல் செய்யுள் வடிவில் உள்ளதா, உரைநடையா என்பது தெளிவுறுத்தப்படுகிறது. செய்யுளாயின் நூலின் மொத்தச் செய்யுள் எண்ணிக்கை குறிக்கப்படுகிறது. உரை நடைச் சுவடியாயின் அச்சில் இத்தனை பக்கங்கள் வரக்கூடும் என்னும் குறிப்புத் தரப்படுகிறது. செய்யுளும் உரைநடையும் கலந்துவரும் சுவடியாயின் பாடல் தொகையுடன் உரைப்பகுதியும் எத்தனை பக்கம் அச்சில் வரக்கூடும் என்னும் குறிப்பும் இடம்பெறும்.

3. தோற்றக் கூறுகள் என்னும் பகுதியில் சுவடியில் உள்ள ஏடுகளின் எண்ணிக்கை, அவற்றின் நீளம் அகலம் பற்றிய குறிப்புகள் முதலில் தரப்படுகின்றன. நீள அகலம் சென்டிமீட்டர் அளவில் குறிக்கப்பட்டிருக்கும். ஏடுகளின் இருபக்கமும் எழுதப்பட்டுள்ளதா, ஒருபக்கத்திற்கு எத்தனை வரிகள் இடம் பெற்றுள்ளன, ஏட்டெழுத்தின் நிலை எவ்வாறு உள்ளது என்னும் செய்திகள் அடுத்துத் தரப்படுகின்றன. நூல் முழுமையாகவுள்ளதா குறைச்சுவடியா என்னும் விவரம் குறிக்கப்படுகிறது. முதலிலா, இறுதியிலா, இடையிடையேயா எங்குக் குறையுள்ளது என்பதும் எத்தனை ஏடு குறைந்துள்ளன என்னும் விவரமும் தரப்படும். இக் குறிப்பு, ஏட்டினைப் பரிசோதிப்ப வருக்கு மிகவும் துணை செய்யும்.

4. சிறப்புச் செய்திகள் என்பதில் முதற்கண் சுவடியின் தொடக்கமும் முடிவும் எடுத்து எழுதப்படும். செய்யுளாயின் அதுவும் 4 அடி 8 அடிப் பாடலாயின் ஒரு பாடல் தரப்படும். நீண்ட செய்யுளாயின் பொருள் விளங்கும் வகையில் 4, 5 அடிகள் எடுத்து எழுதப்படும். உரைநடைச் சுவடியாயின் கருத்து விளக்கமுற இரண்டு மூன்று வாக்கியங்கள் தரப்படும்.

மேலும் இப் பகுதியில் சுவடி எழுதியோர் பற்றிய குறிப்பு, ஏடு எழுதப்பெற்ற காலக்குறிப்பு முதலியன தெரியவரின் ஏட்டில் உள்ள படியே எடுத்து எழுதப்படும். இக் குறிப்புகள் சுவடியின் காலம் முதலியனபற்றி அறிய இன்றிமையாதனவாம்.

5. பிறசெய்திகள் என்பதில் இச் சுவடிபற்றித் தெரிய வேண்டிய தொடர்புடைய செய்திகள் தரப்படும். மேலும் நூலுக்குப் புறம்பான செய்திகள் காணப்படின் அதுவும் குறிக்கப்படும்.

6. மாற்றுச் சுவடிகள் காணும் இடம் என்பதில் அது பற்றிய குறிப்புத் தரப்படுகிறது. மாற்றுச் சுவடிகள் தமிழ்ப் பல்கலைக் கழகத்திலிருப்பின் முதற்கண் சுட்டப்படும். சுவடிகள் தமிழ்நாட்டின் பிற இடங்களிலும், அடுத்துள்ள தெலுங்கு, கன்னடம், மலையாள நாட்டு நூலகங்கள், பாரதநாட்டில் கல்கத்தா முதலிய பிற இடங்களி லுள்ள நூலகங்கள், ஐரோப்பிய நாட்டு நூலகங்கள் ஆகியவையும் சுட்டப்படுகின்றன. இதன்பொருட்டுப் பிற நூலகங்களில் உள்ள சுவடி விவரப்பட்டியலைப் பெற்று அவற்றை நூலக அடைவில் பதிவு செய்து வைத்துள்ள குறிப்புகள் இங்குத் தொகுத்து வைக்கப்பட்டுள்ளன. அவைபற்றிய விவரத்தை இம் முகவுரையின் பின்னிணைப்பிற் காணலாம். இவற்றில் முதற்கண் உள்ள எண் அந்நூலகத்திற்குரிய எண்ணையும் அடுத்துள்ள எண் அந் நூலகத்துள்ள சுவடி எண்ணை யும் குறிக்கும். (எ. டு.) 1. 36 : 40 (2) 40 : 43 போன்றன. நூலக வரிசைக்குப் பின்னிணைப்பு காண்க.)

7. இறுதியாக வெளியீட்டுச் செய்திகள் தரப்பட்டுள்ளன. குறித்தொரு சுவடி அச்சிடப்பட்டுள்ளதாயின் அச்சில் வந்துள்ளது என்பது சுட்டப்படுகின்றது.

மேற்காணும் 7 தலைப்புகளில் முதல் 4 தலைப்பு எல்லா விளக்க அட்டவணைகளிலும் காணப்பெறும். மாற்றுச் சுவடிகள் காணுமிடம் மற்றும் வெளியீட்டுச் செய்திகள் முன்னரே ஒரு நூலுக்குக் குறிப்பிட்ட நிலையில் அதே பெயர் கொண்ட பின்வரும் நூல்களுக்கு மீண்டும் குறிக்கப்படவில்லை.

இதேபோன்று, இத்தகைய செய்திகள் பற்றி முழுமையாக அறிய இயலாத நிலையிலும் இவை குறிக்கப்படவில்லை.

பொதுநிலையில் பலரும் எளிதில் அறியத்தக்க நூல்களுக்கும் (எ-டு திருக்குறள், சங்க இலக்கியம், திவ்வியப்பிரபந்தம் போன்ற) இத் தகைய செய்திகள் குறிக்கப் படவில்லை.

## ஒரு சுவடியில் பல நூல்கள்

ஒரு சுவடியில் ஒரு நூல் அமைதல் இயல்பானது. அன்றியும் ஒரு சுவடியில் வேறுவேறு நூல்களும் உடன் எழுதப்பெற்றிருத்தலும் உண்டு. அவை வெவ்வேறு பொருள் பற்றியனவாகக்கூட இருக்கலாம். சுவடி விளக்கத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட நூல்கள் ஒரு சுவடியில் இருப்பின் அவற்றிற்கும் தனித்தனி விளக்கம் முதல் ஏட்டெண்ணின்

தொடர்பாக 1,2, முதலிய எண்குறிப்புத் தந்து விளக்கங்களும் அங்கேயே அடுத்தடுத்துத் தரப்பட்டிருக்கும்.

ஒரே சுவடிக்கட்டில் பல பொருள் கொண்ட நூல்களும் இருக்கக் கூடும். அவற்றில் முதலிலுள்ள நூல் எந்தப் பொருளுடையதோ அந்தப் பொருளுக்கான குறிப்பெழுத்துடனேயே அச் சுவடி குறிக்கப் பெறும் (எ-டு) ஒரே சுவடியில் மருத்துவம், சோதிடம், மாந்திரிகம் என மூன்று நான்கு நூல்கள் இருப்பினும் முதலிலுள்ள மருத்துவம் என்ற பொருளுக்கான குறிப்பெழுத்து 'ல' என்பதுடனேயே மற்ற இரண்டு நூல்களும் குறிக்கப்பெறும். இவ்வகையில் ஒரு சுவடியின் பொருட்பகுப்பு எண் அதிலுள்ள எல்லா நூல்களுக்கும் பொதுவாக ஒரே எண்ணாக அமையும்.

இம் முதல் தொகுதியில் 346 சுவடிகளில் உள்ள 500 நூல்களின் விளக்கங்கள் இடம் பெறுகின்றன என்பது அட்டவணையால் தெளிவு படுத்தப்படுகிறது. இச்சுவடி விளக்க அட்டவணை நூல்களுக்கு முதன்மைதந்து ஆக்கப்பெற்றுள்ளது. ஆகவே, நூல்களின் தொடர் எண் முதற்கண் இடம் பெறுகிறது. இதனைத் தொடர்ந்து நூலகக் குறிப்புகள், உள்ளீடு-நூல்விவரம், தோற்றக் கூறுகள் சிறப்புச் செய்திகள், பிறசெய்திகள், மாற்றுச்சுவடிகள் காணும் இடம், வெளியீட்டுச் செய்திகள் ஆகியவை முறையே தரப்படுகின்றன. இவற்றின் உட்பிரிவுகளாக வரும் செய்திகள் அ,ஆ முதலிய குறிப்பில் தரப் பட்டிருக்கும். அவற்றின் முழுவிவரம் முதல் நூல் விளக்கத்தில் முழுமையாகத் தரப்பட்டிருக்கும். மீண்டும் மீண்டும் எடுத்து எழுது தலைத் தவிர்ப்பதற்காகக் குறியீட்டால் சுட்டப்படுகின்றன. அவ்வக் குறியீட்டுச் செய்திகளை நோக்கும்போதே குறியீட்டின் விரிவும் புலனாகும்.

மாற்றுச் சுவடிகள் காணும் இடம் பற்றிய பகுதியில் நூலகப் பெயரும், எண் குறிப்பினாலேயே சுட்டப்பட்டிருக்கும். நூலகக் குறி யீட்டை அடுத்து வருவது அந்நூலகத்தில் சுவடிக்குத் தரப்பட்டுள்ள எண்களாகும். நூலக விவரமும் சேர்க்கப்பட்டுள்ள தனி அட்டவணை நோக்கி உணர்தல் வேண்டும்.

## பின்னிணைப்புகள்

சுவடி தொடர்பான பின்னிணைப்புகள் ஒவ்வொரு தொகுதியின் முடிவிலும் இடம் பெறுகின்றன. முதலாவது தரப்படுவது நூலாசிரியர் அகரவரிசை. இதில் ஆசிரியர் பெயர் அகரவரிசையில் அமைய அவர்தம் நூற்சுவடிகள் எண் குறிப்புகளால் சுட்டப்படுகின்றன.

நூலாசிரியர் பெயர் அறியப்பெறாதவை இந்த அகராதியின் ஈற்றில் காட்டப்பட்டுள்ளன.

இரண்டாவது பின்னிணைப்பு நூற்பெயர் அகரவரிசை. இந் நூற்பெயர் அகரவரிசையில் அவற்றிற்குரிய எண்கள் சுட்டிக்காட்டப் படுகின்றன. முந்திய பின்னிணைப்பிற்போலவே பெயர் தெரிய வாராத குறைச் சுவடிகளும் எண் குறிப்பிட்டுக் காட்டப்பட்டுள்ளன.

மூன்றாவதாக இடம் பெறுவது பொருட்பகுப்பு வரிசை. இதில் இலக்கணம், உரைநடை, காப்பியம், சிற்றிலக்கியம், சோதிடம், தத்துவம், தலபுராணம், நாட்டுப்பாடல், நீதிநூல், பதினெண்கீழ்க் கணக்கு, பாட்டும் தொகையும், பிற தோத்திரங்கள், மருத்துவம், மாந்திரீகம், மெய்கண்ட சாத்திரம் என்னும் பொருள்களில் அவ்வப்பொருள் பற்றிய நூல்களின் எண் குறிப்பினால் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன. ஆய்வாளர்களுக்கு இந்தச் சுவடி விளக்க அட்டவணைகள் பெருந்துணையாய் அமைந்து விளங்கும் என்று நம்புகிறேன்.

மு. சண்முகம் பிள்ளை
(முன்னாள் சுவடிப்புலத் தலைவர்)

இணைப்பு

# மாற்றுச் சுவடிகள் காணுமிடங்கள்

1. தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்.
2. அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலைநகர்
3. மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை.
4. திருவேங்கடவன் பல்கலைக் கழகம், திருப்பதி.
5. பிற பல்கலைக் கழகங்கள்.
6 ,, ,,
7. ,, ,,
8. தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தமிழ்க்கல்லூரி, பேரூர், கோவை.
9. பிற கல்லூரிகள்
10. ,, ,,
11. ,, ,,
12. கலைமகள் கல்வி நிலையம், ஈரோடு.
13. பிற கல்வி நிலையங்கள்
14. ,, ,,
15. ,, ,,
16. அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகம், சென்னை.
17. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.
18. கீழ்த்திசைச் சுவடி நூலகம், காரியவட்டம், திருவனந்தபுரம்.
19. இந்திய தேசிய நூலகம், கல்கத்தா.
20. பிற அரசு நிறுவனங்கள்
21. ,, ,,
22. ,, ,,
23. ,, ,,
24. ,, ,,
25. டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூலகம், திருவான்மியூர், சென்னை.
26. தமிழ்ச் சங்கம், மதுரை.
27. மகாராஜா சரபோஜி சரஸ்வதி மகால் நூலகம், தஞ்சாவூர்.
28 பிரஞ்சு இந்திய நிறுவனம், பாண்டிச்சேரி.
29. பிற சுவடி நூலகங்கள்.
30. ,, ,,
31. திருவாவடுதுறை ஆதீனம், திருவாவடுதுறை.
32. மௌன சுவாமிகள் திருமடம், சிதம்பரம்.
33. கௌமார மடாலயம், திருவாமாத்தூர், விழுப்புரம்.
34. முதல்
45. வரை } பிற மடங்கள்.

46. இந்தியா ஆபீஸ் லைப்ரரி, லண்டன்.
47. வெல்கம் மெடிகல் ரிசர்ச் இன்ஸ்டிட்யூட், லண்டன்
48. பிரிட்டிஷ் மியூசியம், லண்டன்
49. தி லைப்ரரி ஆப் தி ராயல் ஏசியாடிக் சொசைட்டி, லண்டன்.
50. தி லைப்ரரி ஆப் தி ஈடன்பர்க் யூனிவர்சிடி, லண்டன்.
51. நேஷனல் லைப்ரரி ஆப் ஸ்காட்லான்ட், எடின்பரோ, ஸ்காட்லான்ட்.
52. தி ஹன்டேரியன் லைப்ரரி ஆப் தி க்ளாஸ்கோ யூனிவர்சிடி, க்ளாஸ்கோ, ஸ்காட்லான்ட்.
53. ஜான் ரைலாட்ஸ் லைப்ரரி, மான்செஸ்டர், இங்லர்ன்ட்.
54 தி லைப்ரரி ஆப் தி கேம்பிரிட்ஜ் யூனிவர்சிடி, கேம்பிரிட்ஜ்.
55 பாட்லியன் லைப்ரரி, ஆகஸ்போர்டு.
56. தி லைப்ரரி ஆப் தி ஸ்கூல் ஆப் ஓரியன்டல் அண்டு ஆப்பிரிக்கன் ஸ்டடீஸ் ஆப் தி லண்டன் யூனிவர்சிடி, லண்டன்.
57. தி லைப்ரரி ஆப் தி ட்ரினிடி காலேஜ், டப்ளின், அயர்லாண்ட்.
58. ஃபிரான்க் ஸ்டேட் ஆர்க்கிவ்ஸ், ஹாலே, ஈஸ்ட்ஜெர்மனி.
59. தி லைப்ரரிஸ் அட்டயூபிங்கன் அண்டு மார்பர்க், பாரிஸ், வெஸ்ட் ஜெர்மனி.
60. பிப்ளியோதிக் நேஷனல், பாரிஸ், பிரான்ஸ்.
61. நேஷனல் மியூசியம், கோபன்ஹேகன், டென்மார்க்.
62. தி ராயல் லைப்ரரி கோபன்ஹேகன், டென்மார்க்.
63. பிப்ளியோதிகா அபோஸ்லிகா வேடிகானா, வாடிகன் சிடி, ரோம்.
64. தி லைப்ரரி ஆப் தி ஜெர்மன் ஓரியண்டல் சொஸைடி, ஹாலே, ஈஸ்ட்ஜெர்மனி.
65. லூதரன் மிஷன் சர்ச் மியூசியம் லிப்சிக், ஈஸ்ட்ஜெர்மனி.
66. ஸ்டேட் அண்டு யூனிவர்சிடி லைப்ரரி, ஹம்பர்க், வெஸ்ட் ஜெர்மனி
67. அப்சாலா யூனிவர்சிடி லைப்ரரி, அப்சாலா, ஸ்வீடன்
68. எதினோகிராபிகல் மியூசியம், ஸ்டாக்ஹோம், ஸ்வீடன்.
69. தி லெனின் ஸ்டேட் லைப்ரரி, மாஸ்கோ, யு. எஸ். எஸ். ஆர்
70. தி லைப்ரரி ஆப் தி லெனின்கிராட் யூனிவர்சிடி, லெனின்கிராட்.
71. தி லைப்ரரி ஆப் தி ஓரியன்டல் இன்ஸ்டியூட் ஆப் தி யு எஸ். எஸ். ஆர். அகாடமி ஆப் சைன்சஸ், லெனின்கிராட்.

குறிப்பு :

சுவடி விவர அட்டவணையில், ஒவ்வொரு நூலின் கீழேயுள்ள 6. மாற்றுச்சுவடிகள் காணுமிடம் - என்னும் பகுதியில், முதலில் மேற்காணும் நூலக வரிசை எண்ணும், பின்னர் அந்நூலகத்தில் அதே பெயரில் காணப்பெறும் நூல்களுக்கான எண்களும் கொடுக்கப் பட்டுள்ளமை காண்க.

# தமிழ்ச் சுவடி விளக்க அட்டவணை

## 1. மருத்துவக் குறிப்புகள்

1. நூலகக் குறிப்புகள்

அ. தொடர் எண் : 1
ஆ. பொருட் பகுப்பு எண் : ல/1

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. நூலாசிரியர் :..........
ஆ. நூற்பெயர் : மருத்துவக் குறிப்புகள்
இ. பொருள் : மருத்துவம்
ஈ. வடிவமும் அளவும் : உரைநடை
அச்சில் சுமார் 32 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. ஏடுகளின் எண்ணிக்கை : 122 ஏடு; 224 பக்கம்.
ஆ. ஏடுகளின் நீளம், அகலம் : நீளம் 21.5 செ. மீ., அகலம் 2 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளதா : இரு பக்கமும் எழுதப் பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு எழுதப்பட்ட வரி : ஒரு பக்கத்திற்கு 5 வரி

உ. எழுந்து நிலை : பல்வேறு கையெழுத்துகள் ; தெளிவாக உள்ளன.

ஊ. சுவடியின் நிலைமை : நல்ல நிலை.

எ. முழுமையா அல்லது குறையா : முழுமை.

## 4. சிறப்புச் செய்திகள்

அ. நூலின் தொடக்கம்

க. கா. காவேரி யாற்றங் கரைதனிலே
ச. சீ. சீரங்க ராயரைச் சேவிக்கப் போய்
ந. நா. நாராய ணாஎன்று நாம் இருந்தோம்
ப. பா. பாவங்கள் எல்லாம் பறந்திட்டதே.

ஆ. நூலின் முடிவு

வயிற்றுக் கடுப்பு, மூலம் உள்ள பேருக்கு இரண்டு நேரமும் ஆறு நாளைக்கு எருமைத் தயிரில் நேரம் ஒரு குளிகை வீதம் கொடுக்க மூலம், உள்மூலம், கிராணி, வயிற்றுளைவு இதுவெல் லாந் தீரும். சிவமயம்.

இ. சுவடி பற்றிய குறிப்புகள்

முற்குறிப்பு

தாது வருடம் மாசி மாதம் 30ஆம் தேதி எழுத ஆரம்பித்தது.

பிற்குறிப்பு

தாது வருடம் பங்குனி மாதம் 3ஆம் தேதி முற்றுப் பெற்றது. காரப்பட்டி. வெ. ஸ்ரீநிவாசய்யங்கார் எழுதியது.

## 5. பிற செய்திகள்

சுவடியின் தொடக்கத்தில் வாத சுரத்திற்குரிய மருந்தை அடுத்துச் சூலம் அறியவும், சகுனம் அறியவும் தேவையானவை கூறப்பட்ட பிறகு மருத்துவச் செய்திகள் தொடர்கின்றன.

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

.... . .... .. ......... ...

7. வெளியீட்டுச் செய்திகள்

........ .. ... ........ ...

**குறிப்பு:** தொடர் எண் : 2 முதல் வரும் நூல் வரிசை ஒவ்வொன்றிலும் உள்ள 7 பகுதிகளுக்கான உட்தலைப்புகள் விளக்கமாகக் கொடுக்கப்படவில்லை. மாதிரிப் படிவத்திற்குத் தொடர் எண் : 1 காண்க.

## 2. திருவாசகம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 2
ஆ. ண/1

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. மாணிக்கவாசகர்
ஆ. திருவாசகம்
இ. சைவத் திருமுறை
ஈ. செய்யுள் 656

3. தோற்றக் கூறுகள்

அ. 191 ஏடு ; 382 பக்கம்.
ஆ. நீளம் 14.5 செ. மீ., அகலம் 3.5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 9, 10 வரி.
உ. எழுத்து நிலை தெளிவாக உள்ளது.
ஊ. 128 ஆம் ஏட்டிற்குப் பிறகு சுவடியின் மேல்பாகம் சற்றே சிதைந்துள்ளது. எனினும் பொதுவாக நல்ல நிலை.
எ. முழுமை.

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

(திருவாசகம் எழுதப்படுவதற்கு முன் "வேதியா வேத கீதா" எனத் தொடங்கும் திருவாலவாய்த் தேவாரப் பதிகம் முழுவதும் உள்ளது. அடுத்து,)

தொல்லை யிரும்பிறவி சூழும் தளைநீக்கி
அல்லலறுத் தானந்த மாக்கியதே — எல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூ ரெங்கோன்
திருவா சகமென்னுந் தேன்.

திருச்சிற்றம் பலம்

ஆ. முடிவு

செம்மைநல மறியாத சிதடரொடுந் திரிவேனை
மும்மைமல மறுவித்து முதலாய முதல்வன்றான்
நம்மையுமோர் பொருளாக்கி நாய் சிவிகை யேற்றுவித்த
வம்மையெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே. (9)

—திருச்சிற்றம்பலம்

## 5. பிறசெய்திகள்

நூலின் இறுதியில் திருவாசகத்தின் உட்பிரிவுகளைக் காட்டும் அதிகார அடைவு இடம் பெற்றுள்ளது.

## 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

பல நூலகங்களிலும் உள்ளன.

## 7. வெளியீட்டுச் செய்திகள்

பல பதிப்புகள் வெளிவந்துள்ளன.

# 3. இராமாயண வசனம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 3

ஆ. ம/1

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ...............

ஆ. இராமாயண வசனம்

இ. உரைநடை இலக்கியம்

ஈ. உரைநடை : அச்சில் ஏறத்தாழ 250 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 296 ஏடு ; 592 பக்கம்.

ஆ. நீளம் 39.5 செ. மீ., அகலம் 3.5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.

உ. எழுத்து நிலை தெளிவாக உள்ளது. ஆனால் பிழைகள் அதிகம்.

ஊ. 125, 295 ஆகிய இரண்டு ஏடுகள் இல்லை. பல ஏடுகள் மிகச் சிதிலமடைந்துள்ளன.

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

திருப்பாற்கடல் 20,48,000 காதவழி அகலம். அந்தத் திருப்பாற்கடல் மத்தியிலே மேல்திசையிலே சுவேத தீவு. அதிலே விஷ்ணு சுரூபம் அடைந்த பேரிருக்கிறது. அதன் நடுவே சுவேத கிரி பருவத மென்றொரு பருவதம்.

ஆ. முடிவு

மூவர் முதலான முப்பத்து முக்கோடி தேவர்களும் வாழ்க. வாழி. கின்னர கிம்புருடர் கருட காந்தருவர் வாழ்க, வாழி. சித்தி வித்தியாதரர் தும்புரு நாரதர் வாழ்க, வாழி. தேவ கன்னிகள் லோக மாதாக்கள் வாழ்க, வாழி. அரிகரி ராம சுவாமி வாழ்க, வாழி. சீதாலட்சுமி வாழ்க, வாழி. லட்சுமண பெருமாள் வாழ்க, வாழி. வாய்வு புத்திரனாகிய அனுமார் வாழ்க, வாழி. படித்த

வர்கள் கேட்டவர்கள் வாழ்க, வாழி. அதன் நடுவே நாயடியேன் வாழ்க, வாழி. இந்த ராமர் கதையை எழுதினபேர், படித்தபேர், கேட்டபேர் ஆல் அறுகு போல் வேரூன்றி மூங்கில் போலன்ன சுத்தம் முசியாமல் வாழ்க, வாழி, வாழி.

இ. பிற்குறிப்பு

பார்த்திப வருடம் ஆவணி மாதம் 29ஆம் தேதி காவலூரி லிருக்கும் ராமு பிள்ளை மகன் சொக்கலிங்கம் பிள்ளை மகன் சங்கிலியா பிள்ளை ராமாயணம் எழுதி முகிந்தது ; முற்றும். இந்த ராமர் கதை எடுத்து எழுதினபேர், படித்தபேர், திரும்பக் கொண்டு வந்து வாங்கின பேரிடத்திலே கொடுத்து விடவும். கொடுக்காத வரையில் நரகமே கதி. அது அறியவும். ராம செயம்.

5. ........ .... .. ....

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

3 : 70, 101 ; 4 : 9627, 9639 ; 12 : 65, 75, 85, 103 ; 16 : 381, ஆர். 420, ஆர் 2071, ஆர். 3646, ஆர். 4519 ஆர். 4556, ஆர். 5335, ஆர். 6756, ஆர். 6757; 17 : 319 ; 18 : 3256, 4081, 5948, 6320, 7978, 8177 ; 25:401, 402; 1418 ; 54 : 1004 ; 55 : பி. 37 ; 68 : எண் இல்லை.

**குறிப்பு :** இதில் முதலிலுள்ள எண்—சுவடி நூலக வரிசை எண் ஆகும். அதற்கு நேரே உள்ள எண்கள்—அந்தந்த நூலகங்களிலுள்ள சுவடி எண்கள் ஆகும்.

## 4. தருமர் அசுவமேத யாகம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 4

ஆ. ம / 2

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ............

ஆ. தருமர் அசுவ மேத யாகம்

இ. உரைநடை இலக்கியம்

ஈ. உரை நடை

அச்சில் ஏறத்தாழ 300 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 292 ஏடு ; 584 பக்கம்.

ஆ. நீளம் 49 செ. மீ., அகலம் 3.25 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 6, 7, 8 வரி.

உ. இரண்டு வகைக்கு மேற்பட்ட கையெழுத்துகள் காணப்படுகின்றன. எழுத்துப் பிழைகள் மிகுதி. ஆயினும் தெளிவான எழுத்துகள்.

ஊ. 69, 130, 131, 245, 246, 249, 260, 261, 276, 277, 278, 280, 287, 288, 292, 293, 294 ஆகிய ஏடுகள் காணப்படவில்லை. 43, 147 என்ற எண்கள் தவறாக இருமுறை எழுதப்பட்டுள்ளன. பல ஏடுகள் மிகச் சிதைந்துள்ளன.

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

செனமேசெய மகாரிஷியானவர் செனமேசெயராசாவைப் பார்த்து, பதினெட்டு நாள் பாரத யுத்தமுஞ் சொல்லி, அதற்கு மேற் கேளும் ராசாவே சாந்தாதி அசுவமேதி யாகத்தைச் சொல்லும்படி என்றவாறு.

ஆ. முடிவு

வாசுதேவன் கோபாலருடனே சகல ஆடையாபரணங்களும் வெகுமதிகளும் பெற்று, ரதாருடனாய் அனுபவித்துக்கொண்டு,

சகல சனத்துடனே புறப்பட்டு, அஸ்தனாபுரங் கடந்து, முப்பது யோசனை முந்நூற்றறுபது நாழிகையுங் கடந்து, துவாரகாபுரிக் குப் போய்ச் சேர்ந்தார்கள். அப்பால் கிஷ்டிண சுவாமி போன பிற்பாடு அஸ்தனாபுரத்திலே இருக்கப்பட்ட தர்மநந்தனரானவர் பழைய ..........

5. பிற செய்திகள்

இந்த நூல் சாந்தாதி அசுவமகம் என்னும் பெயரிலும் வழங்கப்பெறுகிறது.

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1 : 335, 648, 788 ; 16 : ஆர். 1931; 54 : 931; 60 : 573; 68 : எண் இல்லை.

## 5. மகா பாரத அம்மானை

1. நூலகக் குறிப்புகள்

அ. 5
ஆ. ர / 1

2 உள்ளீடு : நூல் விவரம்

அ. ...........
ஆ. மகாபாரத அம்மானை (பிற்பகுதி)
இ. நாட்டுப் பாடல்
ஈ. செய்யுள். அம்மானை நடை. அச்சில் ஏறத்தாழ 700 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 411 ஏடு ; 822 பக்கம்.
ஆ. நீளம் 47.5 செ. மீ., அகலம் 3.5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது
ஈ. ஒரு பக்கம் மூன்று பத்தியாகப் பிரித்துக் கொள்ளப் பட்டுள்ளது. பத்திக்கு 9, 10 வரி.
உ. தெளிவான எழுத்து. பிழைகள் மிகுதி
ஊ. சுவடியின் வலப்புறம் சற்றே சிதைந்துள்ளது. சில ஏடுகள் சிதைவு. பொதுவாக நல்ல நிலை.
எ. முழுமை (நூல் முற்பகுதி இதில் இல்லை)

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

திரியோதனனைப் புள்ளெடுத்துப் போனது
வஞ்சமற்ற பஞ்சவர்கள் வனவாசத் தேயிருந்தார்
மஞ்சையுத மன்னன் வணங்கா முடிவேந்தன்
ஆற்றில் முழுகி அரப்புட்டுக் கொள்கையிலே
போற்றரிய புள்ளெடுத்துப் போனதுவே யம்மானை.

ஆ. முடிவு

ஆல்போல் தழைத்து அறுகுபோல் வேறோடி
மூங்கிபோலச் சுற்ற முசியாமல் வாழ்ந்தி நுப்பார்
அண்டர் முனிவோர்கள் ஆதிமுதல் வாழியதே
மண்டலங்கள் ஈரேழும் வாழிமிக வாழியதே

இந்தப் பாரதக் கதையைக் கேட்ட பேர்களும் கேட்க மனம் வைத்த விவேக சம்பனனும் புத்திர சம்பத்துந் தனகனக வஸ்து வாகனங்களும் பெற்று அதிக சம்பத்தும் பெற்றுப் புத்திர மித்தி ராதிகளுடனே சகல பாக்கியமும் அநுபவித்து வைகுண்ட பதவி பெறுவார்களென்றும், அரிகிஷ்ண வாசுதேவர் கிருபா கடாச்சமே பெறுவார்களென்றவாறு.

இ. பிற்குறிப்பு

சுபகிருது வருடம் வையாசி மாதம் 21 ஆம் தேதி சதய நட்சத்திரமும் அஷ்டமி திதியும் விருச்சிக லக்கினமுங் கூடிய புதன் வார நாளிலே அலங்காரம் பிள்ளை குமாரன் அழகப்ப வாத்தியார் ஆதிபாரத முதலாகிய மூன்றாவது காண்டம் வரையில் எழுதி நிறைவேறினது. முற்றும். சிவமயம்.

5. ............... .. ...

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1 : 634, 849, 854, 855, 948; 4 : 10180.

# 6. இராமாயண வசனம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 6
ஆ. ம / 3

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ....... .....
ஆ. இராமாயண வசனம்
இ. உரைநடை இலக்கியம்
ஈ. உரைநடை, அச்சில் ஏறக்குறைய 500 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 226 ஏடு; 452 பக்கம்.
ஆ. நீளம் 34 செ. மீ; அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 9, 10 வரி.
உ. எழுத்து நிலை தெளிவாக உள்ளது.
ஊ. முதல் மூன்று ஏடுகள் காணப்பட வில்லை. சுவடியின் மேற் புறம் மிகச் சிதைந்துள்ளது. பல ஏடுகளில் சிதைவு மிகுதி.
எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

... ...கொண்டிருக்கிற நாளையிலே ரோமபாதனென்கிற ராசாவின் சீர்மையிலே பன்னிரண்டு வருஷம் மழையில்லாமல் ராசா மந்திரிமாரையழைத்து இதுக்கெப்படியென்று யோசனை பண்ணினப்போ மந்திரிமார் கலைக்கோட்டு மாரிஷி வந்தாலொழிய மழைபெய்யாதென்றார்கள்.

ஆ. முடிவு

மனுநீதி தவறாத தவம் வளரத் தானும் வாழச் செங்கோல் வளரச் சனங்கள் வளர மாச மூன்று மழைபெய்ய இப்படி ராச்சிய பரிபாலனம் பண்ணிக்கொண்டு சுகத்திலே இருந்தார்கள். இராம செயம். இராமசெயம்.

இராம கதை உரை மெத்த உண்டு. அதிலே கேள்வியிலே கேட்டதை அஞ்சாறு மாத்திரஞ் சொன்னேன். அது ஏதென்றால் ராமாவென்கிற விரண்டெழுத்து மந்திரத்தைச் சொன்ன பேர்க்கு வைகுண்டமென்று சொல்லியிருக்குதே. ஆனபடியினாலே சொன் னேன். அந்தப்படிக்கு இராமகதை எழுதின பேரும் வைத்திருந்து படிக்கிறபேரும்... ...கிற கதையை அசங்கதங்கள் பண்ணாமல் இன்பமாகக் கேட்கிற பேரும் எந்நேரமும் இராமாவென்கிற பேர்களுக்கு லட்சுமி கடாட்சமுண்டாய், சகல பாக்கியமு மனுபவித்து வைகுண்டம் பெறுவார்களென்றவாறு. இராமசெயம்.

இ. பிற்குறிப்பு

பிரமாதீட்சா வருடம் சித்திரை மாதம் 24 ஆம் தேதி சுக்கிர வாரமுஞ் சஷ்டியும் உத்திர நட்சத்திரமுங் கூடிய சுபதினத்தில் சீனத்துரை தாண்டவராய பிள்ளை குமாரன் அழகப்பன் ராம வாசகமெழுதி முடிந்தது. குருவே துணை. ராமசெயம்.

5. ... ..................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

தொடர் எண்: 3 காண்க

## 7. ரசவர்க்கம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 7
ஆ. ல / 2

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ....... .... .. ....
ஆ. ரசவர்க்கம்
இ. மருத்துவம்
ஈ. செய்யுள். 99 வெண்பா.

3. தோற்றக் கூறுகள்

அ. 20 ஏடு ; 40 பக்கம்.
ஆ. நீளம் 30 செ. மீ; அகலம் 2.5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 5, 6 வரி.
உ. எழுத்து நிலை தெளிவாக உள்ளது.
ஊ. சுவடியின் பிற்பாதி கீழ்ப்புறம் சிதைந்துள்ளது. 13, 15-ஆம் ஏடுகளில் ஒரு வரி மட்டும் எழுதப்பட்டுள்ளது. இவை பின்னர்ச் சேர்த்தவைபோலும்.
எ. குறை.

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

திருப்பொதிகை வாழுஞ் சிவமகஸ்த்தி யர்பாடற்
குருமொழியாய் ரசவர்க்கங் கூற — முருகனுக்கு
முந்தியுதித் தோனாம் மும்மதக்க ணைந்துகரத்
தந்திமுகத் தான்சரணந் தான். (1)

ஆ. முடிவு

கொடிமுந்திரிப்பழம்

வெப்பருசி தாகம் விரணம்சு வாசகயம்
எப்புடைய பித்தம் இரத்தபித்தம் — செப்பும்
மடிமந்தம் மேகம் மதமூர்ச்சை யும்போம்
கொடிமுந்தி ரிக்கனிக்குக் கூறு.

5. ...........

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1: 417; 27: பா. 5.347.

..........

## 8. அகத்தியர் திருமந்திரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 8
ஆ. ல / 3

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அகத்தியர்
ஆ. அகத்தியர் திருமந்திரம்
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 126

## 3. தோற்றக் கூறுகள்

அ. 27 ஏடு: 54 பக்கம்.
ஆ. நீளம் 22.5 செ. மீ., அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 4 வரி.
உ. எழுத்து நிலை தெளிவானது.
ஊ. 16, 19, 27, 28, 29, 32 ஆகிய ஏடுகள் காணப்படவில்லை. சில ஏடுகள் சிதைந்துள்ளன.
எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

(சுவடியின் முதல் ஏட்டில் ''வாக்குண்டாம் நல்ல மனமுண் டாம்'' என்னும் வெண்பாவும், ''வேக மானெறி சேரும் வினை களுந்.... போக வானை முகத்தனைப் போற்றுவாம்'' என்னும் கலிவிருத்தமும் உள்ளன. இரண்டாம் ஏட்டில் நூல் தொடங்கு கிறது.)

தாதாவைப் போலே தயவு கொடுப்பவள்
வேதா கமத்தின் மெஞ்ஞான மெய்ப்பொருள்
ஆதார சத்தி அறிவின் மனோமணி
மாதாவின் பாதம் வைத்திடு சென்னியே. (1)

ஆ. முடிவு

வியாதிகள் போக வெகுநாள் சடமுற்
பயாதி திறைநிறை பாங்காய் தவிர்ந்திட்
கயாதி கெவநம் க...தெங்கும் சுத்திட
அயாதி யாம்ஞானம் அஞ்சாகும் சுத்தியே. (126)

இ. பிற்குறிப்பு

பிங்கள வருடம் மார்கழி மாதம் 22ஆம் தேதி ஞாயற்றுக் கிழமையிலான சுவடியைப் பார்த்து எழுதப்பட்ட தேதி,

குரோதன வருடம் பங்குனி மாதம் 2ஆம் தேதியில் எழுதி முடிந்தது. பரப்பிரமம் துணை.

## 9. மருத்துவ நூல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 9
ஆ. ல / 4

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ... ...
ஆ. பெயர் தெரியாத ஒரு மருத்துவ நூல்.
இ. மருத்துவம்
ஈ. செய்யுள். 69-ஆம் பாடல் முதல் 313 முடிய 245 பாடல்களில் இடையிடையே சில காணப்படவில்லை.

3. தோற்றக் கூறுகள்

அ. 47 ஏடு; 94 பக்கம்.
ஆ. நீளம் 24 செ. மீ; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 7, 8 வரி
உ. தெளிவான அழகிய கையெழுத்து
ஊ. 1 முதல் 16, 23, 39 முதல் 42, 53, 69 க்கு மேல் இருக்க வேண்டியன ஆகிய ஏடுகள் காணப்படவில்லை. சுவடியில் முதல் 12 ஏடுகள் மேற்புறம் சிதைந்துள்ளன. பல ஏடுகளில் ஆங்காங்கு தொளைகள் விழுந்துள்ளன.
எ. குறை

4. சிறப்புச்செய்திகள்

அ. தொடக்கம்

மூச்சையில்தான்வைத்து மூடிமேலும் சீலைமண்தான்
செய்யே. (68)
சீலைமண் செய்து லர்த்திச் சென்றதோர் குழிதான் கெல்லிச்
சாலவே யெருவ டுக்கித் தான்சில மூச்சை வைத்து
மேலுமே யெருப்ப ரப்பி வெந்தாறிப் போன பின்பு
கோலமாந் துட்டெ டுத்துக் குழிகல்லி லரைத்தி டாயே. (69)

ஆ. முடிவு

ஆனவ முக்கிறா விரனறு பலமது வுந்திரி கடுகரத்தை
மல்லி காணில் சிறுதேக்கு விளங்கம் கருஞ்சீ ரகமும் தானே
திரிபாலை தெசாபுரமு மாம்மந்தனி செவ்வியஞ் சித்திர மூலம்
வாணிலக் கோஷ்ட மதுரம் அக்கிராக் காரம் வகைக்கு விராகன்
நாலு கொள்ளே. (313)
தாழிசைப் பத்திரி கரும்பு சா.... ...... ..

## 10. கலைக்கியானத்துரு சுருக்கம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 10
ஆ. ல / 5

2. உள்ளீடு : நூல் விபரம்

அ. ...... ...
ஆ. கலைக்கியானத்துரு சுருக்கம்
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 117

3. தோற்றக் கூறுகள்

அ. 17 ஏடு; 34 பக்கம்.
ஆ. நீளம் 31 செ. மீ., அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 7, 8 வரி.
உ. எழுத்துகள் தெளிவாக உள்ளன.
ஊ. பல ஏடுகள் இருபுறமும் முறிந்துள்ளன.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஆதிசத்தி சிவமான சோதி காப்பு
அண்டமெனும் பூரணத்தி னறிவே காப்பு
சோதியெனும் வாலைமனோன் மணியின் காப்பு
சொல்லட.. ... .. ...... யின் சுடரே காப்பு
நீதியுள்ள சற்குருவின் பாதங் காப்பு
நீயென்றும் நானென்றும் நின்றோன் காப்பு
சாதியெனும் சிவசத்தி பாதங் (காப்பு)
........... னப் பொருள்காப்பு தான்காப் பாமே. (1)

ஆ. முடிவு

...................நன்றாய் வெருகடிதான் எடுத்துக் கொண்டு
புதுமையுள்ள தேனதிலே கொண்டால் மைந்தா
ப..................தில் வாத பித்தம்
பாலகனே அய்யத்தா லெழுந்த நோய்கள்
தேத்தியே மண்டலந்தான் கொண்ட ..............
சிவசிவா தேகமது யென்ன சொல்வேன்
சார்த்திகமாய் நின்றதொரு தேகந் தன்னில்
.......யொன்று வே........... ........ ..........

## 11. மருத்துவக் குறிப்புகள்

1. நூலகக் குறிப்புகள்

அ. 11
ஆ. ல/6

2. உள்ளீடு : நூல்விவரம்

அ. ..............
ஆ. மருத்துவக் குறிப்புகள்
இ. மருத்துவம்
ஈ. உரைநடை. அச்சில் ஏறத்தாழ 75 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 71 ஏடு; 142 பக்கம்.
ஆ. நீளம் 25 செ. மீ., அகலம் 4 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 8, 9 வரி.
உ. பெரிய எழுத்துகள், தெளிவானவை.
ஊ. 43 ஆம் ஏடும் 72க்கு மேல் இருக்க வேண்டியனவும் இல்லை பொதுவாக நல்ல நிலை.
எ. குறை.

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

புகை மருந்து சேர்வை : இரசம் 3 வராகன், கெந்தகம் 1 வராகன், வெள்ளைப் பாஷாணம் 1 வராகன், சேங்கொட்டை 1 வராகன், எருக்கங்கரி 1 வராகன், அவல் 1 வராகன். இதுவெல்லாங் கூட்டி, குப்பைமேனி,செருப்படிச் சாறு விட்டரைத்து, பனிரெண்டு உண்டை பண்ணி வைத்துக்கொண்டு, அந்தி சந்தி ரெண்டு நேரமும் ஆறுநாள் புகை போடவும்.

ஆ. முடிவு

அக்கி ரோகத்துக்கு : மிதிப்பாகலரைத்துப் பசுவின் வெண்ணெய் கூட்டிக் குழப்பிப் பூசவும். முருங்கை..............................

(மேலே ஏடுகள் இல்லை.)

## 12. திருத்தொண்டத் தொகை

1. நூலகக் குறிப்புகள்

அ. 12 - 1
ஆ. ண/2

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. சுந்தரமூர்த்தி நாயனார்
ஆ. திருத்தொண்டத்தொகை

இ. சைவத்திருமுறை
ஈ. செய்யுள் 11

3. தோற்றக் கூறுகள்

அ. 1 ஏடு; 2 பக்கம்.
ஆ. நீளம் 21 செ. மீ.; அகலம் 5. 5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 19 வரி.
உ. தெளிவான அழகிய கையெழுத்து.
ஊ. பல ஏடுகள் முறிந்துள்ளன. மிகச் சிதைவுற்ற சுவடி.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்
அ. தொடக்கம்

.................... .................... .................... ....................
.................... .................... .................... ....................
.................... என்னாத வியற்பகைக்கு மடியேன்
.................... .................... .................... ....................
.................... .................... மெய்ப்பொருளுக் கடியேன்
விரிபொழில்சூழ் .................... .................... ....................
.................... .................... லையந்தா ரமர்நீதிக் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே.

ஆ. முடிவு
பத்தராய்ப் பணிவார்க ளெல்லார்க்கு ....................
.................... .................... .................... ....................
சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கு மடியேன்
.................... .................... .................... ....................
(இதற்குமேல் ஏடு முறிந்துள்ளது.)

5. ....................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1 : 14, 933 ; 17 : 250 ஏ ; 18 : 11450 ஏ ; 19 :3022 ஏ ; 27 : 252 ஏ, 256 பி, 257 பி, 258 பி, 259 சி ; 32 : 86 ஏ, 154 ஏ ; 60 : 295 பி.

7. வெளியீட்டுச் செய்திகள்
அச்சிடப்பட்டுள்ளது.

# 13. பெரியபுராணம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 12-2
ஆ. ண / 2

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. சேக்கிழார்
ஆ. பெரிய புராணம்
இ. சைவத் திருமுறை
ஈ. செய்யுள் 4277

## 3. தோற்றக் கூறுகள்

அ. 232 ஏடு; 464 பக்கம்.
ஆ. நீளம் 21 செ.மீ.; அகலம் 5.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 19 வரி.
உ. தெளிவான அழகிய கையெழுத்து.
ஊ. பல ஏடுகள் முறிந்துள்ளன. மிகச் சிதைவுற்ற சுவடி.
எ. முழுமையும் உள்ளது. எனினும் ஏடுகள் முறிந்துள்ளதால் நூற்பகுதிகள் பல இடங்களில் காணப்படவில்லை.

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

.... .... .... ....
.... வுலாவிய நீர்மலி வேணியன்
... சோதிய னம்பலத் ....
... சிலம்படி வாழ்த்தி வணங்குவாம். (1)

ஆ. முடிவு

வைய நீடுக மாமழை மன்னுக
மெய்வி ரும்பிய வன்பர்வி ளங்கு ..
சைவ நன்னெறி தான்தழைத் தோங்குக
தெய்வ வெண்டிரு .... ....
திருச்சிற்றம்பலம்

இ. பிற்குறிப்பு

நள வருடம் சித்திரை மாதம் 7ஆம் தேதி ஆதித்த வாரமும் பூர்வபட்சத்து ...... நட்சத்திரமுங் கூடின சுபதினத்தில் பெரிய புராணம் எழுதி முடிந்தது. நெல்லையப்பன் கை ......... , சங்கர நாராயண செட்டியார் குமாரன் நெல்லையப்பன் கையெழுத்து, சிவ குருவே துணை. ஞானசம்பந்த குருவே துணை. பெரிய புராணம் முற்றுப்பெற்றது.

5. ... ... ............

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

பல நூலகங்களிலும் உள்ளன.

7. வெளியீட்டுச் செய்திகள்

பல பதிப்புகள் வெளியாகியுள்ளன.

## 14. பெரியபுராணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 13
ஆ. ண / 3

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. சேக்கிழார்
ஆ. பெரியபுராணம்
இ. சைவத் திருமுறை
ஈ. செய்யுள் 4277

3. தோற்றக் கூறுகள்

அ. 430 ஏடு; 860 பக்கம்.
ஆ. நீளம் 20 செ. மீ.; அகலம் 5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ பக்கத்திற்கு 14 வரி.

உ. அழகிய தெளிவான கையெழுத்து.
ஊ. பல ஏடுகள் மிகப் பழுது. சிதைவுற்ற நிலை. கடைசி 4 ஏடுகள் முறிவு.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி .......
.......... சோதிய னம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம். (1)

ஆ. முடிவு

என்று மின்பம் பெருகு மியல்பினால்
... ... ... ளமு மோங்கிட
மன்று ளாரடி யாரவர் வான்புகழ்
.... .... .... .... .... ....யுலகெலாம். (53)
வெள்ளானைச் சருக்கம் முற்றும்.

இ. முற்குறிப்பு

இந்தப் பெரிய புராணம் காசிமடத்திலிருக்கிற நாயன்மார் அர்ச்சனை செய்து வாசித்து சுப்பிரமணிய முதலியாரவர்கள் சதா காலமும் விசுவநாத சுவாமி விசாலாட்சி அம்மன் பாதாரவிந்தங் களிலே நீங்காமலிருக்கத்தக்கதாக அனுக்கிரகம் செய்து அழகப்ப னுக்குச் சிவபக்தி வரத்தக்கதாக அனுக்கிரகம் செய்து ரெட்சிக் கவும்.

பிற்குறிப்பு

(கொல்லம்) 922ஆம் வருடம் ஆடி மாதம் 12ஆம் தேதி ஆதித்த வாரமும் அத்த நட்ச(த்திரமும் பூர்வ ப)ட்சத்துச் சப்தமியும் பெற்ற சுபதினத்தில் பெரிய புராண(த் திருமுறை எழுதி நிறை)வேறினது. சத்திய ஞான தேசிகர் பாதந்துணை.

## 5. .........

## 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

பல நூலகங்களிலும் உள்ளன.

7. வெளியீட்டுச் செய்திகள்

பல பதிப்புகள் வெளியாகியுள்ளன.

## 15. திருத்தொண்டத் தொகை

1. நூலகக் குறிப்புகள்

அ. 14—1
ஆ. ண / 4

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. சுந்தரமூர்த்தி நாயனார்
ஆ. திருத்தொண்டத்தொகை
இ. சைவத் திருமுறை
ஈ. செய்யுள் 11

3. தோற்றக் கூறுகள்

அ. 2 ஏடு; 4 பக்கம்.
ஆ. நீளம் 18 செ. மீ.; அகலம் 4.5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 16 வரி.
உ. மிகச் சிறிய எழுத்து. தெளிவானது.
ஊ. ஏட்டில் தொளைகள் விழுந்துள்ளன.
எ. முழுமை.

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தில்லைவா ழந்தணர்தம் மடி.... மடியேன்
திருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன்
இல்லையே யென்னாத வியற்பகைக்கு மடியேன்
இளை.... குடிமா... டியார்க்கு மடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் ...யேன்
வி—பொ—ல் சூழ் குன்றையார் விறல்மிண்டர்க் கடியேன்
அல்லிமென் முல்லைய....ர் அமர்நீதிக் ....டியேன்
ஆரூர னாரூரி லம்மானுக் காளே. (1)

ஆ. முடிவு

மன்னியசீர் மறைநாவ னின்றவூர்ப் பூசல்
வரிவளையாள் மானிக்கு நேசனுக்கு மடியேன்
தென்னவனா யுலகாண்ட செங்கணாற் கடியேன்
திருநீல கண்டத்துப் பாணனார்க் கடியேன்
என்னவனா மரனடியே யடைந்திட்ட சடையன்
இசைஞானி காதலன் றிருநாவ லூர்க்கோன்
அன்னவனா மாரூர னடிமைகேட் டுவப்பார்
ஆரூரி லம்மானுக் கன்பரா வாரே. (11)
திருச்சிற்றம்பலம்

5. ............

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

தொடர் எண் : 12 காண்க.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 16. திருத்தொண்டர் திருவந்தாதி

1. நூலகக் குறிப்புகள்

அ. 14-2
ஆ. ண/4

2. உள்ளீடு : நூல்விவரம்

அ. நம்பியாண்டார் நம்பி
ஆ. திருத்தொண்டர் திருவந்தாதி
இ. சைவத்திருமுறை
ஈ. செய்யுள் 89

3. தோற்றக் கூறுகள்

அ. 6 ஏடு ; 12 பக்கம். (ஏட்டெண் 3-ல் தொடக்கம்)
ஆ. நீளம் 18 செ. மீ.; அகலம் 4.5 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 17, 18 வரி.
உ. மிகச்சிறிய எழுத்து. தெளிவானது.
ஊ. ஏடுகளில் ஆங்காங்குத் தொளைகள் விழுந்துள்ளன.
எ. முழுமை.

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

செப்பத் தகுபுகழ்த் தில்லைப் பதியிற் செழுமறையோர்
ஒப்பப் புவனங்கண் மூன்றினு மும்பரி னூரெரித்த
வப்பற் கமுதத் திருநடற் கந்திப் பிறையணிந்த
...பர்க் குரிமைத் தொழில்புரிந் தோர்தமைச் சொல்லுதுமே. (1)

ஆ. முடிவு

ஓடிடும் பஞ்சேந் திரிய மொடுக்கியென் னூழ்வினைகள்
வாடிடும் வண்ணநின் றெத்தவஞ் செய்தனன் வானிலுள்ளோர்
சூடிடும் சீர்த்திருப் பாதத்தர் தொண்டத் தொகையிலுள்ள
சேடர்தஞ் செல்வப் பெரும்புக ழந்தாதி செப்பிடவே. (89)

நம்பியண்டார் நம்பியந்தாதி முற்றும். திருச்சிற்றம்பலம்.

# 17. பெரிய புராணம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 14-3
ஆ. ண / 4

## 2. உள்ளீடு : நூல்விவரம்

அ. சேக்கிழார்
ஆ. பெரிய புராணம்
இ. சைவத்திருமுறை
ஈ. செய்யுள் 4277

## 3. தோற்றக் கூறுகள்

அ. 253 ஏடு ; 506 பக்கம். (எட்டெண் 9 இல் தொடக்கம்)
ஆ. நீளம் 18 செ. மீ.; அகலம் 4.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 16,17,18 வரி.
உ. மிகச்சிறிய எழுத்து. தெளிவானது.

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதிய னம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்திவ ணங்குவாம். (1)

ஆ. முடிவு

என்று மின்பம் பெருகு மியல்பினால்
ஒன்று காதலித் துள்ளமு மோங்கிட
மன்று ளாரடி யாரவர் வான்புகழ்
நின்ற தெங்கு நிலவி யுலகெலாம். (13)

திருவெள்ளானைச் சருக்கம் முற்றும். திருச்சிற்றம்பலம்.
திருவிருத்தம் 4277. சிவகுருவேதுணை.

## 5. ......................

## 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

தொடர் எண் : 13 காண்க.

## 7. வெளியீட்டுச் செய்திகள்

பல பதிப்புகள் வெளிவந்துள்ளன.

## 18. பெரிய புராணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 15
ஆ. ண/5

2. உள்ளீடு : நூல்விவரம்

அ. சேக்கிழார்
ஆ. பெரிய புராணம்
இ. சைவத்திருமுறை
ஈ. செய்யுள் 4280

3. தோற்றக் கூறுகள்

அ. 239 ஏடு ; 478 பக்கம்.
ஆ. நீளம் 23.5 செ. மீ.; அகலம் 4 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 18,19,20 வரி.
உ. மிகச் சிறிய எழுத்துகள். தெளிவானவை.
ஊ. பொதுவாக நல்ல நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு

வரிசை எண் 17 காண்க.

5. பிறசெய்திகள்

நூல் முடிந்த பிறகு வேறொருவரால் ''வைய நீடுக மாமழை மன்னுக'' எனும் கலிவிருத்தம் எழுதப்பட்டு வெள்ளானைச் சருக்கம்

முற்றிற்று. ஆகத் திருவிருத்தம் 4300. குமராட்சித்தம்பிரான் எனச் சேர்க்கப்பட்டுள்ளது. தம்பிரானின் பெயர் கிரந்த எழுத்திலும் எழுதப்பட்டுள்ளது.

முற்கூறியபடி நூல் முடிந்த பிறகு "சருக்கப்பாட்டு, குரு தோத்திரம்" என்ற தலைப்பில் பெரிய புராணத்தின் ஒவ்வொரு சருக்கத்திலும் காப்புச் செய்யுளாக அமைந்தனவாகிய 10 திருவிருத்தங்களும் தனியே கொடுக்கப்பட்டுள்ளன. தொடர்ந்து நூற்பிரிவின் செய்யுட்டொகைகள் தனித்தனியே கொடுக்கப்பட்டு ஆகப் பெரிய புராணத் திருவிருத்தம் 4280 என்று எழுதப்பட்டுள்ளது.

### 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

தொடர் எண் : 13 காண்க.

### 7. வெளியீட்டுச் செய்திகள்

பல பதிப்புகள் வெளிவந்துள்ளன.

## 19. சிவநாமப் பஃறொடை

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 16
ஆ. ற/1

### 2. உள்ளீடு : நூல்விவரம்

அ. ......................
ஆ. சிவநாமப்பஃறொடை
இ. பல்வகை நூல்கள்
ஈ. செய்யுள். அச்சில் ஏறத்தாழ 20 பக்கம் வரும்.

### 3. தோற்றக் கூறுகள்

அ. 49 ஏடு ; 98 பக்கம்.
ஆ. நீளம் 29 செ. மீ.; அகலம் 2 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கம் மூன்று பத்திகளாகப் பகுத்துக் கொள்ளப்பட்டுள்ளது. பத்திக்கு 4 வரி.

உ. எழுத்து தெளிவாக உள்ளது.

ஊ. பல ஏடுகள் வலப்புறத்தில் முறிந்துள்ளன. ஓரிரு ஏடுகளில் தொளைகள் விழுந்துள்ளன.

எ. முழுமையான சுவடி. ஏடுகளின் முறிவினால் நூற்பகுதி கள் சிதைந்துள்ளன.

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

புகழ்பெறு சிதம்பரம் புனித சபாபதி
திகழ்சிவ காமி சிவகங்கா தீர்த்தம் (1)

ஆ. முடிவு

இத்தலத் திருநூற் றைம்பத்து நான்கும்
மெய்த்தலம் புகல வினையகன் றிடுமே.

இ. முற்குறிப்பு

புரட்டாசி மாதம் 20 ஆம் தேதி சுக்கிரவாரம் விசயதசமி. கட்டளைத் தம்பிரான் என்ற குறிப்பு காப்பேட்டில் காணப் படுகிறது.

5. .....................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

18 : 2128 சி, 2129 சி, 4140 பி ; 28 : 10839 ஏ, 15403 பி, 31430.

## 20. கந்த புராணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 17

ஆ. த/1

## 2. உள்ளீடு : நூல்விவரம்

அ. கச்சியப்ப சிவாசாரியர்

ஆ. கந்த புராணம்

இ. காப்பியம்

ஈ. செய்யுள் 10, 270

## 3. தோற்றக் கூறுகள்

அ. 352 ஏடு ; 704 பக்கம்.

ஆ. நீளம் 47. 5 செ. மீ.; அகலம் 4. 5 செ.மீ.

இ. இருபக்கமும் எழுதப் பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 11, 12, 13 வரி.

உ. தெளிவான எழுத்து.

ஊ. 25, 38, 46, 101, 105, 106, 125, 131, 145, 166 ஆகிய ஏடுகள் காணப்படவில்லை. பல ஏடுகள் முறிந்துள்ளன. கைபட்டாலே ஒடிகின்றன. மிகச் சிதைவுற்ற சுவடி.

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

*திகட சக்கரச் செம்முக மைந்துளான்*
*சகட சக்கரத் தாமரை ...*

ஆ. முடிவு

ஈறுசேர் பொழுது மிறுதி யின்றியே
மா ............ திருந்திடு வளங்கொள் காஞ்சியில்
கூறுசொற் புனைதரு குமர கோட்டம்வாழ்
ஆறுமா முகப்பிரா னடிகள் போற்றுவாம். (68)

இ. பிற்குறிப்பு

விக்கிரம வருடம் சித்திரை மாதம் 31 ஆம் தேதி சுக்கிரவார நாள் சிதம்பரத்திலேயிருந்து மாணிக்கவாசகத் தம்பிரானு(க்காகக்)

கந்த புராணம் வள்ளியம்மை திருக்கலியாணம் வரைக்கும் எழுதி நிறைவேற்றினது. சிவகாமியம்மை துணை

5. ......................

6. *மாற்றுச் சுவடிகள் காணுமிடம்*

பல நூலகங்களிலும் உள்ளன.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப் பட்டுள்ளது.

## 21. கருவூர் நாயனார் சூத்திரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 18.
ஆ. ல/7

2. உள்ளீடு : நூல்விவரம்

அ. கருவூரார்
ஆ. கருவூர் நாயனார் சூத்திரம்
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 107

3. தோற்றக் கூறுகள்

அ. 41 ஏடு ; 82 பக்கம்.
ஆ. நீளம் 26 செ. மீ.; அகலம் 2. 5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 5, 6 வரி.
உ. தெளிவான எழுத்து.
ஊ. 11 ஆம் ஏடு இல்லை. 42 க்குமேல் இருக்க வேண்டியவை காணப் படவில்லை. முதல் 8 ஏடுகள் வலப்புறம் முறிந்துள்ளன.
எ. குறை.

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சீர்பெருகு வேதாந்த சூத்தி ரத்தைத்
    தெட்சிணா மூர்த்திபதம் பணிந்து போற்றிக்
கார்பெருகு மாயியுட பாதம் போற்றிக்
    கயிலாயத் திருமூலர் பதமும் போற்றிப்
பேர்பெருகுஞ் சட்டைமுனி போக .........
    .......... .. க்கர்பதஞ் சலியுங் காப்பு
ஏர்பெருகு மருளோடு பெ....... .........
    ......... உத்தமர்க்கா மிந்த நூலே. (1)

ஆ. முடிவு

ஒன்றிடவே யொன்பதரை மாற்று மாகும்
    உள்ளபடி சொல்லிவிட்டே னாருஞ் சொல்லார்
வென்றிடவே கொன்றைவேர்ப் பழச்சாறு விட்டு
    வெண்ணெய்போ லாட்டியே வாங்கு மைந்தா
கொன்றிடவே செம்புருக்கிச் சாய்த்தா யானால்க்
    கோதின்றி யூறல்போய்ச் சுத்தி யாச்சு
சென்றிடவே செம்பொன்று வெள்ளி நாலு
    சேர்த்துருக்கி யுண்டைபோலச் சிமிழ்த்தான் தட்டே. (107)

சிமிழப்பா தாயுமொரு மூடி கூடச்
    செப்பமுட னுண்டாக்கி வைத்துக் கொண்டு
சிமிழெது மனோ .......

5. ....... .........

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

16 : ஆர். 2287 ; 18 : 6203 ஏ ; 28 : 45785.

## 22. நோயிக்குரிய மருந்துகள்

1. நூலகக் குறிப்புகள்

அ. 19

ஆ. ல/8

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..................

ஆ. நோய்க்குரிய மருந்துகள்

இ. மருத்துவம்

ஈ. உரை நடை. அச்சில் ஏறத்தாழ 75 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 60 ஏடு ; 120 பக்கம்.

ஆ. நீளம் 26 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 5, 6 வரி.

உ. எழுத்துகள் சுமாராக உள்ளன. பிழைகள் மிகுதி.

ஊ. 1 முதல் 18, 21, 24 முதல் 51, 75, 77, 81, 82, 89, 90, 94, 112, 113, 115, 116, 118, 119 ஆகிய ஏடுகளும் 122-க்கு மேல் இருக்க வேண்டியவையும் காணப்படவில்லை. பல ஏடுகள் சிதைந்துள்ளன.

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

(19ஆவது ஏடு)

குண்டிகை நோவுக்கு - கருவேப்பிலையை அரைத்து எலுமிச்சங்காய் அளவு பழங்காடியிற்கொள்ள குண்டிகை நோவு நிற்கும். கண்டது.

ஆ. முடிவு

சிறு பிள்ளைகளுக்கு மண் கரப்பான் குணம் - அந்தி விடிஞ்சு இரண்டு நேரமும் காசு போல தடிக்கும். இதுக்கு மருந்து - ஆதண்டைச்சாறு, பசுமஞ்சள்சாறு, ஈருள்ளிச்சாறு, வட்டக் கிலுகிலுப்பைவேர், நற்சீரகம், கருஞ் சீரகம், விளக்கெண்ணெய் ஒரு படி இதுவெல்லாம் கூட்டிச் சூரிய புடம் வைத்து, முலைப்பால் சற்று விட்டு வார்க்கவும், பத்தியம் - பசுவின்பால், துவரைப்பருப்பு முருங்கைக்காய், மிளகு நீர்........

## 23. நந்தீசர் ஞானம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 20
ஆ. ல/9

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ................ ......
ஆ. நந்தீசர் ஞானம்
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 103

3. தோற்றக் கூறுகள்

அ. 18 ஏடு ; 36 பக்கம்.
ஆ. நீளம் 41.5 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 5 வரி.
உ. தெளிவான எழுத்து.
ஊ. 1, 2, 7, 10 ஆக நான்கு ஏடுகள் இல்லை. பொதுவாக நல்ல நிலை.
எ. குறை.

4. சிறப்புக் கூறுகள்

அ. தொடக்கம்.

... .................... அரைத்துருட்டி நிமிசத்தில்
குகைபிடித்துக் காடையென்ற புடமே போட
உரைத்திட்ட செம்பதுதான் பதனம் பண்ணு
உண்மையடா ஒருவருக்கும் வெளியிடாதே. (9)

ஆ. முடிவு

சொன்னேன்நான் உங்களுக்கு இந்த நூ(லைச்)
    சுணங்கனுக்குஞ் சவங்களுக்குங் கொடுத்திடாதே
முன்னே நான் சொன்னதெல்லாம் மனதில் வைத்து
    முகிடருடன் பழகாதே பொய்பே சாதே
ஒருவருக்கும் இந்த நூலை தன்னே தான் உன்னைவந்து
    சரணஞ்செய்வார் சணத்திலே இந்த வித்தை
    நூறு முற்றே. (103)

நந்தீசர் ஞானம் முற்றுப்பெற்றது.

(குறிப்பு : ஈற்றுப் பாடல் சரியாக எழுதப்பட வில்லை.)

5. ..... .......

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1 : 554 ; 17 : 322.

## 21. மருத்துவ நூல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 21
ஆ. ல/10

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ...................... ....
ஆ. பெயர் தெரியாத ஒரு விடவைத்தியம்.
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 70

3. தோற்றக் கூறுகள்

அ. 22 ஏடு; 44 பக்கம்.
ஆ. நீளம் 27.5 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 6 வரி.
உ. சுமாரான எழுத்து; பிழைகள் மிகுதி.
ஊ. முதல் 74 ஏடுகள் காணப்படவில்லை. உள்ளவை நல்ல நிலை.

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

உராகிப் பயந்து குளத்தே யுரத்தே வளலை கடித்ததென்றால்
வராகிக் கிழங்கு வொடுவேலி வேர்வ ருந்தச்
சமனாய்த்தான் அரைத்துந்
திராகித் திரட்டி மாங்காய்போல் சிறுநீர் தனிலே குழப்பியப்பின்
துராகிக் கொடுக்க கடிவாயிற் சுருக்காய் மீளுங் கண்டீரே. (249)

ஆ. முடிவு

வெங்கதிர் சனிமுற் கூறும் வேதியன் இயங்கி வாழுந்
திங்களுஞ் சனியிற் கூறுந் திறலுடை யரச னாகும்
பைங்கதிர்ச் செவ்வாய் வெள்ளி பணிதிசை வணிக னாகும்
பொங்கிய புதன்வி யாழம் பொருந்துசூத் திரனு மாமே. (319)

இ. பிற்குறிப்பு

குலத்தில் கோபாலனாகும் கொற்றவன் மகிழும் வாசற்
தலத்தில் மந்திரி பிச்சன் சித்திர ராயர்ப்பாடல் எழுதிமுடிந்தது.
முத்து குருவே துணை. பாட்டு தொகை 400.

5. பிற செய்திகள்

ஈற்றுப்பாடல் 319 எனக் காணப்படுவதாலும் பாட்டுத்தொகை 400 என்ற குறிப்பாலும் 81 பாடல்களைக் கொண்ட வேறொரு நூல் இச்சுவடியின் முற்பகுதியில் இருந்திருக்க வேண்டும்.

## 25. யதார்த்த குண சிந்தாமணி

1. நூலகக் குறிப்புகள்

அ. 22
ஆ. ல/11

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..................
ஆ. பதார்த்த குண சிந்தாமணி
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 113

3. தோற்றக் கூறுகள்

அ. 10 ஏடு ; 20 பக்கம்.
ஆ. நீளம் 29.5 செ. மீ.; அகலம் 3.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 8, 9, 10 வரி.
உ. அழகிய எழுத்து. விடுபாடுகள் மிகுதி.
ஊ. ஒரு சுவடியின் 55 முதல் 64 வரையான ஏடுகள் மட்டுமே இதில் உள்ளன. முதல் ஏடு முறிந்துள்ளது. பொதுவாக நல்ல நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

நெல்விமுள்ளி நாவுக் குறுசைதரும்... .......
அல்லல் படும்பித்தம் ஆற்றுமே - மெல்லத்
தலைமுழுகக் கண்குளிரும் தாதுபித்த வாந்தி
கலைபடுமே மேகமெல்லாங் காண். (490)

(இதன் முதலடியில் ஒரு சீர் எழுதப்படாமல் விடுபட்டுள்ளது)

ஆ. முடிவு

வாராய் மொழிமானே வந்தபிணி யத்தனைபோம்
ஆரால் கழியு மடவாக - பாராய்
வாயு வுடன்பித்தம் அய்யும் வரும் வயிற்றில்
நோயில்லை என்றே நுகர். (602)

(இதன் தனிச்சொல்லில் ஓரசை குறைகிறது)

5. ..................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

4 : 10262 ; 16 : ஆர். 1806, 1957, 1958, ஆர். 2241, 2271, ஆர். 4699, ஆர். 6221, ஆர். 6860 ; 18 : 3951, 6289 பி, 8848 ஏ; 27 : 412 ஏ, 690 எச், பா. 3. 39, பா. 4. 285, பா. 4. 295, பா. 5, 348 ; 28 : 3172 ; 60 : 123 - 125.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 26. சுந்தரானந்தர் ஆதி சூத்திரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 23
ஆ. ல/12

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. சுந்தரானந்தர்
ஆ. சுந்தரானந்தர் ஆதி சூத்திரம்
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 32

3. தோற்றக் கூறுகள்

அ. 13 ஏடு ; 26 பக்கம்.
ஆ. நீளம் 20.5 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 6, 7 வரி.
உ. சுமாரான எழுத்து. பிழைகள் மிகுதி.
ஊ. 4ஆம் ஏடு காணப்பட வில்லை. சுவடியின் வலப்புறம் ஒடிந்துள்ளது.
எ. குறை.

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அரிஓம் அரகரா அக்கனவு மாகி
அதிலேதான் சுழித்தயிரு சுழியு மாகித்
தெரியாத பொருளாகிச் சாத்தி மாகிச்
சிவனுமாய்ச் சத்தியுமாய் இரண்டு மொன்றாய்த்
தரியாத நிர்மூடர் இதைஅறிந்தால்
தாயான மவுனத்தை அறிவா னய்யா
விரிகமலத் தோன்அறியான் இந்த மூலம்
வேதாந்தம் சித்தாந்தம் வெளிவிட் டேனே. (1)

ஆ. முடிவு

செலுத்திடுவாய் செந்தூரம் வாத ராசன்
சிந்தா மணியோடு வாதி தானும்
வலுத்திடவே கோடசூரி பூரண மாகா
வட்டச் சந்திரோ தையந் தானும்
கலுத்துவரும் கரிசிந்தா மணியி னோடு
தானக மனோசிலையிது வேலானன்
நன்றாக யிதையெடுத்து நான் சொன்னேனே.

(பாடலடிகள் பிழையாக உள்ளன)

## 27. மருத்துவ நூல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 24
ஆ. ல/13

2. உள்ளீடு : நூல்விவரம்

அ. ......................
ஆ. பெயர் தெரியாத ஒரு மருத்துவ நூல்.
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 275

## 3. தோற்றக் கூறுகள்

அ. 65 ஏடு ; 130 பக்கம்.

ஆ. நீளம் 33.5 செ. மீ.; அகலம் 3.5 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 5 வரி.

உ. தெளிவான எழுத்து.

ஊ. 1, 39; 46 முதல் 51, 55; 58 முதல் 61; 72 முதல் 74; 76 முதல் 79 ஆகிய ஏடுகளும், 84க்குமேல் இருக்க வேண்டியனவும் காணப்படவில்லை. சுவடியின் வலப்புறம் ஒடிந்துள்ளது. சுமாரான நிலை.

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சவுக்கார வழலை குரு முறை :-

நிசமான சவுக்கார வழலை தன்னை
　　நேர்ப்பாகச் சித்தரெல்லாம் மூடிப் போட்டார்
கசமான சிலேற்பனத்திற் புகுந்த ஈப்போல்
　　கண்கெட்ட வாதிகள்தான் கலங்கினார்கள்
மசகாகச் சாத்திரத்தில் மறைத்துச் சொன்னால்
　　ம(ய)ங்குவார் உலகத்தில் மகத்தாம் பாவம்
அசையாத வாதியுப்பை யறிய வேணும்
　　அறிவான பரவெளிதான் சவுக்கார மாமே. (6)

ஆ. முடிவு

பாவியதோர் பலகையினு .... தமரு போட்டுப்
　　பாவகமாய் அதன்மேல்மண் திரணை போட்டுப்
பூவையே திரணைமுதற் பலகை யொன்றாய்ப்
　　பொருந்தவே தமரிட்டுக் குடத்துவாய் மட்டும்
தாவவே சலாக்கையிட்டு மையம் பாரு
　　சாயாமல் கோணாமல் சமனாய்ப் பார்த்து
மேவவே அதன்மேலே கணபதியை வைத்து
　　விந்தையாய்ச் செபம்செபிக்க விசிதம் ஆமே. (325)

(மேலே ஏடுகள் இல்லை)

# 28. குமாரசாமி நளன் அம்மானை

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 25
ஆ. ர/2

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. குமாரசாமி
ஆ. குமாரசாமி நளன் அம்மானை
இ. நாட்டுப்பாடல்
ஈ. செய்யுள். அச்சில் சுமார் 250 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 123 ஏடு; 246 பக்கம்.
ஆ. நீளம் 43 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கம் மூன்று பத்திகளாகப் பிரித்துக் கொள்ளப்பட்டுள்ளது ; பத்திக்கு 7 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. இடையிடையே பல ஏடுகள் காணப்படவில்லை. ஏட்டெண்கள் உள்ள பகுதி முறிந்துபட்டதால் அவற்றை அறியக்கூடவில்லை. மிகப் பழுதுற்ற சுவடி.
எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கொங்குகொழு விஞ்சிமஞ்சள் குத்திப் பறித்துருட்டி
தெங்கு கமுகுபலாச் செண்பகமுந் தானுருட்டி
களிறுங் கடமாவுங் கன்றுகளுந் தானுருட்டி
வழிமறித்த வோடைவெள்ளம் வானமட்டு மேபிடுங்கி

ஆ. முடிவு

அன்னை பிதாவாழி ஆசாரி யார்வாழி
என்னையாட் கொண்டபெரு வேம்புடையார் வாழியதே.

நளனம்மானை எழுதி முகிந்தது. முற்றும்.

இ. பிற்குறிப்பு

துந்துபி வருஷம் ஆனி மாதம் 15 ஆம் தேதி வெள்ளிக் கிழமையும் அசுபதி நட்சத்திரமும் கூடிய சுபதினத்தில் குமார சுவாமி நளனம்மானை எழுதி முகிந்தது. முத்துக் குமரன் துணை.

5. பிற செய்திகள்

குமாரசாமி நளன் அம்மானை என்றதால் குமாரசாமியால் இயற்றப்பட்ட நளன் அம்மானை எனப் பொருள் கொள்ளப் பட்டது. இறுதியில் வாழ்த்துப் பகுதியில் ''தெரியும் படிக்காய்ச் சிறியேனை ஓதுவித்தார், ஆறிரண்டு தோளானை ஆனைமுக னைப்போற்றும், மாறியா டும்பெருமாள் வாத்தியார் வாழியதே'' என வருகிறது. இதைக்கொண்டு இந்நூலாசிரியரின் போத காசிரியர் பெயர் மாறியாடும் பெருமாள் என்பது புலனாகிறது.

## 29. நைடதம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 26

ஆ. ந/2

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அதிவீரராம பாண்டியன்

ஆ. நைடதம்

இ. காப்பியம்

ஈ. செய்யுள் 1168

3. தோற்றக் கூறுகள்

அ. 135 ஏடு ; 270 பக்கம்.

ஆ. நீளம் 34 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 7,8 வரி.

உ. கையெழுத்து தெளிவாக உள்ளது.

ஊ. சில ஏடுகள் சிதைந்துள்ளன. எனினும் பொதுவாக நல்ல நிலை.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தழைவிரி கடுக்கை மாலை தனிமுதற் சடையிற் சூடும்
குழவிவெண் டிங்க ளிற்ற கோட்டது குறையென் றெண்ணிப்
புழைநெடுங் கரத்தாற் பற்றிப் பொற்புற விணைத்து நோக்கும்
மழைமதக் களிற்றின் செய்ய மலரடி சென்னி வைப்பாம்.

ஆ. முடிவு

ஆழி சூழ்புவி முழுவது மாழியொன் றுருட்டி
வாழி நல்லறம் புரிதரு மகம்பல வாற்றிச்
சூழி மால்வரைப் பிடருறு சுமையொழித் தாறப்
பாழி யம்புயத் துலகெலாம் பரிந்தினி திருந்தான். (15)

அரசாட்சிப்படலம் முற்றும். ஆகப்படலம் 28.
செய்யுள் விருத்தம் 1168.

இ. பிற்குறிப்பு

சீனக்குடைய அழகப்பன் எழுதின நளன் கதை. பிரபவ வருஷம் ஆடி மாதம் 8 ஆம் தேதி சோமவார நாளும் சுவாதி நட்சத்திரமும் கூடின சுபதினத்தில் எழுதி முடிந்தது. முற்றும். மீனாட்சி சகாயம்.

## 5. ........................

## 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1 : 254, 255 ; 6 : 82 ; 8 : 81 ; 12 : 90 ; 16 : 111, 112, 2594, ஆர். 1078, ஆர். 1307, ஆர். 1320, ஆர். 2696, ஆர்.

2720, ஆர். 5111, ஆர். 5227, ஆர். 5518, ஆர். 7125 ; 17 : 7, 170 ; 18 : 3898, 3923 ஏ, 5644 ஏ, 5918 ; 19 : 3195 ; 25 : 185, 436, 437 ; 27 : 184, 186 - 191 ; 31 : 70, 74 ; 48 : 4579, 5056 ஏ ; 54 : 879 ; 55 : சி 21, 830 ; 60 : 247-251, 518, 567 ; 62 : 26.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 30. யாப்பருங்கலக் காரிகை

1. நூலகக் குறிப்புகள்

அ. 27
ஆ. ச / 1

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அமிதசாகரர்
ஆ. யாப்பருங்கலக் காரிகை மூலமும் குணசாகரர் உரையும்.
இ. இலக்கணம்
ஈ. செய்யுளும் உரைநடையும் கலந்தது. அச்சில் ஏறத்தாழ 275 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 105 ஏடு ; 210 பக்கம்.
ஆ. நீளம் 36 செ. மீ.; அகலம் 3 செ. மீ.,
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 8, 9, 10 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. முதற்பகுதியில் 21ஆம் ஏடு சிதையத் தொடங்கியதால் வேறொன்று எழுதி இணைக்கப்பட்டுள்ளது. இரண்டாவது பகுதியில் 22, 23 ஆகிய இரண்டு ஏடுகள் காணப்பட

வில்லை. 32, 33 என்ற ஏட்டெண்கள் இருமுறை எழுதப் பெற்றுள்ளன. பொதுவாக நல்ல நிலை.

ஏ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கந்த மடிவில் கடிமலர்ப் பிண்டிகண் ணார்நிழற்கீழ்
எந்த மடிக ளிணையடி யேத்தி யெழுத்தசைசீர்
பந்த மடிதொடை பாவினங் கூறுவன் பல்லவத்தின்
கந்த மடிய வடியான் மருட்டிய தாழ்குழலே. (1)

(இதன் முன் ''எண்ணிய எண்ணிய எய்தும்'' என்னும் விநாயகர் வாழ்த்து அகவல் ஏடெழுதியவரால் எழுதப்பட்டுள்ளது.)

ஆ. முடிவு

சீரொடு விட்டிசை மாஞ்சீ ரியற்றளை சேரருகி
வார்வடங் கொங்கை வருக்கம் சுருங்கிற்று வான்பொருளே
கார்நறுங் கோதை யெழுத்துட னொன்பதுங் காரிகையின்
ஓரு மொழிபியற் பாட்டென்று நாவல ரோதினரே.

குரு வாழ்க. காரிகை முற்றும். (தொடர்ந்து, ''முதற் சீர் நான்கும் வெண்டளை பிழையா'' எனத் தொடங்கும் கட்டளைக் கலித்துறை இலக்கணமும், ''நன்குறள் இரண்டாய் நான்கடி யாகி'' என்னும் சவலை வெண்பா இலக்கண நூற்பாவும் இடம் பெற்றுள்ளன.)

இ. பிற்குறிப்பு

ஸ்ரீ ராமஜெயம். அழகப்பன் காரிகை முடிந்தது. முற்றும்.

5. ...... .. ..........

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

பல நூலகங்களிலும் உள்ளன.

7. வெளியீட்டுச் செய்திகள்

பல பதிப்புகள் வெளிவந்துள்ளன.

## 31. சூடாமணி நிகண்டு

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 28
ஆ. ச / 2

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. மண்டலபுருடர்
ஆ. சூடாமணி நிகண்டு முதல்தொகுதி
இ. இலக்கணம்
ஈ. செய்யுள் 101

### 3. தோற்றக் கூறுகள்

அ. 15 ஏடு. 30 பக்கம்.
ஆ. நீளம் 38.5 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 7 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. ஏடுகள் ஆங்காங்கு சிதைந்துள்ளன. எனினும் பொதுவாக நல்ல நிலை.
எ. முழுமை.

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பொன்னுநன் மணியு முத்தும் புனைந்தமுக் குடைநி ழற்ற
மின்னுபூம் பிண்டி நீழல் வீற்றிருந் தவனை வாழ்த்தி
மன்னிய நிகண்டு சூடா மணியென வொன்று சொல்வேன்
இந்நிலந் தன்னில் மிக்கோர் யாவரும் இசைந்து கேண்மின் (1)

(இப்பாடலுக்கு முன் ஏடு எழுதியவரால் விநாயகர், சரசுவதி, அகத்தியர் ஆகியோர் வணக்கம் கூறும் பாடல்கள் எழுதப்பட்டுள்ளன.)

ஆ. முடிவு

பனியிமந் துகின மும்பேர் பரிவேட மூர்கோள் வட்டம்
தனியிகு வான வில்லே யிந்திர தனுவென் றாகும்
எனவிவ தேவ ரீட்டச் செய்யுணா றியம்பி வைத்தான்
புனைகுண பத்தி ரன்றாள் போற்றுமண் டலவன் றானே. (101)

முதலாவது தெய்வப் பேர்த்தொகுதி முற்றும்.

5. ... ......... ......

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1:111, 434,436, 480, 626; 2 : வ. 148,44576, 44592 ; 4 : 9642, 9875, 9876 ; 16 : 17 - 24, 2286 ; 5040 ; 17 : 151, 25 : 10 - 16, 2171 ; 26 : 234 ; 27 : 486, 489 - 515, 522, 705டி, 807ஏ, 909, 938 ; 31 : 202சி ; 32 : 48, 130.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 32. திவாகரர்

1. நூலகக் குறிப்புகள்

அ. 29
ஆ. 8/3

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. திவாகரர்
ஆ. திவாகரம்
இ. இலக்கணம்
ஈ. செய்யுள் 254

3. தோற்றக் கூறுகள்

அ. 31 ஏடு ; 62 பக்கம்.

ஆ. நீளம் 36 செ. மீ. ; அகலம் 3 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப் பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 8, 9, 10 வரி.

உ. தெளிவான கையெழுத்து.

ஊ. மூன்றாம் தொகுதி 254 ஆம் நூற்பா வரைதான் உள்ளது. நல்ல நிலை.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஏக தந்தன் இறைமகன் முன்னோன்
ஆகு வாகனன் ஐங்கரன் மூத்தோன்
மோதகக் கரத்தன் முக்கணன் கணேசன்
கரிமுகன் அத்திக் கடவு ளேரம்பன்.

ஆ. முடிவு

ஒப்பில்சங் காயிரம் உற்றது வலம்புரி. (254)
அப்படி வலம்புரி ஆயிரஞ் ..................

## 33. வெண்பாப் பாட்டியல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 30

ஆ. ச/4

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. குணவீரபண்டிதர்

ஆ. வெண்பாப் பாட்டியல்:பொருத்தவியல் மூலமும் உரையும்

இ. இலக்கணம்

ஈ. செய்யுளும் உரைநடையும் கலந்து. அச்சில் ஏறத்தாழ 30 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 7 ஏடு ; 14பக்கம்.
ஆ. நீளம் 36 செ. மீ. ; அகலம் 3 செ. மீ.,
இ. இருபக்கமும் எழுதப் பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 9 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. நல்ல நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

மதிகொண்ட முக்குடைக்கீழ் வாமன் மலர்த்தாள்
துதிகொண்டு நாளுந் தொழுது— நுதிகொண்ட
பல்கதிர்வே லொண்கணாய் பாட்டியலைக் கட்டுரைப்பன்
தொல்லுலகின் மீது தொகுத்து.

என்பது சூத்திரம்.

ஆ. முடிவு

வைநாசி கந்தாள் வளர்ந்திடும் மதிபோற்
செய்காரி யங்கள் தினந்தொறும் குறைக்கும்
இவ்வகைப் பொருத்த மீரைந் ததனை
நல்வகை யென்றார் நாற்கவிப் புலவர்.

5. ......................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

16: 2078, ஆர். 5118; 25: 187-189; 27: 645-647; 60: 198எ.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப் பட்டுள்ளது.

# 31. ஆறாதார தரிசனம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 31
ஆ. ற/2

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..............
ஆ. ஆறாதார தரிசனம்
இ. பல்வகை நூல்கள்
ஈ. உரை நடை. அச்சில் ஏறத்தாழ 10 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 7 ஏடு ; 14 பக்கம்.
ஆ. நீளம் 12.5 செ. மீ.; அகலம் 2.5 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ பக்கத்திற்கு 7, 8 வரி.
உ. தெளிவான எழுத்து; பிழைகள் மிகுதி.
ஊ. நல்ல நிலை.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

மூலாதாரம் : கால் எலும்பு ரெண்டும், கதிரெலும்பும் கூடின இடம் குய்யம். குய்யத்துக்கும் குதத்துக்கும் நடுவே குண்டலி வட்டமாய் அந்த வட்டத்தின் நடுவே முக்கோணமாய்......

ஆ. முடிவு

எட்டு மிரண்டுக்கு மேலாகி நின்றாடுகிற திருக்கூத்தைத் தெரிசித்த மெய்ஞ்ஞானிக்குப் பிறப்பில்லை யென்று பரமகுரு

தேசிகன் பாதமடைந்து வாழலாமென்றவாறு. ஆறாதார தரிசனம் முற்றும். குரு கடாட்சம். குருவேதுணை.

5. ............

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

16: 2132, 2134.

## 55. முத்தியேது

1. நூலகக் குறிப்புகள்

அ. 32
ஆ. ட/1

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. .........
ஆ. முத்தியேது
இ. தத்துவம்
ஈ. உரை நடை. அச்சில் ஏறத்தாழ 25 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 5 ஏடு ; 10 பக்கம்.
ஆ. நீளம் 20.5 செ. மீ.; அகலம் 6 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பெற்றுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 14 முதல் 17 வரி.
உ. மிக அழகிய தெளிவான எழுத்து. அச்சுப் போன்றது.
ஊ. ஏடுகளில் ஆங்காங்குத் தொளைகள் விழுந்துள்ளன. பொதுவாக நல்ல நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தந்தை தாயுமெய்த் தகவுடை யுறவுஞ்
சாலுங் கல்வியுந் தகுமுயிர்த் துணையுஞ்
சிந்தை யாருநற் சீலமும் வலியும்
திருவு மின்பமுஞ் சிதைவிலா வறிவும்
முந்தை யாமுளத் ....கையு முயிரு
மூல முத்தியு மொழிவருஞ் சமை....
....தை யாகிவந் தேழை யேனை
இறைவ னார்கழல் ஆகுமென் றனக்கே. (1)

ஆ. முடிவு

இப்போதிருக்கின்ற முமுட்சுக்களும் இதில் சொன்ன பிரகாரம் ஞானாசாரியரைப் பரமசிவமாகப் பாவித்துத் தேகமுள்ள பரியந்தமும் அவரை விட்டு நீங்காமல் திரிவித கரணங்களாலும் பணிவிடை செய்து நின்று அவர் கிருபையாலுண்டாகாநின்ற தத்துவ ஞானத்தினாற் பரமோட்சசுகத்தை அடைய வேண்டியது. சிவோகம். திருச்சிற்றம்பலம்.

5. பிற செய்திகள்

சுவடியின் தொடக்கத்தில் தலைப்பு, ''சற்குருவினிடத்தில் சீடன் செய்யும் வந்தனை வழிபாடு முறைமை. முத்தியேது'' என விளக்கமாக உள்ளது.

## 36. ரோமரிஷி 500

1. நூலகக் குறிப்புகள்

அ. 33
ஆ. ல/14

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ரோமரிஷி
ஆ. ரோமரிஷி 500

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 348

## 3. தோற்றக் கூறுகள்

அ. 167 ஏடு; 334 பக்கம்.

ஆ. நீளம் 23 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது

ஈ. பக்கத்திற்கு 5 வரி.

உ. தெளிவான கையெழுத்து.

ஊ. ஏட்டெண் 105 இருமுறை எழுதப்பட்டுள்ளது. 166 ஆம் ஏட்டிற்குமேல் இருக்கவேண்டியவை காணப்பட வில்லை. உள்ள பகுதி நல்ல நிலை.

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

மூலமதில் லாதார முடிவில் நின்ற
மூர்த்தியெனுங் கணேசனுட பாதங் காப்பு
சாலமெல்லாம் கடந்துநின்ற தாயின் பாதம்
சனகாதி மூலருட பாதம் போற்றி
காலமெனும் பிறப்பிறப்புங் கடந்து நின்ற
கருணைதரும் நந்தீசர் பாதம் காப்பு
ஆலமுண்ட கண்டருட பாதம் போற்றி
ஐந்நூற்றை யானுரைக்க அம்பரத்தாள் காப்பே. (1)

ஆ. முடிவு

முடிக்கவே கற்பத்தையெல்லா மறுத்துச் சாடும்
மூதண்ட ரவிமதியுங் காட்டு விக்கும்
தடிக்கவே பித்தத்தைக் கீழே நோக்கும்
தாதுகளை உண்டாக்கும் சார்வு காட்டும்
முடிக்கவொரு லேகியத்தை மண்டலமே கொள்ள
மூதண்ட வரை ........................ ........................ .... (349)

## 5. ........................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

16 : ஆர். 265சி, ஆர். 4726, ஆர். 6202, 2411.

## 37. பிரமமுனியார் வைத்தியம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 34
ஆ. ல/15

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. பிரமமுனி
ஆ. பிரமமுனியார் வைத்தியம்
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 382

3. தோற்றக் கூறுகள்

அ. 73 ஏடு; 146 பக்கம்.
ஆ. நீளம் 36 செ.மீ.; அகலம் 3.5 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 7,8 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. சுவடியின் வலப் புறம் சற்றுச் சிதைந்துள்ளது. பொதுவாக நல்ல நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சீரரு ளான சோதி சின்மய மான சோதி
ஆரணி கொன்றை சூடி யரனிணைத் தாளைப் போற்றி
வாரணி ரிஷிகள் பாதம் வணங்கியே வைத்ய நூலைக்
காரண மாகப் பாடக் கணபதி காப்புத் தானே. (1)

ஆ. முடிவு

வாரான கருவையெல்லாம் வெளியாய்ச் சொன்னேன்
வாதமொடு வயித்தியமும் வகையாய்ச் சொன்னேன்
கூரான செந்தூரம் களங்கம் செயநீர்
குருமுடிக்கும் வகைகளெல்லாம் குறியாய்ச் சொன்னேன்
வாரான அஞ்சனமும் திலதம் சொன்னேன்
வசியமோ டழைப்புவித்தை மாரணமுஞ் சொன்னேன்
ஆறான ஞானமொடு வாசி யோகம்
அடங்கிநின்ற கருக்கிடைசூத் திரந்தான் முற்றே. (382)

பிரமமுனி 382 முற்றும். ஸ்ரீராமஜெயம்.

5. .....................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

16 : ஆர். 253ஏ, ஆர். 266ஜ, ஆர். 3402, ஆர். 4674; 18: 8086; 28 : 39893, 45842.

## 38. அகத்தியர் வைத்திய சூத்திரம் 300

1. நூலகக் குறிப்புகள்

அ. 35
ஆ. ல/16

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அகத்தியர்
ஆ. அகத்தியமகாமுனி நாயனார் வைத்திய சூத்திரம் 300
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 301

3. தோற்றக் கூறுகள்

அ. 110 ஏடு ; 220 பக்கம்.

ஆ. நீளம் 27.5 செ.மீ.; அகலம் 3 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 6 வரி.

உ. தெளிவான கையெழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை.

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பூதலத்தில் தென்பொதிகை தன்னில் வாழும்
    பூரணமே யென்குருவே சிவமே அய்யா
மாதவத்தால் அஷ்டசித்தி எட்டும் பெற்ற
    வரிசையினால் வைத்தியநூல் வகையாய்ச் சொல்வேன்
போதகத்தின் முகத்தானைக் கடைகெட் டானைப்
    புழுக்குழியில் விழுந்தானைப் புதல்வன் றன்னைச்
சாதகமாய் மனமடங்கி யறிவிற் கூட்டும்
    தற்பரமாய் நின்றகண பதியே காப்பே. (1)

ஆ. முடிவு

மூலத்தி னெழுத்தாலே மவுனங் கொண்டு
    மூட்டினால் வடுகனங்கே நிர்த்தஞ் செய்வான்
ஞாலத்தின் குண்டலிக்குள் ளடுக்கை பாரு
    ஆசையவன் வைப்பதற்கு வடைமாலை சாத்து
சீலத்தின் நந்தியுட பூசை பண்ணு
    சேகண்டி நாதவொலி மணியி னோசை
காலத்தின் கருவறிந்து பூசை தீர்ந்தால்
    கைக்கொள்ளா வயித்தியமுந் நூறு முற்றே. (301)

குரு முன்னிற்க வேணும்.

# 59. அகத்தியர் ஆயிரத்திரட்டு

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 36

ஆ. ல/17

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அகத்தியர்
ஆ. அகத்தியர் ஆயிரத்திரட்டு - முன்காண்டம் 500
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 515

3. தோற்றக் கூறுகள்

அ. 113 ஏடு; 226 பக்கம்.
ஆ. நீளம் 28 செ.மீ.; அகலம் 3.5 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 7,8 வரி.
உ. தெளிவான எழுத்து. பிழைகள் மிகுதி.
ஊ. நல்ல நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சீரான அகத்தியரா யிரத்தி ரட்டில்
செல்வமாய் முன்காண்ட மைந்நூறும் சொல்வேன்
வீறான மாத்திரைகள் முதலில் காணும்
மேலான புலத்தியனே நடுவே கேளு
கூறான லேகியமுஞ் சூரணமு நெய்யும்
கொள்ளையாய்க் கண்டிருக்கும் கூர்மை யாக
ஆறான தயிலமுடன் எண்ணெய் தானும்
அநேகமாய்க் கடைசியிலே கண்ட வாறே. (1)

ஆ. முடிவு

சாத்துறே னஞ்னூத்துப் பதினஞ்சு மாச்சு
சகலகரு வயித்தியத்திற் றானே சொன்னோம்
ஆத்துறேன் மாத்திரைகள் அம்பத்து மூணும்
அப்பனே புடங்கள்முதல் ஊத்துத் தானும்

மாத்துறேன் மண்டூர லேகி யங்கள்
மகத்தான பற்பமுதல் சிங்கி வ(ங்)கி
போத்துறேன் சித்திவிர்த்தி புகல கண்டம்
அஞ்ஞூத்துப் பதினஞ்சு முற்றே. (514)

(ஈற்றடியின் பிற்பாதியில் சில எழுத்துகள் குறைகின்றன.)

## 10. தேரையர் வைத்தியம் 1001

1. நூலகக் குறிப்புகள்

அ. 37
ஆ. ல/18

2. உள்ளீடு : நூல்விவரம்

அ. தேரையர்
ஆ. தேரையர் வைத்தியம் 1001
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 539

3. தோற்றக் கூறுகள்

அ. 73 ஏடு; 146 பக்கம்.
ஆ. நீளம் 28 செ.மீ.; அகலம் 3.5 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 7 வரி.
உ. கிறுக்கலான எழுத்து. எனினும் ஓரளவு தெளிவாக உள்ளது.
ஊ. நல்ல நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஆதி சத்தியருள் புதல்வர் சகுண
மீதி லுதித்த பிணியக லும்படி

வாதி யுத்தமர் சித்தர் பதம்பணிந்து
ஓதி வைத்ததோ ராயிரத் தொன்றுமே. (1)

ஆ. முடிவு

ஏத்தி டாய்முலைப் பாலிழைத் தோர்புறந்
தோத்தி டாய்நசி யம்சுரம் பாதிபோம்
மாத்தி டாய்நசி யம்மறு பக்கமும்
பாத்தி டாய்சுரம் பாதிவிட் டோடுமே. (539)

5. ...........

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

16 : ஆர். 925 ஏ, ஆர். 2308 ; 27 : 221 ஏ ; 28 : 10960.

## 41. உபதேச வைப்பு

1. நூலகக் குறிப்புகள்

அ. 38-1
ஆ. ற/3

2. உள்ளீடு : நூல்விவரம்

அ. ..................
ஆ. உபதேச வைப்பு
இ. பல்வகை நூல்கள்
ஈ. உரைநடை ; சுமார் 50 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 55 ஏடு ; 110 பக்கம்.
ஆ. நீளம் 12.5 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 8, 9, 10 வரி.

உ. சுமாரான கையெழுத்து. பிழைகள் மிகுதி.

ஊ. சுவடியின் முதல் 24 ஏடுகள் இல்லை. 32, 53, 80 ஆகிய மூன்று ஏடுகள் காணப்படவில்லை. நல்ல நிலை.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

...... ட் சரமாவது மகாரங் கொண்டு வளைத்து உகாரம் நடு நிறுத்தி அதிலே நாதம் மகாரம் பிளந்தேறியதின் மேல் சிகார மிருக்கும்.

ஆ. முடிவு

ஞான முறைமைக்குச் சகலாவத்தை யென்றுங் கேவலாவத்தை யென்றும் பேர். சீவன் பரத்திலே சினேகமாயிருக்கையினாலே பராபரமாகிய பரமேஸ்வரன் மானைப் பிடிக்க மானைப் போலே இரவையும் பகலையும் குருவென்ற வடிவெடுத்துக் கொண்டு ஆதி கபிலமகாரிஷி வள்ளுவநாயனார் சாட்சியாக திருக்குரு நந்தீஸ்பரர் திருமூலதேவருக்கு அருளிச்செய்த உபதேச வைப்பு முற்றும். கிருஷ்ண சகாயம்.

5. .........

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

16: ஆர். 6119; 25: 1232, 1233; 27: 866 கே; 28: 10788 சி; 60: 37 இ.

## 42. எழுவகைத் தோற்றம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 38-2

ஆ. ற/3

## 2. உள்ளீடு : நூல்விவரம்

அ. ................

ஆ. எழுவகைத் தோற்றம்

இ. பல்வகை நூல்கள்

ஈ. செய்யுளும் உரைநடையும் கலந்தது. அச்சில் ஏறத்தாழ 20 பக்கம் வரலாம்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 19 ஏடுகள்; 38 பக்கம். ( ஏட்டெண் 82 முதல் )

ஆ. நீளம் 12.5 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 8, 9, 10 வரி.

உ. சுமாரான கையெழுத்து. பிழைகள் மிகுதி.

ஊ. சுவடி 82 ஆம் ஏட்டில் தொடங்கி 105-ல் நிறைவேறுகிறது. 88, 90, 96, 99, 100 ஆகிய ஏடுகள் காணப்படவில்லை. நல்ல நிலை.

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

இப்பால் ஆதி வள்ளுவநாயனார் கபில மகாரிஷி சாட்சியாகத் திருநந்தீசுவரர் திருமூல தேவருக்கு அருளிச் செய்த தோற்றம் ஒடுக்கம் அறியும்படி :- பராபரமாகிய பரமேஸ்வரன் தராதலம் படைக்கத் தான் நினைந்தருளி பராபரத்திற் பரந் தோன்றி, பரத்திற் சிவந் தோன்றி, சிவத்திற் சத்தி தோன்றி, சத்தியில் நாதம் தோன்றி .........

ஆ. முடிவு

இன்பதுன்பந் தானறியார் இருவினைக ளறியார்
இழுத்துவலி யாய்ப்பறிப்போர்க் கெய்தி வாழ்வார்
தானதர்ம மதனையார் தயவு மில்லை
தன்குலத்து மேல்சலமேல் தண்மை யில்லை

ஆனபுகழ் தனையறியோ ரறிவு மில்லை
அஞ்செழுத்தின் றிறமறியா ரற்றமுங் காணார்
கானகமே இடமாகிக் குடியே வாழ்வார்
கல்லுமறக் குலத்துதித்தோர் கருதுங் காலே. (9)

எழுவகைத் தோற்றம் முற்றும்.

## 45. தட்சிணா மூர்த்தி வைத்தியம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 39
ஆ. ல/19

2. உள்ளீடு : நூல்விவரம்

அ. தட்சிணாமூர்த்தி
ஆ. தட்சிணாமூர்த்தி வைத்தியம் பிற்காண்டம் 500
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 408

3. தோற்றக் கூறுகள்

அ. 83 ஏடு; 166 பக்கம்.
ஆ. நீளம் 28 செ. மீ.; அகலம் 3.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 7 வரி.
உ. தெளிவான எழுத்து. பிழைகள் மிகுதி.
ஊ. நல்ல நிலை
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கருவான வாரணத்தின் முகவன் பாதம்
கருணைபுரி சிவன்பாதம் உமையாள் பாதம்
குருவான குமரகுரு பரன்தன் பாதம்
கும்பேஸ்வரி எனையீன்ற சத்தி பாதம்

உருவான நாற்பத்து முக்கோண மேறில்
    உண்மனைத்தாய் சிதம்பரசக் கரத்தின் பூசை
அருவான அண்டபிண்டம் ஒன்றாய் நீண்ட
    ஆகாசம் வெளியொளியின் பாதங் காப்பே. (1)

ஆ. முடிவு

கூட்டிக் காய்ச்சி வடித்ததனைக்
    குணமாய்க் கொள்ள மேற்பூச
வாட்டஞ் செய்யும் வறட்சியது
    ..................................

## 44. அகத்தியர் கருக்கிடை நிகண்டு

1. நூலகக் குறிப்புகள்

அ. 40
ஆ. ல / 20

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அகத்தியர்
ஆ. அகத்தியர் கருக்கிடை நிகண்டு 116
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 116

3. தோற்றக் கூறுகள்

அ. 42 ஏடு; 84 பக்கம்.
ஆ. நீளம் 28 செ. மீ.; அகலம் 3.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 6 வரி.
உ. தெளிவான கையெழுத்து. பிழைகள் மிகுதி.
ஊ. நல்ல நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஆதியாம் பராபரமே குருவே அய்யா
அகண்டசரா சரமான நிர்க்குணமே அய்யா
பேதியா நிரமவமே சூட்சா சூட்சம்
பெரிதான வல்லபையுங் கணபதியுங் காப்பு
நீதியாம் நிகண்டொரு நூற்றுப்பதி னாறுக்குள்
நிகழ்த்தினேன் கருக்கிடையும் குருக்கிடை நன்றாய்
வாதியன்தா னிந்நூலைக் கண்ணிற் காட்டார்
வகுத்திட்டே னிகண்டுநூ னன்றாய்ப் பாரே. (1)

ஆ. முடிவு

சொன்னதொரு யிந்தவகை நிகண்டுக் குள்ளே
சூட்சமுதல் பார்த்தவர்க்கு எதிர்குருவு மில்லை
பின்னையொரு மூலியென்ற பேச்சு வேண்டாம்
பிறவான சித்தருட தொழிலும் வேண்டாம்
தின்னவொரு கோடிதவம் புரிவோர்க் கப்பா
செகந்தனிலே யிந்தநூல் கிட்டா தப்பா
முன்னமே பதினெண்பேர் நூல்க ளெல்லாம்
முறைப்படியே பிள்ளைகரு நிகண்டில் முற்றே. (116)

மனோன்மணி கிருபையுண்டாகவும்.

5. ....................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1 : 500.

## 45. இடைக் காட்டுச்சித்தர் சூத்திரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 41 - 1
ஆ. ல / 21

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. இடைக்காடர்
ஆ. இடைக்காட்டுச் சித்தர் சூத்திரம்
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 30

3. தோற்றக் கூறுகள்

அ. 9 ஏடு; 18 பக்கம்.
ஆ. நீளம் 28 செ. மீ.; அகலம் 3.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 6, 7, 8 வரி.
உ. கையெழுத்து தெளிவாக உள்ளது. பிழைகள் மிகுதி.
ஊ. நல்ல நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தாரு லாவு மேக மேநற் கங்கை சத்தி யோர்சிவம்
பாரில் வளர்வீட் டுப்புச் சுத்திப் பண்பு வற்பு வாகநீர்
சீரு லாவு கங்கை யாலத் தெளிந்த வெள்ளை யுப்பிலே
நீர்க லந்த போதழல் நீடு லாவு சுண்ணமே,

ஆ. முடிவு

உப்பும் புளியும் உடன்காரி சாரமும்
தப்பில்லா சூடனும் தனிநீல கண்டரும்
ஒப்பா யரைத்து உருட்டி வெதுப்பிட
அப்புணில் வேதை அளவில்லை காணுமே. (56)

5. ....................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1 : 511 ; 18 : 11559 டி ; 60 : 111 சி.

## 46. கலைஞானம் 1200க்குச் சூத்திரம் 12

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 41 - 2
ஆ. ல / 21

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..................
ஆ. கலைஞானம் 1200க்குச் சூத்திரம் 12
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 12

### 3. தோற்றக் கூறுகள்

அ. 3 ஏடு; 6 பக்கம்.
ஆ. நீளம் 28 செ. மீ.; அகலம் 3.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 6, 7 வரி.
உ. தெளிவான கையெழுத்து. பிழைகள் மிகுதி.
ஊ. நல்ல நிலை.
எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சாத்திரப் பெருநூல் ஞானம் சாற்றிய சகலக் காணம்
போத்திய பூர ணங்கள் புகழ்பெறு முப்பூச் சுண்ணம்
வாத்திய வாசி வித்தை வாமத்தின் வாழ்வுக் கெல்லாம்
ஏத்தியென் னூலுக்கு .............. ஏகமாம் குருநீர் கேளே.

ஆ. முடிவு

இதுவாமே யேக யென்பிள் ளையாய்
மதுவாய் நிறைந்தவர் வாதக் கருத்தான்
கருவாகத் திரட்டிக் களித்தே னிந்தநூல்
மதுவா பரம ரகசிய முற்றே. (12)

## 47. மருத்துவ நூல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 41-3
ஆ. ல/21

2. உள்ளீடு : நூல்விவரம்

அ. ... ....... ....... ....
ஆ. பெயர் தெரியாத ஒரு மருத்துவ நூல்.
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 16

3. தோற்றக் கூறுகள்

அ. 4 ஏடு; 8 பக்கம்.
ஆ. நீளம் 28 செ. மீ.; அகலம் 3.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 6,7 வரி.
உ. தெளிவான கையெழுத்து. பிழைகள் மிகுதி.
ஊ. நல்ல நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கண்பார்த்துக் கைபார்த்து முகத்தைப் பார்த்துக்
கண்டிதமாய்ப் பண்டிதத்தைக் கருவாய்ப் பாரு
விண்பார்த்து மேலரம்பாய்த் திரிந்தா யானால்
வெறிகொண்ட கழுதையைப்போல் விருது போச்சு

பண்பார்த்துப் படித்ததினால் வருவ தேது
    பாசாங்காய்த் திரிந்ததினால் வயித வயமோ
பெண்பார்த்து மோகமுற்ற பித்தர் போலப்
    பிலக்கவே சாத்திரத்தைப் பேணிப் பாரே. (1)

ஆ. முடிவு

பாராய் கபால வலி முதலாய்ப் பறக்கும் சூலை திரிப்புகையில்
நீரா யெடுக்கும் நீரிழிவு நீக்கும் தாழை விழுதுதன்னில்
தீராக் கிரந்தி பலவிஷமுந் தீரும் தீரும் திரிப்பிடியே.

5. பிற செய்திகள்

இந்நூலின் 10 ஆம் பாடல் முதல் இறுதிவரை அகத்தியர் குழம்பு என்னும் புகழ்பெற்ற மருந்து கூறப்பெற்றுள்ளது. இறுதியில் 'ரசமணிக்கு விபரம்' என்று ஒரு ஒற்றை ஏடு உள்ளது.

## 48. சட்டை முனியார் சூத்திரம் 25

1. நூலகக் குறிப்புகள்

அ. 42
ஆ. ல/22

2. உள்ளீடு : நூல்விவரம்

அ. சட்டை முனி
ஆ. சட்டை முனியார் சூத்திரம் 25
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 25

3. தோற்றக் கூறுகள்

அ. 9 ஏடு ; 18 பக்கம்.
ஆ. நீளம் 28 செ. மீ.; அகலம் 3.5 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 6 வரி.
உ. தெளிவான கையெழுத்து. பிழைகள் மிகுதி.
ஊ. நல்ல நிலை.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஆக(ம)த் துள்ள வேத மறிவுடன் சாத்தி ரங்கள்
ஏகமும் பொருளொன் றாகி யெவ்வுயி ரனைத்துந் தானாய்
மோகமா யாண்பெண் ணாகி முடிவிலே வெளியு மான
தேகமும் நிறைந்த பரிபூரணஞ்சிவகுரு கந்தனுமே. (1)

(ஈற்றடியின் சரியான வடிவம் விளங்கவில்லை.)

ஆ. முடிவு

காட்டுவார் உகாரமொடு அகாரம் ரெண்டும்
கருத்தாக அடிமுடியில் வைத்துக் கொண்டு
ஊட்டுவார் மையமெனு மெடத்தில்............
ஊமையெனு மைகாரத்தைச் சொல்வா ரப்பா
பூட்டுவார் மவுனமென் றிதுவே யாகும்
புலையர்க்குக் காட்டினால் தலைதெறித்துப் போகும்
நாட்டுவார் அவரவரே யிப்படித்தான் சொல்வார்
நான்சொன்ன சூத்ரமிரு பத்தஞ்சு முற்றே. (25)

சட்டை முனியார் சூத்திரம் முற்றும். குருகடாட்சமுண்டாகவும்.

## 5. ........................

## 6. மாற்றுச்சுவடிகள் காணுமிடம்

16 : ஆர். 175 எஃப், ஆர். 4884.

# 49. புலத்தியர் 110

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 43
ஆ. ல/23

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. புலத்தியர்
ஆ. புலத்தியர் 110
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 104

## 3. தோற்றக் கூறுகள்

அ. 29 ஏடு; 58 பக்கம்,
ஆ. நீளம் 31 செ. மீ.; அகலம் 3 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 7 வரி.
உ. கிறுக்கலான எழுத்து. பிழைகள் மிகுதி.
ஊ. நல்ல நிலை.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சொல்லுகிறேன் பொன்வெள்ளி இரும்பு செம்பு
பனைதொடுத்த காரீயம் வெள்ளீயம் ......... ....
கொல்லுகிற மித்திரத்தின் வகையைக் கேளு
கோமயமோ காடியெண்ணை எருக்கம் பாலில்
நல்லதொரு சம்பழச்சார் காணச் சாத்தில்
நலமான பொன்முதலி ரண்டுந் தோய்க்க
வெல்லரிய வங்கமொடு மூன்றுந் தீயில்
வேகமுட னுருக்கியதிற் சாய்க்க நன்றே. (1)

ஆ. முடிவு

எடுத்தொரு பணத்தூக் கந்தான் இடுதிரி கடுகுத் தூளில்
அடுத்துப் பத்துநாள் உண்ண அட்டகா சங்கள் ஈளை
தொடுத்தமந் தார காசம் சுவாசகா சங்கள் பாண்டு
விடுத்தொரு காதம் போகும் என முனி விளம்பி னாரே. (104)

ஏக பரிபூரணானந்த குருசுவாமி பாதகமலந் துணை.

(இரண்டாமடியின் யாப்பமைதி சரியாக இல்லை.)

## 50. அகத்தியர் வாலை வாகடம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 44
ஆ. ல/24

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அகத்தியர்
ஆ. அகத்தியர் வாலை வாகடம்
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 293

### 3. தோற்றக் கூறுகள்

அ. 82 ஏடு; 164 பக்கம்.
ஆ. நீளம் 31 செ.மீ.; அகலம் 3 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 6 வரி.
உ. கிறுக்கலான எழுத்து. பிழைகள் மிகுதி.
ஊ. நல்ல நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

குட்டுணியை முக்கணனைக் குன்றோற்கு மூத்தோனை
மொட்டைத் தவசிபெற்ற முச்சிதயை — முட்ட
வழியி லிருக்கும் மதவா ரணனைத்
தொ(ழு)தவர்க்குப் போமே துயர்.

ஆ. முடிவு

......................
பட்சி தோஷம் பால கிரிகை
எச்சிவாய் சிங்கன் எழில்காந்திசுரம்
மாந்தக் கழிச்சல் மாண்போ ராமம்
வெந்த யிளைப்பு கணமிவை யெல்லாம்
சந்திச்சஞ் சீவி திரமிது தானே. (293)

5. பிறசெய்திகள்

வாலை வாகடம் என்பது வால வாகடம் என்று இருத்தல் வேண்டும் வால வாகடமாவது குழந்தை மருத்துவம் ஆகும்.

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

16 : ஆர். 169ஏ, ஆர். 3704.

## 54. நவ சித்தாதியார் குழம்பு

1. நூலகக் குறிப்புகள்

அ. 45
ஆ. ல/25

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அகத்தியர்
ஆ. அகத்தியர் வேதாந்தத்தில் சொன்ன நவ சித்தாதியர் குழம்பு

இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 54

## 3. தோற்றக் கூறுகள்

அ. 20 ஏடு; 40 பக்கம்.
ஆ. நீளம் 27.5 செ.மீ.; அகலம் 3 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 6 வரி.
உ. கிறுக்கலான எழுத்து. பிழைகள் மிகுதி.
ஊ. நல்ல நிலை.
எ. முழுமை.

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

காசினியில் மானிடர்க்குப் பிணியே நீங்கக்
கருத்துடைய அகத்தியனார் பாடல் செய்து
வேசினிய நவசித்தர் குழம்பு தன்னை
வேதாந்தம் பாடிவிட்டேன் சுத்தி யாக
ஆசியதோர் சித்தாந்த மடக்கிப் போட்டேன்
அறியார்கள் சுத்திசெய்து ஆட மாட்டார்
மோசினிய சாபங்கள் நிவர்த்தி செய்து
முன்கொடுக்கும் தாம்பூல மாதி சொன்னேன். (1)

ஆ. முடிவு

சுரம்போகும் இந்தச்செந் தூரத் தாலே
சொல்லரிது அநுபானம் கூட்டிப் பாரு
அரம்போலே நோயறுக்கு மப்பா சொன்னேன்
ஆச்சரியம் பத்தியத்தை யறையக் கேளு
பராபரைக் கரனுரைத்த படிநான் சொன்னேன்
பத்தியமும் வெள்ளாட்டுப் பாலுங் கொள்ளு
திறமையாய் அதன்சதையும் வாத மில்லை
சீரான பதார்த்தவகை தேட லாமே. (54)

அகத்தியநாயனார் அருள்செய்த வேதாந்தம் ஆயிரத்தில் இருந்த வைத்தியம் முற்றும். தட்சிணாமூர்த்தி துணை. குருவே துணை.

## 52. கோரக்கர் வைத்தியம் 200

1. நூலகக் குறிப்புகள்

அ. 46
ஆ. ல/26

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. கோரக்கர்
ஆ. கோரக்கர் வைத்தியம் 200
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 182

3. தோற்றக் கூறுகள்

அ. 77 ஏடு; 154 பக்கம்.
ஆ. நீளம் 31 செ.மீ.; அகலம் 3 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 6 வரி.
உ. கிறுக்கலான கையெழுத்து. பிழைகள் மிகுதி.
ஊ. நல்ல நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சிவனொடுபார் வதியுங்கயி லாசந் தன்னிற்
சிறந்திருப்பார் கயிலாச மஞ்சுமலை யுண்டு
நவரத்னக் கிரியொன்று சொர்ணகிரி யொன்று
நல்லவெள்ளிக் கிரியொன்று தாமிரக்கிரி யொன்று
புவனமலைக் கிரியொன்று அஞ்சிலேயுஞ் சிவந்தான்
புகழான பார்வதியும் கூடியிருப் பார்கள்
தவமான ரிஷிகள்முனி வர்கோடா கோடி
தத்துவமாஞ் சித்தர்கள் பதினெட்டுப் பேரதிலே.

ஆ. முடிவு

அறைக்கும்பேர் வெள்ளைகல்லு பலமதிலே போட்டு
அரைப்பாய் சிறுநீரிலே அறஅரைத்து மைபோல்
நிறைத்தவில்லை போறபிடித்து நீர்ப்புடம் போட்டு
நின்றதை எடுத்துவில்லைக் கல்வத்திட்டுப் பொடித்துத்
துரைக்குருவி லக்கனஞ்சி யொன்று தூக்குத்
துய்யக் கெந்திப் பலம் ... ........ . .. (183)

(இப்பாட்டின் தெளிவான வடிவம் விளங்க வில்லை.)

## 53. அகத்தியர் கரிசல் சூத்திரம் 300

1. நூலகக் குறிப்புகள்

அ. 47
ஆ. ல/27

2. உள்ளீடு : நூல்விவரம்

அ. அகத்தியர்
ஆ. அகத்தியர் கரிசல் சூத்திரம் 300
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 116

3. தோற்றக் கூறுகள்

அ. 107 ஏடு; 214 பக்கம்.
ஆ. நீளம் 31 செ.மீ.; அகலம் 3 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 6 வரி.
உ. கிறுக்கலான எழுத்து. பிழைகள் மிகுதி.
ஊ. சில ஏடுகளில் ஆங்காங்கு தொளைகள் விழுந்துள்ளன. பொதுவாக நல்ல நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பூரணி மாமலை மகளருள் புதல்வன்
காரணி மாமத கரிமுக னடிபணிவாம். (1)

ஆ. முடிவு

சுண்டை வத்தல் நிம்பபத்ரி சுவைத்த மாங்கனிரைச் சுளை
சொல்லுமோதக முநெல்லிதாது கனிதோலும் வெந்தய
மொடேழுமே
விண்டுரைத்த படியொன்றுபட்டிட வெதுப்பியே யிளவறுப்பதாய்
மிருதுவாகயிடிவடி கொளிதுபொடி வெருகடியளவு தயிரிலே
கொண்டிடப்பொருமல் மந்தமிக்கிரைவு குமுறிநின்றிடு
கழிச்சலும்
குலைமூல மதிசாரமோடேழு கிராணி மூலமுமடாதுகை
கண்டதித்தனையும் வென்றிபுத்தியுள பண்டிதத்தொழிலர்
நம்புவர்
கருணை மாமரித முதவி கூறுமவள் கைமருந்தெணவே
செய்யுமே. (116)

## 54. சூதமுனியார் பாடல் 50

1. நூலகக் குறிப்புகள்

அ. 48-1
ஆ. ல/28

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. சூத முனி
ஆ. நந்தீசர் சூத்திரம்-சூத முனியார் பாடல் 50
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 49

## 3. தோற்றக் கூறுகள்

அ. 15 ஏடு ; 30 பக்கம்.
ஆ. நீளம் 31 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 6, 7 வரி.
உ. தெளிவான கையெழுத்து. பிழைகள் மிகுதி.
ஊ. சில ஏடுகளில் தொளைகள் விழுந்துள்ளன. பொதுவாக நல்ல நிலை.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

நந்தீசர் வேதமுனி சூதமுனி யிவர்கள்
நாதனடி போற்றிசெய்து மகிழ்ந்திருக்கும் வேளை
இந்திரலோ கம்மென்ன வாதவித்தை செய்ய
ஏதுவகை என்றருள வேதமுனி கேட்கத்
தந்திமுகன் றனைப்பணிந்து உரைத்திடுவார் நந்தி
தாரணியில் உள்ளவர்க்குச் சாகாத வரமே(ம)
மந்திரத்தா லச்சத்தி சித்தியாகும் வரலாறு
மாததிகம் வருந்துவ தினவளமாதி பகலாம்.

ஆ. முடிவு

வாங்கியந்த அரிதாரக் கட்டிதனில் தைலம்
வாகாக வேயுரைத்து வெய்யிலிலே வைத்தால்
பாங்கான செந்தூர மாகுமதை யெடுத்துப்
பசுமையா யறவைத்த வெள்ளியொரு கழஞ்சி
ஏங்கவே யுருக்கியதிற் பணவெடைசெந் தூரம்
ஏற்கையாக் கொடுக்கமாற் றேழும்குறை யாது
நீங்காது சூதமுனி உரைத்தவகை யெல்லாம்
நிசமாகுங் கண்டறிந்து நீ .. பாரே. (49)
குரு முன்னால் நிற்க வேணும்.

5. ....................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்
16: ஆர். 3716.

## 55. பூவரசங்காய் எண்ணெய்

1. நூலகக் குறிப்புகள்

அ. 48-2
ஆ. ல/28

2 உள்ளீடு : நூல் விவரம்

அ. ..............
ஆ. பூவரசங்காய் எண்ணெய்
இ. மருத்துவம்
ஈ. செய்யுள். சுமார் 20 கண்ணிகள் கொண்ட ஒரு கலி வெண்பா

3. தோற்றக் கூறுகள்

அ. 3 ஏடு ; 6 பக்கம்.
ஆ. நீளம் 31 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 6 வரி.
உ. தெளிவான கையெழுத்து. பிழைகள் மிகுதி.
ஊ. நல்ல நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

மூவுலகுந் தான்படைத்த முன்னோன் றனைப்பணிந்து
பூவரசங் காயெண்ணெய் பூவுலகில் - மேவக்கேள்
கட்டாகப் பூவரசங் காய்ச்சாறு நாலுபடி
திட்டமிகுஞ் சங்கங்குப்பி சேர்கழஞ்சி - முட்ட

ஆ. முடிவு

சரீர பலம்நோய் பலங்கள் தானறிந்து
விருதுசொல்லி வீட்டு விரைந்து.

# 56. சித்தராரூடம் 300

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 49
ஆ. ல / 29

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ...... .........
ஆ. சித்தராரூடம் 300
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 244

## 3. தோற்றக் கூறுகள்

அ. 68 ஏடு; 136 பக்கம்.
ஆ. நீளம் 27.5 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 6 வரி.
உ. கிறுக்கலான கையெழுத்து. பிழைகள் மிகுதி.
ஊ. நல்ல நிலை.
எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஆதி யரனு மீசனு மற்புதனுஞ்
சோதிமுத லொன்றாகுந் தூயநெறி நீதியால்
எத்தேவு மெத்திருவுந் தானாகி நிறைந்த
வத்தேவர் களாகையான் குருபாதமே துணை.
(இப்பாடலின் யாப்பமைதி தெளிவாக விளங்க வில்லை.)

ஆ. முடிவு

சீதமண்டலிக்கு :
சீதமண் டலிக டித்துச் செரிந்துடல் குளிர்ந்து வேர்க்கில்
கோதிலா முத்தெ ருக்கின் செவிகாடி தன்னிற் காய்ச்சி
வேதுகொண் டதனால் மெய்யிற் றப்பியே நெய்யி .... ..
........ .... ... ........ ... .... .... ... .... (245)

## 57. வெகுவாலை சந்திரோதயம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 50 - 1

ஆ. ல / 30

### 2. உள்ளீடு : நூல்விவரம்

அ. ……………

ஆ. வெகுவாலை சந்திரோதயம்

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 14

### 3. தோற்றக் கூறுகள்

அ. 5 ஏடு; 10 பக்கம்.

ஆ. நீளம் 27.5 செ. மீ., அகலம் 3 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 6 வரி.

உ. கிறுக்கலான கையெழுத்து. பிழைகள் மிகுதி.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சுத்தித்த ரசமெட்டு கெந்தி ரெண்டு
    சூடுகொண்ட பீங்கானி லுருக்கும் போது
மத்திக்க அயத்தகட்டால் ரசமுங் கந்தி
    மாய்ந்துகருப் பானபின்பு சுரண்டி வாங்கி
மெத்தித்த மணங்குப்பிக் கெத்தும் போது
    வேண்டுமரி தாரம்அரைப் பலமும் போடு
சித்திக்க அர்ச்சித்து வாலுகையி லிட்டு
    திறித்துவட்டக் குழியேத்தித் தீயை மூட்டே. (1)

ஆ. முடிவு

நிற்குமடா புலத்தியனே மச்ச கந்தி
நெறுமைசிவ விந்துவன்னி நிலையுறத் தாக்கால்
தக்குமடா காயமது திரிதோ ஷத்தை
தள்ளிவிடும் எப்பிணியும் சாடும் ஒக்கும்
மனதொடு பொறிபுலங்களை ஓடாது கைவல்லியம் காய சித்தாம்
பக்குவமா டகமைந்தும் பலமாம் செம்பு
பாய்ச்சியுருக் கிடுதகடாய்த் துலங்கச் செய்யே. (14)

இந்தப்படி சிதம்பரத்தில் வயித்தியம் சித்திக்க வேணும்.

## 58. வாகட நிகண்டு

1. நூலகக் குறிப்புகள்

அ. 50 - 2
ஆ. ல/30

2. உள்ளீடு: நூல்விவரம்

அ. .........
ஆ. வாகட நிகண்டு
இ. மருத்துவம்
ஈ. உரைநடை. அச்சில் ஏறத்தாழ 8 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 5 ஏடு; 10 பக்கம்.
ஆ. நீளம் 27. 5 செ. மீ; அகலம் 3 செ மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 6 வரி.
உ. கிறுக்கலான கையெழுத்து. பிழைகள் மிகுதி.
ஊ. நல்ல நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

புண்டரீகம் என்பது தாமரை. முதியார் கூந்தல் என்பது சவுரி குருந்து.

ஆ. முடிவு

வாசம் என்பது வாசம்பு. குத்தாற்கௌச்சம்மட்டி என்பது விழி.

5. ......... ..... ...

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1 : 384.

## 59. அகத்தியர் சூத்திரம் 60

1. நூலகக் குறிப்புகள்

அ. 51
ஆ. ல/31

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அகத்தியர்
ஆ. அகத்தியர் சூத்திரம் 60. குரு செயநீர் வித்தை
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 60

3. தோற்றக் கூறுகள்

அ. 22 ஏடு; 44 பக்கம்.

ஆ. நீளம் 27. 5 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 6 வரி.

உ. ஓரளவு தெளிவான எழுத்து. பிழைகள் மிகுதி.

ஊ. நல்ல நிலை

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஆதியென்ற பூரணமாம் அகண்டத் துள்ளே
 ஆத்தாளைப் போற்றுகின்ற வைங்கரனைப் போற்றிச்
சோதியென்ற வறுநூறு பெருநூல் தன்னைச்
 சூத்திரந்தா னறுபதுக்குள் சுருக்கிப் போட்டேன்
சேதியென்ற கருக்குருவும் வெளிய தாகத்
 திறந்திட்டேன் கைபாகம் மருந்தின் பாகம்
வீதியென்ற கெவுனத்தின் ஓட்டம் போலே
 விளைந்தமணி யிந்நூல்தான் சொல்லக் கேளே. (1)

ஆ. முடிவு

வழியான சுடர்கொடி காந்தி மீறும்
 மதியிரவி யொன்றான மார்க்கந் தானும்
சுழியான முனைவட்டக் கமல மாது
 துரியமென்ற சக்கரத்தில் சுற்றி யேறிக்
குழியான மனமொன்றாய் பத்தி பத்தி
 கூர்மைதரு மெஞ்ஞான மதீத முற்று
விழியான கண்கண்ட சூட்ச மெல்லாம்
 வெளியான சூத்திரந்(தான்) விளம்ப முற்றே. (60)

குருபாதமே கதி.

## 5. ... ... ... ...

## 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

18: 62/3 ஏ.

# 60. ரோமரிஷி சூத்திரம் 27

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 52
ஆ. ல/32

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ரோமரிஷி
ஆ. ரோமரிஷி சூத்திரம் 27
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 27

## 3. தோற்றக் கூறுகள்

அ. 9 ஏடு ; 18 பக்கம்.
ஆ. நீளம் 27.5 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 6, 7 வரி.
உ. கிறுக்கலான கையெழுத்து. பிழைகள் மிகுதி.
ஊ. நல்ல நிலை.
எ. முழுமை

## 4 சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஓமூலந் தந்திமுகனைச் சரணந் தொழுது
ஆமூலம் நந்தீசர் தானும்யா் னும்தொழுது
தாமூலம் பராபரை சரஸ்வதியென் வாக்கினில் நின்று
யேமூலம் சூத்திரங்காப் புத்தொழுதிறைஞ்சுவோர்க்கே. (1)

(இப்பாடலின் யாப்பமைதி விளங்கவில்லை.)

ஆ. முடிவு

அஞ்சரின நந்தீசர் எந்த னுக்கு
அருளனார் என்மகனே ரோமரிஷி யென்றுங்
கஞ்சமலர் திருப்புயனே சுருபா னந்தர்
கடாட்சித்தா ரெந்தனுக்கு யானுஞ் சொன்னேன்
வஞ்சகமாய்த் திரியாதே குருவை விட்டு
வானமென்ற பெயர்வந்து தேறிப் போவார்
தஞ்சமெனும் வந்தடைந்து சரணம் போற்ற
தயவுசெய்பார் சூத்திரந்தான் முடிவு முற்றே. (27

குரு முன்னிற்க வேணும்.

5. .... ......

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1 : 740 ; 16 : 4516 ; 28 : 45816.

## 61. பெரிய புராணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 53
ஆ. ண/6

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. சேக்கிழார்
ஆ. பெரிய புராணம்
இ. சைவத் திருமுறை
ஈ. செய்யுள் 4277

3. தோற்றக் கூறுகள்

அ. 390 ஏடு ; 780 பக்கம்.

ஆ. நீளம் 26.5 செ. மீ ; அகலம் 3.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 11,12,13 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. சுவடியின் மேற்பகுதி ஆங்காங்கு சிதைந்துள்ளது. சில ஏடுகளில் தொளைகள் விழுந்துள்ளன.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம், ஆ. முடிவு.

தொடர் எண் 14-3 காண்க.

இ. பிற்குறிப்பு

'' சாதாரண வருடம் கார்த்திகை மாதம் 27 ஆம் தேதி குருவாரமும் அசுபதியுங் கூடின சுபதினத்தில் பெரிய புராணம் எழுதி நிறைவேறினது. சிவமயம்.''

5. ............... .. ...

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

தொடர் எண் : 13 காண்க.

7. வெளியீட்டுச் செய்திகள்

பல பதிப்புகள் வெளிவந்துள்ளன.

## 62. வீரையான் அம்மானை

1. நூலகக் குறிப்புகள்

அ. 54
ஆ. ர/3

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..... .... . ....

ஆ. வீரையன் அம்மானை

இ. நாட்டுப் பாடல்

ஈ. செய்யுள். சுமார் 2300 அடிகள் கொண்ட அம்மானை

## 3. தோற்றக் கூறுகள்

அ. 98 ஏடு ; 196 பக்கம்.

ஆ. நீளம் 41 செ. மீ ; அகலம் 3 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ ஒரு பக்கம் இரு பத்தியாகப் பிரித்துக் கொள்ளப்பட்டுள்ளது. பத்திக்கு 6 வரி.

உ. எழுத்துகள் தெளிவாக உள்ளன. ஓரளவு பிழைகள்.

ஊ. 42,75 ஆகிய இரு ஏடுகளும்,99 ஆம் ஏட்டிற்குமேல் இருக்க வேண்டியனவும் காணப்பட வில்லை. சில ஏடுகள் பழுதடைந் துள்ளன. சுமாரான நிலை.

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

காசிமக ரான கடவுளர் தந்த பாலன் காரண மாக வந்து
கருத்தினில் இருந்து கொண்டு ஆதியில் மகாராசன் வயற்றினில்
பிறந்தோ மென்றுல கோடியும் சுத்தி மாலையும் கழுத்தில் நீண்ட
சோதியர் வந்தனஞ் சொல்லி துயரமா வனத்தில் வைத்து

(இப்பகுதியின் யாப்பும் பொருளமைதியும் விளங்க வில்லை.)

ஆ. முடிவு

ஆசார வாசல்நோக்கி ஆணிமுத்து வீரையனும்
வீரையனும் முன்னடக்க வெகுசனங்கள் சூழ்ந்துவரக்
கர்த்தன் திருமலையன் கால்நடையாய்த் தான்வரவும்
ஆனைமேற் பேரிகை அதிரத் திசைகளெட்டு............

5. ........ ........

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

16 : ஆர் 2062, ஆர், 2064.

## 63. திருக்கோவையார்

1. நூலகக் குறிப்புகள்

அ. 55
ஆ. ண/7

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. மாணிக்கவாசகர்
ஆ. திருக்கோவையார் பேராசிரியர் உரையுடன்
இ. சைவத் திருமுறை
ஈ. செய்யுளும் உரைநடையும் கலந்தது. அச்சில் ஏறத்தாழ 500 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 255 ஏடு ; 510 பக்கம்.
ஆ. நீளம் 23 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 11,12 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. மிகவும் பழுதுற்ற சுவடி. ஏடுகள் அனைத்திலும் ஏராளமான தொளைகள். முதலிலும் ஈற்றிலும் ஏடுகள் காணப்படவில்லை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

...கை பாங்கன் இடந்தலை மதி — டன்
இருவரு முள்வழி யவ - வர வுணர்தன்
முன்னுற வுணர்தல் குறையுற வுணர்தன்னிலை
நாண நடுங்க நாடன்மடல் குறைநயப்பே

ஆ. முடிவு

செம்பொன் வரையென்றான் தூய்மையும் பெருமையுங் கலங்காமையும் உடைமையால். கற்றதின் மேலுங் கற்க நினைக்கின்றானாதலான் ஆரளவி ....

(இது 308 ஆம் பாடலின் விசேடவுரை. மேலே ஏடுகள் காணப்படவில்லை.)

5. ... ... ... .........

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

பல நூலகங்களிலும் உள்ளன.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 64. திருப்பேரூர்ப் புராணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 56
ஆ. ப/1

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. கச்சியப்ப முனிவர்

ஆ. திருப்பேரூர்ப் புராணம்

இ. தலபுராணம்

ஈ. செய்யுள் 2220

## 3. தோற்றக் கூறுகள்

அ. 289 ஏடு ; 578 பக்கம்.

ஆ. நீளம் 24.5 செ.மீ. ; அகலம் 3.5 செ.மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 8,9 வரி.

உ. தெளிவான கையெழுத்து.

ஊ. மிகவும் பழுதுற்ற சுவடி. ஏடுகள் அனைத்திலும் தொளை கள் ஏராளம்.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கங்—யும் பனிவெண் டிங்களும் நிரைத்த
    கடுக்கைகையுந் தொங்கலு மரவுந்
தங்குபொற் சடையு முக்கணுந் தாதை
    தாணுவென் றுணர்த்தமென் மலர்க்கை
யங்குச பாச மணிந்துவெற் ........
    வாரணங் கன்னையென் று .....தி
வெங்கலி முழுதுந் துமித்தருள் பட்டி
    விநாயகன் சேவடி பணிவாம்.

ஆ. முடிவு

மாமறை முனிவர் வாழ்க மரகத வல்லீ —டும்
பாமலி .... போற்றும் பட்டிநா யகனார் வாழ்க !
காமரு வெள்ளி மன்றிற் கண்ணுத னடனம் வாழ்க !
கோமனு நீதி வாழ்க்கக் குவலய முழுதும் வாழ்க (24)

விசேடபூசைப்படலம் முற்றியது. ஆதிபுரத் தலபுராண முற்றிற்று. ஆகப்படலம் 37. திருவிருத்தம் 2220. சிவமயம்.

5. ......................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

20 : 206 ; 31 : 2, 38

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 65. திருவுந்தியார்

1. நூலகக் குறிப்புகள்

அ. 57-1
ஆ. ரு/1

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. உய்யவந்ததேவ நாயனார் - திருவியலூர்
ஆ. திருவுந்தியார்
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. செய்யுள் 45

3. தோற்றக் கூறுகள்

அ. 2 ஏடு ; 4 பக்கம்.
ஆ. நீளம் 21 செ.மீ.; அகலம் 4.5 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 17 வரி.
உ. மிகச்சிறிய கையெழுத்து. தெளிவானது.
ஊ. மிகப்பழுதுற்ற நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

...... ... மறிவரி த- -ருள்
சகளமாய் வந்ததென் றுந்தீபற
...... .. தென் றுந்தீபற (1)

ஆ.

...... முழுது மலக்கயங் கண்டிடு
முய்யவந் தானுரை யுந்தீபற
உண்மை யுணர்ந்தாரென் றுந்தீபற. (45)

உய்யவந்ததேவ நாயனார்பாடிய திருவுந்தியார் முற்றும்.
திருச்சிற்றம்பலம்.

5. ......... ........ ....

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1 : 103 ; 16 : ஆர். 1417, ஆர். 1676 ; 25 : 1102-1104 ; 27 : 54 என், 553 ஜே ; 31 : 227 டி, 240 ஏ, 260 ஏ, 266 பி, 275, 294 ; 32 : 84 ஏ ; 60 : 35 எச்.

## 66. திருக்களிற்றுப்படியார்

1. நூலகக் குறிப்புகள்

அ. 57 - 2
ஆ. ரு / 1

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. உய்யவந்ததேவ நாயனார் — திருக்கடவூர்.
ஆ. திருக்களிற்றுப்படியார்
இ, மெய்கண்ட சாத்திரம்
ஈ. செய்யுள் 100

3. தோற்றக் கூறுகள்

அ. 6 ஏடு; 12 பக்கம். (ஏட்டெண் 3 முதல் 8 முடிய.)
ஆ. நீளம் 21 செ.மீ ; அகலம் 4.5. செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பெற்றுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 17 வரி.
உ. சிறிய கையெழுத்து. தெளிவானது.
ஊ. மிகப்பழுதுற்ற நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அம்மையப்ப ரேவுலகுக் கம் ... .... றிக
...மையப்ப ரப்பரிசே வந்தளிப்ப — ரம்மையப்பர்
எல்லா வுலகுக் த மப்புறத்தா ரிப்புறத்தும்
அல்லா - போ னிற்ப ரவர். (1)

ஆ. முடிவு

சிந்தையினு மென்றன் சிரத்தினிலுஞ் சேரும்வண்ணம்
வந்தவ — மண்ணிடைநாம் வாராமல் — தந்தவனை
மாதினுட னெத்திறமும் வாழ்ந்திருக்க வென்பதால்
ஏதுசொல்லி வாழ்த்துவே னின்று. (100)

திருக்களிற்றுப்படியார் முற்றும்.

5. ..................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1 : 103 ; 17 : எண் இல்லை ; 25 : 1189-1191 ; 27 : 54 டி, 553 ஜி ; 31 : 227 இ, 240 பி, 249 ஏ, 275, 282, 295 ; 60 : 25 எம்.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

# 67. சிவஞான போதம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 57 - 3

ஆ. ஞ / 1

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. மெய்கண்ட தேவ நாயனார்

ஆ. சிவஞான போதம்

இ. மெய்கண்ட சாத்திரம்

ஈ. செய்யுள் மொத்தம் 12 சூத்திரம் 81 வெண்பா.

## 3 தோற்றக் கூறுகள்

அ. 9 ஏடு; 18 பக்கம். (எட்டெண் 9 முதல் 17 முடிய.)

ஆ. நீளம் 21 செ. மீ.; அகலம் 4.5 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 17 வரி.

உ. மிகச்சிறிய கையெழுத்து. தெளிவானது.

ஊ. மிகப் பழுதுற்ற நிலை.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கல்லா னிழன்மலை வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர் நல்லார் புனைவரே.

ஆ. முடிவு

எந்தை சனற்குமர னேத்தித் தொழவியல்பா
நந்தி யுரைத்தருளும் ஞானநூல் - சிந்தைசெய்து
தானுரைத்தான் மெய்கண்டான் தாரணியோர் தாமுணர
ஏதுதிருட் டாந்தத்தா லின்று.

பன்னிரண்டாஞ் சூத்திரம் முற்றும். ஆகவெண்பா 82.
சிவஞான போதம் முற்றும்.

5. ......................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1 : 17, 103, 108, 133; 3 : 112, 116, 285; 4 : 9806, 9807; 16 : 1271, ஆர். 1248, ஆர். 1321, ஆர் 1339, ஆர். 1362 ; 17 : 184 ; 18 : 9037, 2139, 11479 ; 27 : 54 ஏ, 298, 545, 553ஏ, 945, பா. 5, 429 ; 28 : 10814 ஏ, 10825 ; 31 : 240, 257, 259பி, 260 ; 48 : 11732 ; 55 : பி2, பி3 ; 60 ; 22ஏ, 25 ஏ, 26 ஏ.

## 68. சிவஞான சித்தியார்

1 நூலகக் குறிப்புகள்

அ. 57-4.
ஆ. ஞ/1.

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அருணந்தியார்
ஆ. சிவஞான சித்தியார்
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. செய்யுள் 629

3. தோற்றக் கூறுகள்

அ. 50 ஏடு; 100 பக்கம். (18 ஆம் ஏடு முதல் 68 ஆம் ஏடு முடிய.)
ஆ. நீளம் 21 செ. மீ.; அகலம் 4. 5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 17 வரி.

உ. சிறிய கையெழுத்து. தெளிவானது.
ஊ. மிகப் பழுதுற்ற நிலை.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஒருகோட்ட னி நசெவியன் மும்மதத்த
    னால்வாயைங் கரத்த னாறு
தருகோட்டம் பிறையிதழித் தாழ்சடையான்
    றருமொருவா ரணத்தின் றாள்க
ளுருகோட்டன் பொடும்வணங்கி யோவாதே
    யிரவுபக லுணர்வோர் சிந்தைத்
திருகோட்டு மயன்திருமால் செல்வமுமொன்
    றோவென்னச் செய்யுந் தேவே.

ஆ. முடிவு

பரம்பிரமம்... .. ... ...
    பரஞானம் ... ... றும் பராபரன்றா னென்றும்
அரன்றநுஞ்சீர் நிலையெ .. மிவனே யென்றும்
    ..........குருவை ....படவே யவனிவன்றா னாயே
யிரங்கியவா ரணமா... ....டஞ் -- னையை
    ........ .......சித்து நினைந்தும் பார்த்தும்
பரிந்திவைதா... ... ... ... யாக்கும்
    பரிசித்துஞ் சிந்தித்தும் பார்த்துந் தானே. (7)

பன்னிரண்டாஞ் சூத்திர முற்றும். ஆகச் சுபக்கச் சூத்திரம் 12க்குத் திருவிருத்தம் ...

ஆகச் சிவஞான சித்தியார் திருவிருத்தம் .. முற்றும்.

## 5. .... .. ..

## 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1: 103, 109, 133, 210, 894; 2: 62343; 3: 211, 117, 128; 4: 9803; 8: 243; 16: 1258, 1259, 2141, ஆர். 594,

ஆர். 597, ஆர். 1367, ஆர். 1364; 17: 113, 165, 183; 18: 11470; 2: 1169--1180; 27: 54பி, 54சி, 553பி, பா, 5, 429; 28 : 10748, 10865; 31: 224-226; 32: 15, 33, 138; 54: 2979 ஏ; 55: பி6; 60: 22, 23ஏ.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 69. இருபா இருபது

1. நூலகக் குறிப்புகள்

அ. 57-5.
ஆ. ஞ/1

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அருணந்தியார்
ஆ. இருபா இருபது
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. செய்யுள் 20.

3. தோற்றக் கூறுகள்

அ. 3 ஏடு; 6 பக்கம். (ஏட்டெண் 69 முதல் 72 வரை.)
ஆ. நீளம் 21 செ. மீ.; அகலம் 4.5 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 17 வரி.
உ. சிறிய கையெழுத்து. தெளிவானது.
ஊ. மிகப் பழுதுற்ற நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கண்ணுதலுங் கண்டக் கறையும் மறைத்தருளி
மண்ணிடையின் மாக்கண் மலமகற்றும் - வெண்ணைநல்லூர்
மெய்கண்டா னெ . . கான் மேவுவரால் வேறின...
கைகண்டா ருள்ளத்துக் கண். (1)

ஆ. முடிவு

மன்ன னெங்கோன் வார்புனற் பெண்ணை
வெண்ணை காவலன் மெய்கண்ட தேவன்
அண்ண லருளா லையத்த னண்ணிய
மலமுத லாயின மாய்க்கும்
உலகவு யிர்க்கெல் லாமொரு கண்ணே. (20)

இருபாவிருபது முற்றும். சிவமயம்.

## 70. உண்மை விளக்கம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 57-6
ஆ. ரு/1

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. மனவாசகங்கடந்தார்
ஆ. உண்மை விளக்கம்
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. செய்யுள் 55

3. தோற்றக் கூறுகள்

அ. 4 ஏடு ; 8 பக்கம். (ஏட்டெண் 72 முதல் 75 வரை.)

ஆ. நீளம் 21 செ.மீ.; அகலம் 4.5 செ.மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 17 வரி.

உ. சிறிய கையெழுத்து. தெளிவானது.

ஊ. மிகப் பழுதுற்ற நிலை.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

வண்மைதரு மாகமநூல் வைத்த பொருள்வழுவா
வுண்மை விளக்க முரைசெய்யத்-- திண்....
ரந்திநிறத் தந்திமுகத் தொந்திவயிற் றைங்கரனைப்
பந்தமறப் புந்தியில்வைப் பாம். (1)

ஆ. முடிவு

மன்னதிகை வாழு மனவா சகங்கடந்தான்
மின்னனைய வாழ்வினுறா மெய்கண்டான் - பன்னுமறை
வண்மைதரு மாகமநூல் வைத்த பொருள்வழுவா
உண்மைவிளக் கஞ்செய்தா னு ...... (55)

உண்மை விளக்கம் முற்றும். சுவாமி அம்பலவான சுவாமி திருவடிகளே சரணம்.

## 5. ......................

## 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1: 892; 16: 1226, ஆர். 1375; 18: 478, 7305;
27: 54 எம், 584பி; 28: 15415; 31: 240சி, 266, 286எஃப்;
32: 6,60ஜி, 194; 55: 8ஜே; 60: 25பி, 35டி.

## 7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 71. சிவப்பிரகாசம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 57-7

ஆ. ரு/1

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. உமாபதி சிவாசாரியர்

ஆ. சிவப்பிரகாசம்

இ. மெய்கண்ட சாத்திரம்

ஈ. செய்யுள் 102

3. தோற்றக் கூறுகள்

அ. 9ஏடு; 18 பக்கம். (ஏட்டெண் 75முதல் 84வரை.)

ஆ. நீளம் 21 செ. மீ; அகலம் 4.5 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 17வரி.

உ. சிறிய கையெழுத்து. தெளிவாக உள்ளது.

ஊ. மிகப் பழுதுற்ற நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஒளியான திருமேனி யுமிழ்தான மிகமேவு
களியார வரும்யானை கழனாளு மறவாம
லளியாளு மலர்தூவு மடியார்க ளுளமான
வெளியாகும் வலிதாய வினைகூட நினையாவே.

ஆ. முடிவு

திருவருள் கொடுத்து மற்றிச் சிவப்பிர காச நன்னூல்
விரிவது தெளியு மாற்றால் விளம்பிய வேது நோக்கிப்
பெருகிய வுவமை நான்கின் பெற்றியி னிறுவிப் பின்முன்
றருமலை யொழியக் கொள்வோன் றன்வையிற் சாற்ற லாமே
(100)

உண்மை முற்றும். சிவப்பிரகாச முற்றும்.
சுவாமி சாலிவாடீசர் காந்திமதியம்மன்றுணை.

5. ..........

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1: 103, 133, 210; 16: 1299, 1300, ஆர். 1365, ஆர். 2662, ஆர். 5501, ஆர். 5512; 17: 126, 144; 18: 6234ஏ, 6335இ, 11471, 11478; 25: 1183 - 1187; 26: 232; 27: 54 இ, 553சி, 584 - 586, 2981, பா. 5.429; 28: 15416; 31: 249, 294சி, 296, 300; 60: 25டி.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 72. திருவருட்பயன்

1. நூலகக் குறிப்புகள்

அ. 57-8
ஆ. ரு / 1

2. உள்ளீடு : நூல்விவரம்

அ. உமாபதி சிவாசாரியர்
ஆ. திருவருட்பயன்
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. செய்யுள் 101

3. தோற்றக் கூறுகள்

அ. 3 ஏடு; 6 பக்கம் (எட்டெண் 84 முதல் 86 வரை.)
ஆ. நீளம் 21 செ. மீ.; அகலம் 4. 5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 17 வரி.
உ. சிறிய கையெழுத்து. தெளிவானது.
ஊ. மிகப் பழுதுற்ற நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

நற்குஞ் சரக்கன்று நண்ணிற் கலைஞானங்
கற்குஞ் சரக்கன்று காண்.

ஆ. முடிவு,

கள்ளத் தலைவர் துயர்கருதித் தங்கருணை
வெள்ளத் தலைவர் மிக (10)

ஆகக்குறள் 100. திருவருட்பயன் முற்றும்.

5. ........

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1 : 103; 16 : ஆர். 1255, 1379, ஆர். 1370, ஆர். 2837, ஆர். 4964; 25 : 1192 - 1194; 27 : 54 எஃப், 553 ஆர்; 28 : 10824இ, 10868பி; 31 : 228பி. 242ஏ, 266ஏ, 286சி, 294டி; 32 : 83; 60: 25கியூ, 29எச்.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 73. வினா வெண்பா

1. நூலகக் குறிப்புகள்

அ. 57-9
ஆ. ரு/1

2. உள்ளீடு : நூல்விவரம்

அ. உமாபதி சிவாசாரியர்
ஆ. வினா வெண்பா
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. செய்யுள் 13

3. தோற்றக் கூறுகள்

அ. 1 ஏடு; 2 பக்கம். (ஏட்டெண் 86.)
ஆ. நீளம் 21 செ. மீ; அகலம் 4. 5 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 17 வரி.
உ. சிறிய கையெழுத்து. தெளிவானது.
ஊ. மிகப்பழுதுற்ற நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

நீடு மொளியு நிறையிருளு மோரிடத்துக்
கூட லரிது கொடுவினையேன் - பாடிதன்முன்
னொன்றவார் சோலை யுயர்மருதச் சம்பந்தா
நின்றவா றெவ்வாறு நீ.

ஆ. முடிவு

அருளா லுணர்வார்க் ககலாத செம்மைப்
பொருளாகி நிற்கும் பொருந்தித் - தெருளா
வினாவெண்பா வுண்மை வினாவாரை யூமன்
கனாவின்பா லெய்துவிக்குங் காண். (13)

வினாவெண்பா முற்றும். திருச்சிற்றம்பலம்.

5. ..........

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1 : 80, 103; 3 : 135 ; 16 : ஆர். 1371 : 17 : 13, 156; 18: 10480பி; 25: 1178, 1211; 27: 54எச்; 28: 10824டி.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 74. போற்றிப் பஃறொடை

1. நூலகக் குறிப்புகள்

அ. 57 - 10
ஆ. ஞ/1

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. உமாபதி சிவாசாரியர்
ஆ. போற்றிப் பஃறொடை
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. செய்யுள் ; 95 கண்ணிகள் கொண்ட கலிவெண்பா.

3. தோற்றக் கூறுகள்

அ. 3 ஏடு; 6 பக்கம் ( ஏட்டெண் 87 முதல் 89 வரை ).
ஆ. நீளம் 21 செ. மீ; அகலம் 4.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 17 வரி.
உ. சிறிய கையெழுத்து, தெளிவானது.
ஊ. மிகப்பழுதுற்ற நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பூமன்னு நான்முகத்தோன் புத்தேளி ராங்கவர்கோன்
மாமன்னு சோதி மணிமார்ப — னாமன்னும்
... தாந்தம் விளக்கஞ்செய் விந்துவுட
னாதநா தாந்த நடுவேதம் — போதத்தால் ...

ஆ. முடிவு

ஆனந்த மாக்கடலி லாரா வமுதளித்துத்
தான்வந்து செய்யுந் தகுதியினா — லூனுயிர்தான்
முன்கண்ட காலத்து நீங்காத முன்னோனை
யென்கொண்டு போற்றிசைப்பே னியான்.

போற்றிப்பஃறொடை முற்றும்.

5. ....................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1 : 80, 103, 116 ; 16 : ஆர். 1369 ; 18 : 2143 ஏ, 6235எச், 8421 ; 25 : 1208, 1210 ; 27 : 298 கே, 553 எச் ; 28 ; 10824 எஃப் ; 31 : 262, 267.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 75. கொடிக்கவி

1. நூலகக் குறிப்புகள்

அ. 57 - 11
ஆ. ஞ/1

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. உமாபதி சிவாசாரியர்
ஆ. கொடிக்கவி

இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. செய்யுள்

## 3. தோற்றக் கூறுகள்

அ. 1 ஏடு; 2 பக்கம் (ஏட்டெண் 89.)
ஆ நீளம் 21 செ.மீ; அகலம் 4.5 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 17 வரி.
உ. சிறிய கையெழுத்து. தெளிவானது.
ஊ. மிகப்பழுதுற்ற நிலை.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

வாக்காலு மிக்க மனத்தாலு மெக்காலும்
தாக்கா வுணர்வாய தன்மையனை — நோக்கிப்
பிரித்தறிவு தம்முட் பிரியாமை தானே
குறிக்குமருள் நல்கக் கொடி. (1)

ஆ. முடிவு

ஒளிக்கு மிருளுக்கு மொன்றே யிடமொன்று மேவிடிலொன்
றொளிக்கு மெனினு மிருளட ராதுள் ளுயிர்க்குயிராய்த்
தெளிவுக்கு மறிவு செறிந்துள தேனுந் திரிமலத்தே
குளிக்கு முயிரருள் கூடும் படிக்கொடி கட்டினனே. (4)

கொடிக்கவி முற்றும். சிவமயம்.

( இப்பாடலின் மூன்றாமடியில் ஓரெழுத்து மிகை. யாப்பு சரி யில்லை. )

5. ........

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1 : 80, 103 ; 17 : 161 பி ; 18 : 11480 சி ; 25 : 1147–1149 ; 27 : 553 இ ; 28 : 10824 இ, 10882 சி ; 31 : 228 ஏ, 275 ஏ ; 60 : 35சி.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 76. நெஞ்சு விடுதூது

1. நூலகக் குறிப்புகள்

அ. 57 - 12
ஆ. ரு / 1

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. உமாபதி சிவாசாரியர்
ஆ. நெஞ்சு விடுதூது
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. செய்யுள்; 128 கண்ணிகளைப்பெற்ற கலிவெண்பா

3. தோற்றக் கூறுகள்

அ. 3 ஏடு; 6 பக்கம் (எட்டெண் 90 முதல் 92 வரை)
ஆ. நீளம் 21 செ. மீ., அகலம் 4.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 17 வரி.
உ. கிறிய கையெழுத்து. தெளிவானது.
ஊ. மிகப் பழுதுற்ற சுவடி.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பூமேவு முந்திப் புயல்வண்ணன் பொற்பமைந்த
நாமேவு மாதுபுணர் நான்முகத்தோன்—றான்மேவிப்
பன்றியு மன்ன... பாரிடந்தும் வான்பறந்தும்
என்று மறியா வியல்பினான்—அன்றியும்

ஆ. முடிவு

வெம்பும் பிறவியலை வீழாமல் வீடளித்த
சம்பந்த மாமுனிவன் றார்பொங்கி—யம்புந்தும்
வஞ்சமே வும்விழியார் வல்வினையெல் லாமகல
நெஞ்சமே வாராய் நினைந்து.

நெஞ்சுவிடு தூது முற்றும். திருச்சிற்றம்பலம்.

5. ....................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1 : 103, 116 ; 16 : 314, 1372, 5507, ஆர். 4969, ஆர். 5839; 18 : 3871, 62351 ; 25 : 1205-1208, 1408சி ; 27 : 553கியூ; 28 : 10882டி ; 31 : 262ஏ, 292, 293 ; 32 : 128டி ; 60 : 35பி; 62 : 33இ.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 77. சங்கற்ப நிராகரணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 57 - 13
ஆ. ரு / 1

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. உமாபதி சிவாசாரியர்
ஆ. சங்கற்ப நிராகரணம்
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. செய்யுள் 14

3. தோற்றக் கூறுகள்

அ. 10 ஏடு; 20 பக்கம் (ஏட்டெண் 93 முதல் 102 வரை)
ஆ. நீளம் 21 செ. மீ.; அகலம் 4.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 17 வரி.
உ. சிறிய கையெழுத்து. தெளிவானது.
ஊ. மிகப் பழுதுற்ற நிலை
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

திருந்திய வருந்தவம் பொருந்துபன் முனிவ
ரமையாக் காத லமையாது பழிச்சு
நிகரில் செக்கர்ப் புகர்முகத் தெழு...
தழைசெவி மழைமதப் புழைநெடுந் தடக்கை

ஆ. முடிவு

உண்ணிலை யுடையோ னொருவ னுரைத்த
தவப்பிர காசத் தன்மையில் விரித்த
சிவப்பிர காசச் செழுந்தமி முண்மையை
யருளுட னாய்ந்து கொள்ளத்
திருவருள் வினவ நிருந்திடு மன்றே. (14)

சங்கற்ப நிராகரணம் முற்றும். திருச்சிற்றம்பலம். சிவமயம்.

5. ...................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1 : 80, 93, 103, 116 ; 16 : 1248, ஆர். 1368, ஆர். 1391 ; 18 : 5695சி, 6354சி, 9235ஜி ; 25 : 1150 - 1153 ; 27 : 54ஜி, 54 டபிள்யூ, 538ஏ ; 31 : 262பி ; 60 : 2, 25இ.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 78. துகளறு போதம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 57 - 14
ஆ. ரு / 1

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. சிற்றம்பல நாடிகள்
ஆ. துகளறு போதம்
இ. சைவ சாத்திரம்
ஈ. செய்யுள் 101

3. தோற்றக் கூறுகள்

அ. 5 ஏடு; 10 பக்கம் (ஏட்டெண் 102 முதல் 107 வரை)
ஆ. நீளம் 21 செ. மீ.; அகலம் 4.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 17 வரி.
உ. சிறிய கையெழுத்து. தெளிவானது.
ஊ. மிகப் பழுதுற்ற நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

எல்லாம்பொய் யென்றே யெனைக்காட்டி யெம்பிரான்
சொல்லாத பேரறிவு தான்சொல்லி நல்லதொரு
வற்புதமா மானந்த மாங்குறுத்தல் செப்புதற்குக்
கற்பகத்தின் றாளிணையென் கண். (இது காப்பு)

ஆ. முடிவு

அந்த மலமறுத்திங் கான்மாவைக் காட்டியதற்
கந்த வறிவை யறிவித்—கந்தறிவை
மாறாமன் மாற்றி மருவுசிவப் பேறென்றுங்
கூறாமற் கூறக் கொடி. (100)

துகளறு போதம் முற்றும். திருச்சிற்றம்பலம். சுவாமி சாலிவாடீசர் காந்திமதியம்மன் துணை.

5. ...............

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1 : 93பி, 103 ; 16 : ஆர். 5573 ; 18 : 11469ஏ ; 25 : 1327-1329 ; 27 : 54பி, 553டி, 716ஏ ; 31 : 226ஏ, 228சி, 286ஏ.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 79. உண்மை நெறி விளக்கம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 57 - 15
ஆ. ரு / 1

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. தத்துவநாதர் - சீகாழி

ஆ. உண்மை நெறி விளக்கம்

இ. மெய்கண்ட சாத்திரம்

ஈ. செய்யுள் 6

## 3. தோற்றக் கூறுகள்

அ. 1 ஏடு ; 2 பக்கம். ( ஏட்டெண் 107 )

ஆ. நீளம் 21 செ. மீ.; அகலம் 4.5 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ முதல் பக்கத்தில் 16 வரியும் அடுத்ததில் 2 வரியுமாக இந்நூல் முடிகிறது.

உ. சிறிய கையெழுத்து. தெளிவானது.

ஊ. மிகச் சிதிலமான நிலை.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

மண் முதல் சிவம தீறாய் வடிவுகாண் பதுவே ரூபம்
மண் முதல் சிவம தீறாய் மலஞ்செட மென்றல் காட்சி
மண் முதல் சிவம தீறாய் வகைதனிற் றானி லாது
கண்ணுத லருளா னீங்கல் சுத்தியாய்க் கருது மன்றே. (1)

ஆ. முடிவு

பாதகங்கள் செய்திடினு ..........
பயின்றிடினு நெறியில்லா.........
சாதிநெறி.... பிடினு...........
........ வோர் செயலற்றுத்தான...........
னாதனிவ னுடலுயிரா...........
........... யுந்தானாகச்செய்து
பேத.... நின ... ...... னாக்கி விடுவன்
பெருகுசிவ ... ....... பேசுநெறி யிதுவே. (6)

உண்மை நெறி விளக்க முற்றும். திருச்சிற்றம்பலம்.

5. ... ....... .........

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1 : 80, 103, 108 ; 16 : 1224, 1225, ஆர். 1325, ஆர். 1337, ஆர். 1374 ; 18 : 9037 b, 3980 சி ; 25 : 1139-1146 ; 27 :54 கியூ, 553 பி, 591 இ, பா, 5.429 ; 28 : 10882 இ ; 31 : 268 ஏ, 298 பி ; 60 : 23 இ, 25 ஜே.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 80. திருக்குற்றாலத் தலபுராணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 58- 1
ஆ. ப/2

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. திரிகூட ராசப்பக் கவிராயர்
ஆ. திருக்குற்றாலத் தலபுராணம்
இ. தலபுராணம்
ஈ. செய்யுள், 2071

3. தோற்றக் கூறுகள்

அ. 213 ஏடு; 426 பக்கம்.
ஆ. நீளம் 17 செ. மீ.; அகலம் 2. 5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 11, 12, 13 வரி.
உ. சிறிய கையெழுத்து. தெளிவானது.
ஊ. மிகச்சிதைவுற்ற சுவடி. பல ஏடுகளில் மிகவுந் தொளைகள்.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

### அ. தொடக்கம்

புயல்காட்டும் பனிவரையின் பிடிதழுவுஞ்
சிவவேழம் பொருப்பில் வானி
னியல்காட்டு மிருபிடிசேர் முன்னாலுந்
துதிக்கைமுன்னே ஞானச்
செயல்காட்டு மொருகோட்டி னிருகோட்டு
வெண்பிறைவாழ் செக்கர் வானை
மயல்காட்டுந் திருமேனி மழைமதச்செண்
பகக்களிற்றை மனத்துள் வைப்பாம்.

### ஆ. முடிவு

ஆதிபிரான் வெண்ணீறு மஞ்செழுத்து மோங்குகநாற்
சாதிநெறி வேதநெறி சைவநெறி யுந்தழைப்ப
மாதரார் கற்புநெறி வளர்கமா நிலத்தின்மே
னீதிமறு வேந்தர்நெறி நீடூழி வாழ்கவே.

நூற்பயன் சருக்கமுற்றும். ஆகச்சருக்கம் 14க்குத்திரு விருத்தம் 1014. ஆகக்காண்டம் 2க்குச்சருக்கம் 32; திருவிருத்தம் 2071. திருக்குற்றாலப் புராணமுற்றியது.

### இ. பிற்குறிப்பு

1019 ஆம் வருடம் சோபகிருது வருடம் மார்கழிமாதம் 10 ஆம் தேதி சனிவாரமும் உத்திராட நட்சத்திரமுங்கூடிய சுபதினத்தில் இந்தப்புராணம் எழுதி முற்றுப்பெற்றது. ஸ்ரீவைகுண்டம் சொக்கலிங்கம் கையெழுத்து.

## 5. பிற செய்திகள்

நூலை அடுத்துத் திருக்குற்றாலப் புராணத்தொகை என்று தலைப் பிட்டுத் தனி ஏட்டில் காண்ட,சருக்கங்களின் பாடற்றொகை அட்ட வணையிடப்பட்டுக் காட்டப்பட்டுள்ளது.

6. மாற்றுச்சுவடிகள் காணுமிடம்

16 : ஆர். 1351, ஆர். 1421 ; 18 : 3896, 4097, 11442 ; 25 : 563, 564 ; 26 : 35, 42, 54 ; 31 : 1ஏ, 13, 24 ; 57 : எம். 1ஏ ; 62 : 30.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 81. காந்திமதியம்மன் அகவல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 58-2.
ஆ. ப/2

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..............
ஆ. காந்திமதியம்மன் அகவல்.
இ. சிற்றிலக்கியம்.
ஈ. செய்யுள். அச்சில் இரண்டு பக்கங்கள் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 2 ஏடு; 4 பக்கம்.
ஆ. நீளம் 17 செ. மீ.; அகலம் 3.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 9 வரி.
உ. சிறிய கையெழுத்து தெளிவானது.
ஊ. பழுதுபட்ட நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சீரார் கமலத் திருமுகத் தழகுங்
காரார் குழலுங் கண்ணொரு மூன்றுங்
........ ..........ங் கீற்றன நுதலும்
வளரொளிக் குழையும் மலரிதழ் வனப்பும்

ஆ. முடிவு

வாய்த்....னெஞ்சும் வழங்கி யடியனைக்
காத்தருள் செய்யக் கடன்நின் கழற்கே.

அகவல் முற்றும்.

## 82. திருவாவடுதுறைக் கோவை

1. நூலகக் குறிப்புகள்

அ. 59
ஆ. ய/1

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. சுப்பிரமணிய முனிவர்-தொட்டிக்கலை
ஆ. திருவாவடுதுறைக் கோவை
இ. சிற்றிலக்கியம்
ஈ. செய்யுள் 380

3. தோற்றக் கூறுகள்

அ. 127 ஏடுகள் ; 254 பக்கம்.
ஆ. நீளம் 23.5 செ. மீ. ; அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது
உ. தெளிவான கையெழுத்து.

ஊ. 5, 33, 44, 66, 73, 101 ஆகிய 6 ஏடுகளும் 133க்கு மேல் இருக்க வேண்டியவையும் காணப்படவில்லை. மிகப் பழுதுற்ற சுவடி

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

நறக்கோவை யன்னசெவ் வ...ப்பிலா முலை நன்னுதலிற்
பிறைக்கோவை யக்கணி வான்றரு மைங்கர ..........
வறைக்கோவை யாதரித் தன்போ டுரைக்குநல் லாவடுதண்
துறைக்கோவை பாடத் துறைதோறு நின்னடி தோன்றிடுமே.

ஆ. முடிவு

உவருந்தி நீருண் டுலாவிய மேக முவந்துதன்பாற்
கவரும் படிவரிற் பாற்கட லானது; காய்ந்திடுமோ
துவருந்து வாய்மங்கை சொர்ணத் தியாகர் துறைசையன்பர்
அவரினன் றென்பது கற்பினிற் பாருக் கழகல்லவே (399)

## 5. ..........

## 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

16 : 230 ; 31 : 170.

## 7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது

# 83. பெரியபுராண சாரம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 60
ஆ. ற/4

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ... ...
ஆ. பெரியபுராண சாரம்
இ. பல்வகை நூல்கள்
ஈ. செய்யுள் 78

## 3. தோற்றக் கூறுகள்

அ. 16 ஏடு ; 32 பக்கம்.
ஆ. நீளம் 20.5 செ. மீ. ; அகலம் 3.5 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 10, 11, 12 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. அனைத்து ஏடுகளிலும் தொளைகள். பழுதுற்ற நிலை
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

மல்குபுகழ் வன்றொண்ட ரருளா லீந்த
வளமருவு திருத்தொண்டத் தொகையின் வாய்மை
நல்கும்வகை புல்கும்வகை நம்பி யாண்டார்
நம்பிதிரு வந்தாதி நவின்ற வாறே
பல்குநெறித் தொண்டர்சீர் பரவ வல்ல
பான்மையா ரெமையாளும் பரிவால் வைத்த
செல்வமிகு திருத்தொண்டர் புராண மேவுந்
திருந யே னடியேனுஞ் செப்ப லுற்றேன்.

ஆ. முடிவு

மாமறையோர் பன்னிருவர் சிவமறையோர் நால்வர்
... த்துவரி லேயொருவ ரிசைமன்னவ ரில்லறுவர்
கோமுறைமை சேர்குறுநில மன்னவரைவர் வணிகர்
குலத்தைவர் வெள்ளாளர் பதின்மூவர் குயவர்

தாமுறவே டுவர்பாணர் கடைஞர் செக்கார்
ஈழச்சான் றார்வண்ணார் பரதரோ ரொருவர்
ஆமிடைய ரிருமூவர் மரபறியா ராக
வறுபத்து மூன்றாகிய மாதவரே. (78)
திருச்சிற்றம்பலம்
(இப்பாடலின் 2, 4ஆம் அடிகளின் யாப்பமைதி விளங்கவில்லை)

## 84. திருவாசகம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 61 - 1
ஆ. ண/8

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. மாணிக்கவாசகர்
ஆ. திருவாசகம்
இ. சைவத் திருமுறைகள்
ஈ. செய்யுள் 656

3. தோற்றக் கூறுகள்

அ. 176 ஏடு ; 352 பக்கம்.
ஆ. நீளம் 17 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 8 வரி.
உ. அழகிய தெளிவான கையெழுத்து.
ஊ. பழுதுற்ற நிலை. பெரும்பாலும் அனைத்தேடுகளிலும் தொளைகள்.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்
நமச்சிவாய வாஅழ்க நாதன்றாள் வாழ்க
விமைப்பொழுது மென்னெஞ்சி னீங்காதான் றாள்வாழ்க
கோகழி யாண்ட குருமணிதன் றாள்வாழ்க
ஆகம மாகிநின் றண்ணிப்பான் றாள்வாழ்க

ஆ. முடிவு

செம்மைநல மறியாத சிதடரொடுந் திரிவேனை
மும்மைமல மறுவித்து முதலாய முதல்வன்றா
னம்மையுமோர் பொருளாக்கி நாய்சிவிகை யேற்றுவித்த
வம்மையெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே. (9)

திருச்சிற்றம்பலம். திருவாசகம் முற்றுப்பெற்றது. சிவமயம்.

இ. பிற்குறிப்பு

1. விபவ வருஷம் மாசிமாதம் 23 ஆம் தேதி எழுதி முடிந்தது. குமாரசாமித்தம்பிரான் புத்தகம். சோமசுந்தரக் கடவுள் துணை சிவமயம்.

2. இவ்வருஷம் பங்குனிமாதம் 9 ஆம் தேதி முழுமையும் பிழையறப் பார்த்து முடிந்தது. சிவமயம்.

5. ……………… …. …

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

தொடர் எண் : 2 காண்க.

7. வெளியீட்டுச் செய்திகள்

பல பதிப்புகள் உள்ளன.

## 85. திருவிசைப்பா

1. நூலகக் குறிப்புகள்

அ. 61-2
ஆ. ண/8

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. சேந்தனார்

ஆ. திருவிசைப்பா
இ. சைவத் திருமுறைகள்
ஈ. செய்யுள் 11

## 3. தோற்றக் கூறுகள்

அ. 3 ஏடு.; 6 பக்கம் (எட்டெண் 177 முதல் 179 வரை.
ஆ. நீளம் 17 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது
ஈ. பக்கத்திற்கு 8 வரி.
உ. அழகிய தெளிவான கையெழுத்து.
ஊ. பழுதுற்ற நிலை. மூன்று ஏடுகளிலும் தொளைகள்.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஒளிவளர் விளக்கே யுலப்பிலா வொன்றே
யுணர்வுசூழ் கடந்ததோ ருணர்வே
தெளிவளர் பளிங்கின் றிரள்மணிக் குன்றே
சித்தத்துட் டித்திக்கும் தேனே
யளிவள ருள்ளத் தானந்தக் கனியே
யம்பல மாடரங் காக
வெளிவளர் தெய்வக் கூத்துகந் தாயைத்
தொண்டனேன் விளம்புமா விளம்பே. (1)

ஆ. முடிவு

மறைகளு மமரர் கூட்டமு மாட்டா
தயன்திரு மாலொடும் ......
முறைமுறை முறையிட் டோர்வரி யாயை
மூர்க்கனேன் மொழிந்தபுன் மொழிகள்
அறைகழ லரன்சீ ரறிவிலா வெறுமைச்
சிறுமையிற் பொறுக்குமம் பலத்து
ணிறைதரு கருணா நிலையமே யுன்னைத்
தொண்டனேன் நினையுமா நினையே. (11)

திருச்சிற்றம்பலம். சிவமயம்.

5. ....

6 மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

பல நூலகங்களிலும் உள்ளன.

7. வெளியீட்டுச் செய்திகள்

பல பதிப்புகள் வெளிவந்துள்ளன.

## 86. திருப்பல்லாண்டு

1. நூலகக் குறிப்புகள்

அ. 61-3
ஆ. ண/8

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. சேந்தனார்
ஆ. திருப்பல்லாண்டு
இ. சைவத் திருமுறைகள்
ஈ. செய்யுள் 13

3. தோற்றக் கூறுகள்

அ. 3 ஏடு; 6 பக்கம். (ஏட்டெண் 180 முதல் 182 முடிய)
ஆ. நீளம் 17 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 8 வரி.
உ. அழகிய தெளிவான கையெழுத்து.
ஊ. பழுதுற்ற நிலை. மூன்று ஏடுகளிலும் தொளைகள்.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

மன்னுக தில்லை வளர்கநம் பத்தர்கள்
வஞ்சகர் போயகலப்
பொன்னின்செய் மண்டபத் துள்ளே புகுந்து
புவனியெல் லாம்விளங்க
வன்னநடை மடவா ளுமைகோன் அடியோமுக்
கருள் புரிந்து
பின்னைப் பிறவியறுக்க நெறிதந்த பித்தற்குப்
பல்லாண்டு கூறுதுமே. (1)

ஆ. முடிவு

எந்தை எந்தாய் சுற்ற முற்று மெமக்கமுதா
மெம்பிரா னென்றென்று
சிந்தை செய்யுஞ் சிவன் சீரடியா
ரடிநாய் செப்புறை
யந்தமி லானந்தச் ... ... ......
........ ... ... ....
(இதற்குமேல் ஏடுகள் இல்லை.)

5. ............

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

பல நூலகங்களிலும் உள்ளன.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 87. அகத்தியர் தேவாரத் திரட்டு

1. நூலகக் குறிப்புகள்

அ. 62-1
ஆ. ண/9

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. திருஞானசம்பந்தர் முதலியோர்
ஆ. அகத்தியர் தேவாரத் திரட்டு
இ. சைவத் திருமுறை
ஈ. செய்யுள் 275

3. தோற்றக் கூறுகள்

அ. 52 ஏடு; 104 பக்கம்.
ஆ. நீளம் 17 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 10, 11 வரி.
உ. அழகிய தெளிவான கையெழுத்து.
ஊ. மிகமிகப் பழுதுற்ற நிலை. 4, 8, 23 ஆகிய மூன்று ஏடுகள் காணப்படவில்லை. அனைத்தேடுகளும் மிகச் சிதைந்துள்ளன.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம், ஆ. முடிவு.

(சுவடி படிக்கும் நிலையில் இல்லை.)

5. .... ........

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

பல நூலகங்களிலும் உள்ளன.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 88. திருவாசகம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 62-2

ஆ. ண/9

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. மாணிக்கவாசகர்

ஆ. திருவாசகம்

இ. சைவத் திருமுறைகள்

ஈ. செய்யுள் 656

3. தோற்றக் கூறுகள்

அ. 135 ஏடு ; 270 பக்கம்.

ஆ. நீளம் 17 செ. மீ. ; அகலம் 3 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது

ஈ. பக்கத்திற்கு 10, 11 வரி

உ. அழகிய தெளிவான கையெழுத்து

ஊ. மிகமிகப் பழுதுற்ற நிலை. ஒரு வரியைக்கூடத் தொடர்ந்து படிக்க இயலாது

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தொல்லை யிரும்பிறவி சூழுந் தளைநீக்கி
யல்லலறத் ....... மாக்கியதே—யெல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூ ரெங்கோன்
றிருவா சகமென்னுந் தேன்.

ஆ. முடிவு

செம்மைநல மறியாத சிதடரொடே திரிவேனை
மும்மைமல மறுவித்து ...... லாய முதல்வன்றா
னம்மையுமோர் ... படுத்தி நாய்சிவிகை யேற்றுவித்த
வம்மையெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே (9)

திருச்சிற்றம்பலம். திருவாசகமுற்றியது. திருவிருத்தம் 652

இ. முற்குறிப்பு

அறுபத்து மூணாமாண்டு எழுதினது.

ஈ. பிற்குறிப்பு

ராமீசுபரத்திலிருக்கும் திருவுடையாத்தேவரவர்கள் கட்டளைக் கணக்கு நல்லசெண்பகம் பிள்ளையவர்கள் குமாரன் ரெகுநாத பிள்ளை குமாரன் கர்ணிகம் வயித்தியம் சிவராமு எழுதினேன்.

5. ......

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

தொடர் எண் : 2 காண்க.

7. வெளியீட்டுச் செய்திகள்

பல பதிப்புகள் வெளிவந்துள்ளன.

## 89. அகத்தியர் தேவாரத்திரட்டு

1. நூலகக் குறிப்புகள்

அ. 63
ஆ. ண/10

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. திருஞானசம்பந்தர் முதலியோர்
ஆ. அகத்தியர் தேவாரத் திரட்டு
இ. சைவத் திருமுறைகள்
ஈ. செய்யுள் 275

## 3. தோற்றக் கூறுகள்

அ. 43 ஏடு ; 86 பக்கம்.
ஆ. நீளம் 20 செ. மீ.; அகலம் 3.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 11, 12 வரி.
உ. அழகிய சிறிய தெளிவான கையெழுத்து.
ஊ. மிகவும் பழுதுபட்ட நிலை.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தோடுடைய செவியன் விடையேறியோர் தூவெண் மதிசூடிக்
காடுடைய சுடலைப் பொடிபூசி என்னுள்ளங் கவர் கள்வன்
ஏடுடைய மலரான் முன்னாட் பணிந்தேத்த வருள்செய்த
பீடுடைய பிரமா புரமேவிய பெம்மானி வனன்றே (1)

ஆ. முடிவு

நாடுடைய நாதன்பால் நன்றென்றுஞ்
செய்மனமே நம்மை நாளும்
தாடுடைய தருமனார் தமர்செக்கி
லிடும்போது தடுத்தாட் கொள்வான்
மோடுடைய சமணர்க்கு முடையுடைய
சாக்கியர்க்கு மூடம் வைத்த
பீடுடைய புலியூர்ச்சிற் றம்பலத்தெம்
பெருமானைப் பெற்றா மன்றே. (10)

திருச்சிற்றம்பலம். ஆகக் கோயிற்பதிகம் 11க்குத் திருவிருத்தம் 115. சிவமயம்.

## 5. பிறசெய்திகள்

சுந்தரர் கோயிற்பதிகத்தில் ''மடித்தாடும்'' எனத்தொடங்கும் திருப்பாசுரம் எழுதப்படவில்லை. ''பாரூரும் அரவல் குல்'' என்னும் திருவிருத்தமும் விடுபட்டது. 9ஆம் பாடல் எழுதப்பட்டுத் தவறாக 10 என்ற எண் கொடுக்கப்பட்டுள்ளது.

# 90. ஆற்றூர்ப் புராணம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 64

ஆ. ப/3

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. மீனாட்சி சுந்தரம் பிள்ளை

ஆ. ஆற்றூர்ப் புராணம்

இ. தலபுராணம்

ஈ. செய்யுள் 525

## 3. தோற்றக் கூறுகள்

அ. 164 ஏடு ; 328 பக்கம்.

ஆ. நீளம் 22 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 6 வரி.

உ. தெளிவான கையெழுத்து.

ஊ. பழுதுற்ற சுவடி. பெரும்பாலும் அனைத்தேடுகளிலும் தொளைகள்.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

மாமேவு திருவுதர ....சையினொ....
    தான்பரிக்கும் ... ணயாதி
தாமேவு மசைகலையென் றுன்னுபுபஃ
    றலையரவந் தயங்க நீர்ப்பான்
றாமேவு மதன்புறஞ்சூழ்ந் திறுக்கியாங்
    கவ—வாவந் துதைவங்கட்
பூமேவு கலமாகப் புனைவேழ
    முகப்பெருமான் பொற்றாள் போற்றி. (1)

ஆ. முடிவு

நிறைபுகழ்ச் சொன்ன யான நிரோதனப் பெருமான் வாழ்க
வறைபல புவன மீன்ற வஞ்சனக் கண்ணி வாழ்க
மறைபல முழங்க வானோர் மற்றையர் வாழ்த்த வெங்கள்
குறையற மன்று ளாடுங் குஞ்சிதப் பொற்றாள் வாழ்க. (14)

முனிவர் முதலியோர் பூசித்த படல முற்றியது. ஆகப்படலம் 15; திருவிருத்தம் 525.

இ. பிற்குறிப்பு

பூமிமுழு தும்புகழும் பூந்துறைசை வாழ்குமர
சாமி முனிவரற்குத் தானின்று - சேமமுறத்
தீட்டினே னாற்றூர்த் திகழ்புரா ணத்தைமிகுந்
தீட்டினேன் கல்விநிதி யே.

5. ................. .

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

25 : 503, 504 : 31 : 22சி.

## 91. திருவகுப்பு

1. நூலகக் குறிப்புகள்

அ. 65
ஆ. த/1

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அருணகிரி நாதர்
ஆ. திருவகுப்பு
இ. தோத்திரம்
ஈ. செய்யுள் 4

## 3. தோற்றக் கூறுகள்

அ. 5 ஏடு ; 10 பக்கம்.

ஆ. நீளம் 20.5 செ. மீ. ; அகலம் 3.5 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது

ஈ. பக்கத்திற்கு 9,10 வரி.

உ. தெளிவான கையெழுத்து.

ஊ. பழுதுற்ற நிலை. அனைத்தேடுகளிலும் தொளைகள்.

எ. சீர்பாத வகுப்பு, தேவேந்திர சங்க வகுப்பு, திருக்கடைக் கணியல் வகுப்பு, வேல் வகுப்பு ஆகிய நான்கு மட்டுமே உள்ளதால் குறைச் சுவடி.

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

*சீர்பாத வகுப்பு*

உததியிடை கடவுமர கதவருண குலதுரக
உபலளித கனகரத சதகோடி சூரியர்கள்

ஆ. முடிவு

**வேல் வகுப்பு**

திருத்தணியி லுதித்தருளு மொருத்தன்மலை விருத்தனென
துளத்திலுறை கருத்தன்மயி னடத்துகுகன்வேலே.

## 5. ......................

## 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

8 : 6சி, 153 ; 16 : 1657, 1658, ஆர். 2682, ஆர். 2697, ஆர். 2855, ஆர். 2984 ; 19 : 3013, 3280, 3281; 27 : 694ஏ; 31 : 188 எச் ; 32 : 39.

## 7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 92. திருச்செந்தூர்ப் புராணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 66
ஆ. ப/4

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. வென்றிமாலைக் கவிராயர்
ஆ. திருச்செந்தூர்ப் புராணம்
இ. தலபுராணம்
ஈ. செய்யுள் 897

3. தோற்றக் கூறுகள்

அ. 111 ஏடு ; 222 பக்கம்.
ஆ. நீளம் 19.5 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 10, 11 வரி.
உ. அழகிய தெளிவான கையெழுத்து.
ஊ. மிகப்பழுதுற்ற நிலை. அனைத்தேடுகளும் சிதைவு.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

எழுத்துஞ் சொல்லும் பொருளு மிணக்குற
வழுத்து தென்செயந் திப்புர மான்மியம்
விழுத்தரும் பேரரு ளாற்சொல வேதமே
பழுத்த குஞ்சரன் பாதங்கள் போற்றுவாம். (1)

ஆ. முடிவு

மயில்வாழி தரைவாழி சேவல் வாழி
மனுவனைய திரிசுதந் தரத்தர் வாழி
குயில்வாழு மொழித்தெய்வ யானை வாழி
குறவர்குலக் கொடிவாழி கொர்டுஞ்சூர் மாய்த்த

அயில்வாழி செயந்திபுரத் துற்றோர் வாழி
    ஆறுமுகப் பெருமானின் கருணை வாழி
பயில்வான்மை முகில்வாழி புராணங் கேட்போர்
    படிப்பவர்கள் கிளைகளெல்லாம் வாழி வாழி. (103)

பதினெட்டாவது சுகப்பிரமரிசி சுவாமியைப் பூசை பண்ணின வத்தியாய முற்றும். **ஆக** விருத்தம் 897.

ஞானசம்பந்த குருபாத முன்னின்று ரெட்சிக்க. வேலப்ப **தேசிகன்** திருவடிகளே சரணம்.

இ. பிற்குறிப்பு

1026 ஆம் வருடம் ஆனிமாதம் 22 ஆம் தேதி சுக்கிர வாரத் தினம் திருச்செந்தூர்த் தலபுராணம் எழுதினது. ஸ்ரீ வைகுண்டம் சொக்கலிங்கம் கையெழுத்து. குமர குருபரன்றுணை. குருபாதம்.

5. .... ......

## 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

**1** : 140 ; 16 : 586, ஆர். 1227 ; 18 : 9221, 11448 ;
**25** : 566, 567 ; 31 : 22.

## 7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

# 93. விளத்தொட்டிப் புராணம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 67
ஆ. ப/5

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. மீனாட்சி சுந்தரம் பிள்ளை

ஆ. விளத்தொட்டிப் புராணம்
இ. தலபுராணம்
ஈ. செய்யுள் 351

## 3. தோற்றக் கூறுகள்

அ. 62 ஏடு ; 124 பக்கம்.
ஆ. நீளம் 23 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 7வரி.
உ. மிகத்தெளிவான கையெழுத்து
ஊ. மிகப்பழுதுற்ற நிலை. அனைத்தேடுகளும் சிதைவு.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பூமேவு முத்தொழில்செய் மூவருக்கு
மொருமூல புருடன் றானென்
றாமேவு நிலமுணர விருசெவிக
ளொருதுதிக்கை யகத்தே யன்
தாமேவு பொலிவின்வரும் படியுதவி
யருள்சுரந்து தழையு மூர்த்தி
நாமேவு மாபத்துக் காத்தபிரான்
றிருவடிக ணயந்து வாழ்வாம். (1)

ஆ. முடிவு

பொன்பூத்த விளத்தொட்டி நகர்வாழ்க
வொளிர்பிரம புரீசர் வாழ்க
மின்பூத்த சிறுமருங்குற் கரும்பிரத
நாயகிசீர் மேன்மேல் வாழ்க
தென்பூத்த வைதிகமுஞ் சைவமுநா
டோறும்வளஞ் செழித்து வாழ்க
மன்பூத்த சிதம்பரத்து நடநவிலுங்
குஞ்சிதத்தாள் வாழ்க வாழ்க. (16)

15ஆவது ஈசான தீர்த்தப்படலம் முற்றிற்று ஆகப்படலம் 15க்குப் பாயிரம் உட்படத் திருவிருத்தம் 351. திருச்சிற்றம்பலம்.

இ. பிற்குறிப்பு

யுவ வருடஞ் சித்திரை மாதம் 22ஆம் தேதி சோமவாரதினம் முற்றிற்று. மெய்கண்ட தேசிகன்றிருவடி வாழ்க. சிவமயம். குமாரசாமித்தம்பிரான். (இது ஏட்டிற் குரியவரின் பெயர்)

5.

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

25 : 630–632 ; 31 : 16.

## 91. காசி காண்டம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 68
ஆ. ப/6

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அதிவீரராம பாண்டியன்
ஆ. காசி காண்டம்
இ. தலபுராணம்
ஈ. செய்யுள் 2525

3. தோற்றக் கூறுகள்

அ. 183 ஏடு ; 366 பக்கம்.
ஆ. நீளம் 14.5 செ. மீ. ; அகலம் 6 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 20, 21, 22 வரி.

உ. அழகிய தெளிவான கையெழுத்து.

ஊ. பல ஏடுகள் ஆங்காங்கு சிதைந்துள்ளன. சுமாரான நிலை.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

மாற்றரிய தொல்பிறவி மறிகடலி னிடைப்பட்டுப்
போற்று... ......நாள் புணைபற்றிக் கிடந்தோரைச்
சாற்றரிய தனிமுத்தித் தடங்கரையின் மிசை.....
காற்றெரியுந் தாழ்செவியக் கடக்களிற்றை வணங்குவாம்.

ஆ. முடிவு

அருமறை முனிவர் வாழ்க ஆனினம் வாழ்க தெண்ணீர்
விரிதிரை யுலகங் காக்கும் விறல்கெழு வேந்தன் வாழ்க
மருவிய திங்க டோறும் மழைவளஞ் சுரக்க வெங்கோன்
பொருவற மொழிந்த விந்நூல் பொற்பொடும் பொலிக
மாதோ (69)

நூறாவது சேவிக்கிறமுறைமை யுரைத்த வத்தியாய முற்றும்.
ஆகத் திருவிருத்தம் 2525. காசி காண்ட முற்றும்.

இ. பிற்குறிப்பு

கீலக வருஷங் கார்த்திகை மாதம் 26 ஆம் தேதி ஆதித்த வாரமும் ரேவதி நட்சத்திரமும் கூடின புண்ணிய தினத்திலே கரைக்கண்டத்திலிருக்கும் காசிநாதன் கையெழுத்து.
நமச்சிவாய மூர்த்தி திருவடிகளே சரணம். சிவமயம்.

## 5. பிற செய்திகள்

நூல் ஈற்றுக் குறிப்பையடுத்து கீழ்க்கண்ட மற்றோர் குறிப்பும் காணப்படுகிறது. ''குமாரசாமித்தம்பிரானுக்கு சந்நிதானத்தில் கட்டளையிடப்பட்டது.''

## 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1 : 76, 456 ; 16 : 565, 566, 2108, ஆர். 5195 ; 18 : 3101எ, 3210எ, 3210சி, 3921, 4073எ, 5643, 6391 ; 25 : 511-

515 ; 27 : 262- 264 ; 28 : 31434 ; 31 : 55 ; 48 : 4941 ; 55 : பி19 ; 60 : 332 - 334.

## 7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

# 95. திருவாசகம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 69 - 1
ஆ. ண / 11

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. மாணிக்கவாசகர்
ஆ. திருவாசகம்
இ. சைவத் திருமுறைகள்
ஈ. செய்யுள் 656

## 3. தோற்றக் கூறுகள்

அ. 84 ஏடு; 168 பக்கம்.
ஆ. நீளம் 20 செ. மீ. ; அகலம் 3.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 13, 14 வரி.
உ. சிறிய தெளிவான எழுத்துகள்.
ஊ. பழுதுபட்ட நிலை. பெரும்பாலான ஏடுகள் சிதைவு
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தொல்லை யிரும்பிறவி சூழுந் தளைநீக்கி
யல்லலறுத் தானந்த மாக்கியதே—யெல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூ ரெங்கோன்
திருவா சகமென்னுந் தேன்.

ஆ. முடிவு

செம்மைநல மறியாத சிதடரொடுந் திரிவேனை
மும்மைமல மறுவித்து முதலாய முதல்வன்முன்
நம்மையுமோர் பொருளாக நாய்சிவிகை யேற்றுவித்த
வம்மையெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே. (9)

திருச்சிற்றம்பலம். சிவமயம்.
திருவாசகம் அகவல் மற்று முண்டான பாவிக முற்றும்.
திருப்பாட்டுத் தொகை 656.

## 5. பிற செய்திகள்

சுவடி எழுதும்போது பிரார்த்தனைப்பத்தின் 11-ஆம் பாட்டு விடுபட்டு விட்டது. எனவே அதைமட்டும் ஓர் ஏட்டில் எழுதி 64, 65-ஆம் ஏடுகளுக்கிடையே கோக்கப்பட்டுள்ளது. இக் கையெழுத்து வேறானது.

# 96. திருக்கோவையார்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 69 - 2
ஆ. ண / 11

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. மாணிக்கவாசகர்
ஆ. திருக்கோவையார்
இ. சைவத் திருமுறைகள்
ஈ. செய்யுள் 400

## 3. தோற்றக் கூறுகள்

அ. 54 ஏடு ; 108 பக்கம். (ஏட்டெண் 84 முதல் 173 முடிய)
ஆ. நீளம் 20 செ. மீ. ; அகலம் 3.5 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 13, 14 வரி.
உ. சிறிய தெளிவான எழுத்துகள்.
ஊ. பழுதுபட்ட நிலை. பெரும்பாலான ஏடுகள் சிதைவு.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

எண்ணிறைந்த தில்லை யெழு.... ... திகழக்
கண்ணிறைந்து நின்றருளுங் கற்பகமே—நண்ணிடுஞ்சீர்
தேனூறுஞ் செஞ்சொற் றிருக்கோவை யென்கின்ற
நானூறு மென்மனத்தே நல்கு.

ஆ. முடிவு

காரணி கற்பகங் கற்றவர் நற்றுணை பாணரொக்கல்
சீரணி சிந்தா மணியணி தில்லைச் சிவ ......
தாரணி கொன்றையன் றக்கோர்தஞ் சங்க நிதி ... ..
.. ... யுற்றவர்க் கூரன்மற் றியாவ......
இரும்பரிசி லேற்றவர்க்கருளி விரும்பினர் மகிழ
மேவுதலுரைத்தது. (400)
திருச்சிற்றம்பலக்கோவை முற்றும். திருச்சிற்றம்பலம்.

இ. பிற்குறிப்பு

சிதம்பரேசுரர் சிவகாமவல்லியார் கடாட்சம். ஸ்ரீவைகுண்டம் சூரியநாராயண பிள்ளையவர்கள் குமாரன் சூரியநாராயண பிள்ளைக்கு உண்டாக வேண்டுவது.

இந்தச்சுவடி 970-ஆம் வருடம் பங்குனிமாதம் 21-ஆம் தேதி ஸ்ரீவைகுண்டம் இராமலிங்கம்பிள்ளையவர்கள் புத்திரன் குமாரசாமி கையெழுத்து. ஸ்ரீகுமாரசுவாமி நாயகர் துணை.

# 97. கூர்ம புராணம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 70
ஆ. ந / 3

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அதிவீரராம பாண்டியன்

ஆ. கூர்ம புராணம்

இ. காப்பியம்

ஈ. செய்யுள் 3715

## 3. தோற்றக் கூறுகள்

அ. 316 ஏடு; 632 பக்கம்.

ஆ. நீளம் 20 5 செ. மீ. ; அகலம் 4 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 13 வரி.

உ. சிறிய தெளிவான கையெழுத்து.

ஊ. மிகச் சிதைந்த நிலை. பல ஏடுகளில் ஏராளமாகத் தொளைகள்.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சீர்பூத்த ...... ........ ....... ....... ....... ....... ....... .......
... பூத்த ... ....கவுரிமிருகண்கள் ....... ... ........... ..........போற்ற
யோர்பூத்த மணிமன்றத் தானந்த நடம்புரியு மெண்டோண்
முக்கட்
கார்பூத்த கறைமிடற்றோன் கமலமலர்ச் சேவடியெங்
கருத்துள்வை(ப்பாம்.) (1)

ஆ. முடிவு

எதிர்மலைந் ......... .... ...... ........ ......
மதுரையும் புகாரும் வஞ்சியும் புரக்கும்
மானவேல் வழுதி..... பெருமான்
அதிர்பொலங் கழற்கால் .......... ... ... ....
....... .... தெரிந்துநன் கிசைத்த
முதுதமிழ்க் கூர்ம புராணமுற் றுணர்ந்தார்
முத்திவீட் டினிதுவீற் றிருப்பார். (13)

தொண்ணூற்றுநாலாவது பிராகிருதப்பிரளயமு ...முரைத்த வத்தியாயம் முற்றும். ஆகத்திருவிருத்தம் 988. பூர்வகாண்டத் திருவிருத்தம்—727. ஆகக்காண்டம் 2-க்கு அத்தியாயம் 94க்குத் திருவிருத்தம் ...... கூர்மபுராண முற்றியது.

இ. பிற்குறிப்பு

1019-ஆம் வருட மாசிமாதம் 23-ஆம் தேதி சோமவாரமும் பௌர்ணமையுங் கூடிய சுபதினத்தில் எழுதி முற்றுப்பெற்றது.

இந்தப்புராணம் எழுதினது ஸ்ரீவைகுண்டம் சூரியநாராயண பிள்ளையவர்கள் குமாரன் சொக்கலிங்கம்... கைநெட்டெழுத்து.

*மாசிலாமணி தேசிகர் திருவடி வாழ்க. வேலப்ப தேசிகர் திருவடி வாழ்க.*

5. ......................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1 : 104, 136, 458; 8 : 2எ; 16 : 548, 549, 2267, 2470, ஆர். 2660, ஆர். 5283, ஆர். 5494; 18 : 3871, 3901பி, 3977; 19 : 2988; 25 : 460 , 461; 26 : 37; 27 : 265-267; 28 : 15398, 45998; 31 : 59, 66; 55 : கியூ2, பி24; 60 : 318-320

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 99. மச்சபுராணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 71
ஆ. ந/4

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ வடமலையப்பப்பிள்ளை

ஆ. மச்சபுராணம்

இ. காப்பியம்

ஈ. செய்யுள் 5000

## 3. தோற்றக் கூறுகள்

அ. 377 ஏடு; 754 பக்கம்

ஆ. நீளம் 28 செ.மீ.; அகலம் 3.5 செ.மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 11 வரி.

உ. சிறிய தெளிவான கையெழுத்து.

ஊ. பொதுவாகச் சிதைந்தநிலை. 284 ஆம் ஏடு முறிந்துள்ளது. பல ஏடுகளில் நிறையத் தொளைகள். சில ஏடுகள் முறியும் நிலையில் உள்ளன.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

மழைபூத்த கருநிறத்துச் செம்மணி - த்
    தொளிர்நிறத்து வனத்து மூாய்ப்பைந்
தழைபூத்த முகுந்தனருண் மச்சபுரா
    ணத்தையிசைத் தமிழாற் பாட
உழைபூத்த திருக்கரத்தன் உளம்பூத்த
    பரஞ்சுடர்பால் உமையா ளீன்ற
புழைபூத்த நெடுந்தடக்கைக் கற்பகக்குஞ்
    சரத்திருதாள் போற்றல் செய்வாம்.

ஆ. முடிவு

மைப்புயல் வண்ணன் மச்சமா யுரைத்த
    மச்சமாம் புராணத்தைத் தமிழால்
இப்புவிக் கெண்ணூற் றெண்பத்தி ரண்டாண்
    டிசைந்திடு மவ்விய வருடத்து

ஐப்பசி மதியி லொப்பிலாத் தினத்தி
　　லமுதெனக் கனியென வார்க்குஞ்
செப்பிய விரசை வடமலை மகிபன்
　　செல்வரோ டினிதுவா ழியவே (157)

58 ஆவது தாரகாசுரவத அத்தியாயம் முற்றும். ஆக உத்திர காண்டம் திருவிருத்தம் 1986. ஆகக்காண்டம் இரண்டுக்குத் திருவிருத்தம் 5000.

இ. பிற்குறிப்பு

10 3 ஆம் வருடம் அற்பசி மாதம் 29 ஆம் தேதி ஸ்திரவாரமும் பூர்வபட்சம் சஷ்டியும் உத்திராட நட்சத்திரமும் கூடிய சுப தினத்தில் எழுதி முற்றுப்பெற்றது. சொக்கலிங்கம் சுகஸ்தலிகிதம். வேலப்ப தேசிகன் திருவடி வாழ்க. மாசிலாமணி தேசிகன் திருவடி வாழ்க. குருபாதம்.

5. ........ .... .....

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

16 : ஆர். 2654; 31 : 6[illegible], 65.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 99 மூத்த திருப்பதிகம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 72-1
ஆ. ண/12

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. காரைக்காலம்மையார்

ஆ. மூத்த திருப்பதிகம்
இ. சைவத் திருமுறைகள்
ஈ. செய்யுள் 11

## 3. தோற்றக் கூறுகள்

அ. 2 ஏடு; 4 பக்கம்.
ஆ. நீளம் 20.5 செ. மீ ; அகலம் 3.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 9,10 வரி.
உ. தெளிவான கையெழுத்து
ஊ. ஏடுகளிரண்டிலும் நிறையத் தொளைகள்.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

எட்டி யிலவ மீகை சூரை காரை படர்ந்தெங்குஞ்
சுட்ட சுடலை சூழ்ந்த கள்ளி —ாந்த குடர்கவ்வாப்
பட்ட பிணங்கள் பரந்த காட்டிற் ப—போல் விழிகட்பேய்
கொட்ட முழவங் கூளி பாடக் குழக னாடுமே. (1)

ஆ. முடிவு

—டு பதியஞ் சடைமே லுடையர் சுழல்வர் திருநட்டம்
ஆடு மரவ மறையி லார்த்த வடிக ளருளாலே
காடு மலிந்த கனல்வா யெயிற்றுக் காரைக் காற்பேய்தன்
பாடல் பத்தும் பாடி யாடப் பாவ நாசமே (11)

திருச்சிற்றம்பலம்.

## 5. பிற செய்திகள்

இவ்விரு ஏடுகள் ஒரு பெரிய சுவடியின் 30,31 ஆவது ஏடுகள் ஆகும். இதனை அடுத்த 32,33 ஆவது ஏடுகளில் திருவாலங்

காட்டுப்பதிகம் இடம் பெற்றுள்ளது (இந்நூல் 72-2 காண்க). எனவே முழுச்சுவடியில் பதினொன்றாம் திருமுறை அனைத்தும் இருந்திருக்கும் போலும்.

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

16 : 1191, 1192; 25 :1499, 1500; 27 : 426 எஃப்.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 100. திருவாலங்காட்டுப் பதிகம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 72-2
ஆ. ண/12

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. காரைக்காலம்மையார்
ஆ. திருவாலங்காட்டுப்பதிகம்
இ. சைவத் திருமுறைகள்
ஈ. செய்யுள் 11

3. தோற்றக் கூறுகள்

அ. 2 ஏடு ; 4 பக்கம்.
ஆ. நீளம் 20.5 செ. மீ.; அகலம் 3.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 9,10 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. ஏடுகளிரண்டிலும் நிறையத் தொளைகள்.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

### அ. தொடக்கம்

கொங்கை திரங்கி நரம்பெழுந்து
குண்டுகண் வெண்பற் குழிவயிற்றுப்
பங்கி சிவந்திரு பற்கணீண்டு
பரடுயர் நீள்கணைக் காலொர்பெண்பேய்
தங்கி யல —— லறுகாட்டிற்
றாழ்சடை யெட்டுத் திசையும்வீசி
அங்கங் குளிர்ந்தன வாடுமெங்க
ளப்ப னிடந்திரு வாலங்காடே. (1)

### ஆ. முடிவு

ஒப்பினை யில்லவன் பேய்கள்கூடி
யொன்றினை யொன்றடித் தொக்கலித்துப்
பப்பினை யிட்டுப் ப—ண்டைபாடப்
பாடிருந் தன்னரி யாழமைப்ப
வப்பனை யணிதிரு வாலங்காட்டு
ளடிகளைச் செடிதலைக் காரைக்காற்பேய்
செப்பிய செந்தமிழ் பத்தும்வல்லார்
சிவகதி சேர்ந்தின்ப மெய்துவாரே. (11)

திருச்சிற்றம்பலம்.

## 5. பிறசெய்திகள்

இவ்விரு ஏடுகள் ஒரு பெரிய சுவடியின் 32, 33 ஆவது ஏடுகளாகும். இதன் முன் மூத்த திருப்பதிகம் இடம் பெற்றுள்ளது. (இந்நூல் 72-1 காண்க. எனவே முழுச் சுவடியில் பதினொன் றாம் திருமுறை முழுவதும் எழுதப்பட்டிருக்கலாம்.

## 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

27 : 425இ, 426இ.

# 101. கோயிற் புராணம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 73-1
ஆ. ப/7

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. உமாபதி சிவாசாரியர்
ஆ. கோயிற்புராணம்
இ. தலபுராணம்
ஈ. செய்யுள் 414

## 3. தோற்றக் கூறுகள்

அ. 38 ஏடு ; 76 பக்கம்
ஆ. நீளம் 16 செ. மீ. ; அகலம் 4.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 16 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. பழுதுற்ற நிலை. பெரும்பாலும் ஒவ்வொரு ஏட்டிலும் நிறையத் தொளைகள்.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பொற்ப தப்பெர்து வார்புலி யூர்புகழ்
சொற்ப தப்பொரு ளாகுவ தூய—
ரற்ப கற்றொழ வா—ணி கோபுரக்
கற்ப கக்களி யானை கழல்களே.

ஆ. முடிவு

மழைவ ழங்குக மன்னவ னோங்குக
பிழையில் பல்வள மெல்லாம் பிறங்குக
தழைக வஞ்செழுத் தோசை தரையெலாம்
.......... .......... சைவம் பரிக்கவே. (53)

பலசுருதி முற்றியது. ஆகச் சருக்கம் 5க்குத் திருவிருத்தச் செய்யுள் 414. சிவமயம்.

இ. பிற்குறிப்பு

973 ஆம் வருஷம், பிங்கள வருஷம், கார்த்திகை மாதம் 26ஆம் தேதி, சுக்கிரவாரமும் பஞ்சமியும் பூசநட்சத்திரமும் கூடிய சுபதினத்தில் கோயிற்புராணம் சூரியநாராயண பிள்ளை புத்திரன் சூரியநாராயணன் எழுதி முற்றியது. சிவமயம். திருச்சிற்றம்பலம்.

## 5. பிறசெய்திகள்

இச்சுவடி 136 ஆம் ஏட்டில் தொடங்கி 173 ஆம் ஏட்டில் முடிகிறது. எனவே இதற்கு முன் வேறு ஏதாவது நூல்கள் இருந்திருக்கவேண்டும். இதனையடுத்துச் சிதம்பரவிலாச அகவல் (73-2) எழுதப்பட்டுள்ளது.

## 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1 : 125 ; 4 : 9757 ; 16 : 571, 572 ; ஆர். 1233, ஆர். 1264 ; 18 : 2140இ, 3210இ, 3885பி, 3946ஏ, 10316 ; 25 : 530-534 ; 27 : 287பி, 290ஏ, 302, 313, 621ஏ, 693பி : 31 : 5, 11, 12, 14, 15 ; 32 : 51ஏ ; 60 : 301, 302, 565பி.

## 7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

# 102. சிதம்பர விலாச அகவல்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 73-2
ஆ. ப/7

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ... ...

ஆ. சிதம்பர விலாச அகவல்

இ. சிற்றிலக்கியம்

ஈ. செய்யுள் ; அச்சில் ஏறத்தாழ 10 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 2 ஏடு ; 4 பக்கம்.

ஆ. நீளம் 16 செ. மீ. ; அகலம் 4.5 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 16 வரி.

உ. தெளிவான கையெழுத்து.

ஊ. சுவடி 174 ஆம் எண்ணுள்ள ஏட்டில் தொடங்கி 177 ஆம் எண்ணில் முடிகிறது. 175, 176 ஆகிய இரண்டு ஏடுகள் காணப்படவில்லை. உள்ளவையும் சிதைந்துள்ளன.

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

நிதந்தொறும் புலிமுனி பதஞ்சலி போற்றிய
சிதம்பர விலாச விதந்தனை மொழிந்திடக்
கரமலர் நான்கொடுத் தரமுக மாகிய
நரமுகக் கணபதி திருவடி பணிகுவாம்.
திருச்சிற்றம்பலம்.
திருத்தகு மொளியைப் பொருப்பென திகழ்தரு
..... ......... யாகிய தில்லை மூதூர்

ஆ. முடிவு

இருவினை கொடுக்கும் பிறவி சாகாக்
கருவடி வறுத்துத் திருவடித் தாமரை
நீழலில் வாழ்வது நிச்சயந் தானே.
அகவல் முற்றியது. திருச்சிற்றம்பலம். சிவமயம்.

5. பிறசெய்திகள்

இச்சுவடியில் இப்பிரபந்தத்திற்கு முன் கோயிற்புராணம் (73-1) எழுதப்பட்டுள்ளது.

## 103. காசி மகத்துவம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 74
ஆ. ப/8

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. .............
ஆ. காசி மகத்துவம்
இ. தலபுராணம்
ஈ. செய்யுள் 1101

3. தோற்றக் கூறுகள்

அ. 247 ஏடு ; 494 பக்கம்.
ஆ. நீளம் 22 செ. மீ. ; அகலம் 3.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 7 வரி.
உ. தெளிவான கையெழுத்து. எழுத்துகள் தனித்தனியே அச்சைப்போல் உள்ளன.
ஊ. மிகப்பழுதுற்ற சுவடி. 31, 32, 107, 108 ஆகிய நான்கு ஏடுகள் முறிந்துள்ளன. அனைத்தேடுகளிலும் ஏராளமாகத் தொளைகள்.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பூமேவு கங்கைநதி யெடுத்தெறிகொக்
    கரையெனவொண் புளிற்றா லோனுந்
தூமேவு முத்தமென வதுகாலுஞ்
    சுவையமுதத் துளி— வேணி

யோமேவு மெய்வயங்கக் காசியில்நந்
திக்கோட்டி னொளிர மேவு
மாமேவு மொருகோட்டுத் துண்டிரா
சக்களிற்றை வணக்கஞ் செய்வாம். (1)

ஆ. முடிவு

கார்பூத்த பொழிலுடுத்த காசிநகர்
வாழ்கநெடுங் கங்கை வாழ்க
யேர்பூத்த துண்டிதண்ட பாணிவயி
ரவர்கொற்றி யின்னோர் வாழ்க
நார்பூத்த வன்னபூ ரணியகிலே
சனும்வாழ்க நயந்து மன்றுள்
நீர்பூத்த முடியனையான் நடநவில்குஞ்
சிதபாதம் நீடு வாழ்க. (51)

விட்டுணுசர்மன் உபதேசம் பெற்ற அத்தியாயம் முற்றியது. ஆக அத்தியாயம் 27க்குத் திருவிருத்தம் 1011. காசி மகத்துவம் முற்றியது.

இ. முற்குறிப்பு

வெகுதானிய சம்வச்சரம் சாலிவாகன சகாப்தம் 1800க்குச் சரியாகச் செல்லாநின்ற கொல்லம் 1053ஆம் வருஷம் உத்தராயணமாகிய மேஷ ரவி 18 (சித்திரை மாதம் 18ஆம் தேதி) சோமவாரம் அமரபட்சத்துத் துவாதசி திதியும் உத்திரட்டாதி நட்சத்திரமும் சுபநாம யோகமும் கவுலவா கரணமும் அமுர்த கடிகையும் மேஷலக்கினமுஞ் சாத்வீக வேளையுஞ் சந்திர வோரையுங்கூடிய இந்த சுபயோக சுபதினத்தில் (எழுதத்தொடங்கியது.)

இ. பிற்குறிப்பு

வெகுதானிய சம்வச்சரம் சாலிவாகன சகாப்தம் 1800க்குச் சரியாகச் செல்லாநின்ற கொல்லம் 1054ஆம் ஆண்டு தட்சணாயணமாகிய துலாரவி 27 (ஐப்பசி 27) சோமவாரம் அமரபட்சத்துப் பிரதமை திதியும் ரோகிணி நட்சத்திரமும் பரிக நாமயோகமும் கவுலவ கரணமும் மீன லக்கினமுந் தாமச வேளையுஞ் சந்திர வோரையுங்கூடிய (சுபதினத்தில் எழுதி நிறைவேறியது.)

# 101. தியாகராச லீலை

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 75

ஆ. ப/9

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. மீனாட்சிசுந்தரம் பிள்ளை

ஆ. தியாகராச லீலை

இ. தலபுராணம்

ஈ. செய்யுள். அச்சில் ஏறத்தாழ 200 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 183 ஏடு; 366 பக்கம்.

ஆ. நீளம் 24 செ.மீ.; அகலம் 2.5 செ.மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 5, 6வரி.

உ. தெளிவான கையெழுத்து.

ஊ. 1முதல்5, 14, 20, 62முதல்64, 73, 74 85, 86, 106, 107, 121, 138, 142, 149, 152, 159முதல்161, 175, 176, 179, 183, 191, 205, 206ஆகிய ஏடுகள் காணப்படவில்லை. 12, 19, 32, 40, 56, 93, 95, 102, 111, 112, 118, 119, 145, 154, 155, 157, 167, 171முதல்173, 197, 208, 212, 213 ஆகிய ஏடுகள் முறிந்துள்ளன. மிக மிகப் பழுதுற்ற நிலை.

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஊனார் பிறவிப் பகைக்குள்ள முடைந்தடைந்தோர்
ஆனார் தமைக்காப் பவரென் பதற்கான்ற சான்றாகத்
தேனா ரிதழி மலர்மாலை கொள்செஞ் சடைக்கண்
வானார் பிறைவைத்த சித்தீசரை வாழ்த்தியுய்வாம். (14)

ஆ. முடிவு

சொற்ற போழ்தச் சுடர்முடி வேந்தனும்
மற்ற யாவரும் சூழவல் லானொடு
மற்ற மோவிய வாரு ரடைந்தனர்
கொற்ற மார்கதி கூடலில் வாழ்நரே. (19)

சீர்த்தி மேய தியாக ..............
மூர்த்தி கோயிலின் வாயிலின் முன்னினார்.

5. ..................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

25: 587; 26: 188.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 105. காசி காண்டம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 76
ஆ. ப/10

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அதிவீரராம பாண்டியன்
ஆ. காசி காண்டம்
இ. தலபுராணம்
ஈ. செய்யுள் 2525

3. தோற்றக் கூறுகள்

அ. 274 ஏடு ; 548 பக்கம்.
ஆ. நீளம் 22 செ. மீ. ; அகலம் 4 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பலவித வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. 1 மு 7, 11 மு 14, 22 மு 25, 31, 257 மு 265, 289, 290, 297 மு 301, 303 மு 313 ஆகிய ஏடுகளும் 317க்கு மேல் இருக்கவேண்டியனவும் காணப்படவில்லை. மிகமிகச் சிதைவுற்ற சுவடி.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

.........................................
......... போய்ச் செந்தமிழ்க் கடவுண்மால்வரை
தழங்கிசையுருவி ......... முந்தென்ற .....
கொழுந்து..........தென்றிசைக்குறு .......யினான். (2)

(இது தேவர்கள் பிரமலோகமடைந்த வத்தியாயம் இரண்டாம் பாடல்.)

ஆ. முடிவு

செங்கட்..........டெருமை செழுநீர் குவளைப் போதருந்திப்
.......... னந்துதைந்து .......... பணில ....... ங்குங் காசியினிற்
றிங்கடவழ்ந்து விளிம்பு ......... மாடத்திடை..........
(இது 98 ஆவது முத்திமண்டபத்தின் கதை உரைத்த அத்தியாயத்தின் 32 ஆம் பாடற்பகுதி. இதற்குமேல் ஏடுகள் இல்லை.)

## 106. இலக்கண விளக்கம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 77
ஆ. ச/5

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. வைத்தியநாத தேசிகர்

ஆ. இலக்கண விளக்கம்—பொருளதிகாரம்—மூலமும் உரையும்

இ. இலக்கணம்

ஈ. செய்யுளும் உரைநடையும். அச்சில் ஏறத்தாழ 600 பக்கம் வரும்

3. தோற்றக் கூறுகள்

அ. 290 ஏடு ; 580 பக்கம்

ஆ. நீளம் 21 செ. மீ.; அகலம் 3.5 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 7, 8 வரி.

உ. தெளிவான கையெழுத்து.

ஊ. மிகப்பழுதுற்ற நிலை. பல ஏடுகள் மிகச் சிதைந்துள்ளன. 290 ஆவது ஏட்டிற்குமேல் இருக்க வேண்டியன காணப்பட வில்லை.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

உமை...............த் துலகிளைப்பொழிக்கு
மிமையவ னடிபணிந் தியம்புவன் பொருளே

என்பது சூத்திரம். மேற்பாயிரத்துள்ளே எழுத்து முதன் மூன்றையுமென நிறுத்த முறையானே யெழுத்துஞ் சொல்லு முணர்த்தி .......

ஆ. முடிவு

பாங்கி காவற்பிரிவுடன்படாமைக்குச் செய்யுள் :-

பண்காவல் கொண்ட பனிமொழிச் செங்கைப் பசுங்கிளிக்குன்
கண்காவ லென்பதுங் கண்டுஞ்செல் வீர்கொல் கருங்கடல்சூழ்
மண்காவல் கொண்ட மணிநெடு வேன்முடி மன்னவர்க்குப்
பெண்காவல் கொள்கை பெரும்பழி போலும் பெருந்தகையே.
எனவரும். (இதற்குமேல் ஏடுகள் இல்லை)

5. ... ... .... ...

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1 : 102, 105; 16 ; 2072; 25 : 47-52, 2180, 2181.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 107. காஞ்சிப் புராணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 78
ஆ. ப/11

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. சிவஞான முனிவர் - கச்சியப்ப முனிவர்
ஆ. காஞ்சிப் புராணம்
இ. தலபுராணம்
ஈ. செய்யுள் 4859

3. தோற்றக் கூறுகள்

அ. 410 ஏடு ; 820 பக்கம்.
ஆ. நீளம் 30 செ. மீ. ; அகலம் 3.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 9, 10, 11 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. பல ஏடுகளில் நிறையத் தொளைகள் ; சில ஏடுகள் முறிவு ; சுமாரான நிலை.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

இருக வுட்டுச் சுவ ... குககார்க்கடங்களில் குலிசக்
குருநி ற...... தோற்றமு ............... வழந்தெறிப்
பருதி மார்பி ................................. திபயிலுந்
திருநி கர்த்தசீ ரைங்கரக் களிற்றினைச் சேர்வாம்.

ஆ. முடிவு

அஃறிணையு முயர்திணையு மெனப்பகுத்த
வுயிர்கடொறு மவையே யாகிச்
சிஃறொழிலுஞ் செய்யாது செய்துவினைத்
திறனருத்திச் சிறியே னெஞ்சக்
கஃறனையுங் கரைத்துருக்கித் தடுத்தாண்ட
கச்சியே கம்ப மேய
பஃறலைய ........... சினங்காத்தான்
குஞ்சிதத்தாள் பரசி வாழ்வாம். (433)

இருபத்தெண்டளிப்படல முற்றிற்று; ஆகப்படலம் 7. திருவிருத்தம் 21:2. ஆகக்காண்டம் 2க்குத் திருப்படலம் 70க்குத் திருவிருத்தம் 4859. திருக்காஞ்சிப் புராணமுற்றுப்பெற்றது. திருச்சிற்றம்பலம். யாவு நிறைந்த எனையே யாட்கொண்ட சற்குரு தயாநிதியாகிய சுப்பிரமணிய தேசிக சுவாமிகளது திருவடிகளே துணை.

இ. பிற்குறிப்பு

1051 ஆம் ஆண்டு யுவ வருஷம் மார்கழி மாதம் 11 ஆம் தேதி எழுதி நிறைவேறிற்று. வாழ்க.

## 5. ......................

## 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

4 : 9709 ; 16 : 272, 567, 578; 17 : 54 ; 25 : 518, 519, 616, 617, 1411 ; 26 : 100, 118, 220 ; 31 : 3, 28 ; 60 : 306.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 108. சிவரகசியம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 79
ஆ. ந/5

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ஒப்பிலாமணி தேசிகர்
ஆ. சிவரகசியம்
இ. காப்பியம்
ஈ. செய்யுள் 2503

3. தோற்றக் கூறுகள்

அ. 277 ஏடு ; 554 பக்கம்.
ஆ. நீளம் 44 செ. மீ. ; அகலம் 4.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 12 வரி.
உ.. தெளிவான கையெழுத்து.
ஊ. 210 என்ற ஏட்டெண் இரு முறை எழுதப்பட்டுள்ளது. பல ஏடுகளில் தொளைகள். சுமாரான நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கேத்திரமுந் தீர்த்தமொடு மூர்த்தியென
மூன்றுமொன்றிற் கிடைத்திட் டாலும்
....த்தவரி வேடமும்நீ றுமந்திரமு
மலாதுபலன் கொடுத்தி டாது

சேர்த்துமொரு கடவுளர்க்கு நிகராகப்
புகலரிய சிவமே யல்லாற்
சீர்த்திபெற வணிதிருவெண் ணீற்றினுண்மை
விரித்தெவர்கள் ……….. ……….. (1)

ஆ. முடிவு

வானவர் வாழ்க யாக மறையவர் வாழ்க வானுந்
தானமா மழையும் பாரும் சனங்களுந் தழைத்து வாழ்க
தேனமர் கொன்றை வேணிச் சிவபிரான் கருணை வாழ்க
வானநல் லறங்கள் வாழ்க வாசரும் வாழ்க வன்றே. (125)

5. ……………

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

25 : 458, 459 ; 27 : 970.

## 109. சிவப்பிரகாச உரை

1. நூலகக் குறிப்புகள்

அ. 80-1
ஆ. ஞ/2

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. உமாபதி சிவாசாரியர்
ஆ. சிவப்பிரகாச உரை
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. உரை நடை ; அச்சில் ஏறத்தாழ 120 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 33 ஏடு ; 66 பக்கம்.
ஆ. நீளம் 29 செ. மீ. ; அகலம் 4 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 13, 14 வரி.
உ. அழகிய தெளிவான கையெழுத்து.
ஊ. பல ஏடுகள் மிகச் சிதைந்துள்ளன.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஒளியா... திருமேனி — ஞானப்பிரகாசமான திருமேனியிலே நின்றும், உமிழ்தான மிகமேவு — சொரியா நின்ற மூன்று மதங்களு மிகுதியும் பெருகப் பொருந்துகையினாலே.......

ஆ. முடிவு

பெற்றியினிறுவி — இந்த முறைமையிலே நிறுத்திக்கொண்டு, பின்முன் றருமலை யொழியக் கொள்வோன் றன்மையில் — முன்னொடுபின் மயக்க விகற்பந்தீரக் கொள்ளுமுறைமையுடைய பெயர்களுக்குச் சாற்றலாமே — இந்த நூலை அனுக்கிரகம் பண்ணலாமென்றவாறு. 50. திருச்சிற்றம்பலம். நமச்சிவாயன் றிருவடிகளே சரணம். அம்பலவாணதேசிகன் றிருவடி வாழ்க.

இ. பிற்குறிப்பு

ஒடுக்கஞ் சுப்பிரமணியத் தம்பிரான் எழுதி முடித்த சிவப்பிரகாசம்.

## 5. பிறசெய்திகள்

இச்சுவடியில் மெய்கண்ட சாத்திரங்கள் அனைத்திற்கும் உரைகள் உள்ளன. உரையாசிரியரின் பெயர் தெரியவில்லை. உரை பதவுரையாக உள்ளது.

## 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

2 : 44570 ; 16 : 1307 ; 25 : 1188.

## 110. உண்மை விளக்க உரை

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 80 - 2
ஆ. ரு / 2

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. மனவாசகங் கடந்தார் - திருவதிகை
ஆ. உண்மை விளக்க உரை
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. உரைநடை ; அச்சில் சுமார் 32 பக்கம் வரும்.

### 3. தோற்றக் கூறுகள்

அ. 7 ஏடு; 14 பக்கம். (ஏட்டெண் 33 முதல் 40 வரை)
ஆ. நீளம் 29 செ. மீ.; அகலம் 4 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 13, 14 வரி.
உ. அழகிய தெளிவான கையெழுத்து.
ஊ. ஏடுகள் மிகச் சிதைந்துள்ளன.
எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

வண்மை தருமாகம நூல் - வளப்பத்தைத் தரப்படா நின்ற வாகம நூலிலே, வைத்தபொருள் வழுவா வுண்மை விளக்க முரை செய்ய - பரமேசுர னருளிச்செய்துவைத்த பதியினுண்மையும் பசுவினுண்மையும் பாசத்தினுண்மையும் வழுவாமலிந்த நூலிலே விளங்கச் சொல்வது பொருட்டாக.......

ஆ. முடிவு

மன்னதிகை வாழு மனவா சகங்கடந்தான்
மின்னனையார் வாழ்வினுறா மெய்கண்டான் - பன்மறைகள்
வண்மைதரு மாகமநூல் வைத்த பொருள்வழுவா
துண்மைவிளக் கஞ்செய்தா னுற்று. (54)

உண்மை விளக்கம் முற்றும்.

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1 : 892.

## 111. திருவருட் பயன் உரை

1. நூலகக் குறிப்புகள்

அ. 80 - 3
ஆ. ரு / 2

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. உமாபதி சிவாசாரியர்
ஆ. திருவருட்பயன் உரை
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. உரை நடை ; அச்சில் ஏறத்தாழ 50 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 9 ஏடு; 18 பக்கம். (ஏட்டெண் 40 முதல் 49 வரை)
ஆ. நீளம் 29 செ. மீ.; அகலம் 4 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 13, 14 வரி.
உ. அழகிய தெளிவான கையெழுத்து.
ஊ. ஏடுகள் மிகச் சிதைந்துள்ளன.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

நற்குஞ்சரக்கன்று நண்ணில்-நல்ல ஞானசொரூபனாகிய யானை முகத்தினையுடைய விக்கினேசுரனைப் பொருந்தி லஞ் ஞான நீங்கி ஞானம் பிரகாசியா நிற்கும் ; கலை ஞானம் கற்குஞ் சரக்கன்று காண்-வேதாகம புராண கலைகள் யாவும் கற்கிறத் துக்கு அரிதல்ல; காண்-அறிவாயாக என்றவாறு.

ஆ. முடிவு

விடயங்களை நீங்காரோ வென்னில் :— கள்ளத் தலைவர் துயர் கருதி-இந்திரியங்களுடனே கூடினாலுண்டான கிலேசத்தை யுணர்ந்து, தங்கருணை வெள்ளத்தலைவர் மிக-சிவனுடைய கிருபா சமுத்திரத்திலே மிகவும் பத்திபண்ணுவார்களென்றவாறு. (10) திருவருட் பயனுரை முற்றும். திருச்சிற்றம்பலம்.

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

25 : 1199 - 1201.

## 112. இருபா இருபது உரை

1. நூலகக் குறிப்புகள்

அ. 80-4.
ஆ. ஞ/2.

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அருணந்தியார்
ஆ. இருபா இருபது உரை
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. உரைநடை; அச்சில் ஏறத்தாழ 100 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 26 ஏடு ; 52 பக்கம். (எட்டெண் 49 முதல் 74 வரை)
ஆ. நீளம் 29 செ. மீ.; அகலம் 4 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 13, 14 வரி.
உ. பல ஏடுகள் மிகச்சிதைந்துள்ளன.
ஊ. அழகிய தெளிவான கையெழுத்து.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

இந்நூலுக்கு வரலாறு :- பூரணகர்த்தாவாயிருக்கப்பட்ட சீகண்ட பரமேசுரனருளிச் செய்யப்பட்ட சிவாகமத்தின் ஞான காண்டமாயிருக்கப்பட்டதைச் சிரீநந்திதேவத் தம்பிரானார்க்குக் கடாட்சித்தருள சிரீநந்திதேவத் தம்பிரானார் சனற்குமார பகவானுக்குக் கடாட்சித்தருள சனற்குமார பகவான் சத்திய ஞான தரிசனிகளுக்குக் கடாட்சித்தருள...

ஆ. முடிவு

கண்ணகன் ஞாலத்துவென்னு முதலகவலிலே சீறியருளல் சிறுமையுடைத்தா லென்று சீஷன் கூறியதற்கு உத்தரமாக ஆசாரியர் அபக்குவ பக்குவக்குறி பார்த்தருளினங்குரு முதலாய் என்ற பதத்துக்குப் பொருள் நாஞ்சொன்னவர்த்தங்களை மாறு பாடாகக் கொள்ளுகையாலே நாங் கோபித்துக் கொண்டோம் என்று ஆசாரியர் திருவுளம் பற்றுகையாலே ஆசாரியர் திருவுளம் பற்றினதே சத்தியம். அந்த ஆசாரியர் வாக்கியத்துக்குச் சாத்திர சம்மதி யெழுதினதினாலும் ஆசாரியர் திருவுளம் பற்றினது சத்தியமென்கிறதைக் குரு முகாந்திரமாகக் கேட்டு அனுபவத் தாற்கண்டு கொள்க. இனி இந்த வியாக்கியையுமிந்த சாத்திரத் தினுள்ள வினா விடையத்துக்குச் சாத்திர சம்மதியுந் திருவாவடு துறை நமசிவாய பண்டார மரபிலே வேலப்பப்பண்டாரத்தின் சீடன் நமசிவாயத் தம்பிரான். திருச்சிற்றபலதேசிகன் திரு வடிகளே சரணம்.

இ. பிற் குறிப்பு

சுப்பிரமணியத் த பிரான் எழுதியது.

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1: 57, 103, 133; 16: 2139, ஆர். 1367; 18: 6235; 25: 1133—1137; 27: 54டி, 553டி; 31: 227சி, 276, 286பி; 60: 25எஃப்

## 113. வினா வெண்பா உரை

1. நூலகக் குறிப்புகள்

அ. 80 - 5

ஆ. ரு/2

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. உமாபதி சிவாசாரியர்

ஆ. வினா வெண்பா உரை

இ. மெய்கண்ட சாத்திரம்

ஈ. உரை நடை ; அச்சில் சுமார் 15 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 3 ஏடு; 6 பக்கம். (ஏட்டெண் 81 முதல் 83 வரை)

ஆ. நீளம் 29 செ. மீ., அகலம் 4 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 13, 14 வரி.

உ. அழகிய தெளிவான கையெழுத்து.

ஊ. ஏடுகள் மிகச் சிதைந்துள்ளன,

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பரிபூரண கர்த்தாவாயிருக்கிற சிரீகண்ட பரமேசுரரருளிச் செய்யப்பட்ட சிவாகம... ... ஞான காண்டமாயிருக்கிறதை நந்திகேசுர சுவாமிக்குக் கடாட்சித்தருள நந்திகேசுர சுவாமி சனற்குமார பகவானுக்குக் கடாட்சித்தருள சனற்குமார பகவான் சத்திய ... களுக்குக் கடாட்சிக்கச் சத்தியஞானதரிசினிகள் பரஞ்சோதி மாமுனிக்குக் கடாட்சிக்க......

ஆ. முடிவு

அறியத்தக்கதாக வினா வெண்பா வுண்மையை வினாவி யறியாதபேர் ஊமன் கனாவிலே பால் குடித்ததுக் கொக்குமென்று ஞான மிகுதியுடையோர்க்குச் சத்தியமாகவே தோன்றுமென்று மல்லாத பேர் எத்தனை சாத்திரம் படித்தாலும் வினாவெண்பா பாராதவனுக்கு ஊமன்கனாவிலே பால் குடித்ததுபோல் ஒன்றுந் தெரியாதென்றவாறு. 13. வினாவெண்பா முற்றும்.

## 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

16: 1407; 25: 1212.

# 114. கொடிக்கவி உரை

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 80 – 6
ஆ. ஞ/2

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. உமாபதி சிவாசாரியர்
ஆ. கொடிக்கவி உரை
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. உரைநடை; அச்சில் ஏறக்குறைய 15 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 3 ஏடு; 6 பக்கம். (ஏட்டெண் 84 முதல் 86 வரை)
ஆ. நீளம் 29 செ. மீ.; அகலம் 4 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 13,14 வரி.
உ. அழகிய தெளிவான கையெழுத்து.
ஊ. ஏடுகள் மிகச் சிதைந்துள்ளன.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சார்புநூல் பண்ணின கொற்றங் குடியார் இதிலே கொடிப் பாட்டு நாலும் ஒரு சாத்திரமந்தச் சாத்திர மெல்லாத்திலும் மேற்பட்ட சங்கையைத் திருவுளம் பற்றினதென வறிக. ஒளிக்கு மிருளுக்கு மொன்றேயிடம் எ து ஆணவத்துக்கும் ஞானத்துக்கும் இடம் ஒன்றே.

ஆ. முடிவு

இப்படி ஞானத்திலே யழுந்துகிறோ மென்கிறதையும் விட்டு விடவே சிவன் தானே யிவனைக் கிரகித்துக் கொண்டும் இவன் செயலெலாந் தன் செயலாகவு மிவனுந் தானாகவே நிற்பன். இதற்கு உ....ம் திருவுந்தியாரில், ''நஞ்செய லற்றிந்த நாமற்ற பின் னாதன் றன்செய றானெயென் றுந்தீபற தன்னையே தந்ததென் றுந்தீபற'' ஆகையாலிந்த மூன்று வகையுங் கண்டு கொள்க. (4) கொடிக்கவி உரை முற்றும். திருச்சிற்றம்பல தேசிகர் பாதமே கதி.

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1: 891 ; 16 : 1247 ; 25 : 1149.

## 115. திருவுந்தியார் உரை

1. நூலகக் குறிப்புகள்

அ. 80 - 7
ஆ. ஞ/2

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. உய்யவந்ததேவ நாயனார்—திருவியலூர்
ஆ. திருவுந்தியார் உரை
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. உரைநடை ; அச்சில் ஏறத்தாழ 20 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 4 ஏடு ; 8 பக்கம். (ஏட்டெண் 87 முதல் 90 வரை)

ஆ. நீளம் 29 செ. மீ.; அகலம் 4 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 13,14 வரி.

உ. அழகிய தெளிவான கையெழுத்து.

ஊ. ஏடுகள் மிகச் சிதைந்துள்ளன.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பரிபூரணமாயிருக்கிற சிவனாத்மாக்களுக்குச் சிவானுபவம் விளையும் நிமித்தமாக மானுடச் சட்டை சாத்தி யுய்யவந்ததேவ நாயனாரென்னுந் திருநாமத்தையுஞ் சாத்திக்கொண்டு வட வேங்கிடந் தென்குமரி யெல்லைக்குள்ளே சஞ்சாரம் பண்ணுங் காலத்து ஒரு நாட் டிருவியலூரிலே யெழுந்தருளினார்.

ஆ. முடிவு

உய்யவந்ததேவ நாயனார் செய்த திருவுந்தியாரென்னும் நூலினுடைய வுண்மையையறிந்தவர்கள் பிரபஞ்ச முழுவதையு மெஞ்ஞான சாகரமாகக் காணக்கடவது என்றவாறு. (45)
திருவுந்தியாருரை முற்றும்.

6. மாற்றுச்சுவடிகள் காணுமிடம்

18 : 11480 ஏ.

## 116. திருக்களிற்றுப் படியார் உரை

1. நூலகக் குறிப்புகள்

அ. 80-8

ஆ. ஞ/2

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. உய்யவந்ததேவ நாயனார்—திருக்கடவூர்
ஆ. திருக்களிற்றுப்படியார் உரை
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. உரைநடை; அச்சில் ஏறத்தாழ 60 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 11 ஏடு ; 22 பக்கம். (எட்டெண் 90 முதல் 100 முடிய)
ஆ. நீளம் 29 செ. மீ. ; அகலம் 4 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 13, 14 வரி.
உ. அழகிய தெளிவான கையெழுத்து.
ஊ. ஏடுகள் மிகச் சிதைந்துள்ளன. 91 என்னும் எட்டெண் தவறாக இருமுறை எழுதப்பட்டுள்ளது.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அம்மையப்பரே யுலகுக் கம்மையப்ப ரென்றறிக—அம்மை யாகிய சத்தியும் அப்பராகிய சிவனும் பிரபஞ்சத்துக்குக் காரண மென்றறிக ; அம்மையப்பரப்பரிசே வந்தளிப்பர் எ....து அம்மை யப்பராகிய சிவனந்த சத்திவழியாக வந்து மோட்சத்தைக் கொடுப்பர்.

ஆ. முடிவு

எனது இதையத்திலும் தலையிலும் தனது திருவடி பொருந்தும் வண்ணம் மானிடர்போல் வந்தவனைப் பூமியின் கண்ணே நாமினிப் பிறவா வண்ணம் தனது ஞானத்தைத் தந்தவனைத் திருவருளுடனே கூடியெக்காலமும் வாழ்ந்திருக்கக் கடவனென்று வாழ்த்துவதே யல்லாமல் வேறேயெந்த வார்த்தை சொல்லி வாழ்த்தப் போகிறேனியா னென்றவாறு. 100. திருக்களிற்றுப்படியாருரை முற்றும்.

## 117. சங்கற்ப நிராகரணம் உரை

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 80-9
ஆ. ரு/2

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. உமாபதி சிவாசாரியர்
ஆ. சங்கற்ப நிராகரணம் உரை
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. உரைநடை ; அச்சில் ஏறத்தாழ 120 பக்கங்கள் வரும்.

### 3. தோற்றக் கூறுகள்

அ. 38 ஏடு ; 76 பக்கம். (ஏட்டெண் 101 முதல் 138 முடிய)
ஆ. நீளம் 29 செ. மீ. ; அகலம் 4 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 15, 16 வரி.
உ. அழகிய தெளிவான கையெழுத்து.
ஊ. ஏடுகள் மிகச் சிதைந்துள்ளன.
எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

திருந்திய வருந்தவம் பொருந்து........ முனிவர்க்
கமையாக் காத லமையாது பழி........
நிகரில் செக்கர்ப் புகர்முகத் தெழுந்த
புனிற்று வெண்பிறைத் தனிப்பெருங் கோட்டுத்
தழைச்செவி மழைமத ... ........ .... .. கை.

ஆ. முடிவு

பாயிரத்திலே யாறுபேரென்று சொல்லி யகவலிலே எட்டுப் பெயரானது. பாடாணவாதி, பேதவாதி, சமவாதியிவர்கள்

மூன்றுபெயருடைய பேத மூன்று மொன்றா யிருக்கையினாலும் மூன்று பேருடைய முத்தியும் பேத வாதமாயிருக்கையினாலும் பாடாணவாதி, சமவாதி, பேதவாதி மூன்றுமொன்று; அவிகார வாதமொன்று, சங்கிராந்த மொன்று, அயிக்க வாத மொன்று, பரிணாம வாதியொன்றும், சைவரொன்றுமாகச் சமையமாறு மென்றறிக.

தராவலயத் துள்ளோர்கள் தந்தசங் கற்ப
நிராகரண மென்னால் நிகழ்த்தும் பிரானையினி
வெம்பந்த நீங்கத் தொழுமின் வியன்மருதச்
சம்பந்தன் வந்தருளுந் தான்.
சங்கற்ப நிராகரண முற்றும்.

## 118. சமரசம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 80-10
ஆ. ரு/2

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ............
ஆ. சமரசம்
இ. தத்துவம்
ஈ. செய்யுள் 26

### 3. தோற்றக் கூறுகள்

அ. 2 ஏடு ; 4 பக்கம். (ஏட்டெண்கள் 139, 140)
ஆ. நீளம் 29 செ. மீ. ; அகலம் 4 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 18 வரி.
உ. அழகிய தெளிவான கையெழுத்து.
ஊ. ஏடுகளில் ஆங்காங்குத் தொளைகள்.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அணங்கெதிரம் பலத்தாடு மையரைந்து கரத்தோன்
ஆறுமுக னடிபோற்றி நந்தி கேசர்
இணங்குமலர்த் தாள்போற்றி யவர்சந் தானத்து
எமையுடையோர் தாள்போற்றித் திருத்தொண்டத்
தொகையுள்
பணங்கமழ்தார் நம்பியா ரூரர் சொன்ன
மாமுனிவர் தாள்போற்றி வாத வூரர்
குணங்கடந்த தாள்போற்றிச் சமரசத்தைச் சொல்வேன்
கொண்டுமுடித் தென்னையுமாட் கொள்வாராங்
கவரே. (1)

ஆ. முடிவு

இனியதிருக் கோயிலினி யிவவிடங்க ளென்ன
இசைக்குஞ்சு ரணியேது வதுதன்னை யென்......
முனியவெண்பா விரண்டிவைக்கு ஞானயோ கப்.......
மொழிவினையால் வெள்ளைக்கு மந்திரத்தா லெனும்பா
வுனியசிவ னெனும்வெண்பாப் பரப்பிரமம் பெறுமென்று
உரைப்பர்நூ லிரண் ........... மொன்றாக வுள்ளங்
கனியவருள் செங்கமலப் பொற்பாதன் அருட்கண்
கண்டபரி பாகாரந் தொ ..........னவனே. 26.13
முற்றும்.

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

31 : 227 எஃப்.

## 119. உண்மைநெறி விளக்க உரை

1. நூலகக் குறிப்புகள்

அ. 80 - 11
ஆ. ஞ/2

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. தத்துவநாதர் -- சீகாழி

ஆ. உண்மை நெறி விளக்க உரை

இ. மெய்கண்ட சாத்திரம்

ஈ. உரைநடை ; அச்சில் ஏறத்தாழ 8 பக்கங்கள் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 2 ஏடு ; 4 பக்கம். (ஏட்டெண்கள் 141, 142)

ஆ. நீளம் 29 செ. மீ.; அகலம் 4 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 16, 17 வரி.

உ. அழகிய தெளிவான கையெழுத்து.

ஊ. ஏடுகள் ஆங்காங்கு சிதைந்துள்ளன.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

மண்முதற் சிவமதீ வடிவு காண்பதுவே ரூபம் - பிருதுவி முதல் நாதமீறான முப்பத்தாறு தத்துவங்களையுந் தனுவுங் கரணமும் புவன... முஞ்செயலும் கமுமாய் நின்ற பெருவடிவுங் குணமுந் தனக்கு வேறாய்க் காண்பதுவே தத்துவ ரூபமாம்.

ஆ. முடிவு

பெருகு... மெனப் பேசு நெறியிதுவே — செடசித்து ரூபமாகிய பிரபஞ்ச மெவ்விடத்திலுந் தோன்றாமற் பெருகப்பட்ட சிவானந்தமே வீடாகிய சிவயோகத்தினது முறைமையித்தன்மைத் தென்று வேதாகமங்களெல்லாஞ் சொல்லு மென்றவாறு. (6)

உண்மை நெறி விளக்கம் முற்றும். சிவமயம்.

## 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

18 : 2143 பி ; 25 : 1142.

## 120. போற்றிப் பஃறொடை

1. நூலகக் குறிப்புகள்

அ. 80 - 12
ஆ. ரு/2

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. உமாபதி சிவாசாரியர்
ஆ. போற்றிப் பஃறொடை உரை
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. உரைநடை ; அச்சில் ஏறத்தாழ 40 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 5 ஏடு ; 10 பக்கம். (ஏட்டெண் 143 முதல் 147 வரை)
ஆ. நீளம் 29 செ. மீ.; அகலம் 4 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 17, 18 வரி.
உ. அழகிய தெளிவான கையெழுத்து.
ஊ. ஏட்டெண் 148 முதல் 150 வரை காணப்படவில்லை. உள்ள ஏடுகளும் ஆங்காங்கு சிதைந்துள்ளன.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பூமன்னு நான்முகத்தோன் புத்தேளிர் ஆங்கவர்கோன்
மாமன்னு சோதி மணிமார்பன்—நாமன்னு
வேதவே தாந்தம் விளக்கஞ்செய் விந்துவுடன்
நாதம்நா தாந்தம் நடுவேதம்—போதத்தால்
ஆமளவும் தேட அளவிறந்த அப்பாலைச்
சேம வொளிஎவரும் தேறும்வகை—மாமணி சூழ்

ஆ. முடிவு

இப்படி மானிடர் போலத் திருமேனி கொண்டு ஆசாரிய மூர்த்தமாய்ப் பெண்ணாகடத்திலே யெழுந்தருளியிருந் தெங்களுக்குப் புறச்சமையப் பொருள்களெல்லாம் அறிவித் ததிலேயொரு பிரயோசனமு மில்லை யென் றறிகிற திடமே பெருக்கும்படி செய்வித்துத் தேறாமலிருந்த சித்தந் தெளியும்படிக்குத் திருமேனித் தரிசனம் கொடுத்தருளிய தகைமையும் போதாமல் மேம்பாடாகிய மெய்கண்ட சந்தானச் சுத்தசைவ நெறியெல்லா மறிவித்துத் தீட்சை பண்ணிய சமைய விசேட நிருவாண வபிடேகமென்னு நான்கு வகையும் அவரவர் விட்ட குறைஅறிந்து கொடுத்திரட்சித்துச் சிவந்த தாமரை மலர் போன்ற திருக்கண்ணருளினாற் பார்த்துத் துன்பப்பிறப்பினாற் பட்ட புண்ணுடம்புத் துன்பமும் இருவினைத் துன்பமு முயிரைவிட்டு நீங்கும் படிக்கு அழகு பொருந்திய திருக்கைத்தலத்தைச் சிரசிலே வைத்தருளிக் கரடு போன்றிருந்த நெஞ்சை யக்கினியைச்........

## 121. சிவஞான சித்தியார்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 80 - 13

ஆ. ரு / 2

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அருணந்தியார்

ஆ. சிவஞான சித்தியார் உரை

இ. மெய்கண்ட சாத்திரம்

ஈ. உரைநடை; அச்சில் ஏறத்தாழ 400 பக்கம் வரும்.

### 3. தோற்றக் கூறுகள்

அ. 109 ஏடு; 218 பக்கம். (ஏட்டெண் 151 முதல் 259 முடிய)

ஆ. நீளம் 29 செ. மீ., அகலம் 4 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 15, 16, 17 வரி.

உ. அழகிய தெளிவான கையெழுத்து.
ஊ. ஏடுகள் மிகவும் பழுதுபட்டுள்ளன; பல இடங்களில் சிதைவு.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

(''ஒருகோட்டன் இருசெவியன்'' என்னும் காப்பு விருத்தம் முதலில் கொடுக்கப்பட்டுப் பிறகு கண்ணழித்துக் காட்டப் பட்டுள்ளது.)

இதன்பொருள்-கங்கையாறும் கோணுதலைத் தரும் பிறையும் கொன்றையு முடைத்தாய்த் தாழ்ந்த சடையினையுடைய பரமேசுரன் பிள்ளையாகத் தரப்பட்ட தேவன் ஒருகொம்பையும் இரண்டு செவியையும் மூன்றுமதத்தையும் நான்றவாயையும் ஐந்து கரத்தையுமுடையனாகிய வொப்பற்ற வானையினது தாள்கள் ...

ஆ. முடிவு

அன்றவை பதிதானொன்றென்றறையும் அக்கரங்கடோறும் சென்றிடும் அகரம் போல எ....து இப்பிரபஞ்ச கருத்தா வொருவ னென்று வேதங்கள் சொல்லு மஃதன்றிச் சீவாத்மாவும் பரமாத் மாவாகிய பிரமமும் ஒரு பொருளென்ற தன்று - அஃது என்போல என்னி லகரவுயி ரொன்றாயிருந்தும் மெய்கடோறுங் கூடி நின்றவையிற்றை நடத்துமது போல; நின்றனன் சிவனுஞ் சேர்ந்தே எ...து ஆத்மாக்களுக்குத் தனி (இதற்குமேல் இருக்க வேண்டிய ஏடுகள்காணப்படவில்லை. இது ஒன்றென மறைக ளெல்லாம் எனத் தொடங்கும் சுபக்கத்தின் 92-ஆவது திருவிருத்தம் )

5. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1 : 94, 95, 109, 894; 16 : 1267; 18 : 11470; 25 : 1174, 1182; 31 : 224-225.

## 122. விநாயக புராணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 81
ஆ. ந / 6

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. கச்சியப்ப முனிவர்

ஆ. விநாயக புராணம்

இ. காப்பியம்

ஈ. செய்யுள் 6223

## 3. தோற்றக் கூறுகள்

அ. 355 ஏடு; 710 பக்கம்.

ஆ. நீளம் 33.5 செ. மீ., அகலம் 3.5 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 11 வரி.

உ. அழகிய தெளிவான கையெழுத்து.

ஊ. பல ஏடுகள் மிகச் சிதைவு ; பெரும்பாலான ஏடுகளில் தொளைகள்.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அகரமென வறிவாகி யுலக மெங்கும்
அமர்ந்.... அகரமக ரங்கள் தம்மாற்
பகருமொரு முதலாகி வேறு மாகிப்
பலவேறு திருமேனி தரித்துக் கொண்டு
புகரில்பொரு ணான்கினையும் இடர்தீர்ந் தெய்தப்
போற்றுநருக் கருட்கருணை புரிந்தல் லார்க்கு
நிகரின்மறக் கருணைபுரிந் தாண்டு கொள்ளும்
திருமலனைக் கணபதியை நினைந்து வாழ்வாம். (1)

ஆ. முடிவு

அருள்பொழி கணேசன் செய்ய வடிமலர் வாழ்க வன்னான்
பொருந்திய புராண மோங்கிப் பொலிகவீ துணர்ந்தெல்லோரும்
மருவுக பயன்க ணான்கும் மன்னுக வுலக மெல்லாந்
திருவொடு சிறக்க வெங்குஞ் செயிரிலாச் சைவ மென்றும். (62)

சோமகாந்தன் முத்திப்படலம் முற்றும். ஆகப்படலம் 15-க்கு விருத்தம் 31 7. ஆகக்காண்டம் 2-க்குப் படலம் 95; திருவிருத்தம் 6223.

இ. பிற்குறிப்பு

1023-ஆம் வருடம் ஆடி மாதம் 18-ஆம் தேதி ஆதித்த வாரமும் அமரபட்சப் பஞ்சமியும் உத்திரட்டாதி நட்சத்திரமுங் கூடின சுபதினத்தில் இந்த விநாயக புராணம் எழுதி முற்றுப் பெற்றது. செரக்கலிங்கம் சுகஸ்தலிகிதம். ஞானசம்பந்த குரு பாத முன்னின்று ரெட்சிக்க. விநாயகர் துணை.

## 5. பிற செய்திகள்

நூல் முற்றுப்பெற்ற பிறகு கீழ்க்கண்ட பாடல் எழுதப் பெற்றுள்ளது.

வரசன்ன வீரமுரத் திடைவிளங்க
    முடிமுடியின் வயங்க விண்ணோர்
பரசன்ன நினதுசே வடிநாயேன்
    சிரத்தும் பதித்தல் செய்யாய்
விரசன்ன மலர்த்தடஞ்சூழ் சென்னைநகர்
    வீற்றிருந்த விமல வாழ்வே
பிரசன்ன விநாயகனே அடியருளம்
    பிரியாத பெருமை யானே.

இறுதி ஏட்டில் சீகாழி வடுகநாதபண்டாரம் அவர்களால் இயற்றப்பெற்ற சிறப்புப்பாயிரம் எழுதப்பட்டுள்ளது.

## 6 மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1 : 85; 18 : 3879, 5455; 25 : 478-480, 1419; 26 : 208; 31 : 58; 32 : 229, 232.

## 7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

# 123. வில்லிபாரதம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 82
ஆ. ந / 7

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. வில்லிபுத்தூரார்
ஆ. வில்லிபாரதம் - கிருஷ்ணன் தூதுச்சருக்கம் முடிய.
இ. காப்பியம்
ஈ. செய்யுள்

## 3. தோற்றக் கூறுகள்

அ. 240 ஏடு; 480 பக்கம்.
ஆ. நீளம் 42 செ. மீ., அகலம் 4 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 7, 8, 9 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. 167, 168, 169 ஆகிய மூன்று ஏடுகள் இல்லை. பல ஏடுகள் மிகவும் சிதைந்துள்ளன. பழுதுற்ற சுவடி.
எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

நீடாழி யுலகத்து மறைநாலொ டைந்தென்று நிலைநிற்கவே
வாடாத தவவாய்மை தவறாத முனிராசன் மாபாரதஞ் செய்தநாள்
ஏடாக மாமேரு வெற்பாக வெங்கூரெ முத்தாணிதன்
கோடாக வெழுதும்பி ரானைப்ப ணிந்தன்பு கூர்வாமரோ.

ஆ. முடிவு

தூதுபோ யரவத் துவசனோ டுறுதி
 சொன்னது மறுத்தவன் சொல்லி
மோதுபோர் புரியத் துணிந்ததும் விதுரன்
 மூரிவில் லிறுத்ததுங் கங்குற்
போதுபோய் வஞ்சம் விளைத்ததுங் கன்னன்
 புரந்தரற் கீந்ததும் பயந்த
மாதுபோய் வரங்கள் பெற்றது மொழிய
 மற்றெலா மைத்துனர்க் குரைத்தான். (260)

கிருட்டினசுவாமி தூதுபோன சருக்கம் முற்றும். சருக்கம் 25க்குத் திருவிருத்தம்.... (விருத்தத்தொகை எழுதப்படவில்லை)

## 5. பிறசெய்திகள்

ஏட்டெண் 166-இல் ''கனல்காலுமிருகண்ணான். (33)'' என்பதற்குப் பிறகு ஒன்றுமே எழுதப்படவில்லை. 166 முதல் மூன்று ஏடுகள் காணப்படவில்லை. எனவே இச்சுவடியின் மூலச் சுவடியில் இப்பாடல்கள் உள்ள பகுதி சிதைந்திருக்க வேண்டும். பிறகு வேறு சுவடியைத் தேடிப்பார்த்து எழுதிக்கொள்ளலாம் என விட்டிருக்க வேண்டும்.

## 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

18 : 6324, 8821, 8887, 10360, 10375, 10384; 27 : 64, 84, 86-94, 699; 28 : 10659; 60 : 269, 270.

## 7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

# 124. திருப்பாதிரிப் புலியூர்த் தலபுராணம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 83

ஆ. ப/12

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. சிதம்பரநாத முனிவர்—இலக்கணம்
ஆ. திருப்பாதிரிப்புலியூர்த் தலபுராணம்
இ. தலபுராணம்
ஈ. செய்யுள்; அச்சில் ஏறத்தாழ 300 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 185 ஏடு ; 370 பக்கம்.
ஆ. நீளம் 22 செ. மீ. ; அகலம் 3.5 செ. மீ.
இ. இருபுறமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 8 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. 184, 185, 186 ஆக மூன்று ஏடுகள் காணப்படவில்லை. பெரும்பாலும் அனைத்தேடுகளும் சிதைந்துள்ளன. மிகப் பழுதுற்ற நிலை.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கருணைமத முவட்டெடுப்ப முத்திவனத்
திடைதிரிந்து காள மேகத்
தருணமதி யுதயமெனுந் திலகநுத
னித்திலப்பூ ணழகு செய்ய
மருணனிசேர் தெய்விகமுற் பவுதிகமான்
மிகவிருத்த மாடித் தேவர்
பொருணிறைபூ சனை....ந்த வலம்புரிக்கைக்
களிற்றிருதாள் போற்றி வாழ்வாம்.

ஆ. முடிவு

பற்பல .......... மிடை.... பொலிய
பவ....திற் கால்பல பரப்பி
விற்பொலி கனக நவமணி குயின்ற
விட்டசட் டங்கள் தாங்க

அற்புதவிரி சூரிய ............ ............
............ ............ ............
பொற்புறு மிரதத் ............ போலும்
பொன்மலை தலைகுனிந் ததுவே. (11)

(இதற்குமேல் ஏடுகள் இல்லை. இது உபமன்யு சாபந் தீர்த்த சருக்கத்துக்கு அடுத்த சருக்கத்தின் 11 ஆம் பாடல்.)

5. ............................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1 : 124 ; 31 : 17.

## 125. தேவாரப் பதிகங்கள்

1. நூலகக் குறிப்புகள்

அ. 84
ஆ. ண/13

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. திருஞானசம்பந்தர் முதலியோர்
ஆ. தேவாரப் பதிகங்கள்
இ. சைவத்திருமுறை
ஈ. செய்யுள் ; 47 பதிகங்கள் ; சுமார் 500 பாடல்.

3. தோற்றக் கூறுகள்

அ. 161 ஏடு ; 322 பக்கம்.
ஆ. நீளம் 20 செ. மீ.; அகலம் 3.5 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 6, 7, 8 வரி.
உ. தெளிவர்ன கையெழுத்து. பலவகையானவை.

ஊ. மிகப்பல ஏடுகளில் தொளைகள். பழுதுற்ற சுவடி.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

முதலில் ''திருவாக்குஞ் செய்கருமம் கைகூட்டும்'' என்னும் மூத்தநாயனார் திருவிரட்டை மணி மாலையின் முதற் செய்யுள் காப்பாக எழுதப்பட்டுள்ளது.

கோயில் :- பண் : குறிஞ்சி

கற்றாங் கெரியோம்பிக் கலியை வாராமே
செற்றார் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
முற்றா வெண்டிங்கள் முதல்வன் பாதமே
பற்றா நின்றாரைப் பற்றா பாவமே. (1)

ஆ. முடிவு

மலைக்குநே ராய்அ ரக்கன் சென்றுற மங்கை யஞ்சத்
தலைக்கு மே.... ளாலெ .... ங்கினான் வலியை மாள
வுலப்பி... விரலா லூன்றி யொறுத்தவர்க் கருள்கள் செய்து
வலைத்தவான் .... .... சூடு மாவடு துறையு ளானே. (10)

திருச்சிற்றம்பலம்.

# 126. விநாயக புராணம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 85
ஆ. ந/8

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. கச்சியப்ப முனிவர்
ஆ. விநாயக புராணம் (இரண்டாங் காண்டம். 4 ஆம் அத்தியாயம் முதல் இறுதிவரை.)

இ. காப்பியம்
ஈ. செய்யுள் 3175

3. தோற்றக் கூறுகள்

அ 386 ஏடு ; 792 பக்கம்.
ஆ. நீளம் 34 செ. மீ.; அகலம் 4.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 9 வரி.
உ. மிகத்தெளிவான கையெழுத்து.
ஊ. சில ஏடுகள் மிகச் சிதைவு. பலவற்றுள் தொளைகள். பழுதுற்ற நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

வெள்ளி மால்வரை விமலனார் திருவுளம் மகிழ
அள்ளு நீறுடன் முழுவது மணிந்தது போல
வெள்ளு றாவிமத் தால்விள ரிமையத்தி னிருந்தான்
தெள்ளு மாதவர் திலகமா கியசவு பரியே. (1)

ஆ. முடிவு

வரசன்ன வீரமுரத் திடைவிளங்க
முடிமுடியின் வயங்க விண்ணோர்
பரசன்ன நினதுதிருச் சேவடிநா
யேன்சிரத்தும் பதித்தல் செய்யாய்
விரசன்ன மலர்த்தடஞ்சூழ் சென்னைநகர்
வீற்றிருந்த விமல வாழ்வே
பிரசன்ன விநாயகனே யடியருளம்
பிரியாத பெருமை யானே.

பார்கவ புராண முற்றியது. நீடுழி வாழ்க. திருச்சிற்றம்பலம்.

இ. பிற் குறிப்பு

ஈசுர நாம சம்வச்சரம் சாலிவாகன சகாப்தம் 1799க்குச் சரியாகச் செல்லா நின்ற கொல்லம் 1053 ஆம் வருடம் தட்சிணா

யனமாகிய விருச்சிகரவி (கார்த்திகை மாதம்) 12 ஆம் தேதி ஆதித்த வாரம் அமரபட்சத்துப் பஞ்சமி திதியும் பூசநட்சத்திரமுஞ் சுபநாமயோகமுங் கௌலவா கரணமும் அமிர்தகடிகையுந் தனுர்லக்கினமுஞ் சாத்துமீக வேளையுஞ் சூரியஓரையுங் கூடிய இந்தச் சுபயோக சுபதினத்தில் ......

## 5. பிறசெய்திகள்

நூல் முடிந்த பிறகு ஓர் ஏட்டில் இச்சுவடியில் உள்ள படலங்களின் அட்டவணையும் மொத்தப் பாடற்றொகையும் கொடுக்கப் பட்டுள்ளது. அதுவருமாறு :—"படலம் 13க்குத் திருவிருத்தம் 3175. பார்கவ புராணம் காண்டம் 2க்குப் படலம் 91க்குத் திருவிருத்தம் 6676.

## 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

தொடர் எண் : 122 காண்க.

## 7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

# 127. சேக்கிழார் புராணம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 86
ஆ. ந/9

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. உமாபதி சிவாசாரியர்
ஆ. சேக்கிழார் புராணம்
இ. காப்பியம்
ஈ. செய்யுள் 100

3. தோற்றக் கூறுகள்

அ. 18 ஏடு ; 36 பக்கம்.

ஆ. நீளம் 20 செ. மீ.; அகலம் 3.5 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 10, 11 வரி.

உ. தெளிவான கையெழுத்து.

ஊ. சுவடி 64 ஆம் ஏட்டில் தொடங்குகிறது. 76 என்னும் எண் தவறாக இருமுறை எழுதப்பட்டுள்ளது. சுவடி மிக மிகப் பழுதுற்ற நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சீரருஞ் சதுமறையுந் தில்லைவா ழந்தணரும்
பாராரும் புலிமுனியும் பதஞ்சலியுந் தொழுதேத்த
வாராருங் கடல்புடைசூழ் வையமெலா மீடேற
ஏராரு மணிமன்று ளெடுத்ததிருப் பதம்போற்றி. (1)

ஆ. முடிவு

அண்டர் வாணர்தொழு தில்லை யம்பலவர்
அடியெ டுத்துலக லாமெனத்
தொண்டர் சீர்பரவு சேக்கிழான் வரிசை
துன்னு குன்றைநக ராதிபன்
றண்ட காதி ....... திருநெ றித்தலைமை
தங்கு செங்கைமுகில் பைங்கழற்
புண்ட ரீகமலர் தெண்ட னிட்டுவினை
போக்கு வார்பிறவி நீக்குவார். (100)

சேக்கிழார் புராண முடிந்தது. முற்றும். சிவமயம்.

5. ...........

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1 : 933 ; 16 : 584 ; 25 : 1532 ; 27 : 219 பி, 255 சி, 256இ, 285 சி.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 128. திருவருட்பா உபதேசத்திரட்டு

1. நூலகக் குறிப்புகள்

அ. 87
ஆ. ற/5

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ...........
ஆ. திருவருட்பா உபதேசத்திரட்டு
இ. பல்வகை நூல்கள்
ஈ. உரைநடை ; அச்சில் சுமார் 20 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 10 ஏடு ; 20 பக்கம்.
ஆ. நீளம் 36 செ. மீ .; அகலம் 2.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கம் இருபத்தியாகப் பிரித்துக் கொள்ளப்பட்டுள்ளது. பத்திக்கு 5 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. நல்ல நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அருட்பெருஞ்சோதி. சீவ காருண்ணியமே மோட்ச விட்டின் திறவு கோல். சீவதயவில்லாத பத்தி மாயா சாலமே. எவ்வுயிரும் தம்முயிர்போல எண்ணுபவரே தெய்வம். எவ்வுயிரும் பொதுவெனக் கொள்வது தெய்வவழிபாடு.

ஆ. முடிவு

தூற்றுவதால் வேற்றுமை ஒழியாது. சன்மார்க்க வித்து சமரசக்கனி. பிறப்பிறப்பென்பது உயிர் உடல். இது பழமை வாக்கியம் மாறல்.

## 129. ஞானத் திருப்புகழ்

1. நூலகக் குறிப்புகள்

அ. 88

ஆ. ட/2

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. பதஞ்சலி மாமுனிவர்

ஆ. ஞானத் திருப்புகழ்

இ. தத்துவம்

ஈ. செய்யுள் 9

3. தோற்றக் கூறுகள்

அ. 14 ஏடு ; 28 பக்கம்.

ஆ. நீளம் 30 செ. மீ.; அகலம் 3. 5 செ. மீ.

இ. பக்கத்திற்கு 5, 6, 7 வரி.

ஈ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

உ. தெளிவான கையெழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

காப்பு.

*சீலத் தரும்பொருளைத் தேசோன் மயப்பொழிவை*
*மூலத்த சைவ முதற்குருவை ஞாலமுணர்ந்து*
*உய்யப் பதஞ்சலிமுன் போதியதி ருப்புகழ்க்கைங்*
*கையனிரு பூஞ்சரணே காப்பு.*

ஆ. முடிவு

தான தானன தானன தானன... ...... தானானா

பால னாமறி யாமையு மேவிடு
கோல--வ யோதிக மேதரு (ஈ ரெழுத்துகள் குறைவு)
பானு நான் முதல் சோமன லோகுறி பாரீரோ

பானவை மார்மய லாசையி லேமன
மோடி னாலும்வி டாம - லேமரி (ஓரெழுத்து குறைவு)
யாதை நூல்வழி யாகவு மேவிடு பால்போலச்

சால வேபதி னாறள வாயட
யோக மானது வாகுமு னாலுறு
சாமி காரிய மியாவுக னால்வழி தானாகுஞ்

சாகு நாளையி லேசிவ னேயென
வோதி னால்விடு மோதலை மேல்விதி
சாட வேவரு மேமப டாளர்கள் தாழ்வாரோ?

மூல வாசிய யானபி ராணனை
மோன கேசர மேயுற வாகவு
மூலி காதிக ளாலிட ரேதுடன் மூசாதே

மூட ரேவய தோடித ளாடிய
நாளி லேயென ரேசக பூரக
மோச மேவரு நோய்பிணி யாலுடன் மீளாதே

கால தாமச மாயரை நாழியும்
விணி லேதிரி யாமன நேரொடு
காணு தேசிக னாரிரு சேவடி காணீரே

கா்டு வாவென வேகர நீடவும்
வீடு போவென வேசொலி யூடவும்
கால சூனிய மாமிது வேவிதி காணீரோ. (8)

பதஞ்சலி மாமுனிவர் அருளிச் செய்த ஞானத் திருப்புகழ் முற்றிற்று. சுபம்.

இ. பிற்குறிப்பு

வேலூர் தாலுக்கா பின்னத்துறை கிராமத்தில் இருக்கும் மேட்டிக்குடி தஞ்சிக் கவுண்டர் குமாரன் மே. அய்யாசாமிக் கவுண்டர் எழுதிவைத்துப் படித்த ஞானத் திருப்புகழ்ச் சுவடி.

ஸ்ரீமுக வருஷம் மார்கழி மாதம் 25 ஆம் தேதி சோமவாரம் சுபம். பரப்பிரமமே துணை.

## 130. ஆருட நூல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 89
ஆ. வ/1

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ........ ....
ஆ. ஆருட நூல்
இ. சோதிடம்
ஈ. உரைநடை ; அச்சில் ஏறத்தாழ 60 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 110 ஏடு; 220 பக்கம்.
ஆ. நீளம் 20 செ.மீ.; அகலம் 2. 5 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 4, 5 வரி.
உ. கிறுக்கலான கையெழுத்து. பிழைகள் ஏராளம்.
ஊ. நல்ல நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

நன்றுநின் னிமித்தங் கேட்கில் நாடிதான் தொட்ட லக்கம்
மன்னிலை மூவர்க் கேட்க வகையுடன் தொகையே கூட்டிப்
பத்தற வெட்டினாலே பகிர்ந்துபோய் மீந்த லக்கம்
என்னகரமங்கை கேட்கி லெழுதிடு நீமத் தாந்தானே.

இது ஒன்றுதான் விருத்தம்; பிறகு முற்றிலும் உரைநடை.

ஆ. முடிவு

இந்த வீட்டுக்கு மஞ்சியிடப்பாழாம். இந்த ராசாவின் பேரில் தளவாறாது. இந்த மணியத்தால் பலவகையால் லாபமுண்டு. இந்த வாய்க்கால் வெட்ட அநேக லாபமுண்டு. சிவமயம்.

இ. முற்குறிப்பு

சுக்கில வருடம் ஐப்பசி மாதம் 15 ஆம் தேதி குறலேரி தஞ்சி கவுண்டர் குமாரன் நல்லண்ண கவுண்டர் தான் எழுதிய நூற்றெட்டு சாத்திரம்.

## 151. ஆருட நூல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 90
ஆ. வ / 2

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ................
ஆ. ஆருட நூல்
இ. சோதிடம்
ஈ. உரைநடை ; அச்சில் ஏறத்தாழ 60 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 111 ஏடு; 222 பக்கம்.
ஆ. நீளம் 23.5 செ. மீ., அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 4, 5 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. நல்ல நிலை.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

இந்தச் சாஸ்திரம் பார்க்கும் விதம்:— மூன்றாகக் கயிறு மடித்து இருகையிலும் பிடித்துக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணபகவானையும் நினைத்துக் கொண்டு கோரிய அலுவலையும் நினைத்து மேற்படிகயிற்றைச் சுவடியில் போட்டு இந்த மூன்று ஏட்டிலுள்ள நெம்பர் கணக்கை ஒன்றாய்ச் சேர்த்து 9 பாகம் பாகித்து மீதி எத்தனையோ அத்தனை ஏட்டில் இருந்து நாம் கோரிய காரியம் நன்மை தின்மை காணலாம்.

ஆ. முடிவு

இந்த ராஜாவின்பேரில் படைவரும். அலைச்சலுண்டாம். வாய்க்கால் வெட்ட அதனாலே லாபமுண்டாம். சண்டைக்குப் போகக் காயம்பட்டு வருவான். இந்த உத்தியோகத்தில் ஆதாயமுண்டு. நல்லது.

# 152. மன்மதன் கதை

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 91
ஆ. ர / 4

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. .......................
ஆ. மன்மதன் கதை
இ. நாட்டுப் பாடல்
ஈ. செய்யுள் ; அச்சில் ஏறத்தாழ 30 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 76 ஏடு; 152 பக்கம்.
ஆ. நீளம் 28 செ. மீ., அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 4, 5 வரி.

உ. கிறுக்கலான கையெழுத்து.

ஊ. சுவடியின் 47, 48 ஏடுகளுக்கிடையில் எட்டெண் கொடுக்கப் படாத மூன்று ஏடுகள் பின்னர் சேர்க்கப்பட்டுள்ளன. சில ஏடுகள் சற்றே பழுதடைந்துள்ளன. பொதுவாக நல்ல நிலை.

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

முக்கண்ணர் புதல்வ னான முரகரி மருக னான
தக்கன்வேள் வியைத்த கர்த்த தனியானை முகவ னான
பக்குவ முடைய ஞானம் பகர்ந்ததே வருக்கு மேலாய்
மிக்கசீ லேரி வாழும் வேதவி நாயக போற்றி.

ஆ. முடிவு

பாரிய தேவர்கள் அனுப்பநான் இங்குவரும்
 பணியுண்டு நந்தி தேவா
காரணி கண்டவர் தம்மைக் காணவே வேண்டிச் சொல்லும்
 காரியம் நந்தி தேவா
காரணக் கடவுளுக்குக் கருமமுண் டாக்க வெண்ணிற்
 காரணம் நந்தி தேவா ..........

இ. முற்குறிப்பு

சீலேரி சாமிசெட்டியார் குமாரன் லஷ்மணசெட்டி வாசிக்கின்றது. மன்மதன் கதையாகிய பிரதி யென்றது

## 5. பிறசெய்திகள்

வண்டிசை புகலுஞ் சோலை வளருஞ்சீ லேரி நாட்டில்
.......... .......... .......... .......... .......... ..........
கொண்டல்சேர் கருணீ கனான குலமதில் சாமி நாதன்
மண்டலம் புகழப் பெற்ற வாத்தியார் சரண்து தித்து
வேண்டியே காமன் காதை விளம்பரம் செய்திட் டானே.

(இதில் 'காதை' என்னுஞ் சொல் பின்னர் 'பாட்டை' எனத் திருத்தப்பட்டுள்ளது.) என ஓரிடத்தில் வருகிறது. மேற்படி சாமிநாதன் இந்நூலாசிரியரா ? அல்லது அரங்குகளில் பாடி ''விளம்பரம் செய்தவரா'' என உறுதியாகத் தெரியவில்லை.

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

12 : 79.

## 133. திருப்புகழ்

1. நூலகக் குறிப்புகள்

அ. 92
ஆ. த / 2

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அருணகிரி நாதர்
ஆ. திருப்புகழ்
இ. தோத்திரம்
ஈ. செய்யுள் 110

3. தோற்றக் கூறுகள்

அ. 56 ஏடு ; 112 பக்கம்.
ஆ. நீளம் 42 செ. மீ.; அகலம் 3.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 6 வரி.
உ. தெளிவான கையெழுத்து ; பிழைகள் ஏராளம்.
ஊ. நல்ல நிலை.
எ. முழுமையான சுவடி. ஆனால் திருப்புகழ் முழுவதும் இல்லை. 110 பாடல்களே பொறுக்கி எழுதப்பட்டுள்ளன.

## 4. சிறப்புச் செய்திகள்

### அ. தொடக்கம்

எல்லாரும் ஞானத் தெளிஞரே கேளீர்சொல்
கல்லெல்லா மாணிக்கக் கல்லாமோ—பொல்லாக்
கருப்புகழைக் கேட்குமோ கானமயில் வீரன்
திருப்புகழைக் கேட்குஞ் செவி.

### ஆ. முடிவு

உறவு கிஞ்சலில் காமா காரிகள்
.......... .......... .......... ..........

குறவர் தங்கள்பி ரானே மாமர
நிருநி ரென்றடி வேரோ டேநிலை
குலைய வெங்கடல் மீதே வீசிய வயல்மீதே

குயில்க ளன்றில்கள் கூகூ கூவென
மலர்கள் பொங்கிய தேன்வீ காமிசை
குலவு சந்திரர் மீதே மேவிய பெருமாளே (110)

### இ. முற்குறிப்பு

வேலூர் தாலுக்கா 52 நெம்பர் பின்னத்துறை கிராமத்தில் வசிக்கும் மேட்டிகுடி தஞ்சி கவுண்டன் குமாரன் அய்யாசாமிக் கவுண்டன் வாசிக்கப்பட்ட மெஞ்ஞான ராகிய அருணகிரி நாதரருளிச் செய்த அன்பான திருப்புகழை எழுதிப்படிக்க உள்ளன்பு கூர்ந்து தொழுதேன் கணபதியே காப்பு.

இந்தத் திருப்புகழ்ச்சுவடியை யாராவது எடுத்தாலும் அல்லது படித்தாலும் இதன் மேலெழுதியிருக்கும் பேருடையவர்யாரோ அவர்வசம் கொடுத்து விடவேண்டியது. இல்லாவிட்டால் புவியின் கண் விளங்கும் புண்ணியக்ஷேத்ரமாகிய காசிமகாநதியிலே போய்க் காராம்பசுவை அறுத்துச் சாப்பிட்டால் எவ்வளவு தோஷமோ அவ்வளவு தோஷம் வந்து சாரும்.

ஆனந்த வருஷம் சித்திரை மாதம் அநுஷ நட்சத்திரத்தில் எழுத ஆரம்பித்தது.

5. ....... ....... ....

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

பல நூலகங்களிலும் உள்ளன.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 154. சங்கற்ப நிராகரணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 93 - 1
ஆ. ரு / 3

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. உமாபதி சிவாசாரியர்
ஆ. சங்கற்ப நிராகரணம்
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. செய்யுள் ; அச்சில் ஏறக்குறைய 40 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 15 ஏடு ; 30 பக்கம். (ஏட்டெண் 171 முதல் 185 வரை)
ஆ. நீளம் 26 செ. மீ.; அகலம் 4 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 10, 11 வரி.
உ. அழகிய தெளிவான கையெழுத்து.
ஊ. மிகப்பழுதுற்ற நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

திருந்திய வருந்தவம் பொருந்துபன் முனிவர்
அமையாக் காத லமையாது பழிச்சு
நிகரில் செக்கர்ப் புகர்முகத் தெழுந்த
புனிற்று வெண்பிறைத் தனிப்பெருங் கோட்டு

ஆ. முடிவு

தவப்பிர காசத் தன்மையில் விரித்த
சிவப்பிர காசச் செழுந்தமி ழுண்மையை
யருளுட னாய்ந்து கொள்ளத்
திருவருள் வினவல் திருந்திடு மன்றே. (19)

சங்கற்ப நிராகரண முற்றும்.

5. பிற செய்திகள்

இச் சுவடி எழுதி முடிக்கப்பட்ட பிறகு திருத்தப்பட்டுள்ளது.

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

தொடர் எண் : 77 காண்க.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 135. துகளறு போதம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 93-2
ஆ. ரு/3

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. சிற்றம்பலநாடிகள்
ஆ. துகளறு போதம்
இ. தத்துவம்
ஈ. செய்யுள் 10

3. தோற்றக் கூறுகள்

அ. 9 ஏடு ; 18 பக்கம். (ஏட்டெண் 186 முதல் 194 வரை)
ஆ. நீளம் 26 செ. மீ. ; அகலம் 4 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 10, 11 வரி.
உ. அழகிய தெளிவான கையெழுத்து.
ஊ. மிகப் பழுதுற்ற நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

திருவருள் விளையுந் திறம்பல வெனினு
மொருவகை யிருபத் தெட்டுடன் பிறவு
மாமவை பூத மைந்தி னயழி...பே
தாமிட மாகச் சார்பொறி யா...த்த

ஆ. முடிவு

அந்த மலமறுத்திங் கான்மாவைக் காட்டியதற்
கந்த வறிவை யறிவித்தங்—கிந்தறிவை
மாறாமன் மாற்றி மருவுசிவப் பேறென்றுங்
கூறாமற் கூறக் கொடி. (100)

துகளறு போதம் முற்றும்

5. ....... ........ ....

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

தொடர் எண் : 78 காண்க.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 136. ஞான சார வெண்பா

1. நூலகக் குறிப்புகள்

அ. 93-3
ஆ. ஞ/3

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ... ......
ஆ. ஞானசார வெண்பா
இ. தத்துவம்
ஈ. செய்யுள் 36

3. தோற்றக் கூறுகள்

அ. 3 ஏடு ; 6 பக்கம்.
ஆ. நீளம் 26 செ. மீ. ; அகலம் 4 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 10, 11 வரி.
உ. அழகிய தெளிவான கையெழுத்து.
ஊ. மிகப் பழுதுற்ற நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஆதியா யந்த... ய....பாலுக் கப்பாலார்
சோதியாய் ஞானச் சுடராகிக்— கோதிலருட்
பண்பிலெனை யாண்ட பரஞ்சோதி மா பொற்
றண்பதுமத் தாளே சரண். (1)

ஆ. முடிவு

வெந்தவிதை யம்புவியின் மீண்டுமுளை யாததுபோல்
எந்தைதிரு ......... ............ .. ...... ழுந்தைவினை
தன்னையறுத் தேறும்வினை சாரா வகையளித்தாற்
பின்னையுள தாமோ பிறப்பு. (36)

5. ....... ... ..... ....

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

25 : 1296.

## 137. சிவஞான சித்தியார் - சுபக்கம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 94
ஆ. ஞ/4

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அருணந்தியார்
ஆ. சிவஞான சித்தியார் - சுபக்கம் : மூலமும் உரையும்
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. செய்யுளும் உரைநடையும் கலந்தது. அச்சில் சுமார் 600 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 343 ஏடு ; 686 பக்கம்.

ஆ. நீளம் 28 செ. மீ. ; அகலம் 3.5 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 7 வரி.

உ. தெளிவான கையெழுத்து.

ஊ. 30, 37, 49 மு 51, 68, 69, 95, 193, 213 மு 215 ஆக 12 ஏடுகள் காணப்படவில்லை. 28, 29, 58, 188, 289 ஆக 5 ஏடுகள் முறிவு. மிகப் பழுதுற்ற நிலை.

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பண்ணிசைவெம் பருதிமதி திலதயிலந்
 தீயிரும்பு பாணி யுப்பு
விண்ணில... முடலுயிர்நீர் நிழலுச்சிப்
 பளிங்குபகல் விளக்குப் பானீர்
கண்ணிரவி யுணர்வொளிபோற் பிரிவரிய
 வத்துவிதக் கலவி காட்டித்
தண்ணளிவைத் தெனையாண்ட துறைசைநமச்
 சிவாயகுரு சரணம் போற்றி.

ஆ. முடிவு

பரஞானமிவனென்றும் பராபரன்றானென்றும் வழிபடுத லதிகாரப் பட்டமையின் ஏனையவுமுடன் கூறினார். இன்ன மிதனை விரித் தறிதற்பாலது அநேகமுள. அது கயிலாய பரம் பரையான மெய்கண்ட சந்ததியிற் றிருவாவடுதுறை நமசிவாய மூர்த்தி மரபிற் றிருச்சிற்றம்பல தேசிகர் திருவடியைப் பெற்ற வநுபவ முடையவர்களை முறையில் வழிபட்டுக் கேட்டறிக. பன்னிரண்டாஞ் சூத்திர முற்றிற்று. ஆகத் திருவிருத்தம் 327.

இ. முற்குறிப்பு

ஈசுர நாம சம்வச்சரம் சாலிவாகன சகாத்தம் 1799க்குச் சரியாகச் செல்லாநின்ற கொல்லம் 1053 ஆம் வருஷம்

தட்சணாயண மாகிய தனுரவி (மார்கழி மாதம்) 25 ஆம் தேதி சோமவாரமும் பூர்வபட்சத்துச் சதுர்த்தி திதியுஞ் சதய நட்சத்திரமும் சித்தநாம யோகமும் வணசிவா கரணமும் அமுர்த கடிகையும் மீனலக்கினமுஞ் சாத்துமீக வேளையுஞ் சூரிய வோரையுங் கூடிய இந்த சுபயோக சுபதினத்தில் (எழுதத் தொடங்கியது.)

ஈ. பிற்குறிப்பு

வெகுதானிய சம்வச்சரம் சாலிவாஹன சகாப்தம் 1800க்குச் சரியாகச் செல்லாநின்ற கொல்லம் 1053 ஆம் வருடம் உத்திராயணமாகிய மேஷரவி (சித்திரை மாதம்) 13 ஆம் தேதி புதன் வாரமும் அமர பச்சத்து அட்டமி திதியும் உத்திராட நட்சத்திரமும் சாத்திய நாம யோகமும் பாலவ கரணமும் அமுர்த கடிகையும் மேஷ லக்கினமுந் தாமச வேளையும் புதவோரையுங் கூடிய இந்த சுபயோக சுபதினத்தில் (நிறைவேறியது.)

## 5. ........................

## 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1 : 95, 109 ; 16 : 1260—1267, 2139—2141, ஆர். 594, ஆர். 597, ஆர். 1223, ஆர். 1224, ஆர். 1226, ஆர். 1253, ஆர். 1352, 1353 ; 25 : 1173, 1180 ; 27 : 529, 544 ; 31 : 229எ, 232, 233, 289, 1497 ; 60 : 22, 293க.

## 7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

# 138. சிவஞான சித்தியார் - சுபக்கம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 95

ஆ. ஞ/5

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அருணந்தியார்

ஆ. சிவஞான சித்தியார் - சுபக்கம் : நிரம்ப அழகிய தேசிகர் உரையுடன்

இ. மெய்கண்ட சாத்திரம்

ஈ. செய்யுளும் உரைநடையும் கலந்தது. அச்சில் ஏறத்தாழ 400 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 221 ஏடு ; 442 பக்கம்.

ஆ. நீளம் 38 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 7, 8, 9 வரி.

உ. தெளிவான கையெழுத்து.

ஊ. 4,5,6,130,218,219 ஆக 6 ஏடுகள் இல்லை. ஏடுகள் 27,28க்கு இடையே வேறோரேடு எண்ணிடப்படாமல் சேர்க்கப்பட்டுள்ளது. மிகமிகப்பழுதுபட்ட சுவடி.

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஒரு கோட்டன் என்றது ஒரு கொம்பினை உடையவனாய, இருசெவியன் என்றது இரண்டு செவியினையும் உடையவனாய, மும் மதத்தன் என்றது மூன்று மதங்களையும் உடையவனாய, நால்வாயன் என்றது நான்ற வாயினையு முடையவனாய....... .

ஆ. முடிவு

செய்ய சிவஞான சித்திக் கடற்பொருட்
குய்யநெறி தோன்ற வுளந்தோன்ற—மெய்யுயிரை
யூட்டுநெறி தோன்ற வுரைபகர்ந்தான் ஞானவழி
காட்டு நிரம்பவழ கன்.

இ. பிற்குறிப்பு

சருவதாரி வருடம் புரட்டாசி மாதம் 23 ஆம் தேதி பஞ்சமியும் ரோகணி நட்சத்திரமும் வியாழக் கிழமையும் கூடின சுபதினத்தில்...... சொக்கநாத சுவாமியாருக்குக் குருவருட் கடாட்சத்தினாலயும் எழுதி முகித்தோம் நிறையுடைய பிள்ளையும் சங்கர நாராயண பிள்ளையும். இவர்கள் சொல்படிக்கு எழுதினேன் பெரிய பெருமாள் எழுத்து. இதுக்குச் சாட்சி சிந்தாமணி நாத சுவாமியும் இடப்பாகத்தாயும். குரு முன்னிற்க வேணும். சங்கரலிங்கந் துணை. சிவம்.

5. ......................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

தொடர் எண் : 137 காண்க.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 139. வாயு சங்கிதை

1. நூலகக் குறிப்புகள்

அ. ?5
ஆ. ந/10

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. வரகுணராம பாண்டியன்
ஆ. வாயு சங்கிதை
இ. காப்பியம்
ஈ. செய்யுள் 1334

## 3. தோற்றக் கூறுகள்

அ. 188 ஏடு ; 376 பக்கம்

ஆ. நீளம் 16.5 செ. மீ., அகலம் 4 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 11, 12 வரி.

உ. தெளிவான சிறிய கையெழுத்து.

ஊ. பெரும்பாலான ஏடுகள் பழுது மிகச் சிதைவுற்ற நிலை.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சீர்பூத்த வுய... செழுமலர்....
    செஞ்சடைமேற் சிந்.... .......
தார்பூத்த ..மயில் களிதூங்கப்
    பதஞ்சலிமா முனிவன் காணப்
பேர்பூத்த வரிப்புலிக்கான் முனிபோற்ற
    வயங்கு பொதுவி னன்கா
வேர்பூத்த நடம்புரியு மிறைமுதலை
    வணங்கியுளத் திருத்து வாமே. (1)

ஆ. முடிவு

மறையவர் வாழி... மானவே லரசர் வாழி
குறைவறு சைவம் வாழி கோதிலா னினங்கள் வாழி
இறைவன தடியார் வாழி யிசைத்தவிப் புராணந் தன்னை
அறைபவர் கேட்போர் யாரும் அநுதினம் வாழி வாழி. (27)

முப்பதாமத்தியாயம் முற்றும். ஆகத்தொகை 797. உத்தர காண்டம் முற்றும். வாயு சங்கிதை முற்றும். ஆகக்காண்டம் 2க்கு விருத்தம் 1334. குருபாத முன்னிற்க. திருச்சிற்றம்பலம்.

இ. பிற்குறிப்பு

1025ஆம் வருடம் (இது கொல்லமாகலாம்.) ஐப்பசி மாதம் 19ஆம் தேதி சுக்கிர வாரத்தினம் இந்தப்புராணம் எழுதி முற்றுப் பெற்றது. சொக்கலிங்கம் துணை.

5. ......................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

16 : ஆர். 593ஏ, ஆர். 17944, 2107, 2171.

## 140. கிரிகை

1. நூலகக் குறிப்புகள்

அ. 97 - 1
ஆ. ல / 33

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..................
ஆ. கிரிகை 18க்குக் குணமும் மருந்தும்
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 40

3. தோற்றக் கூறுகள்

அ. 8 ஏடு; 16 பக்கம்.
ஆ. நீளம் 24 செ. மீ., அகலம் 3.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 10 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. ஏடுகள் ஆங்காங்கு சிதைந்துள்ளன. ஓரளவு பழுதுற்ற சுவடி.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சிவனயன் மால்ம னத்தில் திருவளத் தகைமை கூர்ந்து
நவமென வகத்ய ருக்கு நவின்றிடும் ரகசி யத்தை
அவமிகு மீனர் வஞ்சர் அறிவிலா ரறிய வென்னக்
குவிமுலை மின்னே வெம்பேய்க் குணங்களைக் கூறினாரே. (1)

ஆ. முடிவு

ஆடுமுறை நாள்வெளியி லாருமுறங் காது
நீடரியிக் குணங்கள் தின்றிடில்முன் சொன்ன
சூடுளக லிங்கனுந்து வாலையுள மருந்து
யூடல்புரிந் தாலலகை யோடிவிடு மென்றே. (40)

முற்றும்.

## 141. மருந்து செய்முறைகள்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 97 - 2
ஆ. ல / 33

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. .........................
ஆ. மருந்துகளின் செய்முறைகள்
இ. மருத்துவம்
ஈ. உரைநடை; அச்சில் ஏறத்தாழ 150 பக்கம் வரும்.

### 3. தோற்றக் கூறுகள்

அ. 83 ஏடு; 166 பக்கம். (ஏட்டெண் 9 முதல் 91 முடிய)
ஆ. நீளம் 24 செ. மீ., அகலம் 3.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 9, 10, 11 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. ஏடுகளில் ஆங்காங்கு தொளைகள் விழுந்துள்ளன.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

திரிபலாதித்தயிலம் :-

திரிபலா, அகில், சாந்தம், வில்லம், வேங்கை, சிவந்த தீனி ரொட்டி, கருஞ்சூரை, நொச்சி, நறுநீண்டி, குறுந்தட்டி, பேர் முட்டி, வெள்வேல், நல்ல சாரணை, நிலவாகை, புரமெரித்தான், சொறி சுனங்கு, வழுது, வள்ளி, அமுக்கிரா வேரும் சொல்லிவை யோரொன்று ரெண்டு பலமதாய்க் கூட்டி......

ஆ. முடிவு

திறமான வாத மிவையெண் பதும் திறமான சூலைபதி னெட்டுடனே சொல்லும் சன்னிவாதமுடன் மேல்தனிலே வந்த நோயெல்லாம் மாறிடுமே யென்றுமுனி சிந்தை பகிழ்ந்தேயுரைத் தார் தெளிந்து. முற்றிற்று.

(இது குக்கிடாதித்தயிலத்தின் ஈற்று பகுதி)

## 142. திருக்கோவையார்

1. நூலகக் குறிப்புகள்

அ. 98
ஆ. ண / 14

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. மாணிக்கவாசகர்
ஆ. திருக்கோவையார் - பேராசிரியர் உரையுடன்
இ. சைவத்திருமுறை
ஈ. செய்யுளும் உரைநடையும் கலந்தது. அச்சில் ஏறத்தாழ 400 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 351 ஏடு ; 702 பக்கம்.
ஆ. நீளம் 31 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 7, 8 வரி.

உ. தெளிவான கையெழுத்து.

ஊ. 1 மு 13, 64 மு 66, 76, 112, 113, 140, 146, 147, 296, 297, 300 மு 302, 3.8 மு334, 344, 354, 365, 366, 373 மு 376, 381 ஆக 43 ஏடுகள் காணப்படவில்லை. பல ஏடுகள் முறிவு. மிகப் பழுதுற்ற சுவடி.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

......ந்தன யுவவையாயின். உம்பராலென்பது பாடமாயின் உம்பரானறியப் படாதவென வுரைக்க. தினை முமென்பது பாடமாயிற் பிணியு மருந்துமாய ... வாய்ப்படைக்கண்கள் பிறழுமென வுரைக்க இஃதுட்கொள இவ்வைந்துங் கைக்கிளை குறிஞ்சி. (இது 5 ஆம் பாடலின் விசேட உரைப்பகுதி.)

ஆ. முடிவு

''தொல்லவை உரைத்தலும், நுகர்ச்சி யேத்தலும், பல்லாற்றானு மூடலிற்றணித்தலு முறுதி காட்டலு மறிவுமெய் நிறுத்தலு மேதுவின் உணர்த்தலும் துணிவு காட்டலும், அணிநிலை உரைத் தலும் கூத்தர்மேன'' என்றார் தொல்காப்பியனார். இப்பாட்டு ஐவகைத் திணைக்கும் உரித்தாகலிற் பொதுவகைத் தெனப்பெறு மென்பது. பரத்தையிற்பிரிதன் முற்றும். (400) திருச்சிற்றம்பலம். தில்லைவனப் பெரும்பற்றப்புலியூர்த்திருச்சிற்றம்பல வாணராகிய அழகிய திருச்சிற்றம்பல முடையார் மாணிக்கவாசகர் சொற் படிக்குத் தம்முடைய வருமைத் திருக்கையாலெழுதிய திருச் சிற்றம்பலக் கோவை முற்றும்.

5. ..................

6 மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

தொடர் எண் : 63 காண்க.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 143. சிவஞான போதம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 99
ஆ. ஞ / 6

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. மெய்கண்ட தேவ நாயனார்
ஆ. சிவஞான போதம்-சிவஞான முனிவர் சிற்றுரை
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. செய்யுளும் உரைநடையும் கலந்தது ; அச்சில் ஏறத்தாழ 150 பக்கம் வரும்.

### 3. தோற்றக் கூறுகள்

அ. 251 ஏடு; 502 பக்கம்.
ஆ. நீளம் 28.5 செ. மீ., அகலம் 3.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 8 வரி.
உ. தனித்தனியாக எழுதப்பட்ட தெளிவான கையெழுத்து.
ஊ. 134, 135, 249, 250 ஆக 4 ஏடுகள் காணப்படவில்லை. 53, 108 ஆக ஈரேடுகள் முறிந்துள்ளன. மிகப் பழுதுற்ற சுவடி.

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கயிலாய பரம்பரையிற் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்

குயிலாரும் பொழில்திருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

ஆ. முடிவு

எந்தை சனற்குமரன் ஏத்தித் தொழவியல்பாய்
நந்தி உரைத்தருளும் ஞானநூல்-சிந்தைசெய்து
தானுரைத்தான் மெய்கண்டான் தாரணியோர் தாமுணர
ஏதுதிருட் டாந்தத்தா லின்று.

பன்னிரண்டாஞ் சூத்திர முற்றும்.

இ. முற்குறிப்பு

(பாயிரத்தை அடுத்து 5ஆம் ஏட்டில்)

ஈசுர நாம சம்வச்சரம் சாலீவாகன சகாத்தம் 1799க்குச் சரியாகச் செல்லாநின்ற கொல்லம் 1053 ஆம் வருடம் தச்சணா யணமாகிய விருச்சிக ரவி (கார்த்திகை மாதம்) 12 ஆம் தேதி ஆதித்த வாரமும் அமரபட்சத்துப் பஞ்சமி திதியும் பூசநட்சத் திரமுஞ் சுபநாம யோகமுங் கௌலவ கரணமும் அமுர்த கடிகையும் தனுர்லக்கினமுஞ் சாத்துமீக வேளையுஞ் சூரிய ஓரையுங் கூடிய இந்தச் சுபயோக சுபதினத்தில் (எழுதத் தொடங்கியது.)

இ. பிற்குறிப்பு

ஈசுர நாம சம்வச்சரம் சாலீவாகன சகாத்தம் 1799க்குச் சரியாகச் செல்லாநின்ற கொல்லம் 1053 ஆம் வருடம் தச்சணா யணமாகிய தனுர்ரவி (மார்கழி) 25 ஆம் தேதி சோமவாரமும் பூர்வ பட்சத்துச் சதுர்த்தி திதியுஞ் சதய நட்சத்திரமுஞ் சித்த நாம யோகமும் வணசிவா கரணமும்.... ... கடிகையும் மீனலக்கினமுஞ் சாத்துமீக வேளையுஞ் சூரிய ஓரையுங் கூடிய இந்தச் சுபயோக சுபதினத்தில் (எழுதி நிறைவேறியது.)

5. ..................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

25 : 1164 ; 28 : 10826, 10833பி.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 144. தொல்காப்பியம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 100
ஆ. ச / 6

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. தொல்காப்பியர்
ஆ. தொல்காப்பியம் : எழுத்து, சொல்.
இ. இலக்கணம்
ஈ. செய்யுள் 949

3. தோற்றக் கூறுகள்

அ. 42 ஏடு; 84 பக்கம்.
ஆ. நீளம் 18.5 செ. மீ.; அகலம் 4 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 10, 11, 12 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. அனைத்தேடுகளிலும் தொளைகள். பழுதுற்ற சுவடி.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத்
தமிழ்கூறு நல்லுலகத்து
வழக்குஞ் செய்யுளு மாயிரு முதலின்
எழுத்துஞ் சொல்லும் பொருளு நாடிச்
செந்தமி ழியற்கை சிவணிய நிலத்தொடு
முந்துநூல் கண்டு முறைப்பட வெண்ணி

ஆ. முடிவு

செய்யுண் மருங்கினும் வழக்கியன் மருங்கினும்
மெய்பெறக் கிளந்த கிளவி யெல்லாம்
பல்வேறு செய்தியின் நூனெறி பிழையாது
சொல்வரைந் தறியப் பிரித்தனர் காட்டல். (68)

எச்சவியன் முற்றும். ஆகச் சூத்திரம் 464. எழுத்திகாரச் சூத்திரம் 485. கிளவியி னாக்கங் கிளர்வேற் றுமைச்சொல் உளவேற்றுமை மயக்கம் ஒங்கு விளிமரபு தேற்றும் பெயர் வினைச் சொற் சேரும்இடை உரிச்சொல் தோற்றியிடும் எச்ச வியற்சொல் ஆகச் சொல்லதிகார இயல் ஒன்பதுக்குச் சூத்திரம் 464. ஆக அதிகாரம் 2க்குச் சூத்திரம் 949. (ஷண்முக குருதேசிக ஸ்ரீபாத பத்ம மேவமே சரணம். கோமுத்தி அம்பலவாண தேசிக சரணார விந்தாப்யோ நமஹ. சுபமஸ்து. இவை கிரந்த எழுத்தில்.)

5. ....................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

பல நூலகங்களிலும் உள்ளன.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

# 145. நன்னூல்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 101
ஆ. ச / 7

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. பவணந்தி முனிவர்
ஆ. நன்னூல்
இ. இலக்கணம்
ஈ. செய்யுள்

## 3. தோற்றக் கூறுகள்

அ. 25 ஏடு; 50 பக்கம்.
ஆ. நீளம் 18.5 செ. மீ., அகலம் 4 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 10, 11, 12, 13, 14 வரி.
உ. எழுத்து நிலை தெளிவாகவுள்ளது.
ஊ. சில ஏடுகள் சிதிலமாகவுள்ளன.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

''மலர்தலை யுலகின் மல்கிரு ளகல
விலகொளி பரப்பி யாவையும் விளக்கும்
பருதியி னொருதா னாகி முதலீறு''

ஆ. முடிவு

பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல கால வகையி னானே

ஐந்தாவது உரிச்சொல்லியல் முற்றும். நன்னூற் சூத்திரம் முற்றும். சிவகிருபை.

## 5. பிறசெய்திகள்

இடையியல், உரியியல் என்பன இடைச் சொல்லியல், உரிச் சொல்லியல் எனக்குறிக்கப்பட்டுள்ளன.

## 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

பல நூலகங்களிலும் உள்ளன.

## 7. வெளியீட்டுச் செய்திகள்

பல பதிப்புகள் வெளிவந்துள்ளன.

# 116. இலக்கண விளக்கம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 102
ஆ. ச / 8

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. வைத்தியநாத தேசிகர்
ஆ. இலக்கண விளக்கம் : பொருளதிகாரம் - புறத்திணை யியல் முடிய.
இ. இலக்கணம்
ஈ. செய்யுள் 246 நூற்பா

## 3. தோற்றக் கூறுகள்

அ. 24 ஏடு; 48 பக்கம்.
ஆ. நீளம் 18.5 செ. மீ., அகலம் 4 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 12, 13, 14 வரி.
உ. எழுத்து நிலை சுமாராகவுள்ளது.
ஊ. சில ஏடுகள் சிதிலமாகவுள்ளன.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

உமையுரு வுருமடுத் துலகிளைப் பொழிக்கும்
இமையவ னடிபணிந் தியம்புவன் பொருளே. (1)

ஆ. முடிவு

இவர்தரும் சூதியாழ் பாடல் ஆடல்
பிடியென பெரும்பேயர் வென்றியோ டையுறக்
கிடந்த அறுபதிற் றிரண்டும்
இன்ன பிறவும் எழுவகைத் திணையுள்
துன்னிய ஒழிபு எனத் தூக்கினர் கொளலே. (21)

புறத்திணை இயல் முற்றும். சிவம்.

## 117. சிவஞான போதம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 103-1
ஆ. ஞ/7

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. மெய்கண்ட தேவநாயனார்
ஆ. சிவஞான போதம்
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. செய்யுள் 12

## 3. தோற்றக் கூறுகள்

அ. 12 ஏடு ; 24 பக்கம்.

ஆ. நீளம் 17.5 செ. மீ. ; அகலம் 5 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 12, 13, 14, 15 வரி.

உ. எழுத்துநிலை தெளிவாகவுள்ளது.

ஊ. ஏடுகள் சிதிலமாகவுள்ளன. முதல் ஏடு 101 என்று எண்ணிடப்பெற்றுள்ளது. இரண்டாவது ஏடு காணப் பெறவில்லை.

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கல்லா ளிழன்மலை வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர் நல்லார் புனைவரே. (1)

ஆ. முடிவு

எந்தை சனக்குமர னேத்தித் தொழவியல்பாய்
நந்தி யுரைத்தருளு ஞானநூல்—சிந்தைசெய்து
தானுரைத்தான் மெய்கண்டான் றாரணியோர் தாமுணர
வேதுதிருட் டாந்தத்தா லின்று.

பனிரண்டாஞ் சூத்திர முற்றும். வெண்பா 82.

## 5. ............

## 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

தொடர் எண் : 67 காண்க.

## 7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

# 118. சிவஞான சித்தியார்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 103-2

ஆ. ஞ/7

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அருணந்தியார்

ஆ. சிவஞான சித்தியார்

இ. மெய்கண்ட சாத்திரம்

ஈ. செய்யுள் 327

## 3. தோற்றக் கூறுகள்

அ. 71 ஏடு ; 141 பக்கம்.

ஆ. நீளம் 17.5 செ. மீ. ; அகலம் 5 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒருபக்கத்திற்கு 14, 15 வரி.

உ. எழுத்துநிலை தெளிவாகவுள்ளது.

ஊ. பல ஏடுகள் சிதிலமாகவும் சில சிதைந்தும் காணப்படுகின்றன.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஒருகோட்ட னிருசெவியன் மும்மதத்த
    னால்வாயைங் கரத்த னாறு
தருகோட்டம் பிறையிதழித் தாழ்சடையான்
    றருமொருவா ரணத்தின் றாள்க
ளுருகோட்டன் புடன்வணங்கி யோவாதே
    யிரவுபக லுணர்வோர் சிந்தைத்
திருகோட்டு மயன்திருமால் செல்வமுமொன்
    றோவென்னச் செய்யுந் தேவே. (1)

ஆ. முடிவு

பரம்பிரம மிவனென்றும் பரசிவன்றா னென்றும்
பரஞான மிவனென்றும் பராபரன்றா னென்றும்
அரன்றருஞ்சீர் நிலையெல்லா மிவனே யென்று
மருட்குருவை வழிபடவே யவனிவன்றா னாயே
இரங்கியவா ரணமாமை மீனண்டஞ் சினையை
யியல்பினொடும் பரிசித்தும் நினைந்தும் பார்த்தும்
பரிந்திவைதா னாக்குமாபோற் சிவமே யாக்கும்
பரிசித்துஞ் சிந்தித்தும் பார்த்துந் தானே. (7)

ஆக 327. பனிரெண்டாஞ் சூத்திரம் முற்றும். சுபட்சமுற்றும்.
சிவஞான சித்தியார் முற்றும்.

## 5. பிற செய்திகள்

இந்நூலுள் பரபட்சம் முன்னும் சுபட்சம் பின்னுமாக அமைந்துள்ளது.

## 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

தொடர் எண் : 68 காண்க.

## 7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

# 149. சிவப்பிரகாசம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 103-3
ஆ. ரு/7

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. உமாபதி சிவாசாரியர்
ஆ. சிவப்பிரகாசம்
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. செய்யுள் 100

3. தோற்றக் கூறுகள்

அ. 15 ஏடு ; 30 பக்கம்.
ஆ. நீளம் 17.5 செ. மீ. ; அகலம் 5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 13, 14, 15 வரி.
உ. எழுத்துநிலை தெளிவாகவுள்ளது.
ஊ. ஏடுகள் சிதிலமாகவுள்ளன.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஒளியான திருமேனி யுமிழ்தான மிகமேவு
களியார வருமானை கழனாளு மறவாம
லளியாளு மலர்தூவு மடியார்க ளுளமான
வெளியாகு வலிதாய வினைகூட நினையாவே.

ஆ. முடிவு

திருவருள் கொடுத்து மற்றிச் சிவப்பிர காச நன்னூல்
விரிவது தெளியு மாற்றால் விளம்பிய வேது நோக்கிப்
பெருகிய உவமை நான்கின் பெற்றியின் னிறுவிப் பின்முன்
றருமலை வொழியக் கொள்வோன் றன்மையிற் சாற்ற
லாமே. (100)

சிவப்பிரகாசம் முற்றும்.

5. ..........

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

தொடர் எண் : 71 காண்க.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 150. இருபா இருபது

1. நூலகக் குறிப்புகள்

அ. 103 - 4
ஆ. ஞ/7

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அருணந்தியார்
ஆ. இருபாவிருபது
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. செய்யுள் 20

3. தோற்றக் கூறுகள்

அ. 6 ஏடு; 12 பக்கம்.
ஆ. நீளம் 17. 5 செ. மீ.; அகலம் 5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒருபக்கத்திற்கு 14, 15, 16 வரி.
உ. எழுத்து நிலை தெளிவாகவுள்ளது.
ஊ. ஏடுகள் சிதிலமாகவுள்ளன.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கண்ணுதலுங் கண்டக் கறையுங் கரந்தருளி
மண்ணிடையின் மாக்கள் மலமகற்றும்—வெண்ணெய்நல்லூர்
மெய்கண்டா னென்றொருகால் மேவுவரால் வேறின்மை
கைகண்டா ருள்ளத்திற் கண்.

ஆ. முடிவு

மன்ன னெங்கோன் வார்புரை பெண்ணை
வெண்ணெய் காவலன் மெய்கண்ட தேவ
னண்ண லருளா லையத்த னண்ணிய
மலமுத லாயின மாய்க்கு
முலக வுயிர்க்கெல் லாமொரு கண்ணே.

## 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

தொடர் எண் : 69 காண்க.

## 7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

# 151. சங்கற்ப நிராகரணம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 103-5
ஆ. ஞ/7

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. உமாபதி சிவாசாரியர்
ஆ. சங்கற்ப நிராகரணம்
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. செய்யுள் 14

## 3. தோற்றக் கூறுகள்

அ. 17 ஏடு ; 34 பக்கம்.
ஆ. நீளம் 17.5 செ. மீ.; அகலம் 5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 14, 15, 16 வரி,
உ. எழுத்துநிலை நன்றாக வுள்ளது.
ஊ. ஏடுகள் சிதிலமாகவும் கீழ்ப்பகுதி சிதைந்தும் உள்ளன.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு

தொடர் எண்: 77 காண்க.

## 152. திருவருட்பயன்

1. நூலகக் குறிப்புகள்

அ. 103-6
ஆ. ரு/7

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. உமாபதி சிவாசாரியர்
ஆ. திருவருட்பயன்
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. செய்யுள் 100

3. தோற்றக் கூறுகள்

அ. 4 ஏடு; 8 பக்கம்.
ஆ. நீளம் 7. 5 செ. மீ. ; அகலம் 5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 15 வரி.
உ. எழுத்து நிலை சுமாராகவுள்ளது.
ஊ. ஏடுகள் மிகச் சிதிலமாகவுள்ளன.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு

தொடர் எண் : 72 காண்க.

## 153. போற்றிப் பஃறொடை

1. நூலகக் குறிப்புகள்

அ. 103-7
ஆ. ரு/7

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. உமாபதி சிவாசாரியர்
ஆ. போற்றிப் பஃறொடை
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. செய்யுள் 95 கண்ணிகள்

3. தோற்றக் கூறுகள்

அ. 3 ஏடு ; 6 பக்கம்.
ஆ. நீளம் 17. 5 செ. மீ. ; அகலம் 5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 15, 16 வரி.
உ. எழுத்து நிலை சுமாராகவுள்ளது.
ஊ. ஏடுகள் சிதிலமாக உள்ளன.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தொடர் எண் : 74 காண்க.

ஆ. முடிவு

போற்றி திருத்தில்லை போற்றி சிவபோகம்
போற்றியவன் மெஞ்ஞானப் புண்ணியநூல்-போற்றியெங்கள்
வெம்பந்த வாழ்க்கைவிட வேறாய்வந் துண்ணின்ற
சம்பந்த மாமுனிபொற் றாள்.

5. ……… ….

6. மாற்றுச்சுவடிகள் காணுமிடம்

தொடர் எண் : 74 காண்க.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 154. நெஞ்சுவிடுதூது

1. நூலகக் குறிப்புகள்

அ. 103-8
ஆ. ஞ/7

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. உமாபதி சிவாசாரியர்
ஆ. நெஞ்சுவிடுதூது
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. செய்யுள் 129 கண்ணிகள்

3. தோற்றக் கூறுகள்

அ. 5 ஏடு ; 10 பக்கம்.
ஆ. நீளம் 17·5 செ. மீ. ; அகலம் 5 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 15, 16 வரி.
உ. எழுத்துநிலை தெளிவாகவுள்ளது.
ஊ. ஏடுகள் மிகச்சிதிலமாகக் காணப்படுகின்றன.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு

தொடர் எண் : 76 காண்க.

## 155. வினா வெண்பா

1. நூலகக் குறிப்புகள்

அ. 103-9
ஆ. ஞ/7

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. உமாபதி சிவாசாரியர்
ஆ. வினாவெண்பா
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. செய்யுள் 13

3. தோற்றக் கூறுகள்

அ. 1 ஏடு ; 2 பக்கம்.
ஆ. நீளம் 17.5 செ. மீ. ; அகலம் 5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 13, 14 வரி.
உ. எழுத்துநிலை தெளிவாகவுள்ளது.
ஊ. ஏடு வலதுபுறத்தில் சிதைந்துள்ளது.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு

தொடர் எண் : 73 காண்க.

## 156. கொடிக்கவி

1. நூலகக் குறிப்புகள்

அ. 103–10
ஆ. ரு/7

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. உமாபதி சிவாசாரியர்
ஆ. கொடிக்கவி
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. செய்யுள் 4

3. தோற்றக் கூறுகள்

அ. 1 ஏடு ; 2 பக்கம்.
ஆ. நீளம் 17.5 செ. மீ. ; அகலம் 5 செ. மீ.
இ. ஒரு பக்கத்திற்கு 12 வரி.
ஈ. எழுத்துநிலை தெளிவாகவுள்ளது.
உ. ஏடு சிதிலமாகவுள்ளது.
ஊ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு
தொடர் எண் : 75 காண்க.

# 157. உண்மை விளக்கம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 103-11
ஆ. ஞ/7

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. மனவாசகங்கடந்தார்
ஆ. உண்மை விளக்கம்
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. செய்யுள் 54

## 3. தோற்றக் கூறுகள்

அ. 5 ஏடு ; 10 பக்கம்.
ஆ. நீளம் 17.5 செ. மீ. ; அகலம் 5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 14, 15, 16 வரி.
உ. எழுத்துநிலை தெளிவாகவுள்ளது.
ஊ. ஏடுகள் சிதிலமாகவும் வலதுபுற அடிப்பாகம் சிதைந்தும் காணப்படுகின்றன.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

வண்மைதரு மாகமநூல் வைத்த பொருள்வழுவா
.......... .......... முரைசெய்யத் – திண்மதஞ்சே
ரந்திநிறத் தந்திமுகத் தொந்திவயிற் றைங்கரனைப்
பந்தமறப் புந்தியுள்வைப் பாம்.

ஆ. முடிவு

மன்னதிகை வாழு மனவாச கங்கடந்தான்
மின்னனைய வாழ்விலுறா மெய்கண்டான் — பன்மறைகள்
வண்மைதரு மாகமநூல் வைத்த பொருள்வழுவா
துண்மைவிளக் கஞ்செய்தா னுற்று. (54)

உண்மை விளக்க முற்றும்.

5. ... ... ...

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

தொடர் எண் : 70 காண்க.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 158. திருவுந்தியார்

1. நூலகக் குறிப்புகள்

அ. 103-12
ஆ. ஞ/7

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. உய்யவந்ததேவ நாயனார்-திருவியலூர்
ஆ. திருவுந்தியார்
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. செய்யுள் 45

3. தோற்றக் கூறுகள்

அ. 2 ஏடு ; 4 பக்கம்.
ஆ. நீளம் 17.5 செ. மீ. ; அகலம் 5 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 15 வரி.
உ. எழுத்துநிலை தெளிவாகவுள்ளது.
ஊ. ஏடுகள் சிதிலமாக உள்ளன.
எ. முழுமை

## 4. *சிறப்புச் செய்திகள்*

அ. தொடக்கம்

*அகளமா யாரு மறிவரி தப்பொருள்*
*சகளமாய் வந்ததென் றுந்தீபற.*
*தானாகத் தந்ததென் றுந்தீபற.* (1)

ஆ. முடிவு

வைய முழுது மலக்கயங் கண்டிடு
முய்யவந் தானுரை யுந்தீபற.
வுண்மை யுணர்ந்தானென் றுந்தீபற. (45)
முற்றும்.

## 5. ........ ......

## 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

தொடர் எண் : 65 காண்க.

## 7. வெளியீட்டுச் செய்திகள்

*அச்சிடப்பட்டுள்ளது.*

# 159. திருக்களிற்றுப் படியார்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 103 - 13
ஆ. ஞ/7

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. உய்யவந்ததேவநாயனார் - திருக்கடவூர்
ஆ. திருக்களிற்றுப்படியார்
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. செய்யுள் 101

3. தோற்றக் கூறுகள்

அ. 8 ஏடு ; 16 பக்கம்.
ஆ. நீளம் 17.5 செ. மீ.; அகலம் 5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒருபக்கத்திற்கு 15, 16 வரி.
உ. எழுத்துநிலை தெளிவாகவுள்ளது.
ஊ. ஏடுகள் சிதிலமாகவும் சில ஏடுகள் மிகச் சிதைந்தும் உள்ளன.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு

தொடர் எண் : 66 காண்க.

## 160. துகளறு போதம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 103 - 14
ஆ. ஞ/7

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. சிற்றம்பல நாடிகள்
ஆ. துகளறு போதம்
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. செய்யுள் 100

## 3. தோற்றக் கூறுகள்

அ. 9 ஏடு ; 18 பக்கம்.
ஆ. நீளம் 17.5 செ. மீ.; அகலம் 5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 14, 15, 16 வரி.
உ. எழுத்துநிலை சுமாராக வுள்ளது.
ஊ. ஏடுகள் மிகச்சிதைந்துள்ளன.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பதிபசு பாசந் தெரிந்தந்தப் பாச
விதிவழியை வென்றதனின் வேறாங் - கதிவழங்கு
மெய்கண்டான் சந்தான மேவிச் சிவானந்தங்
கைகண்டார் காணார் கரு. (1)

ஆ. முடிவு

அந்த மலமறுத்திங் கான்மாவைக் காட்டியதற்
கந்த வறிவை வறிவித்தங் -- கிந்தறிவை
மாறாமல் மாற்றி மருவுசிவப் பேறென்றுங்
கூறாமல் கூறக் கொடி. (100)

துகளறு போதம் முற்றும்.

## 5. ………………

## 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

தொடர் எண் : 78 காண்க.

## 7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 161. உண்மை நெறி விளக்கம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 103 - 15
ஆ. ஞ/7

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. தத்துவநாதர்
ஆ. உண்மை நெறி விளக்கம்
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. செய்யுள் 6

3. தோற்றக் கூறுகள்

அ. 1 ஏடு ; 2 பக்கம்.
ஆ. நீளம் 17.5 செ.மீ.; அகலம் 5 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒருபக்கத்திற்கு 14,15 வரி.
உ. எழுத்துநிலை தெளிவாக உள்ளது.
ஊ. ஏடு சிதிலமாகவுள்ளது.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு
தொடர் எண் : 79 காண்க.

## 162. கூர்ம புராணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 104
ஆ. ந/11

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அதிவீரராம பாண்டியன்
ஆ. கூர்ம புராணம்
இ. காப்பியம்
ஈ. செய்யுள் 3711

## 3. தோற்றக் கூறுகள்

அ. 273 ஏடு ; 546 பக்கம்.
ஆ. நீளம் 24 செ.மீ.; அகலம் 3.5 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒருபக்கத்திற்கு 13,14 வரி.
உ. எழுத்து நிலை தெளிவாக உள்ளது.
ஊ. சுவடி பொதுவாகச் சிதிலமாகவுள்ளது. 119-121,169,170 ஆக 5 ஏடுகள் இல்லை. 129-ஆம் ஏடு முறிந்துள்ளது.

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

வெண்ணிலாக் கற்றை கான்று
 விளங்குமோர் பிறைக்கோ டின்றி
எண்ணியோர் பாகங் கூந்தற்
 பிடியென விருந்த வாற்றாற்
பெண்ணொரு பாகர் வைத்த
 பிஞ்ஞக னுருவு காட்டு
மண்ணலங் களிநல் யானை
 யடிமலர் சென்னி வைப்பாம்.

ஆ. முடிவு

எதிர்மலைந் தேற்ற வெஞ்சமத் தரச
 ரிடுதிறை கடையளந் தறியா
மதுரையும் புகாரும் வஞ்சியும் புரக்கு
 மானவேல் வழுதியர் பெருமான்

அதிர்பொலங் கழற்கா லடலதி வீரன்
அரில்தபத் தெரிந்துநன் கிசைத்த
முதுதமிழ்க் கூர்ம புராணமுற் றுணர்ந்தோர்
முத்திவீட் டினிதுவீற் றிருப்பார். (13)

தொண்ணூற்று நாலாவது பிராகிருதப் பிரளயமு மாத்தியாதிப் பிரளயமுமுரைத்த வத்தியாயம் முற்றும். ஆகத் திருவிருத்தம் 3711. திருச்சிற்றம்பலம்.

இ. முற்குறிப்பு

இந்தப் புராணம் எழுதினது 973 பிங்கள வருஷம் கார்த்திகை மாதம் 5ஆம் தேதி சுக்கிரவாரமும் சதுர்த்தசியும் சுவாதி நட்சத்திரமும் பெற்ற சுபதினத்தில் முகூர்த்தம் செய்த திருமுறை.

ஈ. பிற்குறிப்பு

974 சித்தார்த்தி வருஷம் வைகாசி மாதம் 27 புதன் கிழமை பூருவ பட்சம் திரிதியையும் புனர்பூச நட்சத்திரமுங் கூடின சுப தினத்தில் சிரீவைகுண்டத்திலிருக்கும் சூரியநாராயணபிள்ளை யவர்களுக்குக் கூர்ம புராணம் எழுதி முடிந்தது. சிவமயம்.
மேற்படி யூரிலிருக்கும் தன்மப் பெருமாள் எழுதினது.

## 5. பிற செய்திகள்

இறுதியில் அத்தியாயங்களும் அவற்றின் செய்யுள் தொகைகளும் அட்டவணையாகத் தரப்பட்டுள்ளன.

## 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

தொடர் எண் : 97 காண்க.

## 7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 165. இலக்கண விளக்கம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 105 - 1
ஆ. ச/9

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. வைத்தியநாத தேசிகர்
ஆ. இலக்கண விளக்கம் - செய்யுளியல்
இ. இலக்கணம்
ஈ. செய்யுள் 51

### 3. தோற்றக் கூறுகள்

அ. 5 ஏடு ; 10 பக்கம்.
ஆ. நீளம் 18.5 செ.மீ.; அகலம் 4 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 12,13,14 வரி.
உ. எழுத்துநிலை தெளிவாகவுள்ளது.
ஊ. சுவடி சிதிலமாகவுள்ளது.
எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

செய்யு ளென்பது தெளிவுறக் கிளப்பின்
முன்னர்க் கூறிய முறைமைத் தாகி
எழுத்தசை சீர்தளை யடிதொடை யென்ற
மூவிரண் டுறுப்பு மேவரச் சிவணிப்
பாவு மினமு மெனவிரு பாற்றே. (1)

ஆ. முடிவு

ஓரடி யானும் பலவடி யானும்
மோரோர் வழியிலு முரைத்தவச் செய்யுள்
அவைதாம்
பாட்டுரை நூலே மந்திரம் பிசியே
முதுசொல் லங்கதம் வாழ்த்தொடு பிறவு
மாகு மென்ப வறிந்திசி னோரே. (51)

செய்யுளியன் முற்றும். சிவமயம்.

5. ........ .. ..........

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

தொடர் எண் : 166 காண்க.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 164. வெண்பாப் பாட்டியல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 105-2
ஆ. ச/9

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. குணவீர பண்டிதர்
ஆ. வெண்பாப் பாட்டியல்
இ. இலக்கணம்
ஈ. செய்யுள் 100

## 3. தோற்றக் கூறுகள்

அ. 7 ஏடு; 14 பக்கம்.
ஆ. நீளம் 18.5 செ. மீ.; அகலம் 4 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒருபக்கத்திற்கு 12, 13, 14 வரி.
உ. எழுத்துநிலை தெளிவாகவுள்ளது.
ஊ. ஏடுகள் மிகவும் சிதைந்த நிலையிலுள்ளன.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

மதிகொண்ட முக்குடைக்கீழ்க் காமன் மலர்த்தா
டுதிகொண்டு நாளுந் தொழுது — துதிகொண்ட
…………… … …….. பாட்டியலைக் கட்டுரைப்பேன்
தொல்லுலகின் மீதே தொகுத்து. (1)

ஆ. முடிவு

நன்குணர்ந்தோ ராய்ந்ததமிழ் மூன்றினையும் நன்னெறியே
முன்புணர்ந்து பாட்டியனூன் மூன்றுணர்ந்து — பின்புணர்
நல்லார் மு… லாய நலமார் கவியுரைக்க
வல்லார தன்றோ மதி.
வெண்பாப்பாட்டியன் முடிந்தது.
அம்பலவாண தேசிகஸ்ய சரணார விந்தாவேவ கதிஹி.
சுபமஸ்து. (இது கிரந்த எழுத்தில் உள்ளது.)

## 5. ……… … .. ….

## 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1: 243; 8: 59, 108சி, 241; 16: 2077, ஆர். 2731, ஆர். 2732; 18: 6361பி, 6368இ, 6390 ஏ; 19: 3019பி, 3111பி; 25: 185, 186, 2226; 27: 631ஜி, 648; 31: 310சி; 60: 198ஏ.

## 7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப் பட்டுள்ளது.

## 165. மண்ணிப்படிக்கரைப் புராணம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 106
ஆ. ப/13

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. மீனாட்சி சுந்தரம் பிள்ளை
ஆ. மண்ணிப்படிக்கரைப் புராணம்
இ. தலபுராணம்
ஈ. செய்யுள் 501

### 3. தோற்றக் கூறுகள்

அ. 117 ஏடு; 234 பக்கம்.
ஆ. நீளம் 22 செ. மீ ; அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒருபக்கத்திற்கு 6, 7, 8 வரி.
உ. எழுத்து நிலை தெளிவாகவுள்ளது.
ஊ. சில ஏடுகள் மட்டும் சிதிலமாகவுள்ளன
எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

மாமேவு வலம்புரியி னருள்பெருக
வத்துவித ......... முத்தி
நாமேவு வகையளிப்போ முமக்கு -
ளெனத்தெளிக்கு நலமே மானத்
தூமேவு வலந்தழுவ மதம்பெருக
நாசியொடாம் துதிக்கை கொண்ட
ஓமேவு வலம்புரிக்குஞ் சரத்தினிரு
தாட்கமல முன்னி வாழ்வாம். (1)

ஆ. முடிவு

பண்ணிய தவத்தான் மிக்க பரவுவான் சைவம் வாழ்க
கண்ணிய வமுத கும்பங் கையுளாள் கருணை வாழ்க
வெண்ணிய தெய்வ மண்ணிப் படிக்கரை யென்றும் வாழ்வோன்
புண்ணிய மன்று ளாடும் பூங்கழல் வாழ்க வாழ்க. (23)

தலவிசேடப் படலம் முற்றும். ஆகப்படலம் 21க்குத் திருவிருத்தம் 501. திருச்சிற்றம்பலம்.

5. ............

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

25: 61ங ; 31: 22பி.

## 166. சிற்றம்பல தேசிகர் கிளிவிடுதூது

1. நூலகக் குறிப்புகள்

அ. 107-1
ஆ. ய/2

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..................
ஆ. தருமைச் சிற்றம்பலதேசிகர் கிளிவிடுதூது
இ. சிற்றிலக்கியம்
ஈ. செய்யுள் ; ஏறத்தாழ அச்சில் 30 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 8 ஏடு; 15 பக்கம்.
ஆ. நீளம் 18 செ. மீ., அகலம் 5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒருபக்கத்திற்கு 13, 14, 15 வரி.
உ. எழுத்துநிலை தெளிவாகவுள்ளது.
ஊ. சுவடியில் ஒருசில ஏடுகள் சிதிலமாகவுள்ளன.
ஏ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அய்ய னழகியசிற் றம்பலசம் பந்தன்மேற்
றுய்ய கிளிவிடுதூ தோதுதற்கு—கையிளிள
மானையெடுத் தானடிய ருனைமறுத் தானளித்த
வானைமுகத் தானைநினைப் பாம்.

ஆ. முடிவு

கலங்காத வுள்ளத்தார் காணும் கனியை
மலங்கடனைத் தீர்க்கும் மருந்தை—யிலந்தையிறை
அத்த னழகிய சிற்றம்பல சம்பந்தனைச்
சித்தத்துள் வைப்பேன் தினம்.

5. ...............

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

31: 217.

7. வெளியீட்டுச்செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 167. பண்டார மும்மணிக் கோவை

1. நூலகக் குறிப்புகள்

அ. 107 - 2
ஆ. ய / 2

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. குமரகுருபரர்
ஆ. தருமைப் பண்டார மும்மணிக் கோவை
இ. சிற்றிலக்கியம்
ஈ. செய்யுள் 34

## 3. தோற்றக் கூறுகள்

அ. 11 ஏடு; 22 பக்கம்.
ஆ. நீளம் 18 செ. மீ., அகலம் 5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 14, 15, 16 வரி.
உ. எழுத்துநிலை தெளிவாகவுள்ளது.
ஊ. ஏடுகள் சிதிலமாகவும் கீழ்ப்பகுதி சிதைந்தும் உள்ளன.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

எண்டிசைக்குஞ் சூளா மணியா சிலாமணிசீர்
கொண்டிசைக்கு மும்மணிக் கோவைக்குக்-கண்டிகைப்பொற்
பைநாகத் தானனத்தான் பாற்கடலான் போற்றவருள்
கைநாகத் தானனத்தான் காப்பு.

ஆ. முடிவு

விரிக்குஞ் சரியையிப் பாமாலை சேர்த்தது மெய்க்கிரியை
தரிக்கும் படிக்கின்று சாற்றிய தேமற்றென் தண்டமிழ்நீ
தெரிக்கின்ற போதருள் செய்தது வேசிவ ....முண்மை
பரிக்கின்ற ஞானமொன் றேமாசி லாமணி பாலிப்பதே (33)

தருமைப் பண்டார மும்மணிக் கோவை முற்றும். தேவகுரு சந்ததியினின்ப தேசிகராய தவப்பிரகாச சற்குரு சரணார விந்தமே பொருளெனத் தெளிந்த கனகசபாபதித் தம்பிரான் ஏடு.

## 5. ....... ......... ....

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

16 : ஆர். 5530; 18 : 1i468; 25 : 964, 965; 31 : 196.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 168. சிவஞான போதம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 108 - 1
ஆ. ரு / 8

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. மெய்கண்டதேவ நாயனார்
ஆ. சிவஞான போதம் : மூலமும் உரையும்
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. செய்யுளும் உரைநடையும் கலந்தது; ஏறத்தாழ அச்சில் 170 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 41 ஏடு; 82 பக்கம். (ஏடு 1 முதல் 41 வரை)
ஆ. நீளம் 42 செ. மீ., அகலம் 4.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 11, 12 வரி.
உ. எழுத்துநிலை தெளிவாக உள்ளது.
ஊ. ஏடுகள் சிதிலமாகவுள்ளன.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கல்லா னிழன்மலை வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர் நல்லார் புனைவரே.

கல்லானிழல் மலை வில்லாரருளிய என்பது கயிலாயத்திற் கல்லால் நிழலின்கீழ்த் தெட்சணாமூர்த்தமா யெழுந்தருளியிருந்து சனகாதி கணால்வர்களுக்குந் தர்மார்த்த காம மோட்சமும் பிரமா விஷ்ணு வாதிகளுக்கு வேதபூமனுக்கிரகம் பண்ணிச் சிட்டரைப் பரிபாலனம் பண்ணியு மகாமேருவே வில்லாய்த் திரிபுராதிகண் முதலான துட்டரை நிக்கிரகம் பண்ணியு முலகத்தை யிரட்சித் தருளிய...

ஆ. முடிவு

பூமியிலுள்ள பக்குவான்மாக்களறியும்படிக்கு யேதுவினாலுந் திருட்டாந்தத்தினாலும் அர்த்தந் தெரிய விளக்கி அனுக்கிரகம் பண்ணின தென்றறிவாயாக. ஆகப் பன்னிரண்டாஞ் சூத்திரம். வெண்பா 9 சூரணை 4 ஆகச் சிவஞான போதம் விநாயகர் தோத் திரம் 1, பாயிரம் 1, அவையடக்கம் 1, சூத்திரம் 12க்குச் சூரணை 39, வெண்பா 82க்குச் சூத்திரமுள்பட 136. சிவஞான போதம் முற்றும். திருச்சிற்றம்பலம்.

## 5. பிற செய்திகள்

நூலை அடுத்து 12 சூத்திரங்களிலும் என்னென்ன செய்திகள் கூறப்பட்டுள்ளன என ஓர் அட்டவணை உள்ளது. இது 41ஆம் ஏடு.

## 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1 : 629; 16 : 1272-1277, ஆர். 1339, ஆர். 1348; 18:8091; 25:1154-1166; 27:545, 945; 31 : 229; 32 : 116; 48 : 11732; 60 : 22எ.

## 7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 169. சங்கற்ப நிராகரணம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 108-2
ஆ. ஞ/8

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. உமாபதி சிவாசாரியர்
ஆ. சங்கற்ப நிராகரணம் : மூலமும் உரையும்
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. செய்யுளும் உரைநடையும்;
அச்சில் ஏறத்தாழ 160 பக்கம் வரும்.

### 3. தோற்றக் கூறுகள்

அ. 39 ஏடு ; 78 பக்கம். (ஏடு 42 முதல் 80 வரை)
ஆ. நீளம் 42 செ. மீ. ; அகலம் 4.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 12, 13, 14 வரி.
உ. எழுத்துநிலை தெளிவாகவுள்ளது.
ஊ. பல ஏடுகள் சிதிலமாகவுள்ளன.
எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தொடர் எண் : 77 காண்க.

ஆ. முடிவு

**அவிகார வாதமொன்று, சங்கிராந்த வாதமொன்று, அயிக்கிய வாதமொன்று பரிணாம வாதமொன்று ... ஆகச் சமையிகள் 6. கலித்துறை .................. ஞானப்பிரகாச தேசிகனே. சங்கற்ப நிராகரணமெழுதி முடிந்தது. முற்றும்.**

ஆ. முடிவு

மலைகிழவோன் வந்தெய்தித் தழிஇக்காட்டி யஞ்ச லோம்புமதி யென்று அன்புடை நன்மொழி யளைஇயொ....... யாகத் தோன்றும்படி..... லரும் பரிசினல்குவனென வீடு பெறக் கருதிய விரவலனை நோக்கி வீடு பெற்றா னொருவ னாற்றுப் படுத்ததாக... ...முடிக்க.

5. ......................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

25 : 197.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 223. கல்லாடம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 129
ஆ. ய/4

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. கல்லாடர்
ஆ. கல்லாடம்
இ. சிற்றிலக்கியம்
ஈ. செய்யுள் 101

3. தோற்றக் கூறுகள்

அ. 66 ஏடு ; 132 பக்கம்.
ஆ. நீளம் 23 செ. மீ.; அகலம் 3.5 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 11, 12 வரி.
உ. எழுத்துநிலை தெளிவாகவுள்ளது.
ஊ. ஏடுகள் மிகமிகச் சிதிலமாகவுள்ளன. 13, 19, 21, 56, 78 ஆகிய ஏடுகள் இல்லை.
எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

செவ்வி திகழ்தருணச் செந்தா மரைவதனக்
கொவ்வையெழிற் செவ்வாய்க் குறத்தேனை—நவ்வி
விழியானை யைப்புணரும் வேளை மதவெள்ளம்
பொழியானை யைமனமே போற்று.

ஆ. முடிவு

மற்றதன் றோ...... னுற்றிரு வீருங்
கண்படுத் திரவி ............ முன்
எண்பட நும்பதி ஏகுதல் கடனே
கண்...................................... (100)

## 5. பிறசெய்திகள்

இச் சுவடியின் ஈற்றில் 'சொக்கலிங்கத்தின் றிருவாக்கு' என்று இரண்டு பாடல்கள் உள்ளன.

## 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

2: 44547, 44548 ; 4: 9706 ; 8: 52 ; 16: 214, 215, 217, 218, ஆர். 455, ஆர். 537 எ ; 18: 8067, 8071 ; 25: 1566 – 1573, 2315 ; 26: 205, 259 ; 28: 10832 ஏ ; 31: 69 ; 32: 52.

## 7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 224. திருக்குறள்

1. நூலகக் குறிப்புகள்

அ. 130
ஆ. ங / 1

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. திருவள்ளுவர்
ஆ. திருக்குறள்
இ. பதினெண் கீழ்க்கணக்கு
ஈ. செய்யுள் 1330

3. தோற்றக் கூறுகள்

அ. 116 ஏடு; 232 பக்கம்.
ஆ. நீளம் 24.5 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒருபக்கத்திற்கு 5 வரி.
உ. எழுத்துநிலை தெளிவாகவுள்ளது.
ஊ. ஏடுகள் சிதிலமாகவுள்ளன. 5, 6, 26, 32, 43, 46, 47, 53, 54, 102, 103, 110-113, 115, 119 ஆகிய ஏடுகள் காணப்படவில்லை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பாயிரம். கடவுள் வாழ்த்து.
அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு. (1)

ஆ. முடிவு

ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பங்
கூடி முயங்கப் பெறின்.

5. பிற செய்திகள்

முதல் இரண்டு ஏடுகள் வேறொருவருடைய கையெழுத்தாகப் புள்ளியிட்டு எழுதப்பட்டுள்ளன.

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

பல நூலகங்களிலும் உள்ளன.

7. வெளியீட்டுச் செய்திகள்

பல பதிப்புகள் வெளிவந்துள்ளன.

## 225. திருக்குறள்

1. நூலகக் குறிப்புகள்

அ. 131 - 1
ஆ. ங / 2

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. திருவள்ளுவர்
ஆ. திருக்குறள்
இ. பதினெண் கீழ்க்கணக்கு
ஈ. செய்யுள் 1330

3. தோற்றக் கூறுகள்

அ. 43 ஏடு; 86 பக்கம்.
ஆ. நீளம் 23 செ. மீ.; அகலம் 3.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒருபக்கத்திற்கு 10, 11 வரி.
உ. எழுத்துநிலை தெளிவாகவுள்ளது.
ஊ. ஏடுகள் மிகமிகச் சிதிலமாகவுள்ளன. 2, 6, 8, 9, 11-17, 23-25, 30, 33, 34, 43, 44, 46, 48, 56 ஆகிய 22 ஏடுகள் இல்லை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தொடர் எண் : 130 காண்க

ஆ. முடிவு

தஞ்சம் தமர்அல்லர் ஏதிலார் தாமுடைய
நெஞ்சம் தமர்அல் வழி.

5. …………………

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

பல நூலகங்களிலும் உள்ளன.

7. வெளியீட்டுச் செய்திகள்

பல பதிப்புகள் வெளிவந்துள்ளன.

## 226. திருவள்ளுவ மாலை

1. நூலகக் குறிப்புகள்

அ. 131 - 2
ஆ. ங / 2

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. நாமகள் முதலியோர்
ஆ. திருவள்ளுவ மாலை
இ. பல்வகை நூல்கள்
ஈ. செய்யுள் 53

3. தோற்றக் கூறுகள்

அ. 5 ஏடு; 10 பக்கம்.
ஆ. நீளம் 23 செ. மீ.; அகலம் 3.5 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒருபக்கத்திற்கு 10, 11 வரி.
உ. எழுத்துநிலை தெளிவாகவுள்ளது.
ஊ. ஏடுகள் மிகமிகச் சிதிலமாகவுள்ளன.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

திருத்தகுசீர் தெய்வத் திருவள் ளுவரோ
டுருத்தகு நற்பலகை ...... ...... யிருக்க
வுருத்திர தன்ம ரெனவுரைத்து வானி
லொருக்க.... வென்றதோர் சொல் — அசரீரி (1)

ஆ. முடிவு

வள்ளுவர் பாட்டின் வளமுரைக்கின் வாய்மடுக்கும்
தெள்ளமுதின் றீஞ்சுவையு மொவ்வாவாந்—தெள்ளமுதம்
உண்டறிவார் தேவர் உலகடங்க உண்ணுமால்
வண்ட.....ன் மூப்பான் மகி...து. ஆலங்குடி வங்கனார் 53.

5. ..................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

16 : 165, 166; 18 : 6158டி, 11237பி; 19 : 2977எ; 3074ஏ ; 25 : 2318-2322; 27 : 69பி; 60 : 507பி.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 227. நாலடியார்

1. நூலகக் குறிப்புகள்

அ. 132
ஆ. ங/3

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. சமணமுனிவர்கள்

ஆ. நாலடியார்

இ. பதினெண் கீழ்க்கணக்கு

ஈ. செய்யுள் 400

## 3. தோற்றக் கூறுகள்

அ. 30 ஏடு; 60 பக்கம்.

ஆ. நீளம் 23 செ. மீ.; அகலம் 3. 5 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 11 வரி.

உ. எழுத்து நிலை தெளிவாக வுள்ளது.

ஊ. ஏடுகள் மிகச் சிதிலமாக வுள்ளன. 24, 30, 31 ஆகிய 3 ஏடுகள் இல்லை.

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

செல்வ நிலையாமை

வானிடு வில்லின் வரவறியா வாய்மையாற்
கானிலந் தோயாக் கடவுளை—யானி...ஞ்
சென்னி யுறவணங்கிச் சேர்த்துமெம் முள்ளத்து
முன்னி யவைமுடிக வென்று.

ஆ. முடிவு

என்னேமற் றிவ்வுடம்பு பெற்று மறநினையார்
கொன்னே கழிப்பர்தம் வாழ்நாளை—யன்னோ
யளவிறக்கு காதற்ற மாருயி ரன்னார்க்
கொளவிழைக்குங் கூற்றமுங் கண்டு (10)

புல்லறிவாண்மை முற்றும். ஆகக்கவிதை 330 சிவமயம்.

5. ..................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

பல நூலகங்களிலும் உள்ளன.

7. வெளியீட்டுச் செய்திகள்

பல பதிப்புகள் வெளிவந்துள்ளன.

## 229. சிவஞான போதம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 133-1
ஆ. ஞ/11

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. மெய்கண்டதேவ நாயனார்
ஆ. சிவஞான போதம்
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. செய்யுள் 12

3. தோற்றக் கூறுகள்

அ. 5 ஏடு; 10 பக்கம். (ஏடு 9 முதல் 13 வரை)
ஆ. நீளம் 21. 5 செ. மீ.; அகலம் 3. 5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 9, 10 வரி.
உ. எழுத்து நிலை தெளிவாகவுள்ளது.
ஊ. ஏடுகள் சிதிலமாகவுள்ளன. 1-8 ஏடுகள் இல்லை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

இல்லா முலைப்பாலுங் கண்ணீரு மேந்திழைபா
னல்லா யுளதாமா னீர்நிழல்போல்— இல்லா
அருவாகி நின்றானை யாரறிவார் தானே
யுருவாகித் தோன்றானே லுற்று.

இனி யிவ்வான்மாக்கள் ஐயுணர்வுகளான் மயங்கித் தம்மை யுணரா வென்றது. அவைதாம் பளிங்கிலிட்ட வண்ணம்போற் காட்டிற்றைக் காட்டி நிற்றலான். (இது எட்டாம் சூத்திரம் 2 ஆம் அதிகரணம் உதாரணவெண்பா)

ஆ. முடிவு

வேதம் பசுவதன்பால் மெய்யா கமமவற்றின்
ஓதுதிருப் பாட்டேயுள் ளுறுநெய்—நீதியாய்
நெய்யிற் சுவையாகும் நீள்வெண்ணெய் மெய்கண்டான்
சைவத்தா லாய்ந்த தமிழ்.

திருச்சிற்றம்பலம். பன்னிரண்டாஞ் சூத்திரம் முற்றும்.
சிவஞான போத முற்றும்.

5. ......................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

தொடர் எண்: 67 காண்க.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 229. சிவஞான சித்தியார்

1. நூலகக் குறிப்புகள்

அ. 133-2
ஆ. ஞ/11

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அருணந்தியார்

ஆ. சிவஞான சித்தியார் : சுபக்கம்

இ. மெய்கண்ட சாத்திரம்

ஈ. செய்யுள் 318

3. தோற்றக் கூறுகள்

அ. 38 ஏடு; 76 பக்கம்.

ஆ. நீளம் 21. 5 செ. மீ.; அகலம் 3. 5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 10 வரி.

உ. எழுத்து நிலை சுமாராக வுள்ளது.

ஊ. ஏடுகள் சிதிலமாக வுள்ளன. 14, 21, 28, 29, 30, 33, 34, 35 ஆகிய ஏடுகள் இல்லை.

எ. குறை

4 சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அன்னிய சாதி யும்தன் சாதியு மகன்று நிற்றல்
தன்னியல் பன்னி யத்தைத் தவிர்ந்துதன் சாதிக் கொ..........
துன்னிய பொதுவி யற்கை சொன்னவிவ் விரண்டி னுள்ளே
மன்னிய பொருளி யாவு மடங்கிடு மான முற்றால். (10)

ஆ. முடிவு

தொழுது நெறிகண்டேன் தூயவரன் தானே
முழுதுமாய் நின்றமுறை கண்டேன் — பழுதிலா
வெண்ணெய்நல்லூர் மெய்கண்ட தேவன் விரைமலர்த்தாள்
நண்ணிநாம் பெற்ற நலம்.

சித்தியார் சுபட்ச முற்றும். ஆகச் செய்யுள் 327.

5. ...................

6. மாற்றுச்சுவடிகள் காணுமிடம்

தொடர் எண் : 68 காண்க.

## 230. சிவப்பிரகாசம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 133-3
ஆ. ரு/11

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. உமாபதி சிவாசாரியர்
ஆ. சிவப்பிரகாசம்
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. செய்யுள் 100

### 3. தோற்றக் கூறுகள்

அ. 18ஏடு; 36 பக்கம். (ஏடு 60 முதல் 77 வரை)
ஆ. நீளம் 21. 5 செ. மீ.; அகலம் 3 5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒருபக்கத்திற்கு 11, 12 வரி.
உ. எழுத்து நிலை தெளிவாகவுள்ளது.
ஊ. ஏடுகள் சிதிலமாகவுள்ளன.
எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு
தொடர் எண் : 71 காண்க.

### 5. பிற செய்திகள்

இந் நூலினை அடுத்து 78 ஆம் ஏட்டிலிருந்து 104 வரை ஏடுகள் இல்லை. 105இல் இருபாவிருபது தொடங்குவதால் 76-104இல் மெய்கண்ட சாத்திர நூல்கள் எவையேனும் இருந்திருக்க வேண்டும்.

### 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

தொடர் எண் : 71 காண்க,

# 251. இருபா இருபது

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 133-4
ஆ. ஞ/11

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அருணந்தியார்
ஆ. இருபா இருபது
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. செய்யுள் 20

## 3. தோற்றக் கூறுகள்

அ. 3 ஏடு; 6 பக்கம் (ஏடு 105 முதல் 107 வரை)
ஆ. நீளம் 21. 5 செ. மீ.; அகலம் 3. 5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 12, 13 வரி.
உ. எழுத்து நிலை சுமாராகவுள்ளது.
ஊ. ஏடுகள் மிகச் சிதிலமாகவுள்ளன.
எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தொடர் எண் : 69 காண்க.

ஆ. முடிவு

நின்னை வெளிப்படுத் தொளிப்பை நீயே
லருண்மா றாகும் பெறுமஃ தன்றியு

நிற்பெற் றவர்க்கு முற்பவ முண்டெனுஞ்
சொற்பெறு மகுதி.......ல்லுல கில்லை
யவ்வவ் வமைவுஞ் சார்வு மயர்வறச்
சொல்லிற் சொல் .......... ... ...........

## 232. சேது புராணம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 134
ஆ. ப / 18

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. நிரம்பவழகிய தேசிகர்
ஆ. சேது புராணம் : சேதுபலச்சருக்கம் 166ஆம் பாடல் முடிய
இ. தலபுராணம்
ஈ. செய்யுள்; அச்சில் ஏறத்தாழ 400 பக்கம் வரும்.

### 3. தோற்றக் கூறுகள்

அ. 274 ஏடு; 548 பக்கம்.
ஆ. நீளம் 37 செ. மீ.; அகலம் 4 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒருபக்கத்திற்கு 7, 8, 9 வரி.
உ. எழுத்துநிலை சுமாராகவுள்ளது.
ஊ. ஏடுகள் மிகமிகச் சிதிலமாகவுள்ளன.
எ. குறை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தொடர்கின்ற விடுக்கண் வெற்பைத்
துகள்படத் துழைக்கு மெ....ன்
அடர்கின்ற வதற்கு நாதன்
ஆகிய வைங்கை முக்கட்

படர்வென்றிப் பகவன் முன்னைப்
    பவமுதற் படியி னெல்லாம்
இடர்நின்று புரக்க வெம்மை
    யெங்கணு மெந்த ஞான்றும்.

ஆ. முடிவு

இக்கதைகேட் டவர்படித்தோர் தமையரியா
    சனத்திருத்தி யர்ச்சித் தேத்தி
மிக்கபணி தூசுநிலம் வியன்சுரபி
    செம்பொனிவை விருப்பி னீந்தால்
முக்கணன்மா லயன்பூசை முற்றியதா
    மொழிந்திடின் ………… ………… …………

5. ……………………

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

தொடர் எண் : 186 காண்க.

## 235. திருவாதவூரர் புராணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 135
ஆ. ந / 15

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. கடவுள்மாமுனிவர்
ஆ. திருவாதவூரர் புராணம்
இ. காப்பியம்
ஈ. செய்யுள் 541

3. தோற்றக் கூறுகள்

அ. 41 ஏடு; 82 பக்கம்.
ஆ. நீளம் 37 செ. மீ.; அகலம் 3.5 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒருபக்கத்திற்கு 9, 10, 11 வரி.
உ. எழுத்துநிலை சுமாராகவுள்ளது.
ஊ. ஏடுகள் மிகமிகச் சிதிலமாகவுள்ளன.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பவளமால் வரையி னிலவெறிப் பதுபோற்
பரந்தநீற் றழகு........ ................
—வளமா துடனின் றாடிய பரமன்
சிறுவனைப் பாரதப் பெரும்போர்
தவளமா மருப்பொன் றொடித்தொரு கரத்திற்
றரித்துயர் கிரிப்புறத் தெழுதுங்
கவளமா களிற்றின் றிருமுகம் படைத்த
கடவுளை நினைந்துகை தொழுவாம்.

ஆ. முடிவு

ஈனமிகுந் துளதோலும் என்புநரம் பும்சீயும்
ஆனவுடல் சிவரூபம் ஆம்இதனைத் தெளியாமல்
ஊனுடலுக் கிரைதேடி உழன்றுலகில் தடுமாறி
மர்நரகிற் புகுவாரே மாயவலைப் படுவார்கள். (128)

இ. பிற்குறிப்பு

அம்பலவாணன் கையெழுத்து.

5. ....................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

தொடர் எண் : 182 காண்க.

## 234. கூர்ம புராணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 136
ஆ. ந / 16

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அதிவீரராம பாண்டியன்

ஆ. கூர்ம புராணம்

இ. காப்பியம்

ஈ. செய்யுள் 3715

3. தோற்றக் கூறுகள்

அ. 246 ஏடு; 492 பக்கம்.

ஆ. நீளம் 48 செ. மீ.; அகலம் 5.5 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒருபக்கத்திற்கு 12, 13 வரி.

உ. எழுத்துநிலை தெளிவாகவுள்ளது.

ஊ. ஏடுகள் சிதிலமாகவுள்ளன.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சீர்பூத்த குழவிமதி யமுதிரைப்பக்
கங்கைசெழுந் திவலை தூற்ற
வார்பூத்த பொம்மன்முலைக் கவுரியிரு
கண்களிப்ப ............... போற்ற
ஏர்பூத்த மணிமன்றத் தானந்த
நடம்புரியும் எண்டோண் முக்கட்
கார்பூத்த கறைமிடற்றோன் கமலமலர்ச்
சேவடியெங் கருத்துள் வைப்பாம். (1)

ஆ. முடிவு

எதிர்மலைந் தேற்ற வெஞ்சமத் தரசர்
இடுதிரை கடையளந் தறியா
மதுரையும் புகாரும் வஞ்சியும் புரக்கும்
மாலவேல் வழுதியர் பெருமான்
அதிர்பொலங் கழற்கா லடலதி வீரன்
அரிறபத் தெரிந்துநன் கிசைத்த
முதிர்தமிழ்க் கூர்ம புராணமுற் றுணர்ந்தோர்
முத்திவீட் டினிதுவீற் றிருப்பார். (13)

தொண்ணூற்று நாலாவது பிராகிருதப் பிரளய முரைத்த வத்தியாயம் முற்றும். பூருவ காண்டம் அத்தியாயம் .... ....... ... திருவிருத்தம் ...... .... உத்திரகாண்டம் அத்தியாயம் .... க்கு விருத்தம்............ஆகக் காண்டம் 2க்கு அத்தியாயம் 94க்குத் திருவிருத்தம்......... ....

இ. பிற்குறிப்பு

பிலவங்க வருஷம் பங்குனி மாதம் 30ஆம் தேதி மங்கள வார நாள் கூர்ம புராணம் எழுதி நிறைவேறினது. முற்றும்.

தருமபுரம் ஞானசம்பந்த குருசுவாமி ஆகம பண்டாரத்து ஏடு.

5. ....................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

தொடர் எண் : 97 காண்க.

## 235. இலிங்க புராணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 137
ஆ. ந/17

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அதிவீரராம பாண்டியன்
ஆ. இலிங்கபுராணம்
இ. காப்பியம்
ஈ. செய்யுள் 2504

3. தோற்றக் கூறுகள்

அ. 112 ஏடு ; 224 பக்கம்.
ஆ. நீளம் 33.5 செ.மீ.; அகலம் 3.5 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 12,13,14 வரி.

உ. எழுத்துநிலை தெளிவாகவுள்ளது.

ஊ. ஏடுகள் சிதிலமாகவுள்ளன. 100,101,102 ஆகிய 3 ஏடுகள் இல்லை.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பிறைதவழு மெழில்தோன்றப் பிறங்குகதிர் வெண்கோட்டாற்
செறிகதிர்செய் தடங்குடுமிச் செம்பொன்மால் வரைவாய்ப்ப
விறைபுரியுஞ் சவுந்தரிய லகரியினை வடித்தெழுதும்
விறல்கெழுமும் வேழமுகன் விரைமலர்த்தா ளிணைதொழுவாம்.

ஆ. முடிவு

நான்மறை முனிவர் வாழ்க நம்பன தடியார் வாழ்க
ஆனினம் வாழ்க மாலை யணிமுடி யரசர் வாழ்க
தானமா சைவம் வாழ்க வுலகெலாந் தழைத்து வாழ்க
பான்மைசா லிந்நூல் கேட்டோர் படித்தவர் வாழ்க மாதோ. (16)

நாற்பத்தாறாவது யோக முரைத்த வத்தியாய முற்றும். ஆக உத்தர காண்டம் அத்தியாயம் 46 க்குத் திருவிருத்தம் 550. பூருவ காண்டம் அத்தியாயம் 108க்குத் திருவிருத்தம் 1954. ஆகக் காண்டம் 2க்கு அத்தியாயம் 154க்குத் திருவிருத்தம் 2404.

இ. பிற்குறிப்பு

1012 ஆம் வருஷம் புரட்டாசி மாதம் 17 ஆம் தேதி சுக்கிர வாரமும் சஷ்டியும் ரோகணி நட்சத்திரமும் கூடின சுபதினத்தில் எழுதி முற்றுப்பெற்ற இலிங்கபுராணம் நீடூழிகாலம் வாழ்க.

## 5. ..................

## 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

4 : 9643 ; 8 : 2,115 ; 16 : 536,537 ; 18 : 3881 ; 25 : 441-443 ; 60 : 322.

## 7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

# 256. வில்லிபாரதம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 138
ஆ. ந/18

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. வில்லிபுத்தூரார்
ஆ. வில்லிபாரதம் : பதினெட்டாம் போர்ச் சருக்கம் முடிய
இ. காப்பியம்
ஈ. செய்யுள் ; அச்சில் ஏறத்தாழ 400 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 204 ஏடு ; 408 பக்கம்.
ஆ. நீளம் 33.5 செ.மீ.; அகலம் 3.5 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 13,14 வரி.
உ. எழுத்துநிலை தெளிவாகவுள்ளது.
ஊ. ஏடுகள் மிகச்சிதிலமாகவுள்ளன. 129,178 ஆகிய ஏடுகள் இரண்டிரண்டு உள்ளன.
எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தொடர் எண் : 123 காண்க.

ஆ. முடிவு

வெப்பான்மற் றிவரிரங்க ............லும்
இருளொழித்த விரவி பாத்த
துப்பார்செங் கொடிகளென வுதயகிரி
மிசைப்படர்ந்து தோற்றஞ் செய்யத்

தப்பாத நிலமடந்தை தன்பார
    மகற்றுவித்த சா...... க......
.......... பாண்டவர்க ளைவரொடும்
    புரிந்தசெயல் அறைதும் அம்மா. (240)

பதினெட்டாம் நாள் போர் முற்றும். ஆகத் திருவிருத்தம்......

5. ............. ...

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

தொடர் எண் : 123 காண்க.

## 237. சிவசைலத்தல புராணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 139
ஆ. ப/19

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..........................
ஆ. சிவசயிலத் தலபுராணம்
இ. தலபுராணம்
ஈ. செய்யுள் ; அச்சில் சுமார் 250 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 174 ஏடு ; 348 பக்கம்.
ஆ. நீளம் 12.5 செ.மீ.; அகலம் 3.5 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 8, 9 வரி.
உ. எழுத்து நிலை தெளிவாகவுள்ளது.
ஊ. ஏடுகள் மிக மிகச் சிதிலமாகவுள்ளன.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

............ கோடு மிருபதமு மும்மதமு நால்வாயு
............ மோரைந்து முருகோடுங் கடம்............
............ னோடும் பிறந்ததந்தி முகவன்ன னைக்கருகொ
............ போது முத்தமி... ப்ப நிருத்தமிடு............

ஆ. முடிவு

சிவசயில பதியருமைத் திருமேனி தனைத்தீண்டுந்
தவமறையோர் வாழிபரி சனர்வாழி தமிழ்வாழி
பவமகல விறைவர்திருப் பணிசெயடி யவர்வாழி
யவனி ............................................ வாழியதே. (52)

பதினோராவது அகத்தியர் பூசித்த சருக்கம் முற்றும்.

இ. பிற்குறிப்பு

1027 ஆம் வருஷம் விருச்சிக ரவி ...... ந் தேதி புந்தி வாரமும் ரேவதி நட்சத்திரமுங் கூடின சுபதினத்தில் சிவசயிலஸ்தல புராண முற்றிற்று.

## 238. திருச்செந்தூர்ப் புராணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 140
ஆ. ப/20

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. வென்றிமாலைக் கவிராயர்
ஆ. திருச்செந்தூர்ப் புராணம்
இ. தலபுராணம்
ஈ. செய்யுள் 897

3. தோற்றக் கூறுகள்

அ. 119 ஏடு ; 238 பக்கம்.
ஆ. நீளம் 20 செ. மீ.; அகலம் 3.5 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒருபக்கத்திற்கு 9 வரி.
உ. எழுத்துநிலை தெளிவாகவுள்ளது.
ஊ. ஏடுகள் மிகச் சிதிலமாகவுள்ளன. 69 ஆம் ஏடு இல்லை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு

தொடர் எண் : 92 காண்க

இ. பிற்குறிப்பு

நந்தன வருஷம் மாசிமாதம் 6 ஆம் தேதி அமர பட்சத்து சத்தமியும் ஆதித்த வாரமும் சுபயோக சுபகரணமும் பெற்ற அநுஷ நட்சத்திரத்தில் திருச்செந்தூர்த் தலபுராணம் முகிந்தது. முற்றும்.

இந்தத் தலபுராணம் இராமநாதபுரமான சேதுசமஸ்தானத்தில் பிரதானிக்கம் பிச்சப்பிள்ளையவர்கள் தம்பியான சகோதரர் வேலுப்பிள்ளைவாளுக்கு வள்ளியூர் குமாரசுவாமி எழுதிக் கொடுத்தேன்.

## 239. சிவஞான போதம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 141
ஆ. ரு/12

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. மெய்கண்ட தேவநாயனார்
ஆ. சிவஞானபோதம் : சிவஞான முனிவர் உரையுடன்
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. செய்யுளும் உரைநடையும் ; அச்சில் ஏறத்தாழ 250 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 91 ஏடு ; 182 பக்கம்.
ஆ. நீளம் 41 செ. மீ ; அகலம் 4 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒருபக்கத்திற்குப் பலவித வரி.
உ. எழுத்துநிலை சுமாராகவுள்ளது. நிறையத் திருத்தங்கள் செய்யப்பட்டுள்ளன.
ஊ. ஏடுகள் பல சிதைந்தும், முறிந்தும் உள்ளன. 1, 2, 11, 12, 13, 15, 23, 29, 30, 49, 50, 52, 53, 81, 82, 83, 95, 100, 101 ஆகிய 19 ஏடுகள் இல்லை.
எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

.... .. ...... சேர்ப்பாமெனவே தான் மலரடிக்கு .......... சென்னி சேர்ப்பா மென்றுஞ் சொல்லியல்பான் ..... .... சூத்திரப் பொருளுங் குறிப்பா ....... . வகுத்துக் காட்டுதல் மங்கல வாழ்த்துக் கிலக்கண மாதலின்... ....

ஆ. முடிவு

இவ்வாறு பத்தாஞ் சூத்திரத்தானும் பதினோராஞ் சூத்திரத் தானும் முறையே பாச நீக்கமுஞ் சிவப்பேறுமாகிய பயன் பெற் றார்க்குச் சீவன்முத்தி நிலைக்க ணிகழுமியல்பு வகுத்துக் கூறுதற் கெழுந்தது பன்னிரண்டாஞ் சூத்திரம். செங்கமலத்தா........ ... ........கள் என்பது பற்றறக் கழிந்த மும்மலங்கள்............... ....

## 5. பிறசெய்திகள்

ஏட்டெண் வரையப்படாத ஓர் ஏட்டில், 'சிவஞான சுவாமிகள் திவ்வியத் திருக்கரத் தெழுத்தென்றே அளவிலாத மகிழ்வுற்றிருக் கின்றேன். பிரமாதி கார்த்திகை மாதம் 16 ஆம் தேதி' என்ற குறிப்பு உள்ளது. இதனால் மாதவச் சிவஞான முனிவரால் இச்சுவடி எழுதப்பட்டதோ என்று எண்ணத் தோன்றுகிறது.

## 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

தொடர் எண் : 168 காண்க.

# 210. சேது புராணம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 142

ஆ. ப/21

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. நிரம்பவழகிய தேசிகர்

ஆ. சேதுபுராணம் : சேதுமாதவச் சருக்கம் 13 ஆம் பாடல்முடிய

இ. தலபுராணம்

ஈ. செய்யுள்; அச்சில் ஏறத்தாழ 500 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 236 ஏடு; 472 பக்கம்.

ஆ. நீளம் 40. 5 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 8, 9 வரி.

உ. எழுத்துநிலை தெளிவாக வுள்ளது.

ஊ. ஏடுகள் மிகமிகச் சிதிலமாக வுள்ளன.

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

திங்களங் குழவி யென்னத் திகழொரு மருப்பிற் சோதி
தங்குகிம் புரிவ யங்கத் தடமணி மகுடந் தாங்கித்
துங்கநல் ...... .... .... ... தூயசீ ரிராம சேதுப்
புங்கவன் வணங்கும் யானை முகத்தனைப் போற்றல்செய்வாம் (1)

ஆ. முடிவு

ஆதி நாளினி ராகவ னா .......... ..........
சேது .......... ணறைகுறை தீர்த்திடும்
மாத ...... மாலவ ........ ........... கொடு
போதல் போன்றது போதகம் போவதே. (13)

5. ........................

6, மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

தொடர் எண்: 186 காண்க.

## 241. திருப்புகழ்

1. நூலகக் குறிப்புகள்

அ. 143
ஆ. த/4

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அருணகிரிநாதர்
ஆ. திருப்புகழ்
இ. தோத்திரம்
ஈ. செய்யுள் ; அச்சில் ஏறத்தாழ 40 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 26 ஏடு; 52 பக்கம்.
ஆ. நீளம் 40. 5 செ. மீ., அகலம் 2. 5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 5, 6 வரி.
உ. எழுத்து நிலை சுமாராகவுள்ளது.
ஊ. ஏடுகள் சுமாரான நிலையில் உள்ளன. 1-11 ஏடுகள் இல்லை.
எ. குறை

4. சிறப்புச்செய்திகள்

அ. தொடக்கம்

மறுவி லாது தினைவிளைந்த புனம்வி டாம லதிலிருந்த
வலிய காதல் புனையணங்கின் மணவாளா
மருவு ஞாழ லினிதிருந்த வடிவு சூத வனநெருங்கி
வளர்சு வாமி மலையமர்ந்த பெருமாளே. (19)

ஆ. முடிவு

மேகலை நெகிழ்த்திக் காட்டி வார்குழல் விரித்துக் காட்டி
வேல்விழி புரட்டிக்காட்டி யழகாக
மேனியை ........... ........... ........ ........... ...........

5. ...............

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

தொடர் எண்: 133 காண்க.

## 242. மருத்துவ நூல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 144
ஆ. ல/34

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ...............................
ஆ. பெயர் தெரியாத ஒரு மருத்துவ நூல்
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 121

3. தோற்றக் கூறுகள்

அ. 27 ஏடு; 54 பக்கம்.
ஆ. நீளம் 20 செ. மீ., அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 7, 8 வரி.
உ. எழுத்து நிலை நன்றாக வுள்ளது.
ஊ. ஏடுகள் சிதிலமாக வுள்ளன 1, 5, 7-10, 12, 22, 23, 26, 28, 31, 32 ஆகிய ஏடுகள் இல்லை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

.............................................
கொடிய கனல் சீதமுடன் விந்து வாச்சு
ஏறாத பித்தத்தால் பிறந்த வாதம்
எழுந்தபித்த சிலேத்துமத்தி லிருந்த வாறே. (3)

ஆ. முடிவு

கேளடா பித்தமென்ற தெல்லாம் போகும்
கிறுகிறுப்புத் தலைசுழற்றல் வாய்நீர் ஊறல்
நாளடா ரத்தபித்தம் எரிதல் காந்தல்
தலமான சடங்கருப்பு இளைப்பீளை பித்தம்
சூளடா மஞ்சள்நீர் ரத்த மூத்திரம்
சுழற்றலுடன் உஷ்ணங்கள் சூட தெல்லாம்
வேளடா மேலெரிவு கைகால் காந்தல்
வெளுத்தசடங் கருப்பாகும் வித்தை பாரே. (124)

விதமான சங்கம்வேர்த் தயிலங் கேளு
வெட்டிவந்து கால்த்துலா மிடித்துப் போடு
.............................................

## 215. வராகிமாலை

1. நூலகக் குறிப்புகள்

அ. 145
ஆ. த/5

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..............
ஆ. வராகி மாலை
இ. தோத்திரம்
ஈ. செய்யுள் 17

## 3. தோற்றக் கூறுகள்

அ. 7 ஏடு; 14 பக்கம்.
ஆ. நீளம் 19 செ. மீ ; அகலம் 2. 5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 4 வரி.
உ. எழுத்து நிலை சுமாராக வுள்ளது.
ஊ. ஏடுகள் சிதிலமாகவுள்ளன. 2, 6 ஆகிய ஏடுகள் இல்லை.
எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பெருக்குங் கருணை வராகிதன் மாலையைப் பேசுதற்கு
நெருக்குங் குவிமுலை யம்பிகை வாமி நிறைந்துமகிழ்ந்
திருக்க... றாசுதன் அங்குச பாசங்கொண் டென்வினையே
கருக்குந் தகைமை விநாயகன் சேவடி காப்பதுவே (1)

ஆ. முடிவு

மாதரி வீரி வயிரவி காளி வாலைகுண
பூதரி யோக புராணாதி காரணி பொற்கிரிவாழ்
நீதரி மந்திர சடாட்சரி யென்னுமென் னெஞ்சகத்துள்
ஆதர வாநின் றுதவு- வராகி யம்பிகையே. (17)

## 5. .......... .......

## 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1: 165, 806; 8:246; 16: ஆர். 2681, ஆர்.2689, ஆர். 5792, ஆர். 7292; 25: 1694-1696; 27: 771பி, 833ஏ, 837பி, 838இ 898ஏ, 8660; 28: 43661, 43662, 43666; 60: 9ஏ, 10இ.

## 7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 244. அகத்தியர் பிள்ளைப்பிணி வாகடம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 146 - 1

ஆ. ல/35

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ...................

ஆ. அகத்தியர் பிள்ளைப்பிணி வாகடம்

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 195

3. தோற்றக் கூறுகள்

அ. 34 ஏடு ; 68 பக்கம். (ஏடு 1 முதல் 34 வரை)

ஆ. நீளம் 26.5 செ. மீ.; அகலம் 3 செ.மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒருபக்கத்திற்கு 7, 8, 9 வரி.

உ. எழுத்துநிலை நன்றாகவுள்ளது.

ஊ. ஏடுகள் மிகச்சிதிலமாகவுள்ளன.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அத்தியுரித் ......... உமை யாளீன்ற
சத்தி கணபதியின் தாள்போற்றி — எத்திசையும்
கர்ப்பமின் னார்க்குங் குழந்தைப் பிணிதீர்க்கக்
கற்பக மாங்குறுகைக் கட்டு.

ஆ. முடிவு

இலைக்கள்ளி வடக்குவேர் பட்டை யிதனுடனே
கலக்குமிள குள்ளி கடுக்காயும் — பலக்க
அடைசுட்டுத் தான்குழவி யருந்த மலசலமும்
புடைபுடைத்து விட்டோடிப் போம். (195)

## 245. பறவைத் தோஷத்தின் குணம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 146 - 2
ஆ. ல/35

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ...............
ஆ. பறவைத் தோஷத்தின் குணம்
இ. மருத்துவம்
ஈ. செய்யுளும் உரைநடையும்; அச்சில் ஏறத்தாழ 140 பக்கம் வரும்.

### 3. தோற்றக் கூறுகள்

அ. 65 ஏடு ; 130 பக்கம்.
ஆ. நீளம் 26.5 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. பல ஏடுகள் இருபக்கமும் சில ஏடுகள் ஒருபக்கமும் எழுதப் பட்டுள்ளன.
ஈ. ஒருபக்கத்திற்குப் பலவித வரி.
உ. எழுத்துநிலை சுமாராகவுள்ளது.
ஊ. ஏடுகள் சிதிலமாகவுள்ளன.
எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பறவைத் தோடத்தின் குணம் :- அதற்கு மருந்து

குஞ்சியி னுடம்பு ணர்ந்து குடல்தனில் பால்தங் காது
நெஞ்சையும் குனிய வாங்கும் நிறமது வேற தாகும்
மிஞ்சிய மூச்சு யர்ந்து மீன்கொக்குச் செடியே நாறும்
பஞ்சினை முளியும் நாளே பறவையின் தோசந் தானே (1)

ஆ. முடிவு

வாந்தி பண்ணுகிறதுக்கு :- உப்பு வறுத்துக் கொட்டிப் போட்டு ஆணாயிலை வறுத்துத் தண்ணீர் விட்டு வற்றக்காய்ச்சிக் கொடுக்க வாயாலெடுக்கிறது வயிறு போகிறது நிற்கும். கண்டது· சத்திக்கு........ மிளகும் மயிலிறகும் துணிக்குள் வைத்துத் திரிச்சுப் புகை முகத்தில் பிடிக்க வாந்தி யெடுக்கிறது நிற்கும்.

## 246. பட்சம் நின்ற கணக்கு

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 147 - 1
ஆ. ல/36

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ....................
ஆ. பட்சம் நின்ற கணக்கு
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 131

### 3. தோற்றக் கூறுகள்

அ. 22 ஏடு ; 44 பக்கம். (ஏடு 1 முதல் 22 வரை)
ஆ. நீளம் 27 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ, ஒருபக்கத்திற்கு 7, 8 வரி.
உ. எழுத்துநிலை நன்றாகவுள்ளது.
ஊ. ஏடுகள் மிகச் சிதிலமாகவுள்ளன.
எ. குறை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

திருவார் சிரகிரிவாழ் செவ்வந்தி யானை
மருவார் கமலபதம் வாழ்த்தித் — தெருளவே
வாகடத்திற் பட்சத்தை வன்றமிழின் வெண்பாவால்
பாகடரச் சொல்வேன் பரிந்து (1)

ஆ. முடிவு

கோதமுத லாய்மருந்து கொள்ளுதற்குப் பொன்வெள்ளி
தீதகலுங் கஞ்சமுதற் செய்யலா — மேதேனும்
வள்ளத்தில் வார்த்தருந்தி வா ........ கத்தினிடை
மெள்ளக் கவிழ்க்க விளிம்பு. (131)

## 247. குழந்தைகள் மாந்த சாத்திரம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 147 - 2
ஆ. ல/36

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ...............
ஆ. குழந்தைகள் மாந்த சாத்திரம்
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 185

### 3. தோற்றக் கூறுகள்

அ. 43 ஏடு ; 86 பக்கம். (ஏடு 23 முதல் 83 வரை)
ஆ. நீளம் 27 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒருபக்கத்திற்கு 7, 8 வரி.
உ. எழுத்துநிலை நன்றாகவுள்ளது.
ஊ. ஏடுகள் சிதிலமாகவுள்ளன. 32 - 35, 51, 52, 65 - 69, 72 - 78 ஆகிய ஏடுகள் இல்லை.
எ. குறை

### 4. சிறப்புச்செய்திகள்

அ. தொடக்கம்

பூரண............. மருருவா ..............
... ... .... .......... குந்து பாரு
காரணமோய் வாயுவினால் நீர்சலங்க ளாகி
கனமான ........... .......... ன ளாகி

தாரணமாய்ச் சுரோணித....க் குலங்க ளாகி
　　தழைத்ததப்பா வுலகத்துள் தையல் தேடி
வாரணியுங் கொங்கைமடல் முன்னால் வந்து
　　மகிழ்ந்திருந்து வொருமணியாள் வாங்கு நாளே. (1)

ஆ. முடிவு

போமப்பா திரிகடுகில் சன்னி தோஷம்
　　பொல்லாத நெஞ்சடைப்பு வாய்வு மூர்ச்சை
தாமப்பா வயிர்ப்பேதி வயிற்றி லூதல்
　　தனியிஞ்சிச் சாற்றினிலே கொடுக்கத் தீரும்
வேமப்பா சூலையொடு பித்தப் பாண்டு
　　விஷபாகம் வயிற்றுவலி குன்மஞ் சோகை
பாமப்பா கொடிவேலி கிசாயத் தூட்டப்
　　பறக்குமடா வெகுரோகம் பரிந்து பாரே. (185)

## 248. ரசவர்க்கம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 147 - 3
ஆ. ல/36

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..................
ஆ. ரசவர்க்கம்
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 215

### 3. தோற்றக் கூறுகள்

அ. 28 ஏடு ; 56 பக்கம். (ஏடு 84 முதல் 116 வரை)
ஆ. நீளம் 27 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒருபக்கத்திற்கு 7, 8 வரி.

உ. எழுத்துநிலை நன்றாகவுள்ளது.

ஊ. ஏடுகள் மிகச் சிதிலமாகவுள்ளன. 94 - 96, 98 ஆகிய ஏடுகள் இல்லை.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

திருப்பொதிகை வாழும் சிவமகத்தி தீசன்
குருமொழி ரசவர்க்கங் கூற — முருகனுக்கு
முந்தி உதித்தோனாம் மும்மத நான்குபுயத்
தந்திமுகன் தாள்காப்புத் தான். (1)

ஆ. முடிவு

பச்சைக்கற் பூரம் பகருதங்கு பைந்தொடியே
உச்சிதமாய் வெட்டை யொடுங்குமே — வெச்செனவே
மீறுகினிற் சாகம் விலக்கிவிடும் பீனிசத்தை
மாறுகண்ணில் பூவிற்கு மாம். (215)

5. .....................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

தொடர் எண் : 7 காண்க.

## 249. ரசவர்க்கம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 148

ஆ. ல/37

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..............

ஆ. ரசவர்க்கம்

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 556

3. தோற்றக் கூறுகள்

அ. 69 ஏடு ; 138 பக்கம்.
ஆ. நீளம் 36 செ. மீ.; அகலம் 2. 5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. எழுத்து நிலை தெளிவாக வுள்ளது.
உ. ஒரு பக்கத்திற்கு 6, 7 வரி.
ஊ. 1-4 ஏடுகள் இல்லை. உள்ளவை சுமாரான நிலையில் உள்ளன.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

வாதமுறும் பேதிகாட்டும் மாறாத நீரிழிவு
காதம்போம் மேகம் கலையுமே- சாதனையாய்
வந்தகரப் பானாறும் மாறா விரணமறும்
கொந்து குடசையெனக் கூறு. (34)

ஆ. முடிவு

சீதளந் தன்னைப் போக்கும் சிலேட்டும வாதம் பித்தம்
மீதுள்ள சன்னி சந்தி விழலினோ டிவைக ளேகும்
காதுநோய் கண்ணோய் புண்ணோய் கடுகிய வெப்பும் தீரும்
மாதுமா முலைப்பா லாலே வன்பிணி யனைத்தும் போமே (586)

ராமசெயம். ரசவர்க்கம் எழுதிமுகிந்தது. முற்றும்.

5. ..................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

தொடர் எண் : 7 காண்க.

## 250. அகத்தியர் வைத்திய சூத்திரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 149
ஆ. ல/38

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அகத்தியர்
ஆ. அகத்தியர் வைத்திய சூத்திரம் : செந்தூரம்
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 288

## 3. தோற்றக் கூறுகள்

அ. 76 ஏடு; 152 பக்கம்.
ஆ. நீளம் 36 செ. மீ., அகலம் 2. 5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 5 வரி.
உ. எழுத்து நிலை நன்றாக வுள்ளது.
ஊ. ஏடுகள் சுமாரான நிலையில் உள்ளன.
எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

காலுந் தலையுங் கடந்துநடு வாகிநின்ற
மேலுந் துரிய விளக்கமே — காலாம்
வயித்தியமுந் நூறுமே சூத்திரம தாய்வழங்கப்
பயித்தியரு ளுங்கணேச பார். (1)

ஆ. முடிவு

வருகாது ஒருநாளுஞ் சொன்னா லுந்தான்
வாய்க்குமோ விட்டகுறை இல்லா விட்டால்
உருகாது ஞானத்தி லுண்மை யாகி
உத்தமனே மனம்வேறாய் ஓடிப் போகும்
பெருகாது வேதாந்தஞ் சித்தாந்தத் துள்ளாய்ப்
பேய்மக்கா ளிறந்தார்கள் பூரணம்நோக் காமல்
அரிதாகும் விட்டகுறை வாய்ப்பக் கேளு
அப்பனே வாசிரெண்டா லறிந்து பாரே. (288)

## 251. மருந்து செய்முறை

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 150

ஆ. ல / 39

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. .... ...

ஆ. மருந்து செய்முறை

இ. மருத்துவம்

ஈ. உரைநடை ; அச்சில் ஏறத்தாழ 250 பக்கம் வரும்.

### 3. தோற்றக் கூறுகள்

அ. 106 ஏடு; 212 பக்கம்.

ஆ. நீளம் 29.5 செ.மீ.; அகலம் 3 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்குப் பலவித வரி.

உ. சுமாரான எழுத்து.

ஊ. சுமாரான நிலை.

எ. குறை

### 4. சிறப்புச்செய்திகள்

அ. தொடக்கம்

திரளாத பெண்ணுக்குப் பூசணிக்காய்ச் சாறும் நல்லெண்ணெயும் 3 நாள் கொடுக்கத் திரளுவாள்.

ஆ. முடிவு

கவுசிகர் குழம்பு : கடுக்காய், கடுகு, இந்துப்பு, பெருங்காயம், வெங்காரம், சூதம், மனோசிலை, அத்தித்திப்பிலி, தாரம், சீரகம், கடுகுரோகிணி, சுத்தித்த வாளம், அதில் பாதி வறுப்பு, சரக்கு சரிசமன், வாளமும் சரி.

## 252. சித்தராரூட நொண்டிச்சிந்து

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 151
ஆ. ல / 40

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ............
ஆ. சித்தராரூட நொண்டிச்சிந்து
இ. மருத்துவம்
ஈ. செய்யுள்

### 3. தோற்றக் கூறுகள்

அ. 34 ஏடு; 68 பக்கம்.
ஆ. நீளம் 24 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 7,8,9 வரி.
உ. தெளிவான எழுத்து.
ஊ. சிதிலமாயுள்ளது.
எ. குறை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அத்திமா முகவன் செய்ய அடியிணைக் கமலம் போற்றிச்
சித்திரா ரூடந் தன்னிற் செப்பிய பொருளா ராய்ந்து
சுத்தமாய் எவர்க்குந் தோன்றச் சுருக்கமாய் நொண்டிச் சிந்தாய்
வித்தக ரருளி னாலே தமியனும் விளம்ப லுற்றேன்.

ஆ. முடிவு

விழியிலைச் சாற்றிற் கூறிய
மிளகுபொடி ஒருபலங் குழப்பி - வெயிலில்
வைத்துநு ரைத்தெடுத்துப் புண்வாயின்
மீதுபூசிப் புலர்ந்தபின் பொருந்துங்
கொழிஞ்சி ........ ...... ........

5. ............ ....

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1; 171, 801; 16: ஆர். 2830; 18: 11309, 10430.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 253. கொங்கணர் கடைக்காண்டம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 152
ஆ. ல / 41

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. கொங்கணர்
ஆ. கொங்கணர் கடைக்காண்டம் 500 (ஞானம்)
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 501

3. தோற்றக் கூறுகள்

அ. 138 ஏடு; 276 பக்கம்.
ஆ. நீளம் 32.5 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. சிதிலமான நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அண்டரண்டங் கடந்தபொருள் நிர்க்குணமாய் நின்ற
அளவில்லா நிர்மலமே சூட்சா சூட்சம்
எண்டிசையும் நீபார்த்து நிரஞ்சனமே யாதி
ஏகசச்சி தானந்த தற்பரமாம் ஞானம்
கொண்டதொரு பூரணமெந் நாளுங் காப்பு
குறியான வெளிப்பாழு மொழிப்பாழுங் காப்பு
புண்டரீக வெளியொளிப்பாழ் சுழினை மேவு
போதமுரு வேதாந்தத் தாதி காப்பு. (1)

ஆ. முடிவு

வாரான சரசத்தி லாறு காண்டம்
வகையாகக் குறுக்கியதில் மூன்று காண்டம்
கூறான கடைக்காண்ட மிந்த ஞானங்
கொட்டினே னஞ்ஞூறு சீடர்க் காக
வாறான நடுக்காண்ட மஞ்ஞூறுஞ் சொன்னேன்
வேதையிடு முதற்காண்ட மஞ்ஞூறுஞ் சொன்னேன்
தாரான முந்நூற்று மூன்று சூத்திரம்
தப்பாமல் சொச்சமென்று தெளிந்து முற்றே. (501)

## 254. அகத்தியர் இரத்தினச் சுருக்கம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 153 - 1
ஆ. ல/42

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அகத்தியர்
ஆ. அகத்தியர் இரத்தினச் சுருக்கம்
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 20

3. தோற்றக் கூறுகள்

அ. 3 ஏடு ; 6 பக்கம்.
ஆ. நீளம் 26.5 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 8, 9 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. ஏடுகள் சிதிலமாகவுள்ளன.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பூரணமாய் நின்றகும்பப் பரைதாள் போற்றிப்
புகழுகின்றேன் வைத்தியரத் தினச்சுருக்கந் தன்னை
வாரணமா முகத்தோனைப் பணிந்து போற்றி
வைத்தியந்தா னிந்தமுந்நூற் றறுப துக்குள்
காரணமாஞ் செந்தூர பற்ப லேகியம்
கருவான தைலமொடு கிருத மெண்ணெய்
சூரணமா மாக்கிராண மொடுகலிக்க மாத்திரை
சுருக்குகுரு நாடிமுதற் சொன்னோம் பாரே. (1)

ஆ. முடிவு

கூற்றதுக் கிடமு மில்லை குறைபடா மருந்து செய்யில்
மாற்றிய வாறான் தானும் வளர்ந்திடுந் திண்ணம் தானே.(20)
கண்ணும் பல்லுந் தான்கருத்து கருது மூச்சு வாய்திறந்து
உண்ணும் ........... ........... ........... ...........

## 255. குருநாடி சாத்திரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 153 - 2
ஆ. ல/42

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ................
ஆ. குருநாடி சாத்திரம்
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 44

## 3. தோற்றக் கூறுகள்

அ. 10 ஏடு ; 20 பக்கம்.
ஆ. நீளம் 26.5 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 8 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. சிதிலமான நிலை.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சீர்பெறு முனிவ ரேத்தத் தெரிந்துபின் னுலகத் தோர்கள்
பேர்பெறு கருவி லுற்ற பிணிபல உணர்ந்த றிந்து
ஊர்பல நாடிக் கெல்லாம் உயர்பெரு நாடி மூன்றில்
சேர்குரு நாடி நேர்மை சியலுடன் கூற லுற்றேன். (1)

ஆ. முடிவு

கயிறேது பையேது கணந்தா னேது
கருத்துடனே கமலமுகங் கைதா னேது
வயிறேது வாயேது வன்னி யேது
வைத்தியரே யிந்தவுண்மை மறுத்துச் சொல்வீர்
கயிறான .......... .......... ..........பைவை குண்டம்
கருத்தீசன் கமலமுகம் மனோன்மணியே யாகும்
வயிறான மாயன்வன்னி உருத்திரன் பாரும்
வைத்தியரே யிந்தஉரை மகிழ்வித் தோரே. (44)

# 256. சாலம் 200

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 154-1
ஆ. ல/43

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ........ ... ....
ஆ. சாலம் 200
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 127

## 3. தோற்றக் கூறுகள்

அ. 44 ஏடு; 88 பக்கம்.
ஆ. நீளம் 29 செ. மீ.; அகலம் 2 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 5 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. சுமாரான நிலை. 1 முதல் 10 வரையிலான ஏடுகள் இல்லை.
எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பாரடா யின்னமொன்று சொல்லக் கேளு
பரிவாக ராக்காலம் ஊர்வெளியிற் சென்று
மாறடா ஓரிடத்துக் கையில் பூசி
.......... ....... ........ .... ..........
வாறடா மைஎடுத்துத் திசையில் போடு
வளமாகப் பட்டணமாய்த் தோணும் பாரே
தேரடா தெருக்களொடுந் தேருந் தோன்றும்
திறமாகக் கடை.... தோன்றும் பாரே. (74)

ஆ. முடிவு

ஆமேநீ செந்தியிட்டுச் செந்தூ ரித்தால்
அப்பனே நவலோகம் தன்னில் வேதை
வாமேநீ இருநூறு இந்தச் சாலம்
வளமான கண்ணாடி முகம்போல் தோன்றும்
தாமேநீ நவரத்னம் கோத்தாப் போலே
தரணிதனில் தான்விளங்கும் புலிப்பாணி தானும்
நாமேநீ போகருட கடாட்சத் தாலே
நாயகனே சாலமிரு நூறு மாமே. (200)

## 257. புலிப்பாணி பலதிரட்டு

1. நூலகக் குறிப்புகள்

அ. 154-2
ஆ. ல/43

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. புலிப்பாணி
ஆ. புலிப்பாணி பலதிரட்டு
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 100

3. தோற்றக் கூறுகள்

அ. 39 ஏடு; 78 பக்கம்.
ஆ. நீளம் 29 செ. மீ.; அகலம் 2 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 5 வரி.
உ. தெளிவான எழுத்து.
ஊ. சுமாரான நிலை.
எ. முழுமை

4. *சிறப்புச் செய்திகள்*

அ. தொடக்கம்

வேதாந்த நாயகியே விமல வேணி
வீரமா காளியம்மா ருத்திர ரூபி
நாதாந்தத் துட்பொருளே அகோர வீரி
நாராணியே காரணியே தேவி சத்தி
மூதாந்த சித்தருட மறையே துர்க்கி
மூவருக்கும் முதற்பொருளே ஆன தாயி
மாதாந்தந் தனையீன்ற செகத வல்லி
மாமுகத்தோன் பலதிரட்டுக் காப்புத் தானே. (1)

ஆ. முடிவு

அழுந்துவார் சாத்திரத்தை நிசமென் றென்று
அடவான பெரியோரை வணங்கிக் காரு
நழுந்துவாய்ப் போயொன்று சொல்லொண் ணாது
நாதனுக்கு ஆளாக வேணு மானால்
கொழுந்துபோல் தீபத்தை நோக்கிப் பாரு
கோபமொன்று மாகாது குணமே வேணும்
செழுந்திருக்கும் போகருட கடாட்சத் தாலே
சேர்ந்திருக்கும் புலிப்பாணி திரட்டு முற்றே. (100)

## 258. சிதம்பரம் 25 பூசை

1. நூலகக் குறிப்புகள்

அ. 154-3
ஆ. ல/43

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. புலிப்பாணி
ஆ. சிதம்பரம் 25 பூசை
இ. மாந்திரீகம்
ஈ. செய்யுள் 21

3. தோற்றக் கூறுகள்

அ. 8 ஏடு; 16 பக்கம்.
ஆ. நீளம் 29 செ. மீ.; அகலம் 2 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 5 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. சிதிலமான நிலை.

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அத்திமதி தனைச்சூடும் அரனே காப்பு
அகிலமெங்கும் நிறைந்துநின்ற அருளே காப்பு
முத்திதரும் வேதாந்த முதலே காப்பு
முப்புரத்தைச் சிரித்தெரித்த பரனே காப்பு
சத்தியொரு பாகம்வைத்த அரசே காப்பு
சங்கரனே அம்பரமே ஞான மூர்த்தி
வெத்தியாய்ச் சிதம்பரத்தின் பூசை மார்க்கம்
விளம்புகிறேன் கணேசனுட பாதங் காப்பே. (1)

ஆ. முடிவு

பாடியே யநமசிவ வசிய மாகும்
பண்பான மசிவயந மோகனஞ் சித்தி
ஆடியே வசிமநய அழைப்பு மாகும்
... நமசிவய தம்பனமே செய்யும்
கூடியே வயநமசி உச்சா டிக்கும்
குணமான யவசிமந பேதன மாகும்
நாடியே நயவசிம வித்து வேஷம்
.......... ........ ......... .......... (22)

## 259. கயிலாசச் சட்டைமுனி நிகண்டு

1. நூலகக் குறிப்புகள்

அ. 155
ஆ. ல/44

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. சட்டை முனி
ஆ. கயிலாசச் சட்டைமுனி நிகண்டு
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 1227

3. தோற்றக் கூறுகள்

அ. 212 ஏடு; 424 பக்கம்.
ஆ. நீளம் 31 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 5,6 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. சிதிலமான நிலை. 147,165, 190 ஆகிய ஏடுகள் இல்லை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஆதியந்த மில்லாத பூரணத்தை நோக்கி
அடுத்துநின்ற உன்மனைத்தாய்ப் பதத்தைப் போற்றி
பாதியந்த மாகின்ற உன்மனையாள் சொல்லப்
பாங்கான சின்மயத்தின் கருணை யாலே
ஓதியந்த வாதமென்ற நூலுக் கெல்லாம்
ஒசரவைத்த நாகமணிக் கிரீடம் போலச்
சாதியந்த குணத்தோடு நிகண்டு சொல்ல
சச்சிதா னந்தவெளி காப்புத் தானே. (1)

ஆ. முடிவு

அறிவை யறிந்து அறிவோடே கூடிநீ
அறிவில் லறிவை யறிவா லறிந்திடும்
அறிவில் லடங்கி ஆனந்த வெள்ளமாம்
அறிவே குருவாக ஆகின்ற வாகுமே. (1237)

5. .........................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

4 : 10224 ; 16 : ஆர். 151 பி, ஆர். 252, ஆர். 563இ, ஆர். 2295, ஆர். 4542, ஆர். 6206, ஆர். 7041, ஆர். 7149, 1927 ; 18 : 3220, 6690 ; 26 : 19 ; 27 : பா. 3. 44 ஏ ; 55 : டி. 15.

## 260. அகத்தியர் வைசூரி சாத்திரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 156 - 1
ஆ. ல/45

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அகத்தியர்
ஆ. அகத்தியர் வைசூரி சாத்திரம் 81
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 82

3. தோற்றக் கூறுகள்

அ. 14 ஏடு 28 பக்கம்.
ஆ. நீளம் 35.5 செ. மீ. ; அகலம் 3 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 7,8 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. சுமாரான நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பூரணமாய் நீதிநிறை சோதி பாதம்
போற்றிசெய்து தினந்தினமும் புகழங் கேந்திக்
காரணமா மாயவனும் தேடிக் காணாக்
கடவுள்பதம் போற்றிசெய்து கருணை பெற்ற

ஆரணமால் மருகனெனும் முருகன் கந்தன்
அடியிணையே போற்றிசெய்து அன்பி னாலே
வாரணமும் மதம்பொழியு மைங்கரனை நித்தம்
மனோகரமா யநுதினமும் வணங்கி யேத்தே. (1)

ஆ. முடிவு

தானென்ற வைசூரியது குணமுஞ் சொன்னேன்
தருவான லட்சணமும் அவிழ்தம் சொன்னேன்
தேனென்ற சாத்தியம் அசாத்தியமுஞ் சொன்னேன்
திறமான பத்தியமும் பாகஞ் சொன்னேன்
வானென்ற அன்னமது விவரஞ் சென்னேன்
வளமாக யிந்தமுறை மார்க்க மெல்லாம்
கானென்ற சித்தருக்கு முலகத் தோர்க்கும்
கருத்தாகச் சொல்லிவிட்டேன் வைசூரி முற்றே. (82)

## 261. அகத்தியர் வைத்திய சூத்திரம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 156-2
ஆ. ல / 45

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அகத்தியர்
ஆ. அகத்தியர் வைத்திய சூத்திரம்
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 50

### 3. தோற்றக் கூறுகள்

அ. 9 ஏடு; 18 பக்கம்.
ஆ. நீளம் 33.5 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 7,8வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. சிதிலமான நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

நாடியதோர் அகண்டபரி பூரணமாய் நின்ற
    நாதர்மூல கணேசனொடு கந்தன் காப்பு
ஆடியதோர் சிவனாரும் என்னைப் பெற்ற
    ஆத்தாளும் நாவுதனிற் குடிகொண் டேதான்
பாடியதோர் வைத்தியமைம் பதுந்தான் சொல்வேன்
    ...... புலத்தியனே யிந்நூ லோடே
தேடியதோர் பூரணசூத் திரத்தில் நன்றாய்
    திசையோருக் கருவுருவுந் திறம தாமே. (1)

ஆ. முடிவு

கண்டக்கால் வாதமெல்லா மடிக்கீழ்ப் போட்டுக்
    கருவான சவுக்கார மகிமை தன்னை
விண்டக்கால் நசித்திடுவாய் நூல்கொ டாதே
    வேதாந்த ஞானியென்றா லீயான் பாரு
தொண்டுசெய்வாய் பதினாறு வருஷங் காத்துச்
    சோதித்துப் பின்புமவர்க் கீவா யப்பா
சண்டமா ருதம்போலே வெளிய தாகச்
    சாற்றியதோர் வைத்தியமைம் பதுவும் முற்றே. (50)

## 262. கொங்கணர் அதிசய சூத்திரம்

1 நூலகக் குறிப்புகள்

அ. 156-3
ஆ. ல / 45

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. கொங்கணர்
ஆ. கொங்கணர் அதிசய சூத்திரம் 27
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 27

## 3. தோற்றக் கூறுகள்

அ. 5 ஏடு; 10 பக்கம்.
ஆ. நீளம் 33.5 செ. மீ.; அகலம் 3 செ மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 7,8 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. சுமாரான நிலை.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஓமென்னும் பூரணமா மகண்ட வீதி
  உற்றபரஞ் சோதியென்னும் பாதம் போற்றி
வாமென்னுந் திரிகோணம் விந்து வட்டம்
  மவுனமென்ற மோகனத்தாய் வாலை பாதம்
நாமென்றும் பூசைசெய்தோம் போகர் சொல்ல
  நந்திசொல்ல மூவர்சொல்லக் காலங்கி சொல்ல
ஆமென்று மூலர்மெச்சச் சித்தர் போற்றி
  செய்யச்சூத் திரமாக அறைந்திட் டேனே. (1)

ஆ. முடிவு

வாயான புண்பொடிகள் கரப்பான் குட்டம்
  மகத்தான கிரந்தியொடு பறங்கி தீரும்
தாயார்தன் வயிற்றிருந்து பிறந்த ரூபந்
  தப்பாது வசிகரமாம் சொன்னேன் சூட்சம்
காயான ஐங்கோல மிந்த வித்தை
  கருவான மாந்திரிகம் எல்லாஞ் சித்தி
பாயான கூடுவிட்டுக் கூடு பாயும்
  பாங்கான அதிசயசூத் திரந்தான் முற்றே.

# 265. அகத்தியர் தீட்சை

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 156 - 4
ஆ. ல/45

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அகத்தியர்
ஆ. அகத்தியர் தீட்சை 10
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 10

## 3. தோற்றக் கூறுகள்

அ. 2 ஏடு ; 4 பக்கம்.
ஆ. நீளம் 33.5 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 7, 8 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. சிதிலமான நிலை.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

வானைத்தா வியமகா பொதிகை தன்னில்
மகத்தான ரிஷியினுட வாக்கு நேர்மை
பானைத்தா வியபூமை வாம பூசை
பரிவான சிவயோகப் பண்பே கேளீர்
மீனைத்தா வியராசி மீன ராசி
விளங்கிநின்ற கன்னிமுதல் வில்லு மேடஞ்
சேனைத்தா வியராசி யாந்து லாத்தின்
சென்மரா சிக்கருவைச் செப்பு றேனே. (1)

ஆ. முடிவு

தானென்ற ஆட்சியோ டுறவு விட்டுச்
சத்துருவா மங்கிசத்தில் கிரகங்கள் நின்றால்
மானென்ற உலகத்தே ஆசை கொண்டு
மாளுமட்டும் புலம்பியல்லோ மாள்வா ரய்யோ
கோனென்ற ராசியுள்ளே கோளைப் பாரு
கூறான அங்கிசத்தின் ஏத்தம் பாரு
பானென்ற கற்பமுண்ணச் சொன்னேன் மைந்தா
பாருலகி லறிந்தவர்க்கு மறையீ வேனே. (10)

## 261 மருத்துவ நூல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 157
ஆ. ல/46

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ... ... ... ...
ஆ. பெயர் தெரியாத ஒரு மருத்துவ நூல்
இ. மருத்துவம்
ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 35 ஏடு ; 70 பக்கம்.
ஆ. நீளம் 14 செ. மீ ; அகலம் 3 5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. நல்லநிலை. 1 - 5, 16, 40, 41 ஆகிய ஏடுகள் இல்லை.
எ. குறை

4. *சிறப்புச் செய்திகள்*

அ. தொடக்கம்

........... ........... ........... ...........
துவரை அவரையுடன் பிஞ்சு பாடுப்
பண்டுநெய்யில் கற்கண்டாந் துழாங்கா யாகும்
பரிவான முசலுடும்பு பறவையிலை காடை
கொண்டுடனே வெள்ளாடு வெள்ளெலியு மாகும்
குளத்திலுள்ள அயிரைவிரால் மசிரை யாமே. (30)

ஆ. முடிவு

சத்தியமே வேணுமடா மனித னானால்
சண்டாளஞ் செய்யாதே தவறா காது
நித்தியகர்மம் தப்பாதே நேமமற வாதே
நிட்டையுடன் சமாதிவிட்டு நிலைபே றாதே
புத்திகெட்டு நடவாதே ........ ........ ........

## 265. வைத்திய சதகம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 158-1
ஆ. ல/47

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. .........
ஆ. வைத்திய சதகம்
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 102

### 3. தோற்றக் கூறுகள்

அ. 31 ஏடு; 62 பக்கம்.
ஆ. நீளம் 39 செ. மீ.; அகலம் 2. 5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 5 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. சுமாரான நிலை.
எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அருவாய ரூபமா யடங்காத
    பொருளாகி யடங்க லாகி
அருவுருவா யண்டபகி ரண்டத்துள்ளு
    மாகியதன் புறத்தும் நின்ற
ஒருவுருவா யுயிர்க்குயிரா தார மாகி
    யுயிரில்நிறைந் தியக்கிநிற்கு மொப்பில் லானே
கருவுருவாய் வைத்தியத்தின் சதகமிவை வழுத்தக்
    கருணைபுரிந் தருளவுநீ காப்புத் தானே (1)

(சீர் ஒழுங்கு இல்லை)

ஆ. முடிவு

உண்டான யிந்நூலை யுணர்ந்த பேர்கள்
　　உலகுதனில் பெரியோரா யாத்ம ஞானி
கொண்டாடும் வித்தைமதி புத்தி யுண்டாம்
　　குருதரிச னம்பெருகி ஞான முண்டாம்
வண்டாடும் பூமாது நிறைவாழ் வுண்டாம்
　　மகாமோட்ச சாயுச்சிய பதமே நல்கும்
பண்டோர்கள் நூல்முறையால் ஆய்ந்து சொன்ன
　　பாங்கான சதகமெனும் நூறும் முற்றே (102)

இ. முற்குறிப்பு

சென்னகரை சேஷய்யங்கார் வைத்திய சாஸ்திரம். எடுத்தவர் கொடுக்க வேணும்.

## 266. நந்தீசர் திருமந்திரம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 158-2
ஆ. ல/47

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. *நந்தீசர்*
ஆ. நந்தீச சுவாமிகள் திருமந்திரம்
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 112

### 3. தோற்றக் கூறுகள்

அ. 18 ஏடு; 36 பக்கம்.
ஆ. நீளம் 39 செ. மீ.; அகலம் 2. 5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 5 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. சுமாரான நிலை.
எ. முழுமை

4 சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

உன்னிய கர்ப்பக் குழியாம் வெளியிலே
பன்னிய நாதம் பகுத்த பிருதிவி
வன்னியும் வாயுவும் மாயுரு சுக்கிலம்
மன்னிச் சமனாய் வழங்கும் உதகமே. (1)

ஆ. முடிவு

வியாதிகள் போகவே வெகுநாள் சடமுறப்
பயாதித் திரைநரை பாங்காய்த் தவிர்ந்திட
கயாதிக் கவனங் கலந்தெங்குஞ் சுற்றிட
அயாதியா ஞான மஞ்சதாம் சித்தியே. (112)

## 267. மருத்துவ நூல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 159 - 1
ஆ. ல/48

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ....................
ஆ. பெயர் தெரியாத ஒரு மருத்துவ நூல்
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 32

3. தோற்றக் கூறுகள்

அ. 10 ஏடு ; 20 பக்கம்.
ஆ. நீளம் 39 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 5 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. சிதிலமான நிலை.
எ. குறை

## 4. சிறப்புச்செய்திகள்

அ. தொடக்கம்

கர்ப்பிணிக்கு வாதபித்தங் கிளர்ந்து காணும்
    கிராணியதி சாரமென்றால் தளர்ந்து காணும்
உற்பவித்த சயமீளை காச ரோகம்
    உற்றிடுகிற் சேத்துமந்தான் மீறிக் காணும்
விற்பிடித்த நுதலாளைக் கூடும் போது
    வெந்தழலிற் கீடம்போல் விரைக்கும் வாதம்
மற்பிடித்த விஷநிறமுஞ் சோகை தானும்
    வந்திடுகிற் சேத்மமுடன் பித்த மாமே. (70)

ஆ. முடிவு

சீரான வன்னியொடு சீத மீறிச்
    செயல்பெறவே எலும்பதனில் வேர்வை கொண்டு
பேரான மூளையெல்லா முருகிப் பின்னும்
    பேதமுற்ற கனலெழும்பிச் சதையைச் சேர்ந்து
காரான பொறிகளொடு உறுப்புத் தானுங்
    கருதியங்கே உள்ளுலர்ந்து காய்ந்து வற்றி
வாரான தேகமெல்லாம் வறண்டு போகும்
    அனல்சொரியும் அஸ்திசுரம் கூறு வீரே. (102)

# 268. அருகம் வேர் கிருதம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 159 - 2
ஆ. ல/48

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. தட்சிணாமூர்த்தி
ஆ. தட்சிணாமூர்த்தி அருகம் வேர் கிருதம்
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 15

3. தோற்றக் கூறுகள்

அ. 5 ஏடு ; 10 பக்கம்.
ஆ. நீளம் 39 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 5 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. நல்லநிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

போமப்பா அருகம்வேர்க் கிருதம் நூலிற்
புகலவில்லை இந்நூலிற் புகழ்ந்து சொல்வேன்
நாமப்பா சொல்லுகிறோம் அருகு மூலம்
நன்றாக ஒருதுலாம் நறுக்கிக் கொண்டு
வாமப்பா யிடித்ததனைப் பாண்டத் திட்டு
மகத்தான நூறுபடி சலந்தான் விட்டு
ஓமப்பா நாலுபடி யாகக் காய்ச்சி
உத்தமனே வடிகட்டி யிறுத்துக் கொண்டு
தாமப்பா ஆவின்நெய் இருநாழி விட்டுத்
தடையறவே மதுரமரைப் பலந்தான் ஆமே (1)

ஆ. முடிவு

தருகாது கடுக்காயும் சிவதை வேரும்
தாங்குசுக்குக் கடுகுரோ கணியுங் கூட்டி
முருகியதோர் களிப்பாக்கும் சீந்தித் தண்டும்
முதுகள்ளிச் சருகுடனே மொக்கி நண்பா
உறுதியாய் நீரிலிட்டு எட்டொன் றாக்கி
உடனாகத் திப்பிலியும் மேல்பொடியாய்க் கொள்ளு
தறுகாது சுரமேகும் வயிறு போகும்
தனிக்குளிகைக் கந்தகத்தைச் சாற்று வோமே. (15)

## 269. தன்வந்திரி வைத்தியம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 160
ஆ. ல / 49

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. தன்வந்திரி
ஆ. தன்வந்திரி வைத்தியம் 208
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 208

## 3. தோற்றக் கூறுகள்

அ. 42 ஏடு; 84 பக்கம்.
ஆ. நீளம் 41 செ. மீ.; அகலம் 4 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 6,7 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. சிதிலமாயுள்ளது.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஆதியந்த மில்லாமல் அகண்டபரி பூரணமாய்
சோதியந்த வாழ்மயிலே சொற்பெரிய வாதியேகேள்
நாதியந்த மான.... நல்லதொரு சரஸ்வதியை
வாதியெந்தன் பங்கிலுறை ........... வாழ்வே. (1)

ஆ. முடிவு

பாரப்பா நால்வேதத் தொகுப்பைக் காணும்
பண்பான வேதாந்தக் குறியைக் காணும்
ஆரப்பா ராசியுட குறியைக் காணும்
அப்பனே கண்ணோட்ட மறிந்து பாரு
நேரப்பா நின்றநிலை தன்னைக் காணும்
நேரான கருவிகளோ டொக்கக் காணும்
நாரான நாதாந்த வைத்தியந்தா னிந்நூல்
நலமான கருக்கிடைதா னிருநூறு முற்றே. (208)

இ. பிற்குறிப்பு

1864 ஆம் வருடம் டிசம்பர் மாதம் 23 ஆம் தேதிக்குச் சரியான... வருடம் மார்கழி மாதம் 10 ஆம் தேதி மங்கள வாரம் எழுதி முடிந்தது. முற்றும்.

தன்வந்திரி வாகடம் இருநூறு இராமச்சந்திர ராவினுடைய புத்தகம். எடுத்தவர்கள் தயவுசெய்து கொடுக்க வேண்டியது.

5. பிற செய்திகள்

இந்நூலை யடுத்து, 'இராமதேவர் சூல் குன்மத்திற்கு' என இரண்டு ஏடுகளில் எழுதப்பட்டுள்ளது.

## 270. சகுனார்

1. நூலகக் குறிப்புகள்

அ. 161
ஆ. வ / 3

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ...............
ஆ. சகுனம் (ஆந்தை காதல், கரிநாள் முதலியன)
இ. சோதிடம்
ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 15 ஏடு; 30 பக்கம்.
ஆ. நீளம் 37.5 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 4 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. சிதிலமான நிலை. 14, 15 ஆம் ஏடுகள் முறிந்துள்ளன.
எ. குறை

4. சிறப்புச்செய்திகள்

அ. தொடக்கம்

கன்னியர் அரசர் கோவை கனிமரம் குதிரை யானை
மன்னியர் முழங்கு சங்கு மறையவர் பசுக்கள் மேனி
துன்னிசைக் கவிதை பாடல் சோறுபால் இறைச்சி தீபம்
நன்னிலத் தெதிரே காண நலம்பெறும் கருமம் நன்றே. (1)

ஆ. முடிவு

உதவாத நாள்கலையில் ஒன்றிரண்டு மூன்று
ஒருபதுட னொன்றுபதி னேழுதுவு மாகா
துதிபெருகு மாசிபதி னைந்துபதி ..........
.......... .......... .......... ..........

## 271. பாலர் வாகடம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 162
ஆ. ல/50

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ................
ஆ. பாலர் வாகடம்
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 177

3. தோற்றக் கூறுகள்

அ. 46 ஏடு; 92 பக்கம்.
ஆ. நீளம் 38. 5 செ. மீ.; அகலம் 2. 5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 5 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. நல்ல நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

வால கர்க்கு உணக்கலியும் மருந்தும் மந்திர யந்திரமும்
காலக் கழிப்பும் நீர்ச்சொரிவும் கட்டு சீலை வேருடனே
கோலக் குழையும் எண்ணெயுடன் குணத்தின் படியே
கொள்வதற்குச்
சீலத் தருவாய் விநாயகனார் சிந்தித் தார்சஞ் சீவியென்றே.

ஆ. முடிவு

விளங்க ளச்சி வசம்போமம் வெள்வெங் காயம் பொடுதலை
ஔங்காய் மிகுதிப் பிலியும்............ யாமை யோட்டுடனே
களங்கா திலையின் சாற்றரைத்துக் கடலை யளவாய்ச் செய்திடவே
உளங்கா ளிருமல் கழிச்சல்வய றாதல்.... உண்டையதே. (177)

5. பிறசெய்திகள்

முதல் ஏட்டில், 'கர்ப்பச் சுரத்துக்கு' என்று ஒருபாடல் எழுதப் பட்டுள்ளது.

## 272. மருத்துவ நூல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 163
ஆ. ல/51

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ............
ஆ. பெயர் தெரியாத ஒரு மருத்துவ நூல்
இ. மருத்துவம்
ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 32 ஏடு; 64 பக்கம்.
ஆ. நீளம் 20 செ.மீ.; அகலம் 3 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 6 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. சிதிலமான நிலை. 1, 3 ஆகிய ஏடுகள் இல்லை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

வெளிப்படு மென்றீர் வெளியேதுஎன் தேவே
சுளிப்படும் சமுத்திரத்தில் சுற்றி யலைவதெங்கே
களிப்படும் வாயு காலெங்கே வேரெங்கே
தெளிப்படு வாசியைத் திறந்துரை யீரே. (8)

ஆ. முடிவு

நோக்குமப்பா புலத்தியனே யிருநூறு பார்த்தால்
நூல்போட்ட வெளிபோலத் துலக்க மாகும்
வாய்க்குமப்பா உந்தனுக்காய்ப் பூரணத்தை
மருவியே சொல்லிவிட்டோம் தெரிந்து கொள்ளு
போக்குவது உயிரெழுத்து ஆக்கினையிற் சொன்ன
பொதுவாகக் கருவறிந்து யடங்கி நீயும்
தாக்குவது யொன்றப்பா .......... ..........
........ ........ ........ .... (201)

## 273. மாந்திரீக நூல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 164
ஆ. ழ/1

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ........
ஆ. பெயர் தெரியாத ஒரு மாந்திரீக நூல்
இ. மாந்திரீகம்
ஈ. உரை நடை ; அச்சில் ஏறத்தாழ 10 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 3 ஏடு; 6 பக்கம் (ஏடு 105 முதல் 107 வரை)
ஆ. நீளம் 11 செ. மீ.; அகலம் 2. 5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 8 , 9, 10 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. மிகச் சிதிலமான நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஓம் அரகர நமசிவய ஓம் ஆனந்த ரூபனாய
ஓம் ஆதி கோஷாதினாய ஓம் அக்ஷரப் பிரதேக்ஷனாய

ஆ. முடிவு

சித்தனே கத்தனே சிவலோக நாதனே
சுத்தனே அத்தனே சூரசம் மாரனே
அகில புவன ...... ...... ......
ஆதியே சோதியே ஆறுமுகப் பெருமானே

## 274. வராகி மாலை

1. நூலகக் குறிப்புகள்

அ. 162-1
ஆ. ழ/2

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ...... ......
ஆ. வராகி மாலை : சக்கரங்களுடன்
இ. மாந்திரீகம்
ஈ. செய்யுள் 55

## 3. தோற்றக் கூறுகள்

அ. 22 ஏடு; 44 பக்கம்.

ஆ. நீளம் 15 செ. மீ.; அகலம் 3. 5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்குப் பலவித வரி.

உ. சுமாரான எழுத்து

ஊ. சிதைவுற்ற நிலை. 3, 4, 8, 16, 21, 23, 25ஆம் ஏடுகள் இல்லை.

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பெருக்குங் கருணை வராகிதன் மாலையைப் பேசுதற்கு
நெருக்குங் குவிமுலை அம்பிகை வாமம் நிறைந்துமகிழ்ந்
திருக்கும் பரஞ்சுதன் அங்குச பாச மெனதுதுணை
கருக்கும் தகைமைவி நாயகன் சேவடி காப்பதுவே (1)

ஆ. முடிவு

ஆணிப் பவளம் உலக்கை யுரல்சங் கரிசிமுத்து
காணபுட்ப ராக முதிரா நீர்பச்சைக் கல்லடுப்புப்
பேணிப் பிளவை வயிர விறகிட்டுப் பேதைநல்லாள்
மாணிக்கங் கைக்கொண்டு தீமூட் டுவளந்த வானவர்க்கே (55)

# 275. மந்திரங்களும் சக்கரங்களும்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 165-2

ஆ. ம / 2

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ...............

ஆ. மந்திரங்களும் சக்கரங்களும்

இ. மாந்திரீகம்

ஈ. உரைநடை ; அச்சில் ஏறத்தாழ 12 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 24 ஏடு; 48 பக்கம்.
ஆ. நீளம் 15 செ. மீ.; அகலம் 3.5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்குப் பலவித வரி.
உ. தெளிவான எழுத்து.
ஊ. மிகச் சிதிலமான நிலை. 19,22 ஆகிய ஏடுகள் இல்லை.
எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஆங் அவ்வும் கிலியும்...... கிலியும் அய்யும் வாவா
ஓம் ரீயும் ஸ்ரீயும் சீக்கிரம் சீக்கிரம்
பட்டு பட்டு கொல்லு கொல்லு.

ஆ. முடிவு

ஓம் வாவா மோகினி மாதங்கி வாவா
ஆரே மோகினி அகோரி வாவா
மோகினி வா வளர்மோகினி வா
சிகார மோகினி வா சிவாய மோகினி வாவா.

# 276. இந்திர சாலம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 166-1
ஆ. ல / 52

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அகத்தியர்
ஆ. இந்திர சாலம் - அட்டகர்மம்
இ. பல்வகை நூல்கள்
ஈ. செய்யுள் 1199

## 3. தோற்றக் கூறுகள்

அ. 149 ஏடு; 398 பக்கம்.
ஆ. நீளம் 37 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 9,10 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. நல்ல நிலை.
எ. குறை

## 4. சிறப்புச்செய்திகள்

அ. தொடக்கம்

காரணமா மூலவட்டந் தன்னில் நிற்கும்
கணபதியும் வல்லபையுந் தேவர் காப்பு
பூரணமா பராபரையுஞ் சிவனும் நந்தி
பொருந்திநின்ற பஞ்சகர்த்தா கணங்கள் காப்பு
வாரணத்தி லேறிவிளை யாடும் எந்தை
மன்னுதிரு வருள்சிறந்த குமரன் காப்பு
நாரணனும் நான்முகனு மறியா நின்ற
நலமான வேதாந்தம் காப்புத் தானே. (1)

ஆ. முடிவு

............ ........ .......... ... ... ....
பத்தியுடன் பூசைசெய்து வரைகள் தாண்டிப்
பலன்பெற்றார் மென்மேலும் மவுன மப்பா
முத்திபெறுந் தவயோகி யானா லிந்த
மொழிதப்பா துலகினிலே நடந்தா யானால்
சத்தியருட் சகலசித்துங் கைக்குள் ளாகுஞ்
சத்தியந்தா னிந்தநூல் காண்ட முற்றே. (1199)

இ. முற்குறிப்பு

பிரமாதீச வருஷம் சித்திரை மாதம் 24 ஆம் தேதி செவ்வாய்க் கிழமை காலை 11 மணிக்கு எழுதத் தொடங்கினது. மிட்டா

காடுபட்டி வா. மு. கு. சோமசுந்தரம் பிள்ளை புஸ்தகத்தை எடுத்தவர்கள் தயவுசெய்து கொடுத்து விடவும்.

பிற்குறிப்பு

பிரமாதீச வருஷம் ஆவணிமாதம் 11ஆம் தேதி எழுதி முடிந்தது.

## 277. அகத்தியர் பரிபாஷை

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 166 - 2
ஆ. ல/52

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அகத்தியர்
ஆ. அகத்தியர் பரிபாஷை
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 303

### 3. தோற்றக் கூறுகள்

அ. 35 ஏடு ; 70 பக்கம்.
ஆ. நீளம் 37 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒருபக்கத்திற்கு 9, 10 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. நல்ல நிலை.
எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பரமனார் மனோத யத்தின் பரஞ்சுட ருலகுக் கெல்லாம்
சிரமென உதித்த ஞான தெய்வநா யகன்றாள் போற்றி
வறமென வகார யோக மறைப்புநூல் பாஷை யெல்லாம்
குறுமுனி தமிழாற் செய்ய குமரனைங் கரனார் காப்பே. (1)

ஆ. முடிவு

ஆடுவாய் அகத்தியன்தான் சொன்ன வாக்கு
அய்யனே யித்தயிலம் பெருமை மெத்த
பாடுவாய் பதினெண்பேர் நூலுக் கெல்லாம்
பாலகனே யித்தயிலம் கொண்டு சாடு
சாடுவாய்ச் சித்தருட நூல்கட் கெல்லாம்
சற்குருவா மிந்நூல்தான் ஐஞ்னூ றாகும்
ஏடுவாய் எந்தெந்த நூல்கட் கெல்லாம்
இன்பமுள்ள முக்காண்டம் பூரணந்தான் முற்றே. (101)

இ. பிற்குறிப்பு

பிரமாதீச வருஷம் ஆவணி மாதம் 17ஆம் தேதி இந்த அகஸ்தியர் நூல் சாலகாண்டம் 1200ம் எழுதி முடிந்தது. முற்றிற்று.

## 278. அகத்தியர் மெய்ச்சுருக்கம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 166 - 3
ஆ. ல/52

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அகத்தியர்
ஆ. அகத்தியர் மெய்ச்சுருக்கம்
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 51

3. தோற்றக் கூறுகள்

அ. 7 ஏடு ; 14 பக்கம்.
ஆ. நீளம் 37 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 8, 9 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. நல்ல நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

குறுமுனியே நந்திக் குருபாதம் உட்கொண்டு
உறுதிபெற மெய்ச்சுருக்கம் ஓதவேதான் — குறுமுனியே
கொண்டாடி வெண்பாக் குறிப்பறிந்து முப்பொருளைக்
கண்டார்க்குப் பூரணமே காப்பு. (1)

ஆ. முடிவு

அருளான அருள்பெறவுங் குருவு மாவாய்
அட்டசித்துப் புரியாட்டால் எட்டில் காணப்
பொருளாதொன் றுக்குள்ளெட் டெட்டா யாடிப்
போக்குவரத் துட்சூட்ச மாச்சிப் பாதம்
பொருளான ......... காச்சிக் கொண்டு
பொய்யாமல் மெய்ச்சுருக்கம் அய்யன் சொன்ன
பொருளான பொருள்பெறவும் அருளே பெற்ற
போதறிவா யிருப்பாமெய்ச் சுருக்கம் முற்றே. (51)

## 279. இராமதேவர் 81

1. நூலகக் குறிப்புகள்

அ. 166 - 4
ஆ. ல/52

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. இராமதேவர்
ஆ. இராமதேவர் 81
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 73

3. தோற்றக் கூறுகள்

அ. 10 ஏடு ; 20 பக்கம்.
ஆ. நீளம் 37 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒருபக்கத்திற்கு 8, 9 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. நல்ல நிலை.
எ. குறை

4. *சிறப்புச் செய்திகள்*

அ. தொடக்கம்

ஆதியிலே அமைத்தசித்தி யெழுத்துங் காண
அருளான நந்திபதம் நண்பாய்க் கொண்டு
சோதியென நின்றிலங்கும் நாத ரூபஞ்
சுருதியுள்ள வாலைமனோன் மணியைப் போற்றி
நீதியென நெஞ்சராய்ச் சமாதி செய்து
நின்றதடா வாதியந்தம் நிலைக்க வேதான்
வாதியென வந்தோர்க்குக் குருவா மென்னூல்
வசனித்தே னெண்பதுட னொன்று மாச்சே. (1)

ஆ. முடிவு

தானவரும் நின்றுதொழும் ராம னூலை
தனித்தனிக்கண் டவர்கள்நா மந்தா னப்பா
வானவர்கோன் தானறிந்து மெச்சிக் கொண்டு
வைத்தியந்தா னெண்பதுவும் வரலை யென்று
......... ......... ...... .... ... .......

## 280. கொங்கணர் வஸ்து வித்தை

1. நூலகக் குறிப்புகள்

அ. 166 - 5
ஆ. ல/52

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. கொங்கணர்
ஆ. கொங்கணர் கடைக்காண்டத்தில் வஸ்து வித்தை
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 42

3. தோற்றக் கூறுகள்

அ. 7 ஏடு ; 14 பக்கம்.
ஆ. நீளம் 27 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்குப் பலவித வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. நல்லநிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தானான வஸ்துவேண்ட நீதான் கேளு
சகலவித்தை கீழாச்சு இதுமே லாச்சு
ஆனான வித்தையெல்லா மிதுக்குக் கீழே
ஆதியென்றும் அநாதியென்று மிதுக்கு நாமம்
தேனான பானமுண்டான் மெச்சும் வித்தை
சிவன்மெச்சும் சித்தர்மெச்சும் தேச மெச்சும்
கோனான உப்பிதுக்குள் மணிவேருந் தானே
.......... .......... .......... ......

ஆ. முடிவு

ஆமப்பா வீரமொடு வழலை வீரன்
அண்டரண்டங் கடந்தாடும் வாத ஞானி
காமப்பால் பச்சையொடு பவளஞ் சேர்ந்தால்
கண்விழித்து மூடுமுன்னே நவலோகம் பொன்னாம்
தாமப்பா ரசம்தங்கம் பற்ப மாகும்
சாதிப்பார் லோகத்தில் தங்க மாகும்
ஓமப்பா கொண்டிடவே தேகம் பொன்னாம்
உத்தமனே சுண்ணத்தின் உப்பு வேகம்
நாமப்பா சுழிமுனையில் நந்தி ஒப்பாம்
நம்குருவாம் நாலாம் .... .......... காணே. (42)

இ. பிற்குறிப்பு

பிரமாதீச வருஷம் ஆவணி மாதம் 25 ஆம் தேதி செவ்வாய்க் கிழமை காலை 10 மணிக்கு எழுதி முடிந்தது.

திருச்சினாப்பள்ளி ஜில்லா முசிரித் தாலுகா மிட்டா காடுபட்டியிலிருக்கும் வாத்தியார் முத்துசாமி பிள்ளை குமாரன் சோமசுந்திரம் பிள்ளை கையெழுத்து பூர்த்தியானது.

## 281. அகத்தியர் முற்காண்டம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 167
ஆ. ல/53

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அகத்தியர்
ஆ. அகத்தியர் முற்காண்டம்
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 498

### 3. தோற்றக் கூறுகள்

அ. 76 ஏடு ; 152 பக்கம்.
ஆ. நீளம் 31.5 செ. மீ.; அகலம் 3.5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 7, 8 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. சிதிலமான நிலை.
எ. குறை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சீரான அகத்தியரா மிரத்தி ரட்டிற்
செல்வமாய் முற்காண்ட மஞ்னூறு சொல்வேன்
வீறான மாத்திரைகள் முதலிற் காணும்
மேலான புலத்தியனே நடுவே சொல்வேன்

கூறான லேகியமுஞ் சூரணமும் நெய்யும்
    கொள்ளையாய்க் கண்டிருக்குங் கூர்மை யாக
ஆரான தைலமுடன் எண்ணெய் தானும்
    அநேகமாய்க் கடைசியிலே கண்ட வாறே. (1)

ஆ. முடிவு

தானான காந்தமண் டூரம் லோகம்
    தனியான செந்தூரம் வகைபலந்தான் மூன்று
தானான லேகியத்தில் பொடித்துச் சேர்த்துத்
    தப்பாமல் பாக்களவு கொள்ள ...
தானான மண்டலத்தில் பித்த வெட்டை
    தணியாத ரத்தபித்தம் விஷபா....
... ...... ......... ......... ... ........
    ...... .... ........... .......... ... ... ....

## 282. சுப்பிரமணியர் விஞ்சை

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 168
ஆ. ழ/3

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ............
ஆ. சுப்பிரமணியர் விஞ்சை
இ. மாந்திரீகம்
ஈ. செய்யுள் 21

### 3. தோற்றக் கூறுகள்

அ. 15 ஏடு; 30 பக்கம்.
ஆ. நீளம் 20. 5 செ. மீ.; அகலம் 2. 5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 5 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. சிதிலமான நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சீர்மேவு வாலையபி ராமி சூலி
    திரிபுரைசங் காரிகௌ மாரி வரமி
தார்மேவு மயிடசங் காரி துர்க்கை
    சாமுண்டி கங்காளி தந்த மைந்தன்
கார்மேவு நந்திமகன் ஒற்றைக் கொம்போன்
    கருணைதரும் நயனன்திருக் கமல பாதம்
பார்மேவும் அறுமுகவன் குறுமு னிக்குப்
    பகர்சருவ பக்ஷணிக்குக் காப்புத் தானே (1)

ஆ. முடிவு

அருளுகின்ற விஞ்சையிது யாருக் கென்றால்
    .......... .......... அறிவுள் ளோர்க்கும்
குருவின்விசு வாசம்நன்றி மறவா தோர்க்கும்
    குவலயத்தில் பெரியோர்க்கும் கூற லாகும்
மருளுடைய மனத்தார்க்கும் வஞ்ச நெஞ்சர்
    மாதர்மே லாசைவைத்து மயங்கு வோர்கள்
பொருளையிச்சித் துயிர்வதைசெய் கல்நெஞ் சோர்க்கும்
    பொன்கோடி ஈந்தாலும் புகலொண் ணாதே.

இ. பிற்குறிப்பு

முத்துசாமி பிள்ளை பொத்தகம்; காடுபட்டி வாத்தியார் எழுதிய சுப்பிரமணியர் விஞ்சை ; சொந்த பொத்தகம்.

## 285. வசிய மந்திரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 169-1
ஆ. ழ/4

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ... .........
ஆ. வசிய மந்திரம்

இ. மாந்திரீகம்

ஈ. உரை நடை ; அச்சில் ஏறத்தாழ 10 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 7 ஏடு; 14 பக்கம்.

ஆ. நீளம் 24 செ. மீ.; அகலம் 2. 5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 4, 5 வரி.

உ. சுமாரான எழுத்து.

ஊ. மிக மிகச் சிதிலமான நிலை.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஓம் பகவதி கௌரி பஞ்சாட்சரத்தில் லோக வசீகரி
மகா மோகினி அய்யும் கிலியு அரவ-கலியாணி
நாராயணி தேவி வீரலட்சுமி என்வாக்கிலேயும்
என் மனத்திலேயும் மோகித்து நிற்கச் சுவாகா.

ஆ. முடிவு

......... ... வேரை எடுத்துச் சிரங்கை பசுவின் நெய்யில் போட்டு அடுப்பில் சிவக்கக் காய்ச்சி அந்த நெய்யைக் கொஞ்சம் தின்கிற பதார்த்தத்தில் தின்னக் கொடுக்கச் சீவன் போனாலும் விடான். அவளுக்கு இச்சைப்பட்ட வஸ்து எது கேட்டாலும் கொடுப்பான். கை கண்டது.

## 284. மந்திர நூல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 169-2

ஆ. மு / 4

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ............

ஆ. மந்திர நூல்

இ. மாந்திரீகம்

ஈ. செய்யுள் 24

## 3. தோற்றக் கூறுகள்

அ. 12 ஏடு; 24 பக்கம்.

ஆ. நீளம் 24 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 4,5 வரி.

உ. சுமாரான எழுத்து.

ஊ. மிகவும் சிதைவுற்ற நிலை.

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பண்ணப்பா கும்பகத்தில் வாசி பூட்டிப்
    பாதியான சுழிமுனையில் சிங்கென் றேற்றி
விண்ணப்பா தானோக்கிக் குருபதத்தில் நின்று
    விசையான மணியெடுத்து நாவில் வைத்துக்
கண்ணப்பா தானோக்கிக் கண்ணைப் பார்த்தால்
    கண்கொள்ளா அதிசயங்கள் காணும் காணும்
உண்ணப்பா மூலமதில் ஆறா தாரம்
    உற்றுப்பார் வெட்டவெளி ........... வீடே. (54)

ஆ. முடிவு

.............. ........ ........... ...........
    ............ ............ ............ ..........
தேடியே ஆவியொன்று ........... .........
    செம்மையுடன் இலைபறித்துச் சாறு வாங்கி

நாடவே கிராம்புதனை உறைத்துக் கொண்டு
நன்றாக வழித்தெடுத்து நாவில் தேய்த்து
வாடவே வேண்டாங்காண் சன்னி தோஷம்
வாங்குமடா கண்ணில் நாவில் தீத்தே. (77)

## 285. சுப்பிரமணியர் சுத்த ஞானம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 170
ஆ. ல / 54

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ....... ........
ஆ. சுப்பிரமணியர் சுத்த ஞானம் 100
இ. மருத்துவம்
ஈ. செய்யுள்

### 3. தோற்றக் கூறுகள்

அ. 33 ஏடு; 66 பக்கம்.
ஆ. நீளம் 18.5 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 6,7 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. சிதிலமான நிலை.
எ. குறை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

திருவளரப் பொங்கிவளர் உச்சி மேலே
சிறந்தபர தேசியெனுஞ் செய்கை யேனும்
அரும்பொருளாய் அகண்டமெல்லாம் ஒன்ற தாகி
ஆதியெனும் அநாதியெனும் அறிவு மாகி

மருவியே மூலமெனுங் குண்டலியு மாகி
    மாறாத சுடர்மூன்றில் மவுன மாகிக்
குருபரனா யெங்கெங்கும் நிறைந்தே நின்ற
    குஞ்சரத்தா னிருதாளைப் பணிகு வோமே. (1)

**ஆ. முடிவு**

........ கர்ப்பமறிந் துண்ண வேணும்
    கோளான வியாதிகண்டு தீர்க்க வேணும்
பண்ணையிலே சிவயோகம் பண்ண வேணும்
    பார்வதியும் சிவனுடைய தீட்சை வேணும்
எண்ணமதுக் கெல்லாந்தான் என்றால் வேணும்
    இடுவாம லிருப் ....

## 286. சித்தராரூடம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 171
ஆ. ல/55

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..........
ஆ. சித்தராரூடம் : நொண்டிச் சிந்து
இ. மருத்துவம்
ஈ. செய்யுள்

### 3. தோற்றக் கூறுகள்

அ. 57 ஏடு ; 114 பக்கம்.
ஆ. நீளம் 38.5 செ. மீ. ; அகலம் 2.5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 4, 5 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. சிதிலமான நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தொடர் எண் : 151 காண்க.

ஆ. முடிவு

மேல்நோக்கித் தேய்த்திடவே தீர்ந்திட்ட
 விடந்தலைக் கொண்டு மீண்டிடுமே
மாநாகம் முதலாகப் பலவிடமும்
 மானிடர்தமைப் பற்றி வாதைசெய்தால்
மந்திர தந்திரத்தால் தியானத்தால்
 மணியினால் மருந்தினா லெந்த விடமும்
 ...... ...... ... .......

இ. முற்குறிப்பு

சித்தராரூடம் எழுதியது விகாரி வருஷம் ஆனி மாதம் 29 ஆம் தேதி புதன் கிழமை நாழிகை 22 சாயந்திரம்.

மிட்டா காடுபட்டி முத்தய்ய பிள்ளை குமாரன் முத்துசாமிப் பிள்ளை வாத்தியார் சொந்த பொஸ்தகம். எடுத்தவர் கொடுத்து விடவும்.

பிற்குறிப்பு

இந்தச் சித்தராரூடம் எடுத்தவர்கள் பார்த்துக் கொண்டு சந்தோஷமாய்க் கொடுத்து விடவும். கொடுக்காவிட்டால் காராம் பசுவைக் கொன்ற பாவத்தையெல்லாம் ஒப்புக்கொண்டு போகக் கடவது. இந்தச் சுவடி சாஸ்திரம் முத்தய்ய பிள்ளை குமாரன் முத்துச்சாமிப் பிள்ளை எழுதிச் சொந்தமாய் வைத்துக் கொண்டது. ஆகையால் சரூராய்க் கொடுத்து விடவும்.

## 287. மருத்துவ நூல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 172

ஆ. ல/56

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..... ....
ஆ. பெயர் தெரியாத ஒரு மருத்துவ நூல்
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 101

## 3. தோற்றக் கூறுகள்

அ. 38 ஏடு ; 76 பக்கம்.
ஆ. நீளம் 27 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 7, 8 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. மிகச் சிதைவுற்ற நிலை.
எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

....... ... ... ....... ... ... .... ...... ....
நாணப்பா ஒருநூற்று ஐம்ப துக்குள்
நலமான சூட்சந்தை நாட்டி னேன்பார்
பேணப்பா ... நூற்றில் கர்மம் தர்மம்
பேசினேன் தீட்சைவிதி இருநூற் றுள்ளே. (4)

ஆ. முடிவு

வைத்ததனைத் திலதமிட வசிய மாகும்
மாற்றமாந் தேகமது ஆர்க்குங் காணார்
உத்ததொரு கரிக்குருவி யிதுபோற் பண்ண
உறுதியாந் திலதமது உண்மை யாகும்
சித்தியுள்ள குழியானை சிறங்கை யொன்று
செய்திடவே முன்போலச் சித்தி யாகும்
புத்தியுள்ள பேர்களுக் ........ ... ......... ..........

## 288. அகத்தியர் சாலர்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 173
ஆ. ல / 57

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அகத்தியர்
ஆ. அகத்தியர் சாலம் 1200
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 1200

### 3. தோற்றக் கூறுகள்

அ. 133 ஏடு; 266 பக்கம்.
ஆ. நீளம் 37.5 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது,
ஈ. ஒரு பக்கத்திற்கு 7,8 வரி.
உ. சுமாரான கையெழுத்து.
ஊ. மிகச் சிதைவுற்ற நிலை. பல ஏடுகள் முறிந்துள்ளன.
எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

காரணமே மூலவட்டந் தன்னில் நிற்கும்
கணபதியும் வல்லபையும் தேவர் காப்பு
பூரணமாம் பராபரையுஞ் சிவனு.... ..........
....நின்ற பஞ்சகரத் தாள்கணங்கள் காப்பு
வாரணத்தி லேறிவிளை யாடு மெந்தை
மன்னுகுரு வருள்சிறந்த குமரன் காப்பு
.......... நான்முகனு மறியா நின்ற
நலமான வேதாந்தங் காப்புத் தானே (1)

ஆ. முடிவு

சித்திபெறுந் தேவரிஷிக் குகைகள் தோறும்
திருவருளா லடக்கிவைத்து இந்த நூலைப்
பத்தியுடன் பூசைசெய்து வரைகள் தாண்டிப்
பலன்பெற்றார் மென்மேலும் மவுன மப்பா
முத்திபெறுந் தவயோகி ஆனா லிந்த
மொழிதப்பா துலகினிலே நடந்தா யானால்
சத்தியருள் சகலசித்துங் கைக்குள் ளாகும்
சத்தியந்தா னிந்தநூல் காண்ட முற்றே. (500)

பொதிகை 1200 மாந்திரீகம் நாலாங்காண்டம் முகிந்தது.

இ. பிற்குறிப்பு

1901ஆம் வருஷம் அக்டோபர் மாதம் 19ஆம் தேதி தமிழ் பரிதாபி வருஷம் ஐப்பசி மாதம் 3ஆம் தேதி சனிக்கிழமை சரஸ்வதி பூசைத் தினம் எழுதி முடிந்தது.

## 289. மருத்துவ நூல்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 174-1
ஆ. மு / 5

### 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ..............
ஆ. மேகம் 21க்கு எண்ணெய், பூரணாதி லேகியம்.
இ. மருத்துவம்
ஈ. உரைநடை ; அச்சில் ஏறத்தாழ 5 பக்கம் வரும்.

### 3. தோற்றக் கூறுகள்

அ. 4 ஏடு; 8 பக்கம்,
ஆ. நீளம் 37.5 செ.மீ.; அகலம் 2.5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்குப் பலவித வரி.
உ. சுமாரான கையெழுத்து.
ஊ. சிதிலமான நிலை.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

நிலவாகைவேர், விடத்தலைவேர், நிலப்பனைக்கிழங்கு, சித்திரமூலம், சங்கங்குப்பி வேர், பிரப்பங் கிழங்கு, பூவந்திப் பட்டை, பூவரசம் பட்டை, போரம் பட்டை............

ஆ. முடிவு

...... சுத்த சலத்தால் அரைத்து மேற்படி எண்ணெயில் போட்டுக் காய்ச்சி, மெழுகு பதத்தில் வடித்து. வேளை ஒன்றுக்குக் கரண்டி வீதம் ஒரு மண்டலம் கொள்ளவும். பத்தியம் புளி, புகையிலை, கரப்பான் வஸ்துகளை நீக்கி இச்சா பத்தியமாய்க் கொள்ளவும். இதற்குத் தீரும் வியாதி கிரந்தியென்னப்பட்டதெல்லாந் தீரும்.

# 290. அனுமார் மந்திரம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 174-2
ஆ. மு/5

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ............
ஆ. அனுமார் மந்திரமும் சக்கரமும்
இ. மாந்திரீகம்
ஈ. உரை நடை ; அச்சில் ஏறத்தாழ 4 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 2 ஏடு; 4 பக்கம்.
ஆ. நீளம் 27. 5 செ. மீ.; அகலம் 2. 5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்குப் பலவித வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. சிதிலமான நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஓம் அனுமா தீர அனுமா அதிபால அனுமா
அகோர அனுமா அனுமா வா அப்பா வா
அயோத்தியா வா லங்கைக்குப் போக வேணும் வா.

ஆ. முடிவு

ஓம் அஞ்சனா தேவி புத்திரா நமஸ்து
ஐயுங் கிலியும் சவ்வும் சவ்வும் கிலியும்
ஐயும் றீயும் கிரியும் ஶ்ரீயும் கிரியும் மறியும்

அனுமார் மந்திரம் முற்றிற்று.

## 291. மாந்திரீக நூல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 174-3
ஆ. ழ/5

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ...........
ஆ. மாந்திரீகச் செய்திகள்
இ. மாந்திரீகம்
ஈ. உரை நடை ; அச்சில் ஏறத்தாழ 15 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 7 ஏடு; 14 பக்கம்.
ஆ. நீளம் 27. 5 செ. மீ.; அகலம் 2. 5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்குப் பலவித வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. சிதைவுற்ற நிலை. 10, 12 ஆகிய ஏடுகள் முறிந்துள்ளன.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சிவ்வென்ற அட்சரம் சிவனே யிருப்பிடம்
வவ்வென்ற அட்சரம் வாலை யிருப்பிடம்
யவ்வென்ற அட்சரம் அரனே யிருப்பிடம்
நவ்வென்ற அட்சரம் நாத ரிருப்பிடம்.

ஆ. முடிவு

ஆத்தும யந்திரம் :- ஆத்தும தந்திராணி ரேசஸ்த ரேசஸ்த கிரக நிவாரய நிவாரய துக்கம ..........

இ. பிற்குறிப்பு

இவ்வளவுதான் இருந்தது

## 292. சோதிட அரிச்சுவடி

1. நூலகக் குறிப்புகள்

அ. 175
ஆ. வ/4

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..................
ஆ. சோதிட அரிச்சுவடி
இ. சோதிடம்
ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 43 ஏடு; 86 பக்கம்.
ஆ. நீளம் 20.5 செ. மீ.; அகலம் 2. 5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 4, 5, 6 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. மிகச் சிதிலமான நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பே போ ரா ரீ சித்திரை ரூ ரே ரோ தா சுவாதி
தீ தூ தே தோ விசாகம் நோ யா யீ யூ கேட்டை

ஆ. முடிவு

உத்திர மூன்றி னோடு ரோகிணி ஓணத் தோடு
சித்திர மகத்தி னோடு சிறந்தசீர் அவிட்டத் தோடு
கொத்துடன் கன்று காலி குறைபடக் கொள்வா ராகில்
அத்திரம் செல்லச் செல்ல ஆண்டினில் மாண்டு போமே.

## 293. சோதிட அரிச்சுவடி

1. நூலகக் குறிப்புகள்

அ. 176
ஆ. வ/5

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..................
ஆ. சோதிட அரிச்சுவடி
இ. சோதிடம்
ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 25 ஏடு; 50 பக்கம்.
ஆ. நீளம் 25 செ. மீ. ; அகலம் 2 5 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 5,6 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. நல்ல நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

நாம நட்சத்திரம் சு சே சோ ல அசுபதி

கூறிய அசுப திக்குக் குதிரையாம் விருட்சம் எட்டி
மீறிய கணமுந் தேவர் மிகுந்தரா சாளி மேஷம்
ஏறிய பாதம் நாலாம் பிசகுசித் திரையாம் செவ்வாய்
பூறிய வடகி ழக்கு பொருத்தமு மூன்றே முக்கால்.

ஆ. முடிவு

மகா திசை சென்மத்தில் புதன் 17, ராகு 18, வியாழன் 16, சனி 19, கேது 7, சுக்கிரன் 20, சூரியன் 6, சந்திரன் 10, செவ்வாய் 7 ஆக வருஷம் 120.

## 294. சோதிட அரிச்சுவடி

1. நூலகக் குறிப்புகள்

அ. 177
ஆ. வ/6

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..........
ஆ. சோதிட அரிச்சுவடி
இ. சோதிடம்
ஈ. செய்யுள்

## 3. தோற்றக் கூறுகள்

அ. 17 ஏடு; 34 பக்கம்.
ஆ. நீளம் 25. 5 செ மீ.; அகலம் 2. 5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்குப் பலவித வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. நல்ல நிலை. 3, 4, 16, 17 ஆகிய ஏடுகள் இல்லை.
எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தொடர் எண் : 176 காண்க.

ஆ. முடிவு

துதிகை, சப்தமி, துவாதசி மாதம் 6.
சித்திரை, புனர்பூசம், உத்திரம், கிருத்திகை,
மிருகசீரிடம், விசாகம், உத்திரம் மாதம் 3.

# 295. திருக்குறள்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 178
ஆ. ங/4

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. திருவள்ளுவர்
ஆ. திருக்குறள் : பரிமேலழகர் உரையுடன்
இ. பதினெண்கீழ்க்கணக்கு
ஈ. செய்யுளும் உரையும்; அச்சில் ஏறத்தாழ 350 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 75 ஏடு; 150 பக்கம்.
ஆ. நீளம் 25 செ.மீ.; அகலம் 4 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 12, 13 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. நல்ல நிலை.
எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

இந்திரன் முதலிய இறைவர் பதங்களும் அந்தமில் இன்பத் தழிவில் வீடும் நெறியறிந் தெய்துதற் குரிய மாந்தர்க் குறுதியென உயர்ந்தோரா லெடுக்கப்பட்ட பொருள் நான்கு.........

ஆ. முடிவு

தம்மொடு செற்றங் கொண்டு ஒருவன் இன்னாதவற்றைச் செய்தவிடத்து மீண்டும் தாம் அவனுக்கு இன்னாதவற்றைச் செய்யாமையுமாவது துணி பென்றவாறு. இறந்தது தழீஇய வெச்சவும்மை விகார .... .. ....... ....... ........

# 296. யாப்பருங்கலக்காரிகை

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 179
ஆ. ச / 11

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அமிதசாகரர்
ஆ. யாப்பருங்கலக் காரிகை: குணசாகரர் உரையுடன்
இ. இலக்கணம்
ஈ. செய்யுளும் உரைநடையும் ; அச்சில் ஏறத்தாழ 220 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 97 ஏடு; 194 பக்கம்.
ஆ. நீளம் 26.5 செ. மீ.; அகலம் 3.[illegible] செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 10,11,12 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. சிதிலமான நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

....றோங்கு துள்ள னண்பா வமைந்த ... தூங்கன் என்பது வெண் ........ சிரியப்பா வகவலோசையான் வரும். கலிப்பா துள்ளலோசையான் வரும். வஞ்சிப்பா தூங்கலோசையான் வரும்.

ஆ. முடிவு

சீர்வீட்டிசை மாஞ்சீரியற்றளை யருகி வருக்கஞ் சுருங்கிப் பொருளோடெழுத்தன வொன்பதுமிவை ஒழிபியலே. ஒழிபியல் முடிந்தது. முற்றும்.

இ. பிற்குறிப்பு

பிரமாதீச வருஷம் பங்குனி மாதம் 4ஆம் தேதி அமாவாசை உத்திரட்டாதி நட்சத்திரத்தில் காரிகையுரை நாழிகை 15க்கு எழுதி நிறைவேறினது. முற்றும்

## 297. பிரபுலிங்க லீலை

1. நூலகக் குறிப்புகள்

அ. 180
ஆ. ந / 19

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. சிவப்பிரகாசர் - துறைமங்கலம்
ஆ. பிரபுலிங்க லீலை
இ. காப்பியம்
ஈ. செய்யுள் 1134

## 3. தோற்றக் கூறுகள்

அ. 139 ஏடு; 278 பக்கம்.
ஆ. நீளம் 30.5 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 7,8,9 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. நல்ல நிலை.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சுரர்கு லாதிபன் தூய்மலர் நந்தனம்
பெருக வார்கடற் பெய்த வயிற்றினோன்
கரக நீரைக் கவிழ்த்த மதகரி
சரணம் நாளுந் தலைக்கணி யாக்குவாம்.

ஆ. முடிவு

புண்ணிய ருலகில் வாழ்க புலன்செறு நோன்பு வாழ்க
பொண்ணொரு பாகன் பூசை பேணிவா முடியார் வாழ்க
கண்ணுத லொருவர்ச் சார்ந்த கற்புடைச் சைவம் வாழ்க
அண்ணலல் லமன்சீர் கேட்கும் ஆதர வாளர் வாழ்க. (24)

மான்மிய கதி முற்றும். ஆக விருத்தம் 1134.

இ. பிற்குறிப்பு

பிரமோதூத வருஷம் மார்கழி மாதம் 20ஆம் தேதி (நிறைவேறியது)

5. ..............

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1: 181 . 182, 193, 195, 217, 671; 16: ஆர், 1240, ஆர், 1266, ஆர். 1304, ஆர். 2825; 17: 188; 25: 1822 - 1824; 28: 10996; 32: 148; 60: 252, 513.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 298. பிரபுலிங்க லீலை

1. நூலகக் குறிப்புகள்

அ. 181
ஆ. ந/20

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. சிவப்பிரகாசர் - துறைமங்கலம்
ஆ. பிரபுலிங்க லீலை
இ. காப்பியம்
ஈ. செய்யுள் 1134

3. தோற்றக் கூறுகள்

அ. 150 ஏடு; 300 பக்கம்.
ஆ. நீளம் 25 செ. மீ.; அகலம் 4 செ. மீ.

இ இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 9, 10 வரி.
உ. சுமாரான கையெழுத்து.
ஊ. நல்ல நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு

தொடர் எண் : 180 காண்க.

இ. பிற்குறிப்பு

ராட்சச வருஷம் ஐப்பசி மாதம் 25 ஆம் தேதி பூச நட்சத்திரத்தில் மாப்பிள்ளைக்குப்பத்தில் கனகசபை வீட்டில் எழுதினது.

## 299. பிரபுலிங்க லீலை

1. நூலகக் குறிப்புகள்

அ. 182
ஆ. ந/21

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. சிவப்பிரகாசர் - துறைமங்கலம்
ஆ. பிரபுலிங்க லீலை : (மாயை உற்பத்தி கதி 18ஆம் பாடல் முதல் இட்டலிங்ககதி 21ஆம் பாடல் முடிய)
இ. காப்பியம்
ஈ. செய்யுள் 1134

3. தோற்றக் கூறுகள்

அ. 73 ஏடு ; 146 பக்கம்.
ஆ. நீளம் 34.5 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 8 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. சுமாரான நிலை. 1 - 10, 16, 22, 53, 55 ஆகிய ஏடுகள் இல்லை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

மறையுங் கலைகள் பற்பலவு முழங்கு மொலியு மங்கலஞ்செய்
மறையுங் குழலு மியாழுமியம் பொலியுங் கரியும் பரிமாவும்
நிறையுந் தெருவி னோடுமணித் தேரி னொலியுந் திரைகடலின்
அறையுந் திரையிற் சென்றுவிசும் பமரர் செவியி
னடைந்திடுமால் (18)

ஆ. முடிவு

ஒன்றினொன் றுள்ளுற உடம்பு மூன்றையு
மன்றநல் வத்திர மடியத் தாக்கியே
யென்றுமங் கமைவுற விட்டம் வைப்பனே
லன்றவன் சிவமய மாகு மென்பவே. (21)

## 300. தாண்டவமாலை

1. நூலகக் குறிப்புகள்

அ. 183
ஆ. வ / 7

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அப்பாவையர்
ஆ. தாண்டவமாலை : மூலமும் உரையும்
இ. சோதிடம்
ஈ. செய்யுளும் உரைநடையும் ; அச்சில் ஏறத்தாழ 25 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 36 ஏடு; 72 பக்கம்.

ஆ. நீளம் 33.5 செ. மீ.; அகலம் 3 செ.மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒருபக்கத்திற்குப் பலவித வரி.

உ. சுமாரான எழுத்து.

ஊ. சிதிலமான நிலை.

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஓரையிரு பக்கத்தி னாதிபர்க ளொண்ணுதலாய்
சேருமவர் தங்கடங்கள் சீரிழக்க — நேராகும்
அற்பபல ரீவ ரலைகடல்சூழ் வையகத்தில்
எப்பிறவி யோர்க்கு மிருந்து.

ஆ. முடிவு

இவ்வுலகத்தில் அருக அந்தணனாகிய அப்பாவையன் மனிதர்க்கொத்த நடையினையுடைய ஆண்டி மகிபன் குமாரன் வணிகனாகிய தாண்டவராயனுடைய பேரைத் தரித்து ஆதிமுதல் அறுபத்தெட்டுப் பாடலாகச் செப்பினார் என்பதாம். (69)

தாண்டவமாலை முற்றிற்று.

## 5. ................

## 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

4 : 9888 ; 16 : 2013 ; 25 : 2140 ; 28 : 32556 பி ; 55 : 846 ஏ.

## 7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

# 301. சேத்திரக் கோவை

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 184
ஆ. ற/8

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..........................
ஆ. சேத்திரக் கோவை
இ. பல்வகை நூல்கள்
ஈ. செய்யுள்

## 3. தோற்றக் கூறுகள்

அ. 5 ஏடு; 10 பக்கம்.
ஆ. நீளம் 33.5 செ. மீ., அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 5, 6 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. நல்ல நிலை.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கோயில்திரு வேட்களம்நெல் வாயில்கழிப் பாலை
குலவுபெரு மணமயேந் திரப்பள்ளி முல்லை
வாயில்கலிக் காழூர்சாய்க் காடுதிருப் பல்ல-
வனீச்சரம்வெண் காடுவளர் திருக்காட்டுப் பள்ளி
தாயிலான் குருகாவூர் கழுமலங்கோ லக்காத்
தருக்கிளர்புள் ளிருக்கும்வே ளூர்கண்ணார் கோயில்
ஞாயிலெயிற் கடைமுடியே நின்றியூர் புன்கூர்
நாடியநீ டூர்அன்னி யூர்வேள்விக் குடியே. (1)

ஆ. முடிவு

கண்ணுதலோன் போற்றுங் கயிலைப் பதியுடனே
எண்ணியிரு நூற்றெழுப துடன்நான்காம் — நண்ணியசீர்த்
தேமாலை வார்குழலாள் தெய்வப் பதிமூவர்
பாமாலை பெற்ற பதி.

5. ..........................

6, மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

18 : 4110 டி ; 25 : 1414 ; 31 : 202 ஏ ; 32 : 95.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 302. கொக்கோகம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 185
ஆ. ற/9

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அதிவீரராம பாண்டியன்
ஆ. கொக்கோகம்
இ. பல்வகை நூல்கள்
ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 69 ஏடு; 138 பக்கம்.
ஆ. நீளம் 28. 5 செ.மீ.; அகலம் 2. 5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 7, 8, 9 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. ஏடுகள் முறிந்துள்ளன.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கன்னலன்றி வேம்புநுகர் காமத் துரோகிகள்போற்
பின்னைமற்றோர் தெய்வத்தைப் பேசேனே-எந்நாளுஞ்
சாற்றுவதுங் காமகலை சாதிப்ப துங்கரணம்
போற்றுவதுங் காமனடிப் போது.

ஆ. முடிவு

........... தாள் புறத்தில் 10 நாள்; அரையாப்பு நிலையில் 11 நாள் ; அல்குலில் 12 நாள்; கையடியில் 13...... நரம்பில் 14 நாள் ; பிடரியிற் குழியில் 15 நாள் உச்சியில் நிற்கும். இந்தப்படி நிலையறிய........

மதனநூல் சாத்திரம் எழுதி நிறைவேறினது. முற்றும்.

## 5. ...............

## 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

4: 9748; 8: 22; 16: ஆர். 188, ஆர். 540, ஆர். 1081டி, ஆர். 6131, 189ஏ, 1820, 2231, 2236, 2299, 2716; 18: 2970, 6199, 7963, 8888, 9104, 9234ஏ; 25: 2167, 2168; 27 : 326, 433, 753; 28: 4194, 33836.

## 7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

# 503. திருக்குறள்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 186
ஆ. ஙு/5

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. திருவள்ளுவர்
ஆ. திருக்குறள்
இ. கீழ்க்கணக்கு நூல்கள்
ஈ. செய்யுள் 1330

3. தோற்றக் கூறுகள்

அ. 23 ஏடு; 46 பக்கம்.
ஆ. நீளம் 23. 5 செ. மீ.; அகலம் 3. 5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 10, 11 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. சிதைவுற்ற நிலை, 9, 15, 25 ஆகிய ஏடுகள் இல்லை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு

ஆ. முடிவு

ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பங்
கூடி முயங்கப் பெறின்.

## 304. நித்திய கன்ம நெறி

1. நூலகக் குறிப்புகள்

அ. 187
ஆ. ற/10

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. சிதம்பரநாத முனிவர்
ஆ. நித்திய கன்ம நெறி
இ. பல்வகை நூல்கள்
ஈ. செய்யுள் 754

## 3. தோற்றக் கூறுகள்

அ. 29 ஏடு ; 58 பக்கம்.
ஆ. நீளம் 22 செ. மீ.; அகலம் 3.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒருபக்கத்திற்கு 10 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. மிகச் சிதைவுற்ற நிலை. 1-5, 11, 21, 23, 24 ஆகிய ஏடுகள் இல்லை.
எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அத்தனரு ளாகமத்தி னாராய்ந் தவாவினிற்செய்
நித்திய கன்ம நெறிதனக்கு — முத்திதரும்
அன்னத்தான் நத்தான் பரவுஐமுகத் தானருளும்
கன்னத்தா னத்தானே காப்பு.

ஆ. முடிவு

இதம்பெற யிந்நூ லுரைத்தா னருமைச்
சிதம்பர நாதமுனி தேர்ந்து. (752)

ஓதினோர் கற்றோர்க் குறுகிரியை செய்தாரிற்
பாதி யதிற்பாதி பலன். (753)

நித்திய கன்ம நெறி எழுதி முடிந்தது. முற்றும்.

## 305. யாப்பருங்கலக்காரிகை

1. நூலகக் குறிப்புகள்

அ. 188
ஆ. ச/12

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அமித சாகரர்
ஆ. யாப்பருங்கலக்காரிகை : மூலமும் உரையும்
இ. இலக்கணம்
ஈ. செய்யுளும் உரைநடையும் ; அச்சில் ஏறத்தாழ 200 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 165 ஏடு ; 330 பக்கம்.
ஆ. நீளம் 38 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 6 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. மிகச் சிதைவுற்ற நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு

தொடர் எண் : 27 காண்க.

## 306. இறையனார் களவியல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 189
ஆ. ச / 13

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. இறையனார்
ஆ. இறையனார் களவியல்: நக்கீரர் உரையுடன்
இ. இலக்கணம்
ஈ. செய்யுளும் உரைநடையும் ; அச்சில் ஏறத்தாழ 175 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 84 ஏடு; 168 பக்கம்.
ஆ. நீளம் 28 செ. மீ.; அகலம் 3.5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 9, 10 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. சுமாரான நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அன்பி னைந்திணை களவெனப் படுவது
அந்தண ரருமறை மன்ற லெட்டினுட்
கந்திருவ வழக்க மென்மனார் புலவர்.

ஆ. முடிவு

முருகயர்ந்து வந்த முதுவாய் வேல
சினவ லோம்புமதி வினவ லுடையேன்
பல்வே றுருவிற் சில்லவிழ் மடையொடு
சிறுமறி கொன்றிவ ........ ..........

5. ..................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

3: 129; 4: 9644; 16: ஆர். 5108; 25: 56-60, 2184; 56: 173; 27: 631பி; 31: 332; 60: 195.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 307. திருக்குறள்

1. நூலகக் குறிப்புகள்

அ. 190
ஆ. ஙு / 6

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. திருவள்ளுவர்
ஆ. திருக்குறள் : பரிமேலழகர் உரையுடன்
இ. கீழ்க்கணக்கு நூல்கள்
ஈ. செய்யுள் 1330

3. தோற்றக் கூறுகள்

அ. 331 ஏடு; 662 பக்கம்.
ஆ. நீளம் 36 செ. மீ.; அகலம் 3.5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 8 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. நல்ல நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம். ஆ. முடிவு

தொடர் எண்: 178 காண்க

இ. பிற்குறிப்பு

முயங்குசீர்ச் சாலி வாகன சகாத்த
மொழியுமா யிரத்தெழு நூற்று
முப்பதிற் குப்ப ராபவ வருடம்
முந்துசீர் அயனதெக் கணத்தில்
சயங்கொளு மாடி மதியறு நான்கில்
தண்மதி யிலகுபூ ரணையும்
சனிதின மொண்மி யைசவு பாக்கியந்
தயங்குபத் திரைபுணர் சுபநாள்
கயங்களின் மடவார் முகமுழு மதியைக்
கண்டுதா மரைமலர் முகிழ்க்கும்
கட்டழகு அமைந்த திருக்கழுக் குன்றில்
களித்துவாழ் சைவசித் தாந்தர்
நயங்கொளும் பரம குருஅருள் புதல்வன்
நல்திரு வள்ளுவர் குறட்கு
நாவலர் பரவு பரியின்மே லழகர்
நவிலுரை யெழுதிவைத் தனனே.

## 308. தொன்னூல் விளக்கம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 191
ஆ. ச/14

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. வீரமா முனிவர்
ஆ. தொன்னூல் விளக்கம்
இ. இலக்கணம்
ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 46 ஏடு; 92 பக்கம்.
ஆ. நீளம் 40.5 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 8,9 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. மிகச் சிதைவுற்ற நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

.......... தொன்னூற்கொரு புது வழியா ........... வேறாய்ச் சூத்திரந் தரினு மூத்தோ ருரைத்த பலவற் ........... யாய்ச் சில விகற்பம் புறநூல் வழி .......... .......... .......... ..........

ஆ. முடிவு

நான்கென்பது .......... எனவும், ஐந்தென்பது .......... வவ்வும் வரின் ஐயெனவு மற்ற மெய்வரி ...... ஐவிரல் எனவும்,ஐமூன்று, ஐம்பது, ஐங்கலம், ஐஞ்சந்தி, ஐந்த .......... ........

5. ..................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

4 : 10196 ; 16 : ஆர். 5545, ஆர். 2833 ; 25 : 112, 113, 2199 ; 26 : 219 ; 60 : 204 ஏ.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 509. தத்துவ நிருபணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 192 - 1
ஆ. ட/16

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..............

ஆ. தத்துவ நிரூபணம்

இ. தத்துவம்

ஈ. உரைநடை ; அச்சில் ஏறத்தாழ 15 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 9 ஏடு ; 18 பக்கம்.

ஆ. நீளம் 36 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்குப் பலவித வரி.

உ. கிறுக்கலான கையெழுத்து.

ஊ. சிதைவுற்ற நிலை.

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

*.......... வாசத்துடனே சிசுவிடை செய்து வருகிறதே யல்லாமல் வேறே யாதொரு சங்கற்ப விகற்பங்கள் வாராம......... கிற சிரத்தை ஆகச் சமாதிசட்க சம்பத் தாறுவிதம் சொல்லப் பட்டது.*

ஆ. முடிவு

*.........பேதானென்றும் தானென்றதே நிருவிகாரியான சீவ சைதன்னியம். இந்தச் சீவ சைதன்னியமே சீவ சாக்ஷி, சீவ சாக்ஷியே கூடஷத்தர். கூடஷத்தரே அறிவு, அறிவே சிவயோகம்.*

இ. பிற்குறிப்பு

சவுமிய வருஷம் துலா மாதம் 20ஆம் தேதி பல்லவநகரம் ராம நாயகர் குமாரன் வெங்கிடாசலம் தத்துவ நிருபணம் எழுதி நிறைவேறினது.

# 310. சர நூல்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 192-2
ஆ. ட/6

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..........
ஆ. சர நூல்
இ. சோதிடம்
ஈ. உரைநடை ; அச்சில் ஏறத்தாழ 5 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 2 ஏடு ; 4 பக்கம்.
ஆ. நீளம் 36 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 6,7 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. சிதைவுற்ற நிலை.
எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பரமேஸ்வரரை உமை வணங்கிக் கேட்பது, ''சுவாமி இந்தப் பூலோகத்தாருக்கு நாள், வார, கிரகமன்றியில் நினைத்த உடனே ஒரு காரியம் செய்வதற்கு ஒரு கணிதை யருளும்'' எனச் சுவாமியும் சொல்லுவார்.

ஆ. முடிவு

இந்தக் கர்ப்பம் ஆண் பெண்ணென்றறியச் சந்திரன் பெண். சூரியன் ஆண் பிள்ளை. உண்டில்லை...........

## 511. வீரசைவப் பிரமாணத் திரட்டு

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 192-3
ஆ. ட / 6

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ...................
ஆ. வீரசைவப் பிரமாணத் திரட்டு
இ. தத்துவம்
ஈ. உரைநடை ; அச்சில் ஏறத்தாழ 25 பக்கம் வரும்.

### 3. தோற்றக் கூறுகள்

அ. 10 ஏடு ; 20 பக்கம்.
ஆ. நீளம் 36 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 6, 7 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. நல்ல நிலை.
எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

வாதுளாகமத்தில் உத்திர காண்டத்திலே தந்திரோத்திர பிருதிகையிலே சிவ சித்தாந்த தந்திரமும் அதர்வண வேதத்திலு மெடுத்துப் பரமேஸ்வரன் பரமேஸ்வரிக்கு உபதேசம் பண்ணினபடி. அது எப்படி யென்றால்...........

ஆ. முடிவு

மூன்று வகை பதார்த்தம். அஃதே தென்னில் இஷ்டலிங்கத் துக்குத் தூபமென்கிற பதார்த்தம். அற்பித பிராண லிங்கத்துக்கு விவித்த மென்கிற ருசி பதார்த்தம். அற்பித பாவலிங்கத்துக்கு ஆனந்த மென்கிற திருப்தி பதார்த்தம் அற்பிதம்.

வீரசைவப் பிரமாணத் திரட்டு முற்றும்.

## 512. தாரக யோகம்

### 1 நூலகக் குறிப்புகள்

அ. 192-4
ஆ. ட/6

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ...............
ஆ. தாரக யோகம்
இ. தத்துவம்
ஈ. உரைநடை ; அச்சில் ஏறத்தாழ 25 பக்கம் வரும்.

### 3. தோற்றக் கூறுகள்

அ. 13 ஏடு; 26 பக்கம்.
ஆ. நீளம் 36 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 6, 7 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. சில ஏடுகள் சிதைந்துள்ளன.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தோயாதிக ளாரூட ஞானம் வந்துதென்று மகிழ்ந்து சிவ பத்தி சிவகிரியை சிவஞான மில்லாமல் மிருத்துவினுடைய வாய்க்கிரையாய்ப் போவாராகவும். காசி மகத்துவங் கேட்ட வுடனே காசிக்குப் போனாப் போலே ....... ....... .......

ஆ. முடிவு

குருவானவர் மயேஸ்வரன் சங்கம முகத்தில் சுவையும் லிங்க முகத்திலே ரூபமும் அர்ப்பித்துத் தானந்தப் பிரசாதங் கொண்டு குரு தேவர்க்குத் திருப்தி செய்யாத மாணாக்கனே குரு லிங்க சங்கமத் துரோக ரென்று குகேசுரர் கும்பினி நரகத்திலே சந்திராதித்தர் உள்ள வரைக்கும் தள்ளுவார்.

## 313. திருமுகப் பாசுரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 192-5
ஆ. ட/6

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..........
ஆ. திரியம்பகர் திருமுகப் பாசுரம்
இ. தத்துவம்
ஈ. உரைநடை ; அச்சில் ஏறத்தாழ 15 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 6 ஏடு; 12 பக்கம்.
ஆ. நீளம் 36 செ.மீ.; அகலம் 3 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 6, 7 வரி.

உ. சுமாரான எழுத்து.

ஊ. சில ஏடுகள் சிதைவுற்றுள்ளன.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

வேதம் வேதாந்தம் வேத்தியம் வாசகம் வாச்சியமும் வல்லவராய்ப் பட்டணம் பஞ்சாராத்திரி கும்பமேகாராத்திரி யென்னும் துறவினையுடைய நடையராய்ப் பரிபூரண பட்டின வாசியாய் ஈஸ்வரனென்னு நாமமே ஈஸ்வரனென்னும் மகா வாக்கிய திடக்கை உண்டானவராய் ...... ...... ......

ஆ. முடிவு

சந்தோஷத்தை யடைந்து காதோலையைக் கழற்றி விட்டாள். அதை வந்தித்து வாசித்துப் பூரண கிருபை வைத்த தென்று சமுசயம் நாசனம் பண்ணித் திரியம்பகர் சாட்சாத் காரத்தை அடைந்தார். இதே முத்தி மார்க்க மென்றறிக.

# 514. பஞ்சீகரண பாவகம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 192-6

ஆ. ட/6

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..............

ஆ. பஞ்சீகரண பாவகம்

இ. தத்துவம்

ஈ. உரைநடை ; அச்சில் ஏறத்தாழ 50 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 26 ஏடு; 52 பக்கம்.

ஆ. நீளம் 36 செ.மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 6, 7 வரி.
உ. சுமாரான கையெழுத்து.
ஊ. சில ஏடுகள் சிதைவுற்ற நிலை.
எ. முழுமை

## 4. சிறப்புச்செய்திகள்

அ. தொடக்கம்

பிரமானந்தம் பரமசுகிர்தம் கேவலம் ஞானமூர்த்தம்
விசுவாதீதம் ககனசதுர்சம் தத்வமஸ் யாதிலட்சியம்,
ஏகம் நித்தியம் விமலமசலம் சர்வதா சாட்சிபூதம்
பாவாதீதம் திரிகுணரகிதம் சற்குரும் தம்நமாமி,

ஆ. முடிவு

நடமாடுந் திருவடியே இருதயந் தன்னில்
நாடியினால் பிங்கலையாய் சுழுமுனை யாகி
நடமாடுந் திருவடியே யுச்சி மேலே
நாதாந்தக் கூத்தெனவே நடம தாடும்
நடமாடுந் திருவடியே மூல மாகி
நாதாந்தப் பேரொளியாய் நண்ணி நிற்கும்
நடமாடுந் திருவடியே பிராண வாயு
நாசிமுனை மீதில்நின்றே நடக்கும் தானே.

## இ. பிற்குறிப்பு.

வீரசைவச் சொக்கலிங்க சுவாமியாருடைய அநுக்கிரகத்தினாலே தீட்சைபெற்ற சுரடிப்பட்டி நகரிலிருக்கும் ராம நாயக்கர் தமது குமாரனாகிய வெங்கிடாசல நாயக்கன் பஞ்சீகரண சாத்திரம்.

சவுமிய வருஷம் கார்த்திகை மாதம் 17ஆம் தேதி சுக்கிர, வார நாள், ரோகிணி நட்சத்திரம், தனுசு லக்கினத்தில் எழுதி நிறைவேறினது,

## 515. பிரபுலிங்க லீலை

1. நூலகக் குறிப்புகள்

அ. 193
ஆ. ந / 22

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. சிவப்பிரகாசர்-துறைமங்கலம்
ஆ. பிரபுலிங்க லீலை
இ. காப்பியம்
ஈ. செய்யுள் 1155

3. தோற்றக் கூறுகள்

அ. 170 ஏடு; 340 பக்கம்.
ஆ. நீளம் 36 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 6 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. சிதைவுற்ற நிலை. இறுதியில் 11 ஏடுகள் முறிந்துள்ளன,
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு

தொடர் எண் : 180 காண்க.

## 516. பெரியபுராணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 194
ஆ. ண/17

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. சேக்கிழார்
ஆ. பெரியபுராணம்
இ. சைவத் திருமுறை
ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 341 ஏடு ; 682 பக்கம்.
ஆ. நீளம் 21 செ. மீ.; அகலம் 5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒருபக்கத்திற்கு 15, 16 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. நல்லநிலை. 4, 11, 47, 63, 140, 152 ஆகிய ஏடுகள் இல்லை. 77, 125, 134, 201, 229 ஆகிய ஏடுகள் முறிந்துள்ளன.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தொடர் எண் : 13 காண்க.

ஆ. முடிவு

இன்ன தன்மையி னுதியர்க டலைவர்தா
மிடர்கெட முனைப்பாடி
மன்னர் தம்முடன் மகிழ்ந்தினி துறையுநாண்
மலைநெடு நாட்டெங்கும்
பன்ன கம்புனை பரமர்தம் திருப்பதி
பலவுடன் பணிந்தேத்திப்
பொன்னெ ......... ......... .........
......... ......... .........

(இது வெள்ளானைச் சருக்கத்தின் 27 ஆம் பாடல்)

## 317. பிரபுலிங்க லீலை

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 195
ஆ. ந/23

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. சிவப்பிரகாசர் - துறைமங்கலம்
ஆ. பிரபுலிங்க லீலை
இ. காப்பியம்
ஈ. செய்யுள் 1155

### 3. தோற்றக் கூறுகள்

அ. 91 ஏடு; 182 பக்கம்.
ஆ. நீளம் 37 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒருபக்கத்திற்கு 7, 8 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. சிதிலமான நிலை. 15 - 30 ஆகிய ஏடுகள் இல்லை.
எ. குறை

### 4. சிறப்புச்செய்திகள்

அ. தொடக்கம் ஆ முடிவு

தொடர் எண் : 180 காண்க.

இ. முற்குறிப்பு

பவ வருஷம் ஐப்பசி மாதம் 9ஆம் தேதி சோம வாரம் அஸ்த நட்சத்திரம் துவாதசி கூடின தினத்திலே முத்தையன் பிரபுலிங்க லீலை எழுதுவிக்கிறது.

## 518. திருவேங்கடச் செழியன் நன்னெறி

1. நூலகக் குறிப்புகள்

அ. 196-1
ஆ. ள/1

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. .... ....
ஆ. திருவேங்கடச் செழியன் நன்னெறி
இ. நீதிநூல்
ஈ. செய்யுள் 40

3. தோற்றக் கூறுகள்

அ. 11 ஏடு; 22 பக்கம்.
ஆ. நீளம் 35 செ. மீ. ; அகலம் 3 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 5,6 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. நல்ல நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தெள்ளு தமிழ்வல்ல சேலஞ் செழியனுக்கே
உள்ளபடி நீதி யுரைக்கவே — வள்ளல்
திருமுகவன் வெற்றிச் செழுங்கமலத் தெந்தை
கரிமுகவ னிக்கதைக்குக் காப்பு.

ஆ. முடிவு

கொடுப்பா ரிலையெனி லேற்போர் விடார்நற் குளத்தில்தண்ணீர்
எடுப்பார் நிரம்பி யிருந்தால் அதிற்சல மில்லையென்றால்
கடப்பாரை கையிற்கொண் டூற்றுறத் தோயமுங் காண்பரதை
விடுப்பார் களோஉரை யாய்செழி யாதிரு வேங்கடமே. (43)

இ. பிற்குறிப்பு

சவுமிய வருஷம் ஆவணி மாதம் 2ஆம் தேதி சனிவாரமும் ஏகாதசியும் ரோகணி நட்சத்திரமும் கூடின சுபதினத்தில்சேலம் திருவேங்கட நயினாரவர்கள் பேரில் நன்னெறி நாற்பது எழுதி நிறைந்தது. முற்றும். சேலத்திலிருக்கும் சம்பிரதி பிள்ளை குமாரன் வைத்தியலிங்கம் படித்து முகிந்தது, முற்றும்.

5. ......................

6. ......................

7. வெளியீட்டுச் செய்திகள்

தமிழ்ப் பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ளது.

## 519. கங்காதரச் செழியன் வண்ணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 196-2
ஆ. ள / 1

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ......................
ஆ. கங்காதரச் செழியன் வண்ணம்: தலைவி இரங்கல்
இ. சிற்றிலக்கியம்
ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 3 ஏடு; 6 பக்கம்.
ஆ. நீளம் 35 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 6 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. நல்ல நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தானத்தன தனதானன தனனதன தனதானன
தனனதனன தனதனன தனனதனதன
தந்தாதன தனன தனனா—
தனதாந்தன தனன தானனா

ஏருற்றிடு மகராலய மதனில்வரு கடுவானதை
யிடர்கொளரி பிரமர் அமரர் அபயமென அமு
தம்போலுணும் அரபர சிவனார்

ஆ. முடிவு

நானிப்படி படவேபிழை சிறுகுதொளிர் படவேபெரு
நவையில் சுகமருவி இடுதல் சிறிதுமிலையென
முன்சூழ்தரு கொடுவினை யலவோ
அவர்தாங்கொடு மைசெயல் நீதியோ.
வண்ணம் முற்றும்.

5. ...... ...... ......

6. ...... ......

7. வெளியீட்டுச் செய்திகள்

தமிழ்ப் பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ளது.

## 320. தாகந்தீர்த்த செழியன் பிள்ளைத்தமிழ்

1. நூலகக் குறிப்புகள்

அ. 197
ஆ. ய / 5

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..............
ஆ. தாகந்தீர்த்த செழியன் பிள்ளைத்தமிழ்
இ. சிற்றிலக்கியம்
ஈ. செய்யுள் 123

## 3. தோற்றக் கூறுகள்

அ. 53 ஏடு; 106 பக்கம்.
ஆ. நீளம் 35 செ.மீ.; அகலம் 2.5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 5, 6 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. நல்ல நிலை.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

உலகுபதி னான்குந்தி கந்தங்கள் இருநான்கும்
உழுகொழுக் கொண்டுமுழுதுஆண்டு
ஒருகுடைக் கீழ்வைத்த செழியதரை யத்திலகன்
உலகாபு ரேசன்நிதியில்
பலகுபே ரன்திரண் டனையஅந் தாலன்
பயந்ததா கந்தீர்த்தகோன்
பருவத்து இளம்பிள்ளை யம்பாடல் ஒருநூறு
பழுதுஅறுத்து எழுதுதுணையாம்
விலகுபொற் சடிலப்ப ராசரத் தவராசன்
மீனகந் தியைஅந்தநாள்
விழைதந்து தந்தநந் தனன்ஒருத் தன்பார
மேருச்சி கரத்தலைவாய்
அலகுபெற்று அமுதுஎனப் பாடுவட பாடல்நூறு
ஆயிரத் தொடுஇருபத்துஐ
ஆயிரத் தொகைதொகுத்து எழுதுவா ரணத்துஈர்
அரணத்தி ருப்பாதமே.

ஆ. முடிவு

தார்வாழி உலகுஉய்ய வந்தகா லக்கொண்டல்
அந்தகா லந்தீர்த்தவன்
தந்ததா கந்தீர்த்த செழியனும் இவற்குஉயிர்த்
தம்பிதிரு வேங்கடவனும்
ஏர்வாழி மற்றுஇவர்க்கு இளவல்ஆம் இருள்நீக்கும்
எம்பிரான் வாழிஇவனுக்கு
இனியஅநு சன்சட்டை யான்வாழி இவன்இவர்க்கு
இளையதீர்த் தவனும்வாழி
சீர்வாழி ஐவர்க்கும் உற்றதுணை ஆம்திருப்
பொன்பரப் பியநாதனும்
தினம்வாழி சேலம்திருப் பாலை உலகைச்
செழும்பதி செழித்துவாழி
பார்வாழி பத்துஅரசர் கண்டுகட் டாண்மையில்
படைகண்ட சேவகன்எனப்
பராசர் பாடும்இவர் விருதோடும் தமரோடும்
பதுமநா ளொடும்வாழியே.

இ. பிற்குறிப்பு

விரோதிகிருது வருஷம் சித்திரை மாதம் ஆதிவாரமும் சத்தமியும் பூர்வ பட்சமும் மிருகசீரிஷ நட்சத்திரமுங் கூடின சுபதினத்தில் விருஷப லக்கினத்தில் தாகந்தீர்த்த செழியதரைய நயினாரவர்கள் பேரில் பிள்ளைத் திருநாமம் சம்பிரிதி செலு சாமுண்டியா பிள்ளை குமாரன் செல்லமுத்தாபிள்ளை குமாரன் வைத்தியலிங்கம் பிள்ளைத்தமிழ் எழுதி நிறைவேறினது. முற்றும்.

கையெழுத்து செறுவெங்கைப்புரியிலிருக்கும் சித்தலிங்க சுவாமியார் பேரன் சுப்பராயன்.

5. ..........

6. ..........

## 7. வெளியீட்டுச் செய்திகள்

தமிழ்ப் பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ளது.

# 521. திருவாணி வாது

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 198

ஆ. ய/6

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ............

ஆ. கங்காதரச் செழியன் பேரில் திருவாணி வாது

இ. சிற்றிலக்கியம்

ஈ. செய்யுள் 103

## 3. தோற்றக் கூறுகள்

அ. 23 ஏடு; 46 பக்கம்.

ஆ. நீளம் 35 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 5,6 வரி.

உ. தெளிவான கையெழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

திருவுநல் வாணி மாதுஞ் சிறந்துய ருலகை தன்னிற்
புரிவுட னினித மர்ந்த பொன்பரப் பீசர் முன்னர்
மருவியே வாது செய்த வளத்தினை வழாது சொல்கேன்
சொரிமதக் கலுழி யானை முகத்தனைத் தொழுது கொண்டே.

ஆ. முடிவு

அந்தணர் வாழ்க மாரி யனுதினம் பொழிக நீதி
இந்தமா நிலத்தோர் தங்கள் இன்மையோர் கொடுமை தீர்க
கந்தமார் குழலி னார்கள் கற்பொடு பொலிக தீம்பால்
தந்தவா னினங்கள் மிக்கு நன்மையே நிறைக மாதோ. (13)

5. ... ... .......

6. ..................

7. வெளியீட்டுச் செய்திகள்

தமிழ்ப் பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ளது.

## 322. செழியதரையன் பஞ்சதந்திரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 199
ஆ. ந/24

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ...........
ஆ. செழியதரையன் பஞ்சதந்திரம்
இ. காப்பியம்
ஈ. செய்யுள் 685

3. தோற்றக் கூறுகள்

அ. 124 ஏடு ; 248 பக்கம்.
ஆ. நீளம் 35 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 6, 7 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. சிதிலமான நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சென்னி மிசையிருத்துஞ் சீரியோர் சிந்தைதனில்
உன்னி யதுமுடிவ துண்மையே — பொன்னுடையன்
தானனத்தா னென்றுந் தலையால் வணங்குகரி
யானனத்தான் செம்பொன் னடி.

ஆ. முடிவு

வையக மெங்கணும் வானம் பெய்கவே
பொய்யிலா நல்லறம் பொங்கிச் சூழவே
மெய்யுறை சேலமா நகரில் மேவிடுஞ்
செய்யகங் காதரச் செழியன் வாழ்கவே.

ஆகத் திருவிருத்தம் 685

இ. முற்குறிப்பு

விரோதிகிருது வருஷம் வைகாசி மாதம் 25ஆம் தேதி சனி வாரம் பூர்வ பட்சம் கங்காதரச் செழியன் பேரில் பஞ்சதந்திரம் எழுதத் துவக்கினது.

பிற்குறிப்பு

விரோதிகிருது வருஷம் ஆடி மாதம் 16ஆம் தேதி குருவாரமும் திரயோதசியும் கற்கடக லக்கினமும் அமரபட்சமும் புனர்பூச நட்சத்திரமும் கூடின சுபதினமான அமிர்த சித்தயோக தினத்தில் சேலஞ் செழிய கங்காதர நயினார் பேரில் அங்கிதமாயிருக்கும் பஞ்சதந்திரம் எழுதி நிறைந்தது. முற்றும். இந்தப் பஞ்சதந்திரம் சேலத்திலிருக்கும் சப்பிரிதி சாமுண்டியா பிள்ளை குமாரன் செல்ல முத்தாபிள்ளை குமாரன் வைத்தியலிங்கம் பஞ்சதந்திரம் எழுதி நிறைவேறினது. முற்றும்.

## 323. செழியதரையன் கோவை

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 200
ஆ. ய/7

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ....... ........
ஆ. செழியதரையன் கோவை

இ. சிற்றிலக்கியம்
ஈ. செய்யுள் 74

3. தோற்றக் கூறுகள்

அ. 17 ஏடு; 34 பக்கம்.
ஆ. நீளம் 35 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது,
ஈ. ஒரு பக்கத்திற்கு 8 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. நல்ல நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கார்பூத்து விற்கொண்டு வெற்பேந்தி வாரி கவர்ந்துகஞ்சத்
தேர்பூத்து மால்வடி வங்காட்டி யேயிமை யோர்பதிபோல்
சீர்பூத்த பாலைப் பதித்தாகந் தீர்த்த செழியன்வெற்பில்
ஏர்பூத்த காவில் ஒருவல்லி தானெதிர் நின்றதுவே. (1)

ஆ. முடிவு

குலமான பெண்டிர்த் துணைமண மேற்கவி கொண்டலுறும்
நலமான வூர்முற்றும் நாறுங்கொல் லோதமிழ் நாவலவர்
பலமான பாலைப் பதித்தாகந் தீர்த்த செழியன்அந்நாள்
இலமான பூமலர் சேர்வார்க்குச் சேர்ந்ததை என்சொல்வதே (74)

5. ..................

6. ..................

7. வெளியீட்டுச் செய்திகள்

தமிழ்ப்பல்கலைக்கழகம் வெளியிட்டுள்ளது.

## 324. யாப்பருங்கலக் காரிகை

1. நூலகக் குறிப்புகள்

அ. 201
ஆ. ச / 15

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. அமித சாகரர்
ஆ. யாப்பருங்கலக் காரிகை : மூலமும் உரையும்
இ. இலக்கணம்
ஈ. செய்யுளும் உரைநடையும் ; அச்சில் ஏறத்தாழ 150 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 66 ஏடு; 132 பக்கம்.
ஆ. நீளம் 40.5 செ. மீ.; அகலம் 3.5 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.
உ. தெளிவான எழுத்து.
ஊ. நல்ல நிலை. 1-8, 11, 21 ஆகிய ஏடுகள் இல்லை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு

தொடர் எண் : 27 காண்க.

## 325. குர்பாள சுவாமியார் பிள்ளைத்தமிழ்

1. நூலகக் குறிப்புகள்

அ. 202
ஆ. ய/8

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ............
ஆ. கம்பாள சுவாமியார் பிள்ளைத்தமிழ்
இ. சிற்றிலக்கியம்
ஈ. செய்யுள் 101

## 3. தோற்றக் கூறுகள்

அ. 34 ஏடு; 68 பக்கம்.
ஆ. நீளம் 42 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 5, 6 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. நல்ல நிலை.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அத்தனுட புத்திரனை அத்திமுகத் துத்தமனை
நித்தம்நினை சித்தமே நீமகிழ்வாய்-பத்திக்
கருதரி யோம்நன்றா கக்குரு வாழ்க
குருவே துணையென்று கொள்.

ஆ. முடிவு

பழிப்பி லாமறை யாகம புராணங்கள்
பாருளோர் பாராட்டப்
பரவு சைவநன் மார்க்கமு முலகுளோர்
பரிவுடன் கொண்டாட
விழுப்ப மெய்திடு வீரசை வமும்புவி
விளங்கியே வந்திக்க
விரும்பி நல்லறம் யர்வரும் வியந்துளம்
வியப்பொடு புரிந்தேத்தக்
குழுக்கொ ளானினம் வாழ்ந்திட மறையவர்
கூட்டமும் மிகவாழக்

குணங்கொள் வேந்தனும் வாழநன் மதிதொறுங்
கொண்டன்மும் மழைபெய்ய
ஒழுக்க முள்ளவர்க் குதவிய கதியின
னுருட்டுக சிறுதேரே.
உலகம் போற்றுகம் பாளதே சிகவர
னுருட்டுக சிறுதேரே.

இ. பிற்குறிப்பு

சார்வரி வருஷம் மார்கழி மாதம் 22ஆம் தேதி திங்கட் கிழமை நாள் ஏகாதசியும் ……… ………

## 326. சித்தாந்த சிகாமணி

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 203
ஆ. ட/7

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. சிவப்பிரகாசர் - துறைமங்கலம்
ஆ. சித்தாந்த சிகாமணி
இ. தத்துவம்
ஈ. செய்யுள் 879

### 3. தோற்றக் கூறுகள்

அ. 58 ஏடு ; 116 பக்கம்.
ஆ. நீளம் 40 செ. மீ.; அகலம் 4 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 11, 12 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. நல்ல நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

மனவ னத்தின் மதமெனும் யானையைச்
சினவி நிற்குந் திகழிள வெண்மதி
புனைநு தற்கட் புராரிய ளித்தருள்
நனைக வுட்களி நாகிள வேழமே.

ஆ. முடிவு

மாரி பெய்க மனுநெறி யோங்குக
பாரில் வண்சிவ பத்தர்கண் மல்குக
சீரின் மல்கு சிவன்புகழ் வெல்லுக
வீர சைவம் விளங்குக எங்கணும். (29)

ஆகத் திருவிருத்தம் 350. லிங்கத்தலம் முற்றும், அங்கத்தலம் 529. ஆக அங்கத்தலமும் லிங்கத்தலமும் விருத்தம் 879.

## 327. ஏர்ப்பெருக்கம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 204-1
ஆ. ற / 11

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ...............
ஆ. ஏர்ப் பெருக்கம்
இ. பல்வகை நூல்கள்
ஈ. செய்யுள் 16

3. தோற்றக் கூறுகள்

அ. 8 ஏடு; 16 பக்கம்.
ஆ. நீளம் 33 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 6 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. நல்ல நிலை.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

வருமுனது மேழியின் முனையுழப் பெறுதலால்
வானாட்டி னுக்குமிந்த
மண்ணாடும் மகிமையென் றியாவரும் சொலநின்று
வானவரும் வாஞ்சைகொள்வர்
ஒருமனுவும் நவகண்ட மதிலிதுசி றந்ததென
உயர்பரத னுக்குரைத்தான்
ஒளிர்சேடன் அடிசுமந் திடவினமெ லாநஞ்சம்
உற்றுநல் பாம்பானதால்
கருதுமிர வலர்தரித் திரதிமிர மகலவிரு
கரநீட்டு தியாககதிரே
கங்கையால் மண்ணிடைமு ளைத்துத்த ழைத்துவளர்
கற்பகா டவியானவா
அருளுடன் சூலிமுது கினில்முன்னம் அன்னமிட்டு
அறங்காத்த தலைவள்ளலே
அரசர்மா தவர்வணிகர் முதலினோர் மரபுநிலை
அருளும்வே ளாளமுகிலே. (1)

அ. முடிவு

கங்கையைத் தலைவர்முடி சூடவது கண்டுமை
கருத்தில்பொ றாதுபெம்மான்
காத்திரத் தொருபங்கெ லாம்பெறுவ னினியெனக்
கடவுண்முடி பெற்றதோமேல்
சங்கரற் குள்ளபே ராசையா லோதலைவர்
தாயென்று சடையில்வைத்தார்
சைவவழித் தலைவ ரப்பரையு முட்கொண்டு
தாங்குநந் தியையுகந்தார்

இங்கிதற் குரிமையா வோமென வராகியாய்
ஏர்ப்படை யுடன்பழகவே
இறைவியொரு பக்கமா யர்த்தனா ரீசரென
ஏத்திட விருந்ததன்றே
அங்கையாற் பாணன்பி ணத்தைப் பரித்தருளும்
அச்சமில் லாதமலையே
அரசர்மா தவர்வணிகர் முதலினோர் மரபுநிலை
அருளும்வே ளாளமுகிலே. (16)

## 328. திருக்கை வழக்கம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 204-2
ஆ. ற / 11

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. .... ........
ஆ. திருக்கை வழக்கம்
இ. பல்வகை நூல்கள்
ஈ. செய்யுள்

### 3. தோற்றக் கூறுகள்

அ. 4 ஏடு; 8 பக்கம்.
ஆ. நீளம் 33 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 6, 7 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. நல்ல நிலை.
எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கங்கைக் குலந்தழைக்கக் காட்டும் பெருங்கீர்த்தி
மங்கை பிரியாமல் வாழுங்கை — திங்களணி
எம்பிரா னெம்பெருமா னிந்திராதி பர்க்கரிய
தம்பிரா னுக்குரைத்த சந்தனக்கை — ஐம்பொன்

ஆ. முடிவு

நடக்கை யிருக்கை நகைக்கை மிடியைக்
கடக்கை செழுங்கைமிகு கற்பகக்கை — தொடுத்ததெலாஞ்
சீராக வுண்டாக்குஞ் செங்கை பெருங்கருணைக்
காரானர் கற்பகப்பூங் கை.

## 329 தனிப் பாடல்கள்

1. நூலகக் குறிப்புகள்

அ. 204-3
ஆ. ற/11

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ........................
ஆ. தனிப்பாடல்கள்
இ. பல்வகை நூல்கள்
ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 7 ஏடு; 14 பக்கம்.
ஆ. நீளம் 33 செ. மீ., அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. நல்ல நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அரன்தன திடத்திலே ஐங்கரன் வந்துதான்
அய்யவென் செவியையமிகவே
அறுமுகன் கிள்ளினா னென்றேசி ணுங்கவே
அத்தன்வே லவனைநோக்கி

விரைவுடன் வினவவே அவனெனைச் சுற்றியே
விளங்குகண் ணெண்ணினானென
மேம்படும் பிள்ளையைப் பார்த்துநீ யப்படி
விகடமேன் செய்தாயென
மரவுமென் கைநீளம் முழமளந் தானென்ன
மயிலவன் நகைத்துநிற்ப
மலையரையன் உதவவரு உமையவளை நோக்கிநின்
மைந்தரைப் பாராயெனக்
கருமைசெறி கடலாடை உலகுபல அண்டமும்
கருப்பமாய் அளித்தகன்னி
கணபதியை அருகழைத்து அகமகிழ்ந் திடுமுமை
களிப்புடன் உமைக்காக்கவே.

ஆ. முடிவு

கருதுங் கிளியு மமுதமும் பாகுங் கனியுமதன்
விருதும் பொலியும் விழியணங் கேவெண் டமிழ்ப்புலவீர்
மருதம் பொலியு மதுரா புரிச்சொக்கர் வைகையிலே
எருதும் பசுவும் புலியுமோ ரானையி லேறியதே.

## 350. மீனாட்சியம்மன் அகவல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 204-4
ஆ. ற/11

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ........... ... ... ...
ஆ. மீனாட்சியம்மன் அகவல்
இ. பல்வகை நூல்கள்
ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 5 ஏடு; 10 பக்கம்.
ஆ. நீளம் 33 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. நல்ல நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கடம்ப வனஞ்சூழக் கன்னிமத னம்பை
அடர்ந்தவிழி அங்கயற்க ணம்மை — நடந்த
நடைக்குவமை அன்னம் நகைக்குவமை முல்லை
இடைக்குவமை யில்லை இனி.

ஆ. முடிவு

எப்பிழைகள் செய்தாலு மீடேற்றிக் கொண்டுநினைத்
தப்பிழையெல் லாம்பொறுக்க வேணுமே — செப்பரிய
கொங்கைச்சி மாமதனன் ......... ......... .........
தங்கச்சி நின்தாள் சரண்.

## 331. மாந்திரீக நூல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 204-5
ஆ. ற/11

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. .....................
ஆ. பெயர் தெரியாத ஒரு மாந்திரீக நூல்
இ. மாந்திரீகம்
ஈ. செய்யுள்

## 3. தோற்றக் கூறுகள்

அ. 2 ஏடு ; 4 பக்கம்.
ஆ. நீளம் 33 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒருபக்கத்திற்கு 7 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. நல்ல நிலை.
எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

காணப்பா நகாரமுதல் அஞ்செழுத்தை மாறிக்
கைகண்ட தம்பனமாம் கண்டு கொள்ளு
பூணப்பா மகாரமுதல் அஞ்செழுத்தை மாறிப்
புகழான மோகனமாம் பூலோ கத்தில்
தோணப்பா சிகாரமுதல் அஞ்செழுத்தை மாறிச்
சொற்பெரிய மாரணமாம் சொல்லக் கேளு
ஊணப்பா வகாரமுதல் அஞ்செழுத்தை மாறி
உச்சாட னம்கிருபை ஓடும் பாரே. (1)

ஆ. முடிவு

பண்ணையிலே சிவத்துக்குத் தாவடத்தைக் கேளு
பாங்கான அழைப்புக்குப் படிக மாலை
உண்ணவே வசியத்தி லுருத்திராட்ச மாலை
உத்தமனே மோகனத்தில் மிளகு மாலை
கண்ணயிலே துரத்துகைக்குச் சீந்தி மாலை
கடியவித்து வேசனந்தான் சங்க மாலை
நண்ணவே பேதனந்தான் படிக மாலை
நலமான தாவடங்கள் கொள்ளு கொள்ளே, (7)

# 332. வீரபத்திரர் சோடச விருத்தம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 204-6
ஆ. ற/11

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ........ .. ....
ஆ. வீரபத்திரர் சோடச விருத்தம்
இ. பல்வகை நூல்கள்
ஈ. செய்யுள் 17

## 3. தோற்றக் கூறுகள்

அ. 7 ஏடு; 13 பக்கம்.
ஆ. நீளம் 33 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. நல்ல நிலை.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

செக்கர்வா னிறத்துச் சேவகன் வருக
செஞ்சுடர் முடியினோன் வருக
செங்கையில் வில்லும் பாணமு மேந்துந்
தீரநா யகனிவண் வருக
முக்கணும் கோரைப் பல்லுமே யுள்ள
முகத்தினான் வருகஐங் கரத்து
முன்னவற் கிளைய தம்பிதான் வருக
மூர்த்தியின் மூர்த்தியே வருக
தக்கன்யா கத்தைத் தகர்த்தவன் வருக
சரபமாய் வந்தவன் வருக
சர்ப்பகங் கணகே யூரவா பரணத்
தன்மவான் என்முனம் வருக
பக்கமே பூதப் படைகள்சூழ்ந்து இறைஞ்சிப்
பரவும்மெய்ப் பதாம்புயன் வருக
பத்திரை கேள்வன் ஆகிய வீர
பத்திர ருத்திரன் வரவே.

ஆ. முடிவு

வீரபத் திரருத்ர மூர்த்திசர ணம்வாழி
விசையம்உள தோள்கள்வாழி
வில்வாழி அவர்கையில் இலகுபா ணமும்வாழி
வெகுளும்அவர் சீற்றம்வாழி
ஈரம்உள அருள்வாழி அவர்பராக் கிரமம்வாழி
இத்துதிக்கு உருகியவர்தான்
ஈந்திடும் கொடைவாழி ஏத்துநா யடியேனும்
என்றைக்கும் வாழிவாழி
பாரிடமும் வாழிமா பத்திரையும் வாழியவர்
பள்ளயநி வேதனங்கள்
பலகாலும் வாழியவர் நாமம்என் தலைமேற்
பரித்துப் புராணவசவ
ஆரியக் குருராயர் சந்நிதியில் நான்சொன்ன
அரியசோ டசவிருத்தம்
அன்புடன் படித்துத் துதித்தபேர் கேட்டபேர்
அருள்பெற்று வாழிதானே (17)

## 333. அட்டகவர்க்கப் பலன்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 205

ஆ. வ/8

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ................

ஆ. அட்டகவர்க்கப் பலன்

இ. சோதிடம்

ஈ. உரைநடை ; அச்சில் ஏறத்தாழ 40 பக்கம் வரும்.

### 3. தோற்றக் கூறுகள்

அ. 49 ஏடு; 98 பக்கம்.

ஆ. நீளம் 17 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 6, 7, 8 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. ஏடுகள் நல்ல நிலையில் உள்ளன.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சூரியன் அஷ்டக வர்க்கம் 48.

| | | |
|---|---|---|
| சூரியன் | — 1, 2, 4, 7, 8, 9, 10, 11 | ஆக 8. |
| சந்திரன் | — 3, 6, 10, 11 | ஆக 4. |
| குஜன் | — 1, 2, 4, 7, 8, 9, 10, 11 | ஆக 8. |
| புதன் | — 3, 5, 6, 9, 10, 11, 12 | ஆக 7. |

ஆ. முடிவு

சர்வாஷ்டக வர்க்கத்தில் 10ஆம் இடப் பரலில் 11ஆம் இடப் பரல் ஏறியும் 11ஆம் இடப் பரலுக்கு 12ஆம் இடப்பரல் குறைந்தும் 12ஆம் இடப்பரலுக்கு இலக்கினப்பரல் ஏறியும் இப்படி இருக்கிற சாதகனுக்கு அதிக அளவு சம்பத்து உடையவர் என்பன. இதில் ஏறினும் குறையினும் பாவக பலம் போல் கண்டுசொல்வன. சமுதாயப் பலன் முற்றும்.

இ. பிற்குறிப்பு

ரௌத்ரி வருஷம் ஆவணி மாதம் 4ஆம் தேதி சனிக்கிழமை தினம் ஆய்க்குடியில் இருக்கும் கந்தசாமி அஷ்டக வர்க்கம் எழுதினது.

## 534. சோதிட நூல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 206
ஆ. வ / 9

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ... ...
ஆ. பெயர் தெரியாத ஒரு சோதிட நூல்
இ. சோதிடம்
ஈ. உரைநடை ; அச்சில் ஏறத்தாழ 50 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 66 ஏடு; 132 பக்கம்.
ஆ. நீளம் 17 செ மீ.; அகலம் 2. 5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்குப் பலவித வரிகள்.
உ. சுமாரான எழுத்து.
ஊ. ஏடுகள் பழுதாய் உள்ளன.
எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கணித சாத்திரம் :- கலியுக சகாத்தம் பார்க்கிற விவரம்— 60 வைத்து 29 இல் பெருக்கி .... சென்ற வருஷத்தைக் கூட்டி கூடின தொகையில் நவம்என்று 11 களைந்து நின்றது சாலிவாகன சகாப்தம்.

ஆ. முடிவு

இந்த அடைவிலே எத்தனை நாழிகை எடுபட்டுது அத்தனை நாழிகையும் கிரகண காலமாம். இந்த எடுபட்ட நாழிகை வைத்துப் பாதியாக்கிக் கண்ட நாடி விநாடி முந்தி எண்ணி யிருக்கிற பருவத்தில் எடுத்துப் போடப் பிடிக்.... காலமாம். பின்பு பருவத்தை வைச்சுக்.........................

# 335. திவாகரசம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 207
ஆ. வ/10

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ... ... ... ...
ஆ. திவாகரசம் ஆறாவது யோகப்படலம் : மூலமும் உரையும்
இ. சோதிடம்
ஈ. செய்யுளும் உரைநடையும் ; அச்சில் ஏறத்தாழ 35 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 19 ஏடு; 38 பக்கம்.
ஆ. நீளம் 43 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. ஏடுகள் நல்ல நிலையில் உள்ளன.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

உதையமும் அரியாய் அதிபதி யொன்பான்
இராசியின் அவ்விடத் ததிபன்
சிதைவிலா நான்கின் ஐந்தினுக் கதிபன்
சேரஈ ராறினில் ஏழாம்
அதையுடை யவன்ஈ ரைந்துபன் னொன்றுக்கு
அதிபன்ஈ ராறினை உடையோன்
சுதையணி முலையாய் பத்தினில் இருந்தால்
சொல்லுவன் தினபலன் தனையே.

ஆ. முடிவு

சுக்கிரனுக்குப் பதினொன்றில் சந்திரன் நிற்க நரவாகனம் வரும். சந்திரனுக்குப் பதினொன்றில் சுக்கிரன் நிற்கிலும் நரவாகனம் வரும். ஆரூட லக்னத்தில் சந்திரன் நிற்க

இரண்டாம் இடத்தில் வியாழன் இருக்கப் பதினோராம் இடத்தைச் சுக்கிரன் பார்க்கில் நரவாகன யோகம் உண்டு என்றவாறு. திவாகரசம் ஆறாவது யோகப்படலம் முற்றும்.

## 336. இலிங்கப் புலம்பல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 208 - 1
ஆ. ட/8

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ஆறுமுக சுவாமிகள் - திருக்கோவலூர்
ஆ. இலிங்கப் புலம்பல்
இ. தத்துவம்
ஈ. செய்யுள் 168

3. தோற்றக் கூறுகள்

அ. 22ஏடு; 44 பக்கம்.
ஆ. நீளம் 14 செ.மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.
உ. சுமாரான கையெழுத்து.
ஊ. பழுதுற்ற நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அண்டர் படைத்தளமும் லிங்கமே
அரமனையும் காவல்களும்
தண்டதரன் பிடிநாளில் லிங்கமே
தடுப்பாரைக் காணேனே. (49)

ஆ. முடிவு

இருநூறும் மேல்ஒருபத்து ஏழும் எமது
குருகோவல் ஆறுமுகர் கூறும் — பெரிதாம்
தவம்நிறையும் அன்பர் சமைதமைஅது ஆதி
சிவம்இதையர் ஒத்த தினம். (218)

## 337. அருள்வாம உண்மை விளக்கம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 208-2
ஆ. ட/8

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ஆறுமுக சுவாமிகள் - திருக்கோவலூர்
ஆ. அருள்வாம உண்மை விளக்கம்
இ. தத்துவம்
ஈ. செய்யுள் 168

### 3. தோற்றக் கூறுகள்

அ. 31 ஏடு; 62 பக்கம்.
ஆ. நீளம் 14 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.
உஉ. ஏடுகள் பொதுவாகப் பழுதுற்ற நிலை.
எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அருள்வாம உண்மையெனும் அத்துவிதா னந்தம்உற
மருள்வாமம் நீக்கியருள் மாகுரவ னைப்பணிவாம்
சிவலிங்கா காரத்தில் சிற்சத்தி பரையாதி
நவில்இச்சா சத்தியொடு ஞானம் கிரியையுமே. (1)

ஆ முடிவு

மருள்வாமி நேசம் மருவாது ஒழித்தற்கு
ஒருநூறு மேல்ஒருபத்து ஒன்றும் — அருள்செய்த
கோவலில்வாழ் ஞான குருஆறு மாமுகர்தன்
சேவடியைச் சிந்தனை செய். (111)

## 338. பிரம தர்க்க நிச்சயம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 208-3
ஆ. ட/8

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ........................
ஆ. பிரம தர்க்க நிச்சயம்
இ. தத்துவம்
ஈ. செய்யுள் 22

3. தோற்றக் கூறுகள்

அ. 12 ஏடு ; 24 பக்கம்.
ஆ. நீளம் 14 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 7 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. பொதுவாகப் பழுதுற்ற நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

குரைகடற் றண்டைத்தாட் குகர்க்குமுன் தேவராய்
வரம்உளத்து எண்ணுவார்க்கு அருளும் மாமுகக்
கரமுடன் ஐங்கரக் கணபதி தாள்உளம்
கருதிடும் அடியர்தம் கழல்கள் போற்றுவாம்.

ஆ. முடிவு

உருவாய அன்னமயம் ஆதி கோசம்
ஒன்றொன்றாய் நீங்கியதை உணர்அறிவு தானாய்
இருவாத னைகள்நீங்கிச் சகலகே வலமும்
இராப்பகல்இல் லாதநிட்டை யினில்இ ராதி
பொருவிலா நிரதிசயா னந்தம் மேவும்
புண்ணியர்எச் சமயசா திகளி லேனும்
நிருபாதி கப்பிரம வாரிதியின் மூழ்கு
நிலைமையரே பிரமகுலம் நிகழ்த்திடவும் தகுமால். (22)

5, பிறசெய்திகள்

இச்சுவடியின் இறுதியில் கிரந்த எழுத்துகளில் ஒரு சுலோகம் எழுதப்பட்டுள்ளது.

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

32 : 6 ஏ.

## 549. உண்மையுலா

1. நூலகக் குறிப்புகள்

அ. 208 - 1
ஆ. ட / 9

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ................
ஆ. உண்மையுலா
இ. தத்துவம்
ஈ. செய்யுள் ; 111 கண்ணி.

3. தோற்றக் கூறுகள்

அ. 17 ஏடு; 34 பக்கம்.
ஆ. நீளம் 14 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 7,8 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. ஏடுகள் சிதிலமாக உள்ளன.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஞானமூர்த் திப்பிள்ளை யார்பாத நாண்மலரைத்
தியானித்து உளத்து இருத்திச் சென்னியில்வைத்—தே.......
மல்லயனைப் போற்றியே மாபிரம ராம்பிகையும்
வல்ல வனிமிடரை வந்தித்து—அல்லமனைப்

ஆ. முடிவு

நீபிரமம் என்றுரைத்தால் நீபிரமம் ஆயினையோ
நீபிரமம் சற்குருவால் நில்லென்றே—மாபிரம
தற்சொருப சாட்சாத்துக் காரமாம் சண்முகர்என்
சற்குருவிந் நூல்உரைத்த தாம். (111)

உண்மை உலா முற்றும்.

## 540. வெத்தருலா

1. நூலகக் குறிப்புகள்

அ. 209 - 2
ஆ. ட / 9

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ...............
ஆ. வெத்தருலா

இ. தத்துவம்
ஈ. செய்யுள் ; 47 கண்ணி.

3. தோற்றக் கூறுகள்

அ. 8 ஏடு; 16 பக்கம்.
ஆ. நீளம் 14 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 6, 7 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. ஏடுகள் சிதிலமாக உள்ளன.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அய்யன் அரு ணைக்குகையில் ஆண்டுஎனைக் காத்தருளும்
மெய்யன் பதத்தை மிகவணங்கி—உய்ய
வகையறியா வையத்து வண்மைதனை நாடித்
தொகைதனை ஓதுவாம் தோன்ற—வகையதுகேள்

ஆ. முடிவு

வெத்தருலா மார்க்கத்தின் மேவாது வீடுஅருளும்
அத்தன்உற வோர்ஓதும் அத்துவித—முத்திஆம்
உண்மைநிலை யேகதிஎன்று உண்மையுலா வும்ஓதும்
அண்ணல்அரு ளாகரர் ஆம். (47)

5. ..................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

32—6பி, 83பி.

## 541. பரமோபதேச வொருக்கம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 209 - 3
ஆ. ட / 9

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ............
ஆ. பரமோபதேச வொடுக்கம்
இ. தத்துவம்
ஈ. செய்யுள் 82 கண்ணி + காப்பு 1.

3. தோற்றக் கூறுகள்

அ. 10 ஏடு; 20 பக்கம்.
ஆ. நீளம் 14 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 7 வரி.
உ. சுமாரான கையெழுத்து.
ஊ. ஏடுகள் சிதிலமாகி உள்ளன.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

திருமிகுமெய்ஞ் ஞானர்உளம் தேக்கி மகிழும்
பரமோப தேசவொடுக் கத்துப்—பொருளுதிக்கத்
தந்தருளும் கந்தன் தமையன் கரிமுகவன்
கந்தமலர்ச் சீர்ப்பாதம் காப்பு.

ஆ. முடிவு

மோனநிட்டை சாதனையில் நாடோறு மேமுயல்
ஞானிகளென் சாத்தியார் நல்லோர்கள் - ஆனவரை
நாடோறும் பூசிப்போர் நல்லசிவ சாயுச்சிய
வீடுபெறல் சத்தியமா மே. (82)

## 542. சிவாத்வைதக் குர்மி

1. நூலகக் குறிப்புகள்

அ. 209-4
ஆ. ட/9

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ஆறுமுக சுவாமிகள் - திருக்கோவலூர்.
ஆ. சிவாத்வைதக் கும்மி
இ. தத்துவம்
ஈ. செய்யுள் 26 கண்ணி + 1 விருத்தம்

3. தோற்றக் கூறுகள்

அ. 6 ஏடு ; 12 பக்கம்.
ஆ. நீளம் 14 செ. மீ.; அகலம் 2.5 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. ஏடுகள் சிதிலமாக உள்ளன.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஞானமூர்த் திப்பிள்ளை யார்பாத
நளினம் சிரத்தும் உளத்தின்உறத்
தியானித்து வாழ்த்திவ ணங்கியிந்நூல்
தெளிபருவப் பெண்காள் கும்மியடி. (1)

ஆ. முடிவு

அவம்எனும் புலன்கட்கு ஓடாக் கரணம்உள் அடக்கி அன்பால்
எவரும்மெஞ் ஞான வீட்டின் இன்புஉற அருளி னாலே
குவலயத்து ஒளிரும் கோவல் ஆறுமா முகமெஞ் ஞான
சிவகுரு முன்னோர் செய் .......... திரட்டிச்சொற் கும்மி என்றே.

## 545. ஞானிகள் நிலைமை

1. நூலகக் குறிப்புகள்

அ. 209-5
ஆ. ட / 9

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ஆறுமுக சுவாமிகள் - திருக்கோவலூர்.
ஆ. ஞானிகள் நிலைமை
இ. தத்துவம்
ஈ. செய்யுள் 8

## 3. தோற்றக் கூறுகள்

அ. 6 ஏடு; 12 பக்கம்.
ஆ. நீளம் 14 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒருபக்கத்திற்கு 7 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. ஏடுகள் சிதிலமாக உள்ளன.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அத்தனும்மெஞ் ஞானியரும் உரைத்த வாறே
ஆகம்முடி இடைஅசையாத் தறிபோல் ஆக்கிப்
பத்திரம்கோ முகம்வீரம் பதுமத் தோடு
பகர்கூரு மாசனத்தில் படிந்துஏ காந்த
முத்திரைசாம் பவிவான நோக்குஅது ஆகி
முயல்கருத்தை நடுநிலையில் இருத்தி நாளும்
இத்தகைமை சிவயோகத்து இருப்பார் ஞானி
இனிஅவர்க்குப் பிறவியுமுண்டு என்ன லாமோ (1)

ஆ. முடிவு

மறையோர்ஆ தியகுலங்கள் எச்சமய ரேனும்
மாசில்பிர மஞ்ஞான வநுபோக நிட்டை
உறும்அவரே அரிஅயன்இந் திரன்முதலாம் தேவுஎன்று
உரைகாலோத் தரத்துஉணர்க என்னும் கோவற்கு

இறைவீரட் டேசர்பெரி யாம்பிகையின் அருளால்
இலகுஆறு முகஞான குருதேவர் இயம்பும்
கறைபாச வேர்என்னும் இருவினைமும் மலமும்
கழிசச்சி தானந்த சொருபஞா னிகளே (8)

5. ..................

## 544. மேன்மைப் பதிகம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 209-6
ஆ. ந/23

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..........................
ஆ. மேன்மைப் பதிகம்
இ. தத்துவம்
ஈ. செய்யுள் 12

3. தோற்றக் கூறுகள்

அ. 4 ஏடு : 8 பக்கம்.
ஆ. நீளம் 14 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒருபக்கத்திற்கு 7,8 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. ஏடுகள் சிதிலமாக உள்ளன.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பன்னு மறைமுடிவு ஆம்பரமன் சற்குருவாய்ச்
சொன்ன மொழியொன்றில் தோற்றும்மா லிங்கம்
தன்னிற் சமரச மாம்தகைமை வாழ்வுஉளதாய்த்
தன்னைத்தன் மஞ்செய்யும் தன்மம் தன்மமே. (1)

ஆ. முடிவு

தம்மை இழப்புஎன்று சாற்றும் மறை ஆதி
பெம்மா னால்வருக்கும் .. ....திருந்ததுவும்
அம்மாமா லிங்கத்துஇ ரண்டுஅற்றுஏ கம்அற்றுநன்றாய்ச்
சும்மா இருக்கும் சிற்சுகமே சுகமாமே. (12)

## 315. வீரட்டேசுரர் தோத்திரம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 209-7
ஆ. ட/9

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ... .........
ஆ. வீரட்டேசுரர் தோத்திரம்
இ. தோத்திரம்
ஈ. செய்யுள் 16

### 3. தோற்றக் கூறுகள்

அ. 6 ஏடு; 12 பக்கம்.
ஆ. நீளம் 14 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 7,8 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. ஏடுகள் சிதிலமாக உள்ளன.
எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பாத அஞ்சலி கூப்பிச் சமநிலை
பார்வை யா... ...... ............ தெப்படி
வாதம் முன்உயர் தாழ்வு நலிவினை
மாற்றிச் சிற்சுக மாய்வைக்கும் மன்னவா

ஆதி அந்தம்இ லாதவ சச்சிதா
னந்த நித்திய பூரணஅ கண்டிதா
வேத வந்தமும் ஓதுதற்கு அரியவா
வீரட் டேசுர லிங்கமா லிங்கமே. (1)

ஆ. முடிவு

கரையும் ஆற்றினில் ஊற்று மணல்எனக்
கரைய உள்ளம் கசிந்துகண் நீர்உற
உருகி அன்புஉயர்ந்து உன்அடிக் கீழ்உறும்
உண்மை ஞான நிலையுற ஆளுவாய்
உரைநினைவு உணர்வுக்கு அரியது ஆகிய
ஓர்மொழி யைஉரை யாது உரைத்தவா
விரை........ வெண் ணீற்றுஅணிக் கோவல்வாழ்
வீரட் டேசுர லிங்கமா லிங்கமே. (16)

## 346. சண்முக அகவல்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 209-8
ஆ. ட / 9

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..............
ஆ. சண்முக அகவல்
இ. தோத்திரம்
ஈ. செய்யுள் ; அச்சில் சுமார் 3 பக்கம் வரும்.

### 3. தோற்றக் கூறுகள்

அ. 4 ஏடு ; 8 பக்கம்.
ஆ. நீளம் 14 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.

உ. சுமாரான எழுத்து.
ஊ. ஏடுகள் சிதிலமாக உள்ளன.
எ. முழுமை

4. சிறப்புச்செய்திகள்

அ. தொடக்கம்

திருவளர் கோவல் திகழ்சண் முகவர்
குாவுஅணித் தண்டையும் கூ........ கிணிசேர்
செங்கம லப்பொற் சேவடி அழகும்
தங்கத் த....டி தரித்திடை அழகும்
............ ............ ............ ............

ஆ. முடிவு

இட்ட லிங்க.........................
சுட்டறி ஐக்கிய சுகஅ தீத ....
மறைஆ கமா ........ மாலிங்க பூரண
நிறைஅத் துவிதம் நீஅருள் எனக்குஉன்
சரணங் களையென் தலைமீது .... த்துஞ்
சரணம் பொலிவுஉள் தருவாய் சரணம்.

## 517. வீரட்டேசுரர் மங்களம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 209-9
ஆ. ட/9

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..........
ஆ. வீரட்டேசுரர் மங்களம்
இ. பல்வகை நூல்கள்
ஈ. செய்யுள்; 5 கண்ணி.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 2 ஏடு; 4 பக்கம்.
ஆ. நீளம் 14 செ.மீ.; அகலம் 2.5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. ஏடுகள் சிதிலமாக உள்ளன.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பத்தர்தொழும் பாதருக்குப் பார்வதிதன் பங்கருக்கு
அத்தருக்கு......... க்காழி அளித்தவற்கு
சுத்தசுக நித்திய சோதிவடி வானவற்கு
வித்தகற்கு வீரட்ட நாதர் தமக்கு
செயமங்களம் நித்ய சுபமங்களம். (1)

ஆ. முடிவு

முன்னவற்கு முதல்வற்கு மூவர்க்குஅரி தாகக்கலை
சொன்னவற்குச் சொல்லரிய சொரூபர் தமக்கு
அன்னவயல் சூழ்கோவல் அந்தகன் றனையடர்த்த
மன்னவற்குப் பெரியநா யகிமனோ கரருக்குச்
செயமங்களம் நித்ய சுபமங்களம். (5)

# 348. சிவஞான சித்தியார் சுபக்கம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 210-1
ஆ. ரு / 13

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அருள்நந்தியார்
ஆ. சிவஞான சித்தியார் சுபக்கம்

இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. செய்யுள் 327

## 3. தோற்றக் கூறுகள்

அ. 34 ஏடு ; 68 பக்கம்.
ஆ. நீளம் 20.5 செ. மீ.; அகலம் 4 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 12, 13 வரி.
உ. சிறிய அழகிய எழுத்து.
ஊ. சிற்சில ஏடுகள் பழுது. எனினும் பொதுவாக நல்ல நிலை.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஒருகோட்டன் இருசெவியன் மும்மதத்தன்
நால்வாய்ஐங் கரத்தன் ஆறு
தருகோட்டம் பிறைஇதழித் தாழ்சடையன்
தரும்ஒருவா ரணத்தின் தாள்கள்
உருகோட்டன் பொடும்வணங்கி ஓவாதே
இரவுபகல் உணர்வோர் சிந்தைத்
திருகோட்டும் அயன்திருமால் செல்வமும்ஒன்-
றோஎன்னச் செய்யும் தேவே. (1)

ஆ. முடிவு

பரம்பிரமம் இவன்என்றும் பரசிவன்தான் என்றும்
பரஞானம் இவன்என்றும் பராபரன்தான் என்றும்
அரன்தரும்சீர் நிலைஎல்லாம் இவனே என்றும்
அருட்குருவை வழிபடவே அவன்இவன்தா னாயே
இரங்கியவா ரணம்ஆமை மீன்அண்டம் சினையை
இயல்பினொடும் பரிசித்தும் நினைந்தும் பார்த்தும்
பரிந்திவைதான் ஆக்குமாபோல் சிவமே யாக்கும்
பரிசித்தும் சிந்தித்தும் பார்த்தும் தானே. (7)

பனிரெண்டாம் சூத்திரம் முற்றும். ஆகத்திருவிருத்தம் 327. சிவஞான சித்தியார் முடிந்தது. முற்றும்.

## 549. சிவப்பிரகாசம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 210-2
ஆ. ரு/13

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. உமாபதி சிவாசாரியர்
ஆ. சிவப்பிரகாசம்
இ. மெய்கண்ட நூல்
ஈ. செய்யுள் 100

3. தோற்றக் கூறுகள்

அ. 21 ஏடு; 42 பக்கம்.
ஆ. நீளம் 20.5 செ. மீ.; அகலம் 4 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 12,13 வரி.
உ. தெளிவான எழுத்து.
ஊ. ஏடுகள் பொதுவாக நல்ல நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு

தொடர் எண் : 57 காண்க.

## 550. திருமுறைப் பதிகங்கள்

1. நூலகக் குறிப்புகள்

அ. 211
ஆ. ண/18

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ................

ஆ. பன்னிரு திருமுறைப் பதிகங்களிற் சில

இ. சைவத்திருமுறை

ஈ. செய்யுள் ; அச்சில் சுமார் 40 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 38 ஏடு ; 76 பக்கம்.

ஆ. நீளம் 22 செ. மீ.; அகலம் 3.5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்குப் பலவித வரி.

உ. தெளிவான கையெழுத்து.
1-38,43,44,59-61,63,69-73,77,80,85-88,94-96 ஆகிய ஏடுகளும் 98க்குமேல் இருக்க வேண்டியனவும் இல்லை.

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

மடித்தாடும் மடிமைக்க ணன்றியே
　　மனனேநீ வாழு நாளுந்
தடுத்தாட்டித் தருமனார் தமர்செக்கி
　　லிடும்போது தடுத்தாட் கொள்வான்
கடுத்தாடுங் கரதலத்திற் றமருகமும்
　　எரியகலுங் கரிய பாம்பும்
பிடித்தாடி புலியூர்ச்சிற் றம்பலத்தெம்
　　பெருமானைப் பெற்றா மன்றே.

ஆ. முடிவு

மறைகளு மமரர் கூட்டமு மாட்டாது
　　அயன்திரு மாலொடு மயங்கி
முறைமுறை முறையிட் டோர்ப்பரி யாயைத்
　　தொண்டனேன் மொழிந்தபுன் மொழிகள்

அறைகழ லரன்சீ ரறிவிலா வெறுமைச்
 சிறுமையிற் பொறுக்குமம் பலத்து
நிறைதரு கருணா நிலையமே யுன்னைத்
 தொண்டனே னினையுமா னினையே (11)

5. பிற செய்திகள்

இச்சுவடியில் 7, 8, 9 ஆம் திருமுறைப்பதிகங்கள் சில இடம் பெற்றுள்ளன.

## 351. மருந்துவ நூல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 212
ஆ. ல / 58

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ...........
ஆ. பெயர் தெரியாத ஒரு மருத்துவ நூல்
இ. மருத்துவம்
ஈ. உரைநடை ; அச்சில் சுமார் 150 பக்கம் வரும்

3. தோற்றக் கூறுகள்

அ. 87 ஏடு; 174பக்கம்.
ஆ. நீளம் 27. 5 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்குப் பலவித வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. ஏடுகள் சிதிலமாக உள்ளன. முதல் ஏடு முறிந்துள்ளது.
எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

முதலாவது தேகலட்சண அத்தியாயத்தின் விவரம் — ஜோதிஷ விஷயத்தில் 5ஆம் நெம்பர் ஜாதகம் வரையிலும் வேலை செய்து 5 வகை சாதகத்தில் வியாதியஸ்தன் இன்ன ஜாதகன் என்று தெரிந்துகொள்ள வேண்டியது.

ஆ. முடிவு

மறைப்புமை : கருப்புப் பூனை பிச்சைச் சட்டியில் வறுத்துக் கரியாக்கிச் சீமைக் காட்டாமணக்கு எண்ணெயில் அறைத்துப் போட்டுக்கொண்ட ஒருவன் தவிர மற்ற உலகத்தாருக்குச் சங்கதியின்னதென்று தெரியாது. ஜாதகன் உபதேசம் பெற்றுக் கொண்டவன் சுக்கிலத்தால் சீந்திக் கொடி வேரைக் கருக வைத்து அரைத்துப் பசு நெய்யில் மத்தித்து நோக்கப் பிராண ஹிம்சை செய்தவன் இன்னோன் என்று காட்டும்.

## 5. பிறசெய்திகள்

இச்சுவடியில் பெரும்பாலும் மருத்துவச் செய்திகளும் சிறுபான்மை சோதிடம், மாந்திரீகம் பற்றிய குறிப்புகளும் இடம் பெற்றுள்ளன.

# 552. வீராகமம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 213
ஆ. ட/10

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ....................
ஆ. வீராகமம்
இ. தத்துவம்
ஈ. செய்யுள் ; அச்சில் சுமார் 40 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 22 ஏடு; 44 பக்கம்.
ஆ. நீளம் 28 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 6 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. ஏடுகள் முறிந்துள்ளன. 13 ஏடுகள் முக்காற்பகுதியும் 9 ஏடுகள் பாதியுமாக உள்ளன.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சோதிகுரு பரன்சரணந் தொழுதுசிர மிசையிருத்தி
நீதிதருங் குருலிங்க சங்கம ............ னிலமை யெல்லாம்
நாதனுமைக் குரைத்ததனை நயந்துலகெண் ணல்லமய்ய
ரோதியநற் கருநடத்தின் பயன்தமிழால் உரைத்திடுவாம். (1)

ஆ. முடிவு

ராறு மொளிரு நன்கலையதாகும் ஒகாரமுன்.........
தமற் கலைய தாகப் பகரு மாகமங் கடானே............
யென்றேத் தருமறைக ணான்கு முரைத்திடு மது.........
வினாலே பத்தினிலிய சோகம் பாவிக்கப் படுவதா... ........

5. ....... ........ .. ....

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

17: 186; 27: 588டி; 32: 16, 93சி, 110ஏ, 191டி.

## 353. செழியதரையன் நன்னெறி

1. நூலகக் குறிப்புகள்

அ. 214
ஆ. ள/2

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..........

ஆ. செழியதரையன் நன்னெறி

இ. நீதிநூல்

ஈ. செய்யுள் 42

3. தோற்றக் கூறுகள்

அ. 5 ஏடு; 10 பக்கம்.

ஆ. நீளம் 28.5 செ.மீ.; அகலம் 3 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 10, 11 வரி.

உ. சுமாரான எழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு

தொடர் எண் :196 காண்க.

5. பிற செய்திகள்

நூலின் இறுதியில் கீழ்க்கண்ட இரு தனிப்பாடல்கள் உள்ளன.

சாலப் பழுத்த மரம்பார்த் தெறிவர்தண் ணீர்சுரக்க
ஞாலத் தகழ்வர் கறக்கின்ற வாவைநற் காலணைவர்
நீலக் கடலுக்குட் பாலாழி மத்திட்டு நிற்பர்கண்டாய்
சேலத்து வேந்துக் குணந்தாகந் தீர்த்த செழியனுமே. (1)

பொன்னஞ் சடையறுகம் புல்லுக்குந் தீம்புனற்குந்
தன்னெஞ் சுவகைபெறத் தாவுதே — அன்னங்கள்
செக்கமலத் தய்த்தல்தான் தில்லை நடராயன்
கைக்கமலத் துய்த்தமான் கண்டு. (2)

6. ..................

7. வெளியீட்டுச் செய்திகள்

தமிழ்ப் பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ளது.

## 354. அபிடேகமாலை

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 215
ஆ. த/6

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. சிவப்பிரகாசர் - துறைமங்கலம்
ஆ. அபிடேகமாலை : மூலமும் உரையும்
இ. தோத்திரம்
ஈ. செய்யுளும் உரைநடையும் ; அச்சில் ஏறத்தாழ 40 பக்கம் வரும்.

### 3. தோற்றக் கூறுகள்

அ. 29 ஏடு ; 58 பக்கம்.
ஆ. நீளம் 33 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 6 வரி.
உ. சுமாரான எழுத்து.
எ. குறை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

வேதா கமங்கள் புராணமிதி காசா திகளால் விரித்துரைத்த
மாதா பிதாவை யரியவபி டேக மாலை வகுத்துரைசெய்
தாதா வாகுஞ் சிவப்பிரகா சனையென் னிதயந் தனிலிருத்திக்
காதாற் கேட்ட படிகழறக் கரியா னனத்தான் கழல்பணிவாம். (1)

ஆ. முடிவு

7ஆம் செய்யுள் அவதாரிகை :-

முன்புரைத்த சப்த தீட்சையுந் தேகத்துக்கான பின்பு இத் திருவிருத்தத்தில் பிராண லிங்க தீட்சை ஏழும் சொல்லத் தொடங்கல்.

பதப்பொருள் : போய.... ... ...முழ் கச.... சாதி பேதத்தையுங் கெடுத்துச் சங்கம குலமாக்கி வைக்குஞ் ச ..... .. தீட்சை ... ....... விட்டமலனா .......... விட்டமலனா .......... காளரி... நி ..........

இ. பிற்குறிப்பு

இஃது 6-11-1901 துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய அபிடேக மாலை மூலமும் அதற்கு ஆனையாபுரியில் வீற்றிருந்த அப்பாவுசுவாமிகள் என்று வழங்கிய வேலாயுதசுவாமிகள் செய்த உரையும் இதில் வரையலா யிற்று. வரைந்தது : மன்னார் பாளையம் உரையாசிரியர் தங்கை புத்திரனும் பிரதம மாணாக்கனும் ஆகிய ஏ. எஸ். சோம சுந்திரம். தனக்கும் மற்றவர்களுக்கும் இதன் பிரயோசனத்தைத் தெரிந்து கிருதார்த்தனாக மிகுந்த அவாவுடன் வரையலாயிற்று. பிரபவ வருஷம் துலா ரவி மாதம் 22 ஆம் தேதி குரு வாரத்தில் துவக்கஞ் செய்தது. நூலாசிரியர் உரையாசிரியர் திவ்விய திரு வடிகள் சரணம்.

5. ...............

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

16 : 333 ; 25 : 1547 ; 28 : 46007 ; 60 : 27 இ.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 555. பெரியநாயகி அம்மன் பிள்ளைத் தமிழ்ப் பாடல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 216-1
ஆ. த/7

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ............

ஆ. பெரியநாயகி அம்மன் பிள்ளைத் தமிழ்ப் பாடல்

இ. பல்வகை நூல்கள்

ஈ. செய்யுள் 1

## 3. தோற்றக் கூறுகள்

அ. 1 ஏடு; 2 பக்கம்.

ஆ. நீளம் 38 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 4 வரி.

உ. தெளிவான கையெழுத்து.

ஊ. ஏடு சிதிலமாயுள்ளது.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கமும் முடிவும்.

சிரசி லாசில்மணி சேர்க ரும்பணியின்
மீதி லேநடன மிடுவர்சீ
தேவி மார்பிடைவி ளங்கி டத்திகிரி
யாதி செங்கைகள்செ றிந்திடப்
பரசி மாதவர்ப ணிந்து நின்றுமறை
பாட மாதர்நட மாடவே
பன்ன கத்தினிடை துன்னு மாலிருப
தாம்பு யத்தினைவ ணங்குவாம்;
சரசி பூரணிச காய காரணிச
ராச ரத்தலைவி சாம்பவி
சந்த தந்தருணி யிந்து சேகரிச
வுந்த ரிஹரிச கோதரி
அரசி யந்தரிநி ரந்த ரியமலை
யாதி நீதிபர மேஸ்வரி
அரிய பரதுரிய உருவ பெரியமையை
யருளொ டுந்தினம ளிக்கவே.

5. பிற செய்திகள்

இது பெரியநாயகியம்மன் பிள்ளைத்தமிழின் காப்புப் பருவத்தைச் சேர்ந்த திருமால் காப்புப் பாடல் போலும்.

## 556. சித்தநாத சுவாமி பதிகம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 216-2
ஆ. த/7

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..........
ஆ. சித்தநாத சுவாமி பதிகம்
இ. சிற்றிலக்கியம்
ஈ. செய்யுள் 10

3. தோற்றக் கூறுகள்

அ. 5 ஏடு; 10 பக்கம்.
ஆ. நீளம் 38 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 4 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. ஏடுகள் சிதிலமாக உள்ளன.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

**சித்தர்கட் கரசே செங்கம லத்தின்**
**றிகழ்கரு ணாகரத் தேனே**
**தேவர்கந் திருவர் முனிவர்சா ரணர்கள்**
**ஜெயஜெயன் றநுதினம் போற்றப்**

பத்தியாற் பணியு மடியவர்க் கமுதே
பரஞ்சுடர் ஞானசூ ரியனே
பைம்பொன்மா மலையே முதன்மலை யனைத்தும்
பரிவுட னுதவியே விஜய
நித்திய னான ........... ..........
நிஷ்கள நிரஞ்சன நிமல
நிர்மல வமல சொரூபவா னந்த
நிறைபரம் பிரமமாய் நினைக்கும்
சித்தம தொளிருஞ் சோதியே கடல்போற்
றிறையெறி சுவேதமா நதிசூழ்
திசைபுகழ் குகையூர் இசைபெற மருவுஞ்
சித்தநா தாந்ததே சிகனே.

ஆ. முடிவு

ஆரண முடிவில் நடமிடுஞ் சுடரே
யருட்கனி யேயரு ளமுதே
அகிலமும் பிலமும் வானமும் உலாவ
வருந்தவச் சோதியே யணிசேர்
காரணக் குருவே நின்றெரி சனங்கண்
கண்டிட வந்துநின் வாக்கால்
கருணைகூர்ந் ததனா லடியனேன் வந்து
கடிமணஞ் செய்யுநாட் குறித்தே
ஊரிணங் கிடுநா ளிடர்கள்வந் திடுத
லோய்விலை யுனதரு ளதனால்
உண்மையா யின்று தொட்டுநன் மணஞ்செய்
துன்பத தரிசனங் காணச்
சேரும்நாள் வரையில் இடர்கள்வா ராமல்
திருவுளஞ் செய்;திவா நதிசூழ்
திசைபுகழ் குகையூர் இசைபெற மருவுஞ்
சித்தநா தாந்ததே சிகனே. (10)

## 357. பிரபுலிங்கலீலை

1. நூலகக் குறிப்புகள்

அ. 217
ஆ. ந / 25

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. சிவப்பிரகாசர் - துறைமங்கலம்
ஆ. பிரபுலிங்க லீலை
இ. காப்பியம்
ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 79 ஏடு; 158 பக்கம்.
ஆ. நீளம் 42 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. சுவடியின் மேல்பகுதி சிதைவு. முதல் ஏடு இல்லை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு

தொடர் எண் : 180 காண்க.

## 558. தாகந்தீர்த்த செழியன் மஞ்சரி

1. நூலகக் குறிப்புகள்

அ. 218
ஆ. ய/9

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. .....................
ஆ. தாகந்தீர்த்த செழியன் மஞ்சரி
இ. சிற்றிலக்கியம்
ஈ. செய்யுள்

## 3. தோற்றக் கூறுகள்

அ. 17 ஏடு; 34 பக்கம்.
ஆ. நீளம் 41 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒருபக்கத்திற்கு 7 வரி.
உ. தெளிவான எழுத்து.
ஊ. ஏடுகள் வலது மேல்புறம் சிதைந்துள்ளன.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தேமாலை யந்தாலந் தீர்த்தசெழி யன்மீதில்
மாமரலை யேபுகழும் மஞ்சரிக்குப் - பூமா
தளித்தானைத் தானைமுக னாதரித்த வானைக்
களித்தானை யானைமுகன் காப்பு.

ஆ. முடிவு

உளத்தை யுருக்கு முபரி முபரி
திளைத்த சுரதவிதஞ் செய்தார்—வளைத்தொருபே
ரானந்த மெய்தினார் அந்தக் கரணம்அமைந்
தானந்த ராய்ச்சிறப்பு மாகினார்—மேனைந்து
மிவ்வகைசெய் தன்பினா லிவ்வுலகை யாண்டுபல
செல்வமொடு வாழ்ந்தார் திகழ்ந்து.

இ. முற்குறிப்பு

செழிக்க விசயகுங்கும தாகந்தீர்த்த செழியக் கங்காதரநயினார் பேரில் பத்திய காவியம்.

பிற்குறிப்பு

இந்த நேர்மையாகிய மஞ்சரி உலகுபுகழ் சேலத் துயர் செழியன்அந்தாலத்திலகனவன்பேரிற் செய்த உலாப் பலகலையும் வல்ல கவிராயன் வகுத்த பழமொழியைப் பிரமோதூத வருஷம் புரட்டாசி மாதம் 11 ஆம் தேதி மங்கள வாரம் நல்லருணாசலம் எழுதினான். நாராயண குருவேநம : இந்த மஞ்சரிப் பிரபந்தம்

வியவருஷம் மாசி மாதம் 25 ஆம் தேதி புத வாரம் தசமி திதி திருவாதிரை நட்சத்திரம் கூடின சுபதினத்தில் எழுதினது. இந்தப் பொஸ்தகம் எழுதினவன் கனகசபைக் கவிஞன்.

5 ...................

6. ......................

7. வெளியீட்டுச் செய்திகள்

தமிழ்ப் பல்கலைக்கழகம் வெளியிட்டுள்ளது.

## 559. தாகந்தீர்த்த செழியன் பிள்ளைத்தமிழ்

1. நூலகக் குறிப்புகள்

அ. 219
ஆ. ய/10

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ....... ........
ஆ. தாகந்தீர்த்த செழியன் பிள்ளைத்தமிழ்
இ. சிற்றிலக்கியம்
ஈ. செய்யுள் 101

3. தோற்றக் கூறுகள்

அ. 12 ஏடு; 24 பக்கம்.
ஆ. நீளம் 41 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. ஏடுகளின் வலது மேல் முனைகள் சிதைந்துள்ளன.
எ. குறை.

## 4. சிறப்புச் செய்திகள்

### அ. தொடக்கம்

பெருவரைத் திண்சிலைத் தலைவர்வே ணிப்பிறைப்
 பிறையில் நின்று அசைபசுங் கொன்றையில்
பெருநலச் சிறுநுதற் சுட்டியைத் தமியம்பி-
 ணித்தசைப் பவும்மிசைக் குடுமிவாய்ப்
பருவரைக் குளவியைப் புயலுடுக் குலமெனப்
 பத்தகந் திப்படச் சூடவும்
பனிமதித் தரளஞ்சொ ரிந்தெனத் திருமுகப்
 பங்கயக் குறுவேர்வு நீவவும்
உருவரைக் கொண்டதிரு மார்பகப் புலிநகத்
 தொழுதஇதழ்ப் புனலைத்து டைப்பவு
மூலகெலாம் விற்குமா ணிக்கம்க ழீஇஎன
 உடல்கழீஇ ஆர்அமு தருத்தவும்
திருவரைக் கிண்கிணிஞெ கிழ்ந்தவரை ஞாணோடு
 சிலம்பொடுதி ருத்தவும் வருகவே
தென்பாலை சேலம்பு ரந்ததா கந்தீர்த்த
 செழியர்வழி நாயகன் வருகவே. (1)

### ஆ. முடிவு

தொடர் எண் : 197 காண்க.

### இ. முற்குறிப்பு

வாத்தியார் அண்ணாமலைத்தம்பிரான் எழுதின சேலத்தார் பிள்ளைத்தமிழ்ப் பழமொழியை வியவருஷம் பங்குனி மாதம் 12 ஆம் தேதி ஏகாதசி சுக்கிர வாரம் சிரவண நட்சத்திரம் கூடின சுப தினத்தில் சேலம் செழியன் பேரில் பிள்ளைத்தமிழ்ப் பிரபந்தம் அருணாசலக் கவிஞன் மகன் கனகசபை எழுதினான்.

## 5, பிறசெய்திகள்

சுவடியில் ஏட்டெண் 1 எனத் தொடங்குகிறது. ஆனால் நூல் வருகைப் பருவத்தில்தான் ஆரம்பிக்கிறது. சுவடி இறுதியில் ஆக விருத்தம் 101 என உள்ளது. எனவே இச்சுவடியை எழுதிய திரு. கனகசபை அவர்களுக்கு முன்னைந்து பருவங்கள் கிடைக்காததால் கிடைத்த அளவு பிரதி செய்திருக்கலாம்.

## 360. திருவாணி வாது

1. நூலகக் குறிப்புகள்

அ. 220
ஆ. ய/11

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ........................
ஆ. திருவாணி வாது
இ. சிற்றிலக்கியம்
ஈ. செய்யுள் 95

3. தோற்றக் கூறுகள்

அ. 11 ஏடு; 22 பக்கம்.
ஆ. நீளம் 40.5 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.
உ. தெளிவான எழுத்து.
ஊ. முதல் 5 ஏடுகள் முழுமை. மற்றவை யாவும் வலப்புறம் சிதைந்துள்ளன. 11ஆம் ஏட்டிற்குமேல் ஏடுகள் இல்லை.
எ. குறை (2 – 6 பாடல்கள் எழுதப்பெறவில்லை)

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு

தொடர் எண் : 198 காண்க.

## 361. செழியதரையன் நன்னெறி

1. நூலகக் குறிப்புகள்

அ. 221
ஆ. ள / 3

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ...............
ஆ. திருவேங்கட செழியன் நன்னெறி
இ. நீதி நூல்
ஈ. செய்யுள் 43

3. தோற்றக் கூறுகள்

அ. 9 ஏடு; 18 பக்கம்.
ஆ. நீளம் 37 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 6 வரி.
உ. தெளிவான எழுத்து.
ஊ. அனைத்து ஏடுகளும் வலப்புறம் முறிந்துள்ளன.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு

தொடர் எண் : 196-1 காண்க.

## 372. திருப்புகழ்

1. நூலகக் குறிப்புகள்

அ. 222
ஆ. த/8

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அருணகிரிநாதர்
ஆ. திருப்புகழ்
இ. தோத்திரம்
ஈ. செய்யுள் 82

## 3. தோற்றக் கூறுகள்

அ. 34 ஏடு; 68 பக்கம்.

ஆ. நீளம் 44 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 5 வரி.

உ. தெளிவான எழுத்து.

ஊ. 26, 27, 28 ஆம் ஏடுகள் உடைந்துள்ளன. 33, 34, 36 ஆக மூன்று ஏடுகள் இல்லை.

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கைத்தலம் நிறையவெ முப்பழ மொடுபொரி
அப்பமொ டவல்பயிர் கப்பிய கரிமுக னடிபேணி
கற்றிடு மடியவர் புத்தியி லுறைபவ
கற்பக மெனவினை கடிதேகும்
மத்தமு மதியமும் வைத்திடு மரன்மகன்
மற்பொரு திரள்புய மதயானை
மத்தள வயிறனை உத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு பணிவேனே
முத்தமி ழடைவினை மொய்த்திடு கிரிதனில்
முற்பட வெழுதிய முதல்வானீ
முப்புர மெரிசெய்த அச்சிவ னுறைதரு
மச்சது பொடிசெய்த அதிதீரா
அத்துய ரகலவெ சுப்பிர மணிபடு
அச்சர வணைதனி லிபமாக
அச்சிறு முருகனை அக்குற மகளுட
னக்கண மணமருளிய பெருமானே.

ஆ. முடிவு

இரத மான தேனூறல் இதய மான மாமாயை
எதிரி லாத பூணார முலைமாதே
யினிதுபோது மேகாச விடையி னாலு மாலால
விழியி னாலு மாலாகி யநுராகம்

விரத மாகி யேபாரி லிடைவி டாமல் நாடோறும்
மிருக மாகி சேரோதி குழல்மூழ்கி
விளைய போக மாமாயை கழலு மாறு நாயேனும்
விழல னாகி வீடாது னருள்தாராய்
அரக ராவெ னாமோடர் திருவெ ணீறி டாமோடர்
அடிகள் பூசி யாமோடர் கரையேறார்
மருவு நூல்க லா........ ... .............. ............
.......... ............ ............ .........

5. பிற செய்திகள்

பிழை மலிந்த சுவடி.

## 375. திருத்தொண்டரடிமைத்திறம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 223 - 1
ஆ. த/9

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ....................
ஆ. திருத்தொண்டரடிமைத்திறம்
இ. தோத்திரம்
ஈ. செய்யுள் 67

3. தோற்றக் கூறுகள்

அ. 35 ஏடு; 70 பக்கம்.
ஆ. நீளம் 28 செ. மீ.; அகலம் 3 செ. மீ,
இ. இருபக்கமும் எழுதப் பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 7, 8 வரி.
உ. எழுத்து நிலை தெளிவாக உள்ளது.
ஊ. பின்னால் பல ஏடுகள் முறிவு ; இருப்பினும் பொதுவாக நன்றாயுள்ளது.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

### அ. தொடக்கம்

தக்கோர்பு கழ்ந்தகயி லாசற்கு வெண்ணீறு
    தாரணியு மாலாலசுந்
  தரநாம முற்றுமைச் சேடியர்க டாமிருவர்
    தம்மிடைக் காதல் வைக்கும்
அக்கார ணத்தினாற் றிருமுனைப் பாடிநாடு
    அதில்நாவ லூர்ச்சடையனார்
  அவரிடத் தில்நம்பி யாரூர ரென்னவந்து
    அளவிலந் நாட்டரசனார்
புக்கார்வ முடன்நண்பி சைந்தினிது போற்றிடப்
    புகலருங் கலைநிறைந்த
  பூர்ணசந்த் ரோதயமெ னத்தோன்று நாள்மணப்
    புத்தூர்ச்ச டங்கவியனார்
மைக்கார்ம யிற்சாய லாளைவேட் டிடமேள
    வாத்தியமு ழங்கவயமேல்
  மாப்பிளைக் கோலமாய்க் கண்காட்சி பெறஅம்
    மணப்பந்தர் புக்கபொழுதே.

### ஆ. முடிவு

காதலுட னாலயம் பலபுகழ்ந் தாலவாய்
    காணவடி யாராற்பல
  கையிடத் திருவுளஞ் செயித்துத் துதித்தபின்
    கவினினிய வாரூர்புகுந்து
ஆதரவி னாற்சிறிது நாளிருந் தேகியன்
    பார்வமொடு காழிநாடர்
  அடியிணையி றைஞ்சித்தி ருப்பதிக மியாழிலிட்டு
    அவர்மணந் தன்னிலரனார்
பாதம்ப லித்திட்ட திருநீல கண்டயாழ்ப்
    பாணருக் கடிமையாரூர்ப்
  பரவைபா லெந்தையைத் தூதாக்கு பைந்தமிழ்ப்
    பாவலர்த மைப்பயந்த

வேதவாய்ச் சடையனார்க் கவர்தார மர்யறம்
விளக்குமிசை ஞானியார்க்கும்
மெய்யடிமை மற்றுமுள வடியார்த மக்கெலாம்
வீழ்ந்திறைஞ் சேத்தடிமையே. (67)

## 564. திருத்தொண்டர் அகவல்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 223-2
ஆ. த/9

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ....................
ஆ. திருத் தொண்டர் அகவல்.
இ. தோத்திரம்.
ஈ. செய்யுள் ; அச்சில் சுமார் 2 பக்கம் வரும்.

### 3. தோற்றக் கூறுகள்

அ. 1 ஏடு; 2 பக்கம்.
ஆ. நீளம் 28 செ. மீ.; அகலம் 3 செ. மீ,
இ. இருபக்கமும் எழுதப் பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 7, 8 வரி.
உ. தெளிவான எழுத்து.
ஊ. ஏடு முறிந்துள்ளது.
எ. குறை

### 4 சிறிப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தில்லை யந்தணர் நல்லவேட் கோவர்
புகார்நகர் வாழுங் காவணி கேசர்
இளசைக் குடியிற் றிளைவே ளாளர்
கோவ லூரில் மேவும லாடர்
செங்குன் றூரிற் றங்கும்வே ளாளர் (5)

ஆ. முடிவு

காழிப் பதியில் வாழிக் கவுணியர்
பெருமங் கலம்வாழ் தருவே ளாண்குலர்
சாத்த னூர்க்கோ மேய்த்த மூலர்
தொண்ட ராரூர் தண்டி யடிகள்
வேற்காட் டூரில் மூர்க்கவே ளாளர் (31)

## 365. வீடணன் அடைக்கலம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 224
ஆ. ந/26

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ................
ஆ. வீடணன் அடைக்கலம்
இ. காப்பியம்
ஈ. செய்யுள் 103

3. தோற்றக் கூறுகள்

அ. 51 ஏடு; 102 பக்கம்.
ஆ. இருபக்கமும் எழுதப் பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 4 வரி.
உ. எழுத்து நிலை தெளிவாக உள்ளது.
ஊ. 47, 51 ஆகிய இரு ஏடுகள் இல்லை. 48 ஆம் ஏட்டின் முதற்பக்கம் எழுதப் பெறவில்லை. பொதுவாக நல்ல நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

நன்மையுஞ் செல்வமும் நாளும் நல்குமே
தின்மையும் பாவமும் தேய்ந்து தீருமே
சென்மமும் மரணமுஞ் சென்று தீருமே
இம்மையில் ராமவென் றெழுத்தை யோதினால். (1)

ஆ. முடிவு

ஓங்கிய அரசர் எல்லாம் உன்னடி பணியப் பெற்றும்
நீங்கிய தேவ ரெல்லாம் நின்றிடும் நிலைமை கண்டீர்
தூங்கிய குரங்கு வந்து துய்யதோர் மகன்தன் ஆவி
வாங்கியே நிலாத மிட்ட வன்மைகண் டறியாய் மன்னா(103)

5. பிற செய்திகள்

ஏட்டின் தொடக்கத்தில், ''நாடிய பொருள் கைகூடும்'', என்னும் கம்பராமாயணத் தனியன் எழுதப் பட்டுள்ளது.

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1 : 843—845 ; 16 : ஆர் 2892, ஆர். 4329, ஆர். 5223, ஆர். 6708, ஆர். 6736; 18 : 5676, 5686, 5946பி, 6173சி, 6270, 8658, 8660, 10431பி, 11429ஏ, 11565, 3018ஏ; 25:403, 404, 1296, 1297; 27:123, 124.

## 566. சோதிட நூல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 225-1
ஆ. வ/11

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ....... .......
ஆ. பெயர் தெரியாத ஒரு சோதிட நூல்
இ. சோதிடம்
ஈ. செய்யுள் 22

## 3. தோற்றக் கூறுகள்

அ. 7 ஏடு; 14 பக்கம்.
ஆ. நீளம் 30 செ.மீ.; அகலம் 3 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்குப் பலவித வரி.
உ. தெளிவான எழுத்து.
ஊ. முதல் ஏடு இல்லை. பிற ஏடுகள் நன்றாக உள்ளன.
எ. குறை

## 4. சிறப்புச்செய்திகள்

அ. தொடக்கம்

மந்திரி ஏழில் நின்றால் மனையது முடிந்தி டாது
அந்தகன் ஏழில் நின்றால் அதுவும்மேல் வழக்க தாகும்
புந்தியும் ஏழில் நின்றால் புத்திரன் விசனங் காட்டும்
சந்திரன் ஏழில் நின்றால் தழைத்திடும் குடிதான் சொல்லு, (1)

ஆ. முடிவு

தேசுயர்ந்த சுக்கிரனும் உதயம் ஆகத்
திருந்தியதோர் ஏழிடத்திற் குருஇ ருக்க
மாசகன்ற பத்தினிலே சோமன் நிற்க
வளர்முகூர்த்தம் ஆலயமே மகிழ்ந்து செய்யில்
பேசுமொரு சகஷ்திரமென்றே பேச லாமா
யோளாறே சேதமில்லை மகிழு வாரே. (22)

(இப்பாடலின் வடிவம் செம்மையாக இல்லை.)

# 367. சோதிட நூல்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 225-2
ஆ. வ/11

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..............
ஆ. பெயர் தெரியாத ஒரு சோதிட நூல்
இ. சோதிடம்
ஈ. செய்யுள்

## 3. தோற்றக் கூறுகள்

அ. 34 ஏடு; 68 பக்கம். (8-41)
ஆ. நீளம் 30 செ.மீ.; அகலம் 3 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்குப் பலவித வரி.
உ. எழுத்து நிலை தெளிவாயுள்ளது.
ஊ. சுமாரான நிலை.
எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்.

கன்னி கும்பம் கடகம் மிதுனத்தில்
என்னும் மூன்றாம் இடத்தில் நிற்கினும்
நன்னு சுங்கன் நாடியே பார்த்திட
யென்னு யோக மிருப்பது தன்னுமே. (1)

(இப்பாடல் செம்மையாக இல்லை)

ஆ. முடிவு

இப்படி இராசி தானும் எண்ணிய பலம்அ றிந்து
மெய்ப்படிக் கிரகந் தன்னை வீடுகள் அறிந்து நின்றால்
மெய்ப்படி ஆட்சி உச்சம் மேஷங்கள் முதலாய்ப் பார்த்து
அப்படி மனைக்குப் பார்த்து அன்புடன் பலனே சொல்லே.

# 568. சோதிட நூல்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 225-3
ஆ. வ/11

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..................
ஆ. பெயர் தெரியாத ஒரு சோதிட நூல்
இ. சோதிடம்
ஈ. செய்யுள் 22

3. தோற்றக் கூறுகள்

அ. 11 ஏடு; 22 பக்கம். (42-51)
ஆ. நீளம் 30 செ.மீ.; அகலம் 3 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்குப் பலவித வரி.
உ. கிறுக்கலான கையெழுத்து,
ஊ. சுமாரான நிலை
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சொல்லவே ஆரு டந்தான் சுகமுடன் கேளு மன்னா
வல்லவர் போகர் சொன்ன வார்த்தையைக் கேளு மன்னா
நல்லதோர் எட்டு பத்து நாடியே சனியே நின்றால்
துள்ளியே ....... யந்தான் தோன்றியே பார்த்தா னாகில்

ஆ. முடிவு

நாசமாம் அவள்தான் ஆகும் உத்தம ஸ்த்திரியே யென்று
உலாவியே நிற்க வேண்டாம் தொட்டிடும் பேருக் குத்தான்
தோஷங்கள் வந்து சேரும் அவளைக்
கடடியே அணைத்த பேர்க்குக் கடுவிஷம் ஆகு மன்றே.

(இப்பாடல் வடிவம் சரியாக இல்லை.)

## 369. யாப்பருங்கலக் காரிகை

1. நூலகக் குறிப்புகள்

அ. 226
ஆ. ச/16

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அமிதசாகரர்
ஆ. யாப்பருங்கலக் காரிகை
இ. இலக்கணம்
ஈ. செய்யுளும் உரையும். அச்சில் ஏறத்தாழ 200 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 94 ஏடு; 188 பக்கம்.
ஆ. நீளம் 42 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 8 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ பல ஏடுகள் மேற்புறம் பழுது. ஈற்றில் சில ஏடுகள் காணப் படவில்லை. சுமாரான நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம். ஆ. முடிவு

தொடர் எண் : 27 காண்க.

## 370. பஞ்ச தந்திரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 227
ஆ. ந/27

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. வீரமார்த்தாண்ட தேவர்
ஆ. பஞ்சதந்திரம் (மூலமும் உரையும்)
இ. காப்பியம்
ஈ. செய்யுளும் உரையும். அச்சில் ஏறத்தாழ 200 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 92 ஏடு ; 184 பக்கம்.
ஆ. நீளம் 33 செ.மீ.; அகலம் 3 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 6 வரி.
உ. தெளிவான எழுத்து.
ஊ. 67,69,87,95 ஆகிய நான்கு ஏடுகள் இல்லை. சுமாரான நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கணபதி யென்றதோர் கலங்கும் வல்வினை
கணபதி யென்றதோர் காலனுங் கைதொழ
கணபதி யென்றதோர் கரும மாதலால்
கணபதி யென்றதோர் கரும மில்லையே. (1)

ஆ. முடிவு

தின்னிரை தானுங் கொண்டு தின்பவன் நீயுங் கூடி
யின்னில நட்பா யிருக்கு மாறென்ன ........... யென்ன
உன்னைநான் கொன்று தின்றால் ஒ(ர்)கணப் பசிதீ ராது
மன்னிநட் பாயி ருக்கில் வாழலா மநேகங் காலம்.

5. பிற செய்திகள்

இந்த ஏட்டிற்கும் அச்சில் உள்ள பஞ்ச தந்திரப் பதிப்பிற்கும் பாடல் எண், பாடம் இரண்டிலும் வேறுபாடுகள் மிகுந்து காணப் படுகின்றன.

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

8 : 77 ; 16 : 190,428, ஆர். 4255 ; 26 : 59 ; 27 : 107-109, 705ஏ ; 31 : 212 ; 60 : 412ஏ, 510 ; 62 : 3.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

# 371. இராமாயண வசனம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 228
ஆ. ம/4

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..............................
ஆ. இராமாயணவசனம்
இ. உரைநடை இலக்கியம்
ஈ. உரைநடை ; அச்சில் ஏறத்தாழ 200 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 184 ஏடு ; 368 பக்கம்.
ஆ. நீளம் 33 செ.மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 5,6 வரி.
உ. தெளிவான எழுத்து.
ஊ. 4,82 முதல் 91 ஆகிய ஏடுகள் இல்லை. பல ஏடுகள் மிகப் பழுதுற்ற சுவடி.
எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தேவரீர் சீர்பாதம் திக்கு நோக்கித் தெண்டம் பண்ணி அடியேன் விபீஷணன் தெண்டனிட்ட விண்ணப்பம் செய்யப் பிற தேவரீர் திருவுளப் பிரசாதம் உண்டானபடியினாலே கற்பித் தருளிய ஊழியஞ் செய்துகொண்டு போகாநின்றேன். தேவரீர் அனுக்கிரகத்தினாலே அடியேங்கள் ஐம்பது லட்ச வருஷம் இலங்காபுரிப் பட்டணம் ஆண்டோம்.

ஆ. முடிவு

இந்த விபீஷணப் பெருமாள் கதையைப் படித்தவர்களும் கேட்டவர்களும் பக்கத்திலிருந்து அஷ்ட ஐஸ்வர்யமும் பட்டா பிஷேகராயிருந்து வைகுண்ட பதவி பெறுவார்கள் என்றவாறு.

## 372. திம்மிநகர் சஞ்சீவராயர் பதிகம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 229 - 1
ஆ. த/10

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..........................
ஆ. திம்மிநகர் சஞ்சீவராயர் பதிகம்
இ. தோத்திரம்
ஈ. செய்யுள் 12

### 3. தோற்றக் கூறுகள்

அ. 11 ஏடு ; 22 பக்கம்.
ஆ. நீளம் 31 செ.மீ.; அகலம் 2.5 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 4 வரி.
உ. தெளிவான எழுத்து.
ஊ. சுவடிநிலை நன்றாகவுள்ளது.
எ. குறை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பாவாணர் போற்றும் படியளிசெய் திம்மிநகர்ப்
பூவாண்ட ராமர்தொண்ட பூபதியாம் — தேவாண்ட
சஞ்சீவி ராயதின்மேற் சாற்றும் பதிகத்தின்
செஞ்சொலருள் செய்வாய் தினம்.

ஆ. முடிவு

நினதுசன் னதியைவல மாய்வருவர் மிகவாழி
        நினையுச்ச ரிப்பர்வாழி
    நின்புகழி னைக்கூறி யாச்சரிய மடைவரொடு
        நீணிலத் தரசர்வாழி
சனகிகா தலர்வாழி மறையவர்கள் வாழிநற்
        றனவைசியர் மிகவும்வாழி
    சன்மார்க்க நெறியுற்ற சூத்திரர்கள் வாழியத்
        தலமதிலும் உறும்ரெட்டிமார்
மனைவியர்கள் பிள்ளைப வுத்திரர்க ளொடுவாழி
        வண்டமிழ்க் கவிஞர்வாழி
    வள்ளலுன் பதிகமிதை யுரையென்ற ராசப்ப
        வள்ளல்கும ரப்பமகிபர்
தனதனகர் திகர்திம்மி நகரிலுற் றோரொடு
        சதாகாலம் வாழிவாழி
    தரணிதனின் மிகமழைபொ ழிந்துமிக வாழியே
        சடாதரன் பதிகமணியே. (11)

## 373. திம்மிநகர் சஞ்சீவராயர் ஊஞ்சற் பதிகம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 229 - 2
ஆ. த/10

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..........................
ஆ. திம்மிநகர் சஞ்சீவராயர் ஊஞ்சற் பதிகம்
இ. தோத்திரம்
ஈ. செய்யுள் 10

3. தோற்றக் கூறுகள்

அ. 6 ஏடுகள் ; 12 பக்கம். (12 - 17)
ஆ. நீளம் 31 செ.மீ.; அகலம் 2.5 செ.மீ.
இ. முதல் ஏடு தவிர மற்ற ஏடுகளில் இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 4 வரி.
உ. தெளிவான எழுத்து.
ஊ. சுவடி பொதுவாக நல்ல நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அஞ்சனை புதல்வா போற்றி அருமறைப் பொருளே போற்றி
பஞ்செனை அலையும் நெஞ்சைப் பக்குவ முறச்செய் போற்றி
மஞ்சுசேர் மாட வெண்ணெய் வாழ்கவி ராசன் சேய்யான்
புன்சொலை மகிழ்வாய்க் கேட்டுப் புனிதகண் கடையீந் தாளே.

ஆ. முடிவு

அஞ்சனைகாற் றளிக்கப்புவி வந்து தொன்றி
அகிலமெலா மகிழ்ஞான வமுத முண்டு
கஞ்சநிகர் கரமதாற்சஞ் சீவி தாங்க்
கனகமணி சீராமற் களித்து விங்கி
எஞ்சலிலாப் பரதருயிர் அளித்துத் தேங்கும்
இருடியாச் சிரமத்திற் ........... ணோங்குஞ்
சஞ்சலந்தீர்த் தாள்திம்மி நகரின் மேவும்
சஞ்சீவி ராயரே யாடீர் ஊஞ்சல். (10)

## 374. நல்லாப்பிள்ளை பாரதம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 230
ஆ. த/28

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. நல்லாப்பிள்ளை

ஆ. நல்லாப்பிள்ளை பாரதம் : ஆதி பருவம்

இ. காப்பியம்

ஈ. செய்யுளும் உரைநடையும் ; அச்சில் ஏறத்தாழ 200 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 106 ஏடு; 212 பக்கம்.

ஆ. நீளம் 42.5 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 7 வரி.

உ. தெளிவான எழுத்து.

ஊ. பொதுவாக நல்ல நிலை.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ தொடக்கம்

நீடாழி யுலகத்து மறைநாலொ டைந்தென்று நிலைநிற்கவே
வாடாத தவவாய்மை முனிராசன் மாபார தஞ்சொன்னநாள்
ஏடாக வடமேரு வெற்பாக வங்கூரெ முத்தாணிதன்
கோடாக வெழுதும்பி ரானைப்ப ணிந்தன்பு கூர்வாமரோ.

(இப்பாடல் வில்லி பாரதத்தின் காப்புச் செய்யுள் ஆகும்.)

ஆ. முடிவு

உதங்க மகாரிஷி செனமேசெய மகாராசனைப் பார்த்து இந்தக் கதையைச் சொல்லினபடியினாலே ஒருவன் செய்த தீமை அவன் குலமுச்சூடும் நோகச் செய்து பழிசுற்று மென்று உதங்க மகாரிஷி சொன்னஉடனே செனமேசெய மகாராசனானவன்

பிராமணாளுக்கெல்லாம் ராசனாக இருக்கப்பட்ட மகாரிஷி யீசுபரனே ! தாயானவள் பிள்ளையின்பேரிலே விருப்பமில்லாமல் கோபம்வந்து சாபம் பண்ணின காரியம் என்ன ? அது எது காரணத்தினாலே ? அந்தக் கதையைச் சொல்ல வேணுமென்று செனமேசெய மகாராசன் கேட்க உதங்க மகாரிஷி அந்தக் கதையைச் சொல்லத் தொடங்கினாரென்றவாறு. (37)

பிருகுவம்சச் சருக்கம் முற்றும். ஆகச் சருக்கம் 6-க்கு விருத்தம் 246.

## 5. பிற செய்திகள்

இச்சுவடியில் பாயிரம் (24 பாடல்), ஆற்றுச் சருக்கம், நாட்டுச் சருக்கம், அரசியற்கைச் சருக்கம், உதங்கச் சருக்கம், பிருகுவங்கிசச் சருக்கம் என்பன இடம் பெற்றுள்ளன.

# 375. நல்லாப் பிள்ளை பாரதம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 231

ஆ. ந/29

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. நல்லாப்பிள்ளை

ஆ. நல்லாப்பிள்ளை பாரதம் : விராட பருவம்

இ. காப்பியம்

ஈ. செய்யுளும் உரையும் ; அச்சில் ஏறத்தாழ 50 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 22 ஏடு; 44 பக்கம்.

ஆ. நீளம் 40.5 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 6 வரி.

உ. தெளிவான எழுத்து.
ஊ. பொதுவாக நல்ல நிலை.
எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கருவிடை எய்தார் நரகினிற் பயிலார்
        காலனை நெஞ்சினும் மதியார்
வெருவிரு விழியென் மடந்தையர் காம
        வேட்கையாம் வேலையி னழுந்தார்
பொருமொரு திகிரி வலக்கரத் தணிந்த
        புண்ணிய னவின்றவர் பெருமான்
திருவிரு மார்பன் திருவடிக் கடிமை
        செயுமடி யவற்கடி யவரே.

ஆ. முடிவு

கொய்யு ளைப்பரிக் குரலுடன் வருணமுங் குரலு
மெய்யி னிற்பயில் கதிகளுஞ் சுழிகளின் விரிவு
மைய மற்றுணர்ந் திடுவன வைகட்குறும் பிணிகள்
செய்ய கோலினாய் சிறுவரைப் பொழுதினிற் றீர்ப்பன்.

## 5. பிற செய்திகள்

இச்சுவடியில் அஞ்ஞாத வாசச் சருக்கம் 46-ஆம் பாடல் முடிய உள்ளது.

# 376. வில்லி பாரதம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 232
ஆ. ந / 30

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. வில்லிபுத்தூரார்

ஆ. வில்லி பாரதம் : பதின்மூன்றாம் நாட் போர் ; மூலமும் உரையும்.

இ. காப்பியம்

ஈ. செய்யுளும் உரைநடையும் ; அச்சில் ஏறத்தாழ 220 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 96 ஏடு; 192 பக்கம்.

ஆ. நீளம் 42 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 6 வரி.

உ. தெளிவான எழுத்து.

ஊ. பொதுவாக நல்ல நிலை.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கங்கையி னால்வகை யமர்பட லாலுயிர்
தளர்பொழு தத்தருகே
மங்கையர் சூழவி ருந்தழு துள்ளம
யக்கினும் யான் மறவேன்
கங்கையும் நான்மறை யுந்துள வுங்கமழ்
கழலிணை யுந்திருமால்
அங்கையின் மீதொளிர் சங்கமும் நேமியும்
அஞ்சன மேனியுமே.

ஆ. முடிவு

அர்ச்சுனனும் தாம் [illegible] நிறைவேறிற்றென்று பரமேஸ்வரன் பாத[illegible] சாஷ்டாங்கமாகத் தண்டம்பண்ணி அனுபவித்துக்கொண்[illegible] [illegible]ஞ்சாயுதம் படைத்த ஸ்ரீ கிருஷ்ண தேவருடனே வெளி[illegible]றப்பட்டுக் கருடபகவான் தோளிலே ஸ்ரீ

கிருஷ்ணதேவரும் கையிலே அர்ச்சுனனையும் ஏந்திக் கொண்டு வெள்ளி முளைக்கும் சமயத்திலே வருகிறபோது கிழக்கே வெள்ளி முளைத்தது என்றவாறு. (221)

கயிலாச யாத்திரை முற்றும். இப்பால் கடோர்கசன் தூது.

இ. பிற்குறிப்பு

துன்மதி வருஷம் ஐப்பசி மாதம் 13ஆம் தேதி அகச்சக்ர பாண்டலத்தில் இருக்கும் ராமசாமி முதலி குமாரன் சீனிவாச முதலி பதின்மூன்றாம் போர் எழுதி முடிந்தது.

## 377 வில்லி பாரதம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 233
ஆ. ந / 31

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. வில்லிபுத்தூரார்
ஆ. வில்லி பாரதம் : 14ஆம் போர்ச்சருக்கம்
இ. காப்பியம்
ஈ. செய்யுளும் உரைநடையும் ; அச்சில் ஏறத்தாழ 150 பக்கம் வரும்.

### 3. தோற்றக் கூறுகள்

அ. 73 ஏடு; 146 பக்கம்.
ஆ. நீளம் 42 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 6 வரி.
உ. தெளிவான எழுத்து.
ஊ. 46 முதல் 76 முடிய உள்ள 27 ஏடுகள் இல்லை. பல ஏடுகள் சிதைந்துள்ளன.
எ. குறை

4. *சிறப்புச் செய்திகள்*

அ. தொடக்கம்

அரியதன் கலைவான் மதியமுங் கொதிகொள்
ஆலமுந் தனதிடத் தடக்கி
உரியவொண் கங்கா நதிக்கொரு பதியாய்
உரைபெறு முயர்மகோ ததியிற்
பரியதிண் சிலையோ டம்பெலா முகந்து
பற்குணப் பொருப்பிடைப் பொழியுங்
கரியபைம் புயலைக் கைதொழு மவரே
கருவிலே தி(ருவு)டை யவரே.

ஆ. முடிவு

அனைவரு மொருவர் போலுடைந் தவனி
யாளுடை யரசனோ டமரில்
துணைவருந் தடந்தேர் துரகதங் களிறு
முதலிய யாவையுந் தோற்று
நினைவரும் விறலோன் தனித்தனி நெருக்கி
நின்றுழித் துரக்கவே ஞான
........ கழற்கால் கொப்புள மரும்ப
........ பாசறை யடைந்தான்.

என்றது துரியோதனாதிகள் முனையிலொருவரைப் போலே
... .... ... ...... ....

## 378. வில்லிபாரதம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 234
ஆ. ந/32

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. வில்லிபுத்தூரார்.
ஆ. வில்லி பாரதம் : 17ஆம் போர்ச் சருக்கம் : மூலமும் உரையும்.
இ. காப்பியம்
ஈ. செய்யுளும் உரையும்; அச்சில் ஏறத்தாழ 250 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 143 ஏடு; 286 பக்கம்.
ஆ. நீளம் 41. 5 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப் பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 6, 7 வரி.
உ. தெளிவான எழுத்து.
ஊ. ஏடுகள் நல்ல நிலையில் உள்ளன.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஈரொரு பிறப்பி னோன்சிறு குறளா
 யாவருந் தேவரும் வியப்பக்
காரொரு வடிவு கொண்டெனச் சென்று
 காவல்கூர் மாபலி யளித்த
நீரொரு கரத்தில் வீழுமுன் தரங்க
 நீர்நிற மகரநீ டுற்ற
பாரொரு கணத்தில் அளவிடுங் கமல
 பாதனார் நாதனார் நமக்கே,

ஆ. முடிவு

அதன் பிறகு அழுதழுது மனோதுக்கனாய சோபத்தோடுங் கூடினவனாயிருக்கிற ராசாதி ராச சிகாமணியைத் துரியோதனனைப் பார்த்துச் சகுனிராசன் திரிகர்த்தராசன் சாலுவன் கிருபாசாரியன் கிருதவன்மா அசுவத்தாமா சல்லிய னென்றுஞ் சொல்லப்பட்ட ராச மண்டலீகர் முதலான பேரும் கூடித் துரியோதனனைத் துக்கமாற்றித் தங்கள் தங்கள் பாடி வீடே போய்ச் சேர்ந்தார்கள் என்றவாறு. (270)

இ. பிற்குறிப்பு

அக்ஷய வருஷம் பங்குனி மாதம் 23 ஆம் தேதி உத்திரட்டாதி நட்சத்திரம் கன்யா லக்னம் போய் துலா லக்னத்தில் அமாவாசை அந்தியில் குருவார நாள் சுக்ல பக்ஷம் கூடின சுபதினத்தில் வைத்தி முதலியார் குமாரன் பச்சை முதலி பதினேழாம்

போர். இந்தச் சுப தினத்தில் எழுதி நிறைவேறினது. பார்வ தாயி குமாரன் ராமசாமி முதலி, ராமசாமி முதலி குமாரன் சீனு வாச முதலி பார்ப்பது.

5. ……………

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

16: ஆர். 561; 25: 413, 417; 27: 56, 85, 852.

## 379. வில்லி பாரதம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 235
ஆ. ந/33

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. வில்லிபுத்தூரார்
ஆ. வில்லி பாரதம்: 18 ஆம் போர்ச் சருக்கம், மூலமும் உரையும்
இ. காப்பியம்
ஈ. செய்யுளும் உரையும்; அச்சில் ஏறத்தாழ 100 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 108 ஏடு; 216 பக்கம்.
ஆ. நீளம் 40.5 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப் பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 5, 6 வரி.
உ. தெளிவான எழுத்து.
ஊ. ஏடுகள் நல்ல நிலையில் உள்ளன.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

மீனாமை கேழல்நர மடங்க லாகிநிலம்
    விரகால ளந்தகுறளாய்
ஆனாது சீறுமழு வில்லுவெல்லு வல்முனைவெல்லு
    அலமுற்ற செங்கையவராய்
வானாடர் வந்துதொழு மண்ணாடர் யாவரையும்
    மடிவிக்க வந்தவடிவாய்
நானாவி தங்கள்புரி யாளாக நின்றருளும்
    நாராய ணாயநமவே.

ஆ. முடிவு

உன்னுடைய பாரமும் துவாபர யுகத்தில் தீர்க்கிறோம் என்று பூமி தேவதைக்குச் சொல்லி ஸ்ரீ கிருஷ்ணாவதார மெடுத்து அதன் பிறகு துரியோதனராசனையும் பஞ்ச பாண்டவர்களையும் உண்டாக்கி விரோத குரோதம் பண்ணுவித்து அதன் பிறகு பூமி பாரந் தீர்க்க வேணுமென்றெண்ணினபடியே பாரதம் முடிப்பித்த ஸ்ரீ கிருஷ்ண தேவர் பொழுது விடிந்தவாறே பஞ்ச பாண்டவர்களுடனே சொல்லி ராத்திரி நடந்த காரிய மெல்லாம் சொல்லுகிறோம் என்றவாறு. (242)

பதினெட்டாம் போர் முற்றும்.
ஆகச் சருக்கம் 19 க்குக் கூடின திருவிருத்தம் 1654.

## 380. வில்லிபாரதம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 236
ஆ. ந/34

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. வில்லிபுத்தூரார்
ஆ. வில்லி பாரதம் : தருமர் பட்டாபிஷேகம் : மூலமும் உரையும்
இ. காப்பியம்
ஈ. செய்யுள்

## 3. தோற்றக் கூறுகள்

அ. 31 ஏடு; 62 பக்கம்.
ஆ. நீளம் 40.5 செ.மீ.; அகலம் 3 செ மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 5,6 வரி.
உ. தெளிவான எழுத்து.
ஊ. ஏடு நல்ல நிலையிலுள்ளது.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பனியெனும் பவக்கடலைப் பரிசறுக்கும்
இரவியருள் பான்மை போன்றாங்
கினியவே தருமதனு ளறிவுமதற்
கினிதுயிரு மிசையு மாகித்
தனிமாய சராசரமுந் தானாகிச்
சிருஷ்டிதிதி சங்கா ரத்தில்
முனியவனா வமலனிரு முண்டகத்தாள்
தினந்தினமும் மொழிதல் செய்வாம்.

ஆ. முடிவு

பாரத யுத்த மெல்லாம் பாங்குட னடியி லுற்றுப்
பாரதம் பார தம்மாய்ப் பலகணி யாகக் கேட்டோர்
பாரதம் பரவி நீங்கிப் பரமசற் குருவின் பாதம்
பாரதம் பூசை செய்து பாலன்மார்க் கண்ட னாவார். (11)

ஆக யுத்த காண்டம் பதினெட்டும் அணிவகுப்பு ஒன்றும் பட்டாபிஷேகம் ஒன்றும் முயற்சிப்பாடல் ஒன்றும் ஆகச் சருக்கம் 21க்குக் கூடின திருவிருத்தமும் உரையும் கூடினது 3419. பாரதம் முற்றும்.

இ. பிற்குறிப்பு

அக்ஷய வருஷம் சித்திரை மாதம் 15 ஆம் தேதி குருவாரம் உத்திர நட்சத்திரமும் கூடின சுபதினத்தில் அக்கிரகாரத்தில்

இருக்கும் ராமசாமிமுதலியார் குமாரன் சீனிவாசமுதலியாருக்குப் பாரதம் எழுதி நிறைவேறினது. இந்தக் கதையை ஆதி யோடந்தமாய் எழுத்தற வாசித்துக்கொண்டு சுகமாயிருக்க வேண்டியது.

## 381. வில்லிபாரதம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 237
ஆ. ந/35.

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. வில்லிபுத்தூரார்
ஆ. வில்லி பாரதம் : முதல் பதினான்கு நாட்போர்ச் சருக்கங்கள்-மூலமும் உரையும்.
இ. காப்பியம்
ஈ. செய்யுளும் உரைநடையும்; அச்சில் ஏறத்தாழ 800 பக்கங்கள் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 345 ஏடு ; 690 பக்கம்.
ஆ. நீளம் 40. 5 செ.மீ.; அகலம் 3.5 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 7 வரி,
உ. சுமாரான எழுத்து.
ஊ. பல ஏடுகள் பழுதடைந்துள்ளன.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

படர்ந்த கானகந் திரிந்துமீண் டன்புடன் பணிந்தபஞ் சவர்க்காகக்
கடந்த ஞானியர் கடவுளர் காண்கிலாக் கழலிணை சிவப்பேறத்
தொடர்ந்த நான்மறை .......... பன்னகத் துவசமா நகர்தூது
நடந்த நாயகன் கருமுகில் வண்ணமென் நயனம்விட் டகலாதே

ஆ. முடிவு

அவ்வமையம் முன் சக்கரத்தினுள்ளே மறைப்புண்ட ஆயிரம் சோதி உள்ள சூரியன் ஆயிரம் கிரணமும் பத்து நூறாயிரங் கிரணமாய் இன்றைக்கு நன்றாய் விடிந்ததென்றும் நல்ல நாளென்றும் சொல்லப் பாதாள லோகத்தை விட்டு வலமாக வந்து எங்கே எங்கே என்று தேடி வருகிறவனைப் போலே உதய கிரியிலே உதய பருவதத்திலே கன்ம சாக்ஷியான சூரிய நாராயண மூர்த்தி உதயஞ் செய்தார். அவ்வளவில் அப்பொழுதும் விடிந்து சூரியன் உதயமானான் என்றவாறு. (221)

இ. பிற்குறிப்பு

பதினாலாம் நாள் போர்ச் சருக்கம் முற்றும். ஸ்ரீ கிருஷ்ண நாராயண சுவாமி துணையாக வேணும். ஆகப் போர்ச் சருக்கம் 14க்குத் திருவிருத்தம் 1613,

ஏவிளம்பி வருஷம் ஐப்பசி மாதம் 30ஆம் தேதி சோம வாரமும் பிரதமையும் அசுபதி நட்சத்திரமும் கூடின சுபதினத்திலே வங்காரு மகனுக்கு குமரசாமி பிள்ளை குமாரன் வெங்கடாசலம் எழுதி நிறைவேறினது. முற்றும்.

5. பிற செய்திகள்

இச்சுவடியில் இடையிடையே வேறொருவரால் எழுதப்பட்ட ஏடுகள் விரவியுள்ளன. ஒருக்கால் மூல ஏடுகள் சிதைவுற்றதால் இவை பிறகு எழுதப்பெற்றனவாக இருக்கலாம்.

## 382. பாகவதம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 238
ஆ. ந/36.

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. செவ்வைச்சூடுவார்
ஆ. பாகவதம் : பாரதவீரர் உற்பவச்சருக்கம் : மூலமும் உரையும்
இ. காப்பியம்
ஈ. செய்யுளும் உரைநடையும்; அச்சில் சுமார் 250 பக்கம்வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 86 ஏடு; 172 பக்கம். (பக் 164 முதல் 251 வரை)
ஆ. நீளம் 42.5 செ.மீ.; அகலம் 3 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 7 வரி.
உ. கையெழுத்து நன்றாக உள்ளது.
ஊ. பொதுவாக நல்ல நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

........ .......... ........... லென்றுயில்
போதர வுணர்ந்தியான் புனல ளித்தலா
லாதப னேற்குமோ வறிவு சிந்தினாய்
மீதுரைப் படிவனம் விரைந்து செல்வன்யான்.

ஆ. முடிவு

சித்திரவன்மனென்று பெயராக வந்து பிறந்தான். மற்ற னெனப்பட்ட ராட்சதன் கிருதனெனப்பட்ட ராட்சதன் ஒன்றுஞ் சமானமில்லாத பூரண சந்திரமுகம் படைத்த பூரிசிரவசு வென்னும் பெயருடனே வந்து பிறந்தான். உத்தமனாகிய நிகும்பனெனப் பட்ட அசுரனும் தேவாபிதானும் சோபனென்னப்பட்ட அசுரனும் மூணு பேரும் பூலோகத்தி..........

## 383. ஆருட நூல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 239
ஆ. வ/12

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ........................
ஆ. ஆருட நூல்
இ. சோதிடம்
ஈ. உரை நடை ; அச்சில் ஏறத்தாழ 20 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 34 ஏடு; 68 பக்கம்.
ஆ. நீளம் 10 செ. மீ ; அகலம் 2.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்குப் பலவித வரி.
உ. தெளிவான எழுத்து.
ஊ. ஏடுகள் தொடர்ச்சியாக இல்லை. ஒரேஎண்ணில் ஒன்றுக்கு மேற்பட்ட ஏடுகள் உள்ளன.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தசரத மகாராசா அயோத்யாபுரியிலிருந்து சகல சனங்களையும் ரட்சித்தவிடம். மகாநல்லது. உத்தமம்.

ஆ. முடிவு

அசோகவனத்திலே சீதாங்கனியும் விபீஷணன் மகள் திரிசடையுடனே இருக்கச்சே அப்போ தம்முடைய நாகாயம்பிகைக்கு நஞ்சு வார்த்த விடம். ஆகாது. மத்திமம்.

5. ....................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1 : 89, 90, 239, 463, 502, 821; 2 : 44585; 4 : 9760-9762, 9838; 12 : 38; 16 : ஆர். 195எஃப், ஆர். 238எச், ஆர்.2226, ஆர். 3494,1999,2018,2295,2462; 18:5760; 27 : 727; 28 : 30882, 31098, 35196, 37124, 38342, 43483, 43486; 32 : 8, 140; 55 : 62.

## 384. மேரு மந்திர புராணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 240
ஆ. ந/37

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. வாமன முனிவர்
ஆ. மேருமந்திர புராணம்
இ. காப்பியம்
ஈ. செய்யுள் ; அச்சில் சுமார் 300 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 118 ஏடு; 236 பக்கம்.
ஆ. நீளம் 40.5 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 6 வரி.
உ. தெளிவான எழுத்து.
ஊ. சுவடி 87 ஆம் ஏட்டிலிருந்தே தொடங்குகிறது. 168, 170, 171, 178, 179, 182, 183 ஆகிய ஏடுகளும் 211க்கு மேல் இருக்க வேண்டியனவும் இல்லை. பலஏடுகள் மிகச் சிதைவு. பொதுவாக மிகவும் பழுதுற்ற சுவடி.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சித்தமெய் மொழிகளிற் செறிந்து யிர்க்கெலாம்
மித்திர னாயபின் வேத னாதியில்
ஒத்தெழு மனத்தனா யுவகை யுள்ளுலாத்
தத்துவத் தவத்தினாற் றனுவை வாட்டினான். (92)

ஆ. முடிவு

பயம்பகை பணித்தல் ஆர்வம் செற்றமே கவற்சி சோகம்
வியந்திடல் வெகுளி சோபம் வேர்த்திடல் விரும்பல் கேதம்
மயங்குதல் தெளிதல் சிந்தை வருந்துதல் கனிவு றன்மற்று
இயம்பகுந் திறத்த வின்ன யாவையு மெறிந்தி ருந்தார். (338)

5. ....................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1 : 241; 2 : 44575; 25 : 352, 353; 31 : 45.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 385. மேரு மந்திர புராணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 241
ஆ. ந/38

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. வாமன முனிவர்
ஆ. மேருமந்திர புராணம்
இ. காப்பியம்
ஈ. செய்யுள் ; அச்சில் சுமார் 300 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 133 ஏடு; 266 பக்கம்.
ஆ. நீளம் 47 செ. மீ.; அகலம் 3.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 7 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. 107, 108, 133 ஆகிய ஏடுகள் முறிந்துள்ளன. பல ஏடுகள் மிகச் சிதிலம். நிறையத்துளைகள்.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

குற்றங்க ளில்லான் குணத்தால் நிறைந்தான் குணத்தால்
மற்றிந்த வைய மளந்தான் வைய நின்ற பெற்றி
முற்றுமு ரைத்தா னுரையீ ரொன்ப தாய தொன்னூர்
செற்றங்க டீர்ப்பான் விமலன் சரண்சென்னி வைத்தேன்.

ஆ. முடிவு

ஆயிரத்து நானூற்றின் மேலு மிருமூன்றாம்
பாயபுகழ் மேருக்கள் மந்தரர்பாற்—றூய
தவராச ராசன் குறுமுனிவன் றந்த
பவரோக மந்தரமாம் பாட்டு. (1406)

இ. பிற்குறிப்பு

யுவ வருஷம் ஆஷாட மாதம் அஷ்டமி மங்களவாரம் ஹஸ்த நட்சத்திரம் இந்த சுபதினத்தில் அப்பாண்டைநாத சுவாமி சந்நிதியில் எழுதி நிறைந்தது.

5. ..........

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

தொடர் எண் : 384 காண்க.

## 386. திருக்கலம்பகம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 242
ஆ. ய / 12

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. உதீசி தேவர்

ஆ. திருக்கலம்பகம் : மூலமும் உரையும்

இ, சிற்றிலக்கியம்

ஈ. செய்யுளும் உரைநடையும் ; அச்சில் ஏறத்தாழ 200 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 157 ஏடு; 314 பக்கம்.

ஆ. நீளம் 39. 5 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 6 வரி.

உ. தெளிவான எழுத்து.

ஊ. 68, 69 ஏடுகள் இல்லை. 34, 40, 41, 60, 76 ஆகிய 5 ஏடுகள் முறிவு. பொதுவாகப் பழுதுற்ற சுவடி.

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

மலர்தலை உலகினோர் நிலையிரு ளகலவுந்
தகைபெறு நல்லறம் பகையொழிந் தொளிரவும்
பொன்னெழின் மன்னிய மின்னெயின் மூன்றனுள்
தண்டளிர் பொதுளிய பிண்டிநன் னீழலில்

ஆ. முடிவு

அருமலர்ச் சேவடிக் கமர்ந்தன னணிந்த
தொன்மலர்க் கலம்பகத் தூய மாலை
பன்முறை யோதுநர் பழிச்சுந ரெல்லாஞ்
சேதியம் பெருநெறி சேர்குவர் விரைந்தே.

இ. பிற்குறிப்பு

விக்ருதி நாம ஸம்வத்ஸரம் மார்கழி மாதம் 15ஆம் தேதி மங்கள வாரம் சதுர்தசி 37 மிருகசீர்ஷ நட்சத்திரம் 52 சுபம் 44

இப்பேர்ப்பட்ட சுபதினத்தில் உதயாதி அஞ்சு நாழிகைக்கு மகர லக்னத்தில் திருப்பறம்பூர் ஸ்ரீ தேவாதிதேவராகிய ஸ்ரீபுஷ்ப தந்த ஸ்வாமி சந்நிதியில் புஷ்பநாத நயினார் குமாரன் அய்யா சாமி நயினார் திருக்கலம்பக முறை எழுதி முடிந்தது. முற்றும். அனந்த விசயன் ஸ்வஹஸ்த லிகிதம். நமோ ஜினாய.

5. ........................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

16: 287, 289; 25: 853; 26: 227.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 387. வெண்பாப் பாட்டியல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 243
ஆ. ச / 17

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. குணவீர பண்டிதர்
ஆ. வெண்பாப் பாட்டியல்
இ. இலக்கணம்
ஈ. செய்யுள் 100

3. தோற்றக் கூறுகள்

அ. 27 ஏடு; 54 பக்கம்.
ஆ. நீளம் 39 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 6, 7 வரி.
உ. தெளிவான எழுத்து.
ஊ. இடையிடையே ஏடுகள் சிதிலமாயுள்ளன. பொதுவாகச் சுமாரான நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு

தொடர் எண்: 164 காண்க.

## 388. இலக்கண விளக்கம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 244
ஆ. ச/18

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. வைத்தியநாத தேசிகர்
ஆ. இலக்கண விளக்கம் - அணியியல் : மூலமும் உரையும்.
இ. இலக்கணம்
ஈ. செய்யுளும் உரைநடையும் ; அச்சில் சுமார் 100 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 62 ஏடு; 124 பக்கம்.
ஆ. நீளம் 29 செ.மீ.; அகலம் 3.5 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 10, 11 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. பல ஏடுகள் சிதிலமாகியுள்ளன. சுமாரான நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அணியெனப் படுவது துணிவுறக் கிளக்கிற்
குணமலங் கார மெனவிரு திறத்தால்
பொருள்புலப் படுப்ப ...... ........

என்பது சூத்திரம்.

ஆ. முடிவு

என்பூ டுருவ வினையேன் மனங்கலக்கும்
பொன்பூண் சுமந்த புணர்முலையாள் — மின்பூண்
நுடங்கிடைக்குக் காவலாய் நோக்கங் கவரும்
படங்கிடக்கு மல்குற் பரப்பு.

## 389. சிவதருமோத்தரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 245
ஆ. ட/11

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. மறை ஞானசம்பந்தர்
ஆ. சிவதருமோத்தரம்
இ. தத்துவம்
ஈ. செய்யுள் ; அச்சில் சுமார் 100 பக்கம் வரும்

3. தோற்றக் கூறுகள்

அ. 49 ஏடு; 98 பக்கம்.
ஆ. நீளம் 28 செ.மீ.; அகலம் 3.5 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 9,10 வரி.

உ. சுமாரான எழுத்து.

ஊ. சுவடியில் 71 முதல் 126 முடிய உள்ள ஏடுகளே உள்ளன. இவற்றுள் 72, 73, 79, 99, 105, 109, 116 ஆகிய ஏடுகள் இல்லை, பல ஏடுகள் சிதைந்தும் முறிந்தும் உள்ளன.

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

மூரி வலானை முருக்கினனே
முதிர்சடை சூடு முருக்கினனோ
பாரியோர் பாலூர்ப் பண்ணினனே
பாடிய நான்மறைப் பண்ணினனே
கூரிரு ளாடிடுங் கொள்கையனே
கோல்வளை யார்மலி கொள்கையனே
காரிய காரண னானவனே
கரிசரக் காய்முக னானவனே (98)

(இது 8 ஆவது செனனமரண வியலின் 98 ஆம் பாடல்)

ஆ. முடிவு

படிசேர் பலமே னியரே படருஞ்
சடைமணி முடியார் தருநீ றுடையார்
புடையே புயமு மொருநா லுடையார்
அடியா ரவரே கணநா யகரே. (102)

(இது 12 ஆவது இயலின் 102 ஆவது பாடல்)

# 390. பிரம்மோத்தர காண்டம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 246

ஆ. ந/39

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. வரதுங்கராம பாண்டியன்
ஆ. பிரம்மோத்தர காண்டம்
இ. காப்பியம்
ஈ. செய்யுள் 1325

## 3. தோற்றக் கூறுகள்

அ. 99 ஏடு; 198 பக்கம்.
ஆ. நீளம் 45 செ. மீ.; அகலம் 4 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 9, 10 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. சுவடி 173 ஆம் எட்டெண்ணுடன் தொடங்கி 271 உடன் முடிகிறது. சுமாரான நிலை.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பூமேவு திசைமுகனும் நெடுமாலும் போற்றிசெயத்
தேமேவு குழலுமையாள் செழுங்குவளை விழிகளிப்ப
மாமேவு மிதழிநறு மழைதுளிப்ப மணிமன்றந்
தாமேவி நடம்புரிந்த தனிப்பொருளை வணங்குவாம். (1)

ஆ. முடிவு

தேவர்தம் பெருமான் சிறந்தவஞ் செழுத்தின்
சீர்நிகழ் மாக்கதை முதலாய்ப்
பாவநின் றகற்றும் புராணநூல் கேட்போர்
பலன்பெறல் மொழிகதை யீறாய்
மேவரப் புகன்ற சிவகதை முழுதும்
விழைவுடன் கேட்குநர் அவர்தாம்
யாவர்மற் றேனு மாலவன் முதலோர்
எய்திய சிவபதம் அடைவார். (108)

இருபத்திரண்டாவது புராண மகிமை யத்தியாயம் முற்றும். ஆகத் திருவிருத்தம் 1325.

இ. பிற்குறிப்பு

*மன்மத வருஷம் மாசிமாதம் பதினோராந்தேதி எழுதி நிறைவேறினது.*

## 591. சரப புராணம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 247
ஆ. ந/40

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ........ .........
ஆ. சரப புராணம்
இ. காப்பியம்
ஈ. செய்யுள் 421

### 3. தோற்றக் கூறுகள்

அ. 129 ஏடு; 258 பக்கம்.
ஆ. நீளம் 9 செ. மீ., அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 9 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. அனைத்து ஏடுகளும் வலது மேற்புறம் சிதைந்துள்ளன. பழுதான சுவடி.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சீர்கொண்ட பகிரண்டம் பேரண்டம்
பல ......... டெரிந்த நீதி
ஏர்கொண்ட வளவுபடா மறைநூல்கள்
புரநூல்கள் யாவும் தந்த
நீர்கொண்ட பெருங்கருணைத் திருமடந்தை
யொருபாகம் நிலவு கொன்றைத்
தார்கொண்ட சடாமவுலித் தலைவரிரு
கமலபதந் தலைமேற் கொள்வாம். (1)

ஆ. முடிவு

கூறு மானிட மடங்கலின் வலியுகக் குறைத்த
மாறி லாவருட் சரபநா யகன்றனை மகிழ்வால்
ஆறு திங்களன் பெய்திய வறிவொடா தரித்தால்
பேறு வேண்டுவ வேண்டுவார் பெறுவது திண்ணம். (61)

நரசிங்கவதைச் சருக்கம் முற்றும். தொகை 421.
சரப புராணம் முற்றும்.

இ. பிற்குறிப்பு

(கொல்லம்) 1025 ஆம் வருடம் ஐப்பசி மாதம் 27 ஆம் தேதி சனிவாரமும் உத்திர நட்சத்திரமும் கூடிய சுபதினத்தில் எழுதி முற்றுப் பெற்றது'' (இது கி. பி. 1849 நவம்பர் இரண்டாம் வாரம் ஆகும்.)

5. ......................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

16 : ஆர். 2734, ஆர். 2735; 17 : 124; 19 : 3062; 25 : 472; 27 : 279ஏ; 31 : 64ஏ.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

# 392. சீவக சிந்தாமணி

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 248
ஆ. ந/41

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. திருத்தக்க தேவர்
ஆ. சீவக சிந்தாமணி - நாமகள் இலம்பகம் :
நச்சினார்க்கினியர் உரையுடன்
இ. காப்பியம்
ஈ. செய்யுளும் உரைநடையும். அச்சில் ஏறத்தாழ 60 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 52 ஏடு; 104 பக்கம்.
ஆ. நீளம் 36 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப் பட்டுள்ளது
ஈ. பக்கத்திற்கு 6 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. இது ஒரு பெரிய சுவடியின் ஒரு பகுதி.
56 ஆம் ஏட்டில் தொடங்கி 110 ஆம் ஏடு முடிய உள்ளது. 84, 89 ஆகிய இரு ஏடுகள் இல்லை. பல் ஏடுகள் சிதைந்துள்ளன.
எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

"..............யெனத் திரிந்தது. முறைமைப்பட அலர்ந்து நாறும் குயிலாகிய காளங் கூடித் தேனாகிய யாழ் தங்க வண்டு பாடவவ ..........குப் பரிசிலாக வேங்கை பொன்னைச் சொரியு முற்கூறிய செய்குன்றைச் சந்தன முதலிய ....... யிக் குன்றையும் கா....... நீங்கவுயிர் நீங்கும் நினைக்கிலுயிர் தளிர்க்கு மென்க. (149)

ஆ. முடிவு

போழ்ந்...திர் நேமியொடு வேல்பொருத முந்தத்
தாழ்ந்துதறு கண்ணிணைக டயழல விழியா
வீழ்ந்துநில மாமகடன் வெம்முலைநெ முங்க
வாழ்ந்துபடு வெஞ்சுடரி னாண்டகைய விந்தான்.

(எ. து.)...ந்து மறைந்து, ஆண்டகைமை. பண்புத்தொகை ஆண்டகைக் குரவர் போல, அவிதல் குறைதல்...........

(இது நாமகள் இலம்பகம் 260 ஆம் பாடல்)

5. பிற செய்திகள்

இச்சுவடி திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்திலிருந்து வந்த பல தனியேடுகளை ஆராய்ந்து தேடித் தொகுத்துத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் மீண்டும் ஒரு சுவடியாக உருவாக்கப்பட்டது.

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

4: 9822; 8: 34; 16: 102, 104—106, 2217, 2428, ஆர். 509, ஆர். 4872, ஆர். 5076; 18: 6353, 6355, 6417ஜே, 6419, 6421, 7998, 11599, 11606: 19: 2984, 3070, 3193, 3277; 25: 322—336, 1407—1420, 2269; 27: 82பி, 144—148, 516, 517, 631கே; 31: 72, 73; 60: 235.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 593. சிவதருமோத்தரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 249

ஆ. ட/12

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. மறைஞானசம்பந்தர்
ஆ. சிவதருமோத்தரம்
இ. தத்துவம்
ஈ. செய்யுள் 228

3. தோற்றக் கூறுகள்

அ. 183 ஏடு, 366 பக்கம்.
ஆ. நீளம் 13 செ. மீ., அகலம் 3. 5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப் பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 11, 12 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. பல ஏடுகள் மிகச் சிதைவு. சுமாரான நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

திருமாலும் போதினனுந் தேவருமா
முனிவருமே செறிந்து போற்ற
மருவாரும் பொழினிலவு தில்லைமணி
மன்றாடன் மகிழ்வான் றன்னை
உருவாகித் தானுயிர்கட் குருவாக்கி
யளித்தடக்கி யுய்யச் செய்யும்
பெருமானை நிருமலனைச் சிவனையடி
பணிந்துளத்திற் பேணு வாமே. (1)

ஆ. முடிவு

விதிதிகழ் வேதா கமவுணர் வாயே வினைதீரக்
கதமுக மோகா முகமுக மாயா கருவேயோ
மதகரி பேழ்வாய் வலிமுக மாமா ....ரைவாழும்
பொதிமலை மீதே ...முனி தா.... புகழ்வாமே. (228)

இ. பிற்குறிப்பு

கொல்லம் 1020ஆம் வருடம் புரட்டாசி மாதம் 31 ஆம் தேதி சோம வாரமும் விசாக நட்சத்திரமுங் கூடின சுபதினத்தில்

சிவதருமோத்தரம் எழுதி முற்றுப் பெற்றது. எழுதினது சொக்க லிங்கம். (இது கி. பி. 1844ஆம் வருடம் அக்டோபர் மாதம் ஆகும்.)

5. பிற செய்திகள்

இந் நூலின் ஈற்று ஏடு எண் 181 இல் உள்ளது. 182, 183 ஆகிய ஏடுகளில் சில துதிப்பாடல்கள் இடம் பெற்றுள்ளன.

## 394. வீரகுமார நாடகம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 250
ஆ. ற/12

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ... ... ......
ஆ. வீரகுமார நாடகம்
இ. பல்வகை நூல்கள்
ஈ. செய்யுள். (விருத்தம், தரு, வசனம் அடங்கியது)

3. தோற்றக் கூறுகள்

அ. 149 ஏடு ; 298 பக்கம்.
ஆ. நீளம் 43 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 5,6 வரி.
உ. தெளிவான எழுத்து.
ஊ. நல்ல நிலை.
எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சீர்கொண்ட விசயநகர் புரக்கும் வேந்தன்
    செயவீர சூரதுரந் திரகு மாரன்
பார்கொண்ட மனுக்கள்மிடி யிருட்கோர் பானு
    பவளவிதழ்ப் பாவையர்கள் கடைசெய் மாரன்
ஏர்கொண்ட தமிழ்சொரிசிந் தாமணியைச் செயமா
    யியல்வீர மாநாட கத்தைப் பாடக்
கார்கொண்ட மும்மதமும் நால்வா யைந்து
    கரத்தனிரு பதகமலங் காப்புத் தானே.

ஆ. முடிவு

வசனம் : இப்படிக்கு வீரசூரதுரந்திர குமாரனானவன் சப்தரிஷிகளையும் அவ்வையாராகிய பத்திரகாளியம்மனையும் வைத்துக் கொண்டு ஓமஞ் செய்யத் தெய்வலோக முட்டிச் சிவனுக்கு அறிக்கையாகி வீரசூரதுரந்திர மகாராசாவுக்கு உத்திரவு கொடுத்து எழுப்பினாரே.

இ. பிற்குறிப்பு

பிங்கள வருஷம் வைகாசி மாதம் 14ஆம் தேதி கரூர் தாலுக்கா அப்பிபாளையங் கிராமம் கொக்கம்பட்டியிலேயிருக்கும் பாப்பா நாயகன் மகன் குமாரனாகிய ரங்கப்பநாயகன் வீரகுமார நாடகம் என்ன வென்றால் இதை எடுத்தவர்கள் படித்துப் பார்த்து இதில் பிழை இருந்தால் திருத்திக் கொடுக்க வேணும்.

இந்த வீரகுமார நாடகம் எழுதினவன் நத்தமேட்டிலிருக்கும் கணக்குப் பிள்ளை மகன் ராமசாமிபிள்ளை எழுதினது.

# 595. அருணாசல புராணம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 251
ஆ. ப/22

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. எல்லப்ப நாவலர்
ஆ. அருணாசல புராணம் : மூலமும் உரையும்
இ. தல புராணம்
ஈ. செய்யுளும் உரைநடையும் கலந்தது. அச்சில் ஏறத்தாழ 150 பக்கம் வரும்

## 3. தோற்றக் கூறுகள்

அ. 119 ஏடு ; 238 பக்கம்.
ஆ. நீளம் 38.5 செ மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 6, 7, 8 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. 58, 110 மு 113, 118, 125 மு 131 ஆகிய ஏடுகளும், 132க்கு மேல் இருக்கவேண்டியனவும் காணப்படவில்லை. சில ஏடுகள் முறிந்துள்ளன. பழுதுற்றநிலை.
எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

மிக்க வேத வியாதன் விளம்பிய
இக்க தைக்கிய லினமருள் செய்திட
முக்கண் வெற்பினை மும்மத மாரியைக்
கைக்க ளிற்றினைக் கைதொழு தேத்துவாம்.

ஆ. முடிவு

புழுகுபனி நீர்களப மணுவளவ தேனுமிறை
　　புனையும்வகை யாலுதவினோர்
விழிகுளிர நாடினர்கள் கதிபுகுது வார்களிவை
　　வினவினரும் வீடுபெறுவார்
உமைமருவு பாணியினர் சரிதமிது வாழியென
　　யுவகையுட னேயுரைசெய்தான்
மொழியுமல ராலயனை முனிவருட னேசகன
　　முனிமகிழ்வி னோடுரைசெய்தான். (4)

புனுகு, பனிநீர், களப கஸ்தூரி முதலானது அணுமாத்திரஞ் சந்தோஷமாக மனமகிழ்ச்சியாய்ப் பரம ... (மேல் ஏடுகள் இல்லை).

5. ....................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

**1 : 709 ; 2 : வ. 145 ; 3 : 87, 102 ; 16 : 553, ஆர். 2600, ஆர். 2876 ; 17 : 304 ; 18 : 1242 ஏ, 6384 ; 25 : 496 – 500 ; 27 : 292 — 294 ; 28 : 33668பி, 43637 ; 31 : 11சி ; 55 : சி7 ; 60 : 299ஏ, 503, 572 ; 67 : எண் இல்லை ; 68 : எண் இல்லை ;**

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 596. ருது சாத்திரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 252
ஆ. வ/13

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ................
ஆ. ருது சாத்திரம்
இ. சோதிடம்
ஈ. பெரும்பாலும் உரைநடை. அச்சில் ஏறத்தாழ 40 பக்கம் வரும்

3. தோற்றக் கூறுகள்

அ. 64 ஏடு ; 128 பக்கங்கள்.
ஆ. நீளம் 27 செ. மீ.. ; அகலம் 2 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளன.
ஈ. பக்கத்திற்கு 5 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. பல ஏடுகள் மிகச் சிதைந்துள்ளன. பழுதுற்ற நிலை.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கயற்றுப் பொருத்தம்

காலினிற் கயற தாகில் கணவன்முன் பதவி சேர்வாள்
தொடையினிற் கயற தாகில் சுகத்துடன் பொருளு முண்டு
வயிறுதனிற் கயற தாகில் மலடியா யிருப்பள் நாளும்
வாயினிற் கயற தாகில் மக்களைப் பெற்றே வாழ்வாள்.

அ. முடிவு

அவள் நடக்கும்போது அமர்ந்த நடையும் குளிர்ந்த மொழியும் உடையவளாயிருப்பாளாகில் அவள் குடும்பம் விருத்தியாய் நீடித்து வாழ்வாளென்று அறிவுள்ளோர் சொல்லுவர். முற்றும். சிவமயம்.

இ. முற்குறிப்பு

விசுவாவசு வருஷம் ஆடி மாதம் 3 ஆம் தேதி ருது சாதக முதலியதுகள் இதில் வ்ரையலாயிற்று. வரைந்தது ஏ. எஸ். சோம சுந்தரய்யர்.

உ. பிற்குறிப்பு

இது வரைந்தது ஏ. எஸ். சோமசுந்தரய்யர். சிவ சண்முக மெஞ்ஞான தேசிகன் றிருவடி வாழ்க.

## 5. பிற செய்திகள்

இந்நூலில் கூறப்பெற்ற செய்திகளைப் பற்றிய அட்டவணை ஒன்று எழுதப்பட்டுள்ளது.

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1 : 514, 598 ; 18 : 8895 டி ; 27 : 703 எஃப், 891 பி.

## 397. நோய் வரும் நாள்கள்

1. நூலகக் குறிப்புகள்

அ. 253
ஆ. வ/14

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..............
ஆ. நோய் வரும் நாள்கள்
இ. சோதிடம்
ஈ. உரை நடை. அச்சில் ஏறத்தாழ 10 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 8 ஏடு ; 16 பக்கம்.
ஆ. நீளம் 33.5 செ. மீ. ; அகலம் 2.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 5 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. 5 ஆம் ஏடு காணப்படவில்லை. மிகமிகப் பழுதுற்ற சுவடி.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

மண்டலந் தனிலுலவு மனிதர்க்கு
வருஞ்சுரமதை வகுத்துரைக்க
அண்டர்கள் புகழ்ந்தேத்தும் சிவனருள்
ஐங்கரன் பொற்பாதங் காப்பாமே.

ஆ. முடிவு

சோதிட நூலறிந்து சித்தர்கள் சொல்லிடு நூலின் தொகுப் பறிந்து பழனியாபுரவீரவடிமை ......பாடின நூல்களுக்கெளி ...... மொழிப்படி பார்ப்பவர்க்கும் பண்டித ....க்கு மிளைஞர்க்கு நலமிதுவே.

5. பிற செய்திகள்

ஒருவற்கு எந்த நட்சத்திரத்தில் நோய் தோன்றினால் எத்தனை நாள் துன்புறுத்தும், நீங்குமா, நீங்காதா என்பன போன்ற செய்திகள் கூறப்பட்டுள்ளன.

## 598. பழனி தண்டாயுதபாணி பிள்ளைத்தமிழ்

1. நூலகக் குறிப்புகள்

அ. 254
ஆ. ய/13

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. வேலாயுதசாமி நாவலர் - தாணு
ஆ. பழனி தண்டாயுதபாணி பிள்ளைத்தமிழ்
இ. சிற்றிலக்கியம்
ஈ. செய்யுள் 104

3. தோற்றக் கூறுகள்

அ. 53 ஏடு ; 106 பக்கம்.
ஆ. நீளம் 45 செ. மீ. ; அகலம் 2.75 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 4 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. 30 ஆவது ஏடு முறிந்துள்ளது. பல ஏடுகள் மிகப் பழுது. மிகச் சிதைவுற்ற சுவடி.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

### அ. தொடக்கம்

சீர்மேவு தென்பழனித் தேவசே னாபதிமேற்
பார்மேவு பிள்ளைத் தமிழ்பாடப் — போர்மேவு
கம்பத்தன் கும்பிட்டுக் கைகுவித்து நின்றிடச்செய்
கம்பத்த வானைமுகன் காப்பு.

### ஆ. முடிவு

அரனரியா தியவமரர் முழுதும் வாழி
அம்பிகைமா வாதிசத்தி யனைத்தும் வாழி
பரவும்இப முகன்ஆறு முகனும் வாழி
பணிசெயுமி டும்பன்வள்ளி யானை வாழி
குரவுமிரு கிரிகுடிமா பழனி வாழி
குடிகளனை வரும்வாழி குரிசில் வாழி
பரவுமுல குறுகுடிக ணிதிக ளாதி
பதினாறும் பெற்றுநிதம் வாழி வாழி.

சிவாய பரம குரவே நம: (இது கிரந்தத்திலுள்ளது) சிவகிரி தண்டாயுதபாணி பிள்ளைத்தமிழ் முற்றுப்பெற்றது.

## 5. பிறசெய்திகள்

இந்நூலின் தற்சிறப்புப் பாயிரத்தில் பல இன்றியமையாத செய்திகள் உள்ளன. அப்பாடல் வருமாறு :—

அளவுபடு சாலிவா கனவருட மாயிரத்
தெண்ணூற் றீரேழினில்
ஆனகர வருடமா டித்திங்கள் ஆறிரண்
டாந்தேதி ஆதிவாரத்து
அளவுபடும் உத்திரட் டாதிபஞ் சமிதிதியும்
அதிகண்ட மொடுறத்துலை
யானசுப தினமதனில் ஆராத்ரி நால்வரிற்
பண்டிதா ராத்திரிசூத்ரத்து
அளவுபடு கச...யுறு சிவலிங்க தேவர்சந்
ததியாக வந்துதித்த
தாணுவே லாயுதச் சாமியெனு நாவலவன்
தண்டாயு தக்கடவுள்மேல்

அளவுபடு பிள்ளைத் தமிழ்த்துதி அறைந்ததனை
அன்பர்அனை வருமின்பமாய்
அதிலுறுங் குற்றமத கற்றியாண் டிடுவரெனல்
ஆசைதுதி செய்ததாமே.

6. .....................

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சாகவில்லை.

## 399. நைடதம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 255
ஆ. த/42

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அதிவீரராம பாண்டியன்
ஆ. நைடதம்
இ. காப்பியம்
ஈ. செய்யுள் 1170

3. தோற்றக் கூறுகள்

அ. 102 ஏடு; 204 பக்கம்.
ஆ. நீளம் 40 செ.மீ.; அகலம் 3. 5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப் பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 9 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. 2, 3 ஆக இரண்டு ஏடுகள் காணப்படவில்லை. பல ஏடுகள் சிதைவு. மிகப் பழுதுற்ற நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தழைவிரி கடுக்கை மாலை தனிமுதற் சடையிற் சூடுங்
குழவிவெண் டிங்க ளிற்ற கோட்டத்துக் குறைவென் றெண்ணிப்
புழைநெடுங் கரத்தால் பற்றிப் பொற்புற விணைத்து நோக்கும்
மழைமதக் களிற்றின் செய்ய மலரடி மனத்துள் வைப்பாம்.

ஆ. முடிவு

ஆழி சூழ்புவி முழுவது மாழியொன் றுருட்டி
வாழி நல்லறம் புரிதரு மகம்பல வாற்றிச்
சூழி மால்வரைப் பிடருறுஞ் சும்மையு மொழித்தார்
பாழி யம்புயத் துலகெலாம் பரித்தினி திருந்தார். (15)

அரசாட்சிப்படல முற்றும். ஆகவிருத்தம் 1170. திருச்சிற்றம்பலம்.

இ. பிற்குறிப்பு

ஏவிளம்பி வருஷம் கார்த்திகை மாதம் 22 ஆம் தேதி குரு வார நாள் ரேவதி நட்சத்திரமுந் தசமியுங் கூடிய சுபதினத்தில் ஏத்தநகர் வாழும் சாம்பசதாசிவமூர்த்தியாருடைய அடிமையாகிய சிவலிங்கையர் குமாரன் அருணாசல அய்யர் கையெழுத்து. தனக்கு வேண்டி எழுதினபடியினாலே எடுத்த பேர்கள் வாசித்து உடனே கொடுத்து விடவும். அப்படிக் கொடாத பேர்களுக்குப் பிரமகத்தியான மகா பாதகங்கள் சித்திக்கும். மற்றொரு சனனத்திலாவது தொடரு மென்றறிவது.

## 400. ஆத்தி சூடி

1. நூலகக் குறிப்புகள்

அ. 256-1
ஆ. ள/4

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ஔவையார்
ஆ. ஆத்தி சூடி
இ. நீதி நூல்
ஈ. செய்யுள் 108

## 3. தோற்றக் கூறுகள்

அ. 4 ஏடு; 8 பக்கம்.
ஆ. நீளம் 34. 5 செ. மீ.; அகலம் 2. 5 செ. மீ,
இ. வாரிப் பதப்படுத்தப்படாத இரட்டை ஓலைகள். இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கம் 3, 4 பத்திகளாகப் பிரித்துக் கொள்ளப்பட்டுள்ளது; பத்திக்கு 4, 5 வரி.
உ. தெளிவான எழுத்து.
ஊ. நல்ல நிலை
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஆத்தி சூடி யமர்ந்த தேவனை
யேத்தி யேத்தித் தொழுவோ மியாமே.

ஆ. முடிவு

ஓரஞ் சொல்லேல்.
ஔவையா ரருளிச்செய்த ஆத்தி சூடி முற்றிற்று.

இ. முற்குறிப்பு

உமையாள்புரத்தில் இருக்கும் சுப்பராயபடையாச்சி மகன் மாரிமுத்து படையாச்சி ஆத்தி சூடி, வேழ முகம், உலகநீதி. பெருக்குவாய்பாடு இதுகள் இப்பொழுது எழுதத் துவங்கி ........

## 5. ......... ........

## 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1: 720; 8: 120, 143; 12: 43ஏ, 82ஏ; 16: ஆர். 1985, ஆர். 1986, ஆர். 542ஏ, ஆர். 4261, ஆர். 4343, ஆர். 4360; 28: 561, 40289ஏ, 43658பி; 46! 1907/257; 48: 29பி; 60: 65ஏ, 386பி; 62: 37, 38பி; 65: எண் இல்லை.

## 7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 401. வேழமுகம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 256 - 2
ஆ. ள/4

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ......................
ஆ. வேழமுகம் முதலியன
இ. பல்வகை நூல்கள்
ஈ. செய்யுள் ; ஏறத்தாழ 100 அடிகள்.

### 3. தோற்றக் கூறுகள்

அ. 7 ஏடு; 14 பக்கம் (எட்டெண் 5 முதல் 11 முடிய)
ஆ. நீளம் 34.5 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.
இ. வாரிப் பதப்படுத்தப்படாத இரட்டை ஓலைகள்.
இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கம் இரு பத்தியாகப் பிரித்துக்கொள்ளப்பட்டுள்ளது.
பத்திக்கு 4, 5 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. நல்ல நிலை
எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

வேழமுகத்து விநாயகனைத் தொழ வாழ்வு மிகுத்து வரும்.

வெள்ளைக் கொம்பன் விநாயக னைத்தொழத்
துள்ளி யோடும் தொடர்ந்த வினைகளே.

ஆ. முடிவு

இட்டதே சோறும் பெற்றதே கறியும்
உண்டு தூங்கிப் பூசை முடித்து
வெள்ளி முளைக்கப் பள்ளிக்கு வாரும்.

பள்ளியிற் பிள்ளையார் சிந்தனை முற்றிற்று.

5. ........ .... .... ....

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

16 : 1630, ஆர். 542சி, ஆர். 4337; 27 : 390ஏ, 391; 31 : 169.

## 402. உலக நீதி

1. நூலகக் குறிப்புகள்

அ. 256 - 3
ஆ. ள/4

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. உலகநாத பண்டிதர்
ஆ. உலக நீதி
இ. நீதி நூல்
ஈ. செய்யுள் 13

3. தோற்றக் கூறுகள்

அ. 7 ஏடு; 14 பக்கம்.
ஆ. நீளம் 34.5 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.
இ. வாரிப் பதப்படுத்தப்படாத இரட்டை ஓலைகள், இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கம் இரு பத்திகளாகப் பிரித்துக் கொள்ளப் பட்டுள்ளது. பக்கத்திற்கு 4 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. நல்ல நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

உலக நீதி புராணத்தை யுரைக்கவே
கலைக ளாய்வரும் கரிமுகன் காப்பு.

ஆ. முடிவு

ஆதரித்துப் பலவகையாற் பொருளுந் தேடி
அருந்தமிழா லறுமுகனைப் பாட வேண்டி
ஓதுவித்த வாசகத்தா லுலக நாதன்
உண்மையாய்ப் பாடிவைத்த உலக நீதி
காதலித்துக் கற்றோருங் கேட்ட பேருங்
கருத்துடனே நாடோறுங் களிப்பி னோடு
போதமுற்று மிகவாழ்ந்து புகழுந் தேடிப்
பூலோக முள்ளளவும் வாழ்வர் தாமே. (13)

உலகநீதி முற்றிற்று.

5. ..... .. ... ...........

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1 : 708; 12 : 77, 82; 16:141, 1996, ஆர். 4337பி, ஆர். 4375, ஆர். 6707, ஆர். 6750; 18: 5917. 11513பி, 11523பி; 11524; 19: 3272; 27 : 813டி, 859; 60: 76,77, 386டி, 62: 36, 40சி.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 403. பெருக்கல் வாய்பாடு

1. நூலகக் குறிப்புகள்

அ. 256 - 4
ஆ. ள/4

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. .............. ........
ஆ. பெருக்கல் வாய்பாடு (4ஆம் வாய்பாடு வரை.)
இ. பல்வகை நூல்கள்
ஈ. உரைநடை ; அச்சில் 1 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 2 ஏடு; 4 பக்கம். (எட்டெண் 19, 20)
ஆ. நீளம் 34.5 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.
இ. வாரிப் பதப்படுத்தப்படாத இரட்டை ஓலைகள். இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கம் 5 பத்தியாகப் பிரித்துக் கொள்ளப்பட்டுள்ளது. பத்திக்கு 4 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பெருக்கு வாய்பாடு. 1ஆம் வாய்பாடு.

$1 \times 1 = 1$ $3 \times 1 = 3$
$2 \times 1 = 2$ $4 \times 1 = 4$

ஆ. முடிவு

$17 \times 4 = 68$ $19 \times 4 = 76$
$18 \times 4 = 72$ $20 \times 4 = 80$

# 404. தமிழ் அரிச்சுவடி

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 257
ஆ. ற / 13

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ............
ஆ. தமிழ் அரிச்சுவடி
இ. பல்வகை நூல்கள்
ஈ. உரைநடை; அச்சில் ஏறத்தாழ 10 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 13 ஏடு; 26 பக்கம்.
ஆ. நீளம் 34. 5 செ. மீ.; அகலம் 2. 5 செ. மீ.
இ. வாரிப் பதப்படுத்தப்படாத இரட்டை ஓலைகள். இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கங்கள் பலபத்திகளாகப் பிரித்துக் கொள்ளப்பட்டுள்ளன. பத்திக்கு 5 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. சுவடி 11 ஆம் ஏட்டெண்ணில் தொடங்குகிறது. 16 ஆம் எண்ணிட்ட ஏடு காணப்படவில்லை. சில ஏடுகள் சிதைவு.
எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

உயிரெழுத்து-12; மெய்யெழுத்து-18; உயிர்மெய்யெழுத்து-216; ஆய்த எழுத்து-1 ஆகத் தமிழ்பாஷையின் எழுத்துகள்-247.

ஆ. முடிவு

ஐந்து. ஆறு, ஏழு, எட்டு, ஒன்பது, பத்து.
(இன்னும் சில ஏடுகள் சிதைந்திருக்க வேண்டும்.)

## 5. ...................

## 6. மாற்றுச்சுவடிகள் காணுமிடம்

16: 1, 2, ஆர். 1981—ஆர். 1984, ஆர். 2380; 28: 37069, 43763, 45822; 31: 339: 49: எண் இல்லை; 60: 386ஏ, 528; 65: எண் இல்லை.

## 7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

# 405. நவநீதப் பாட்டியல்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 258
ஆ. ச / 19

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. நவநீத நடனார்
ஆ. நவநீதப்பாட்டியல்
இ. இலக்கணம்
ஈ. செய்யுள் 82

## 3. தோற்றக் கூறுகள்

அ. 15 ஏடு; 30 பக்கம்.
ஆ. நீளம் 38. 5 செ. மீ.; அகலம் 3. 5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 8 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. ஏடுகள் மிகச்சிதைந்துள்ளன.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கார்கொண்ட மேனிக் கறைகொண்ட நேமிக் கமலக்கண்ணன்
பார்கொண்ட பாதத்தை யேத்திப் பகர்குவன் பாட்டியலைத்
தேர்கொண்ட வல்குற் றுடிகொண்ட சிற்றிடைச் செந்துவர்வாய்
வார்கொண்ட பூண்முலை வேல்கொண்ட வாள்விழி வாணுதலே.

ஆ. முடிவு

மூன்று தமிழின் முறையறி யாதவர் நாற்குலத்துச்
சான்றவ ரல்லவர் தாழ்ந்த உறுப்பினர் வெம்பிணியால்
தோன்றுந் துயரத்தர் தெய்வந் தொழாதவர் தூய்மையிலோர்
ஆன்றவர் பாட்டினி லானந்த மாமென் றறைவர்களே. (82)

5. பிறசெய்திகள்

இச்சுவடியில் நவநீதப்பாட்டியலை அடுத்து யாப்பருங்கலக் காரிகை, இலக்கண விளக்கம், வரையறுத்த பாட்டியல் ஆகிய நூல்களின் சிற்சில நூற்பாக்கள் எழுதப்பட்டுள்ளன. (ஏடு 11-15)

6. மாற்றுச்சுவடிகள் காணுமிடம்

8: 228; 16: ஆர். 1200பி, 2076; 18: 7921பி; 19: 3180; 26: 185.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 406. செய முருக வடிவேலன் சதகம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 259
ஆ. ய / 14

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ...............
ஆ. செய முருக வடிவேலன் சதகம்
இ. சிற்றிலக்கியம்
ஈ. செய்யுள் 40

3. தோற்றக் கூறுகள்

அ. 20 ஏடு; 40 பக்கம்.
ஆ. நீளம் 43 செ. மீ.; அகலம் 2 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது
ஈ. பக்கத்திற்கு 4, 5 வரி.

உ. தெளிவான கையெழுத்து.

ஊ. 1, 2, 12, 15, 17, 18, 21, 22 ஆகிய 8 ஏடுகள் காணப்பட வில்லை. 27 ஆம் ஏட்டிற்கு மேல் இருக்க வேண்டியனவும் இல்லை. பல ஏடுகள் முறிந்துள்ளன. பழுதுற்ற சுவடி.

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பொய்யினில்மி குத்தவர் அறிவீனர் மூர்க்கரும்
புலாலுணுங் கொலைபாதகர்
பொருள்திருடு கோளரும் சிலைகரடு வடவியும்
புலிகரடி .......................... ....
வெய்யில்நிறை நீழலாய்த் துன்மார்க்கக் குடிகளாய்
வீடுவீ டாய்ச்சார்வராய்
வேட்டைநாய்த் திரளதாய் ........கூப சுனைகளாய்
விரி....... ..........................
பையரவு வளைகளாய்க் கூகைத்தொனி யுள்ளதாய்ப்
பல்வகைத் தெய்வமுனையாய்
பஞ்சையாய் நாலஞ்சு குடிசையா யிருக்கின்ற
பட்டியே நரகவாசம்
செய்யாறு சோலைசூழ் புல்லூரி லாதிபன்
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே. (5)

ஆ. முடிவு

பன்னிருகோடி பலமலர் தரிப்பதில் அதிகமது
பதுமமொன் றர்ச்சனையதாம்;
பதுமமது தசகோடி சாத்துதற் கேயதிக
பலனு ... ........................
சொன்னநீ லோத்பலஞ் சதகோடிக் கதிகமாந்
துதிவில்வந் தானொன்றுமே;
துன்றுமுக் கிளைவில்வ மைந்துகோ டிக்கு....
.............. ..............................

நன்மைதரு சிவபூசை செய்வதுந் தோத்திரம்
நற்செபந் தியானமுடனே
நவிலேக சமனாகக் காண்பதொன் றுக்கொன்று
... .... .. ............ ..... ...
தென்னமுத நிகரான புல்லூரி லாதிபன்
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே.

(மேலே ஏடுகள் இல்லை.)

## 407. உபதேச காண்டம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 260
ஆ. ந/43

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. கோனேரியப்பர்
ஆ. உபதேச காண்டம்
இ. காப்பியம்
ஈ. செய்யுள் 2610

3. தோற்றக் கூறுகள்

அ. 212 ஏடு ; 424 பக்கம்.
ஆ. நீளம் 35·5 செ.மீ.; அகலம் 3.5 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 8, 9 வரி.
உ. தெளிவான அழகிய கையெழுத்து.
ஊ. 34 ஆம் ஏடு காணப்படவில்லை. 212 ஆம் ஏட்டிற்கு மேல் இருக்க வேண்டியவை இல்லை. பல ஏடுகள் மிகப்பழுது·
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு
தொடர் எண் : 184 காண்க.

# 408. பகவத்கீதை

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 261
ஆ. ட/13

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ............................
ஆ. பகவத் கீதை : பொழிப்புரை
இ. தத்துவம்
ஈ. உரை நடை; அச்சில் ஏறத்தாழ 300 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 138 ஏடு ; 276 பக்கம்.
ஆ. நீளம் 25 செ.மீ.; அகலம் 4 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 12 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. அனைத்து ஏடுகளும் சிதைவு. மிக மிகப் பழுதுற்ற நிலை.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பரமேஸ் .................. ஆசாரியராக சகலோபநிஷத்துக்களுஞ் .................. முபக்கிரமா ............ ங்கங்களால் நிர்ச்சந்தேகமாய் இருக்கும்படி முமுட்சு சனங்கள் கிருதார்த்தர்களாக வேண்டு மென்றுள்ள கருணையினால் வியாக்கியானிக்கப்பட்டு ..........

ஆ. முடிவு

ராச்சிய லட்சுமியுஞ் சத்துரு செயமு முத்திரோ................ ......... நிச்சய மென்றறிவாய். சபுத்திரபரி.......... பகவானைச் சரணமடைந்து தர்மபுத்திராதிகட்கு ராச்சியாதிகளையும் சமர்ப் பித்தாயாகிலுனக்குச் செயம் வருமென்க... ....... முற்றிற்று.

## 409. பகவத்கீதை

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 262

ஆ. ட/14

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. .... .. ..............

ஆ. பகவத் கீதை : பதவுரை

இ. தத்துவம்

ஈ. உரை நடை. அச்சில் ஏறத்தாழ 250 பக்கம் வரும்.

### 3. தோற்றக் கூறுகள்

அ. 118 ஏடு ; 236 பக்கம்.

ஆ. நீளம் 20 செ.மீ.; அகலம் 4 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 10, 11 வரி.

உ. இரு வகையான கையெழுத்துகள். இரண்டும் தெளிவு.

ஊ. மிகமிகப் பழுதுற்ற சுவடி. ஓரேடு கூடச் செம்மையாக இல்லை.

எ. குறை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஸ்ரீ பகவத்கீதை பாயிரம்

............அவதாரிகை. வடமொழி தென்மொழிகளில் வல்லமையுள்ள ... நூலாசிரியர் பேரருளினாற் கூறப்புகுந்த இந்நூல் விக்கினமின்றி நிறைவேறி யாவருஞ் சிரவணாதி செய்து சுவானுபூதி சாக்ஷாத்காரத்தை யடையும்பொருட்டு விக்கினேஸ்வரக் கடவுளைத் தன்மயமாகத் துதித்தல்.

ஆ. முடிவு

திரு இராச்சிய லட்சுமியும் நீதி திட நியாயமும்.................. .......... மடைந்து தருமபுத்திராதிகட்கு இராச்சியாதிக............... செயம் வருமெனக் கூறியதாம்...................... சஞ்சேப அத்தியாயம் முற்றிற்று. ஆக அத்தியாயம் 18க்குத் திருவிருத்தம் .........

## 410. பகவத்கீதை

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 263
ஆ. ட/15

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ...............
ஆ. பகவத்கீதை : பதவுரை
இ. தத்துவம்
ஈ. உரை நடை ; அச்சில் சுமார் 200 பக்கம் வரும்.

### 3. தோற்றக் கூறுகள்

அ. 154 ஏடு; 308 பக்கம்.
ஆ. நீளம் 25செ. மீ. ; அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 7 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. மிகப்பழுதுற்ற நிலை. ஓரேடு கூடச் செம்மையாக இல்லை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு

தொடர் எண் : 262 காண்க

## 411. பகவத்கீதை

1. நூலகக் குறிப்புகள்

அ. 264
ஆ. ட/16

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ... ... ... ....
ஆ. பகவத் கீதை : மொழிப்புரை
இ. தத்துவம்
ஈ. உரைநடை ; அச்சில் ஏறத்தாழ 300 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 149 ஏடு; 298 பக்கம்.
ஆ. நீளம் 30. 5 செ. மீ.; அகலம் 4 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 12 வரி.
உ. தெளிவான கையெழுத்து ; வேறு வேறானவை.
ஊ. மிகமிகப் பழுதுற்ற சுவடி. ஓரேடு கூடச் செம்மையாக இல்லை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு

தொடர் எண் : 261 காண்க

## 412. பகவத் கீதை

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 265
ஆ. ட/17

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ......................
ஆ. பகவத் கீதை : பொழிப்புரை (9 ஆம் அத்தியாயம் மட்டும்)
இ. தத்துவம்
ஈ. உரைநடை ; அச்சில் ஏறத்தாழ 20 பக்கம் வரும்.

### 3. தோற்றக் கூறுகள்

அ. 13 ஏடு; 26 பக்கம்.
ஆ. நீளம் 30.5 செ. மீ.; அகலம் 3.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 6, 7, 8 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. மிகப் பழுதுற்ற நிலை.
எ. குறை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

**ஒன்பதாவது ராச வித்தியா. ராச .. யோக வத்தியாயம்.**

**அவதாரிகை : முற்கூறிய வத்தியாயத்தில் பிரணவ ஆலம்பனமான சகுணதாரணா யோகிக்கு அர்ச்சிராதி மார்க்கத்தினாற் காரியப்பிரம........ கற்பாந்தத்தின் முத்தியு முண்டாமென்று உபதேசித்ததன் ........ குதே மோட்சப் ....... கிரமுமென்று வருஞ் சங்கையை நிவிர்த்திப்பிக்கிறதற்காக விவ்வத்தியாயத்தில்............**

ஆ. முடிவு

வாசுதேவனாகிய வென்னையே திரிவித கரணங்களாலும் வணங்குவாய். என்னையே சர்வப் பிரகாரத்தினாலும் சரணம் அடைந்தவனாகி முன்சொன்ன பிரகார மென்னிடத்திற் பத்தி ...... சத்திய ஞானாகண்டானந்த விக்கிரகனாகிய வென்னையே யடைகுவாய். (34)

ஒன்பதாவது அத்தியாய முற்றிற்று. ஆக அத்தியாயம் ஒன்பதுக்குச் சுலோகம் 372.

## 413. பிரம்மோத்தரகாண்டம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 266

ஆ. ந/44

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. வரதுங்கராமபாண்டியன்

ஆ. பிரம்மோத்தர காண்டம்

இ. காப்பியம்

ஈ. செய்யுள் 1324

### 3. தோற்றக் கூறுகள்

அ. 105 ஏடு; 210 பக்கம்.

ஆ. நீளம் 39.5 செ. மீ.; அகலம் 4 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 8, 9 வரி.

உ. தெளிவான கையெழுத்து.

ஊ. சுவடியின் பிற்பாதியில் வலது மேல்புறம் சிதைந்துள்ளது. சுமாரான நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ தொடக்கம் ஆ. முடிவு

தொடர் எண் : 246 காண்க.

இ. முற்குறிப்பு

பிரசோத்பத்தி வருடம் வைகாசி மாதம் 13 ஆம் தேதி வெள்ளிக்கிழமை பூச நட்சத்திரத்தில் கும்பலக்னத்தில் பெத்தையன் எழுதினது.

ஈ. பிற்குறிப்பு

பிரசோத்பத்தி வருடம் ஆனி மாதம் 31 ஆம் தேதி அமர பட்சத்தில் ஞாயிற்றுக்கிழமை துதிகை நாளும் அவிட்ட நட்சத்திரமும் சுப்பிரநாமயோகமும் பாலவா கரணமுமிந்தச் சுபதினத்தில் கஸ்தூரி நாயக்கர் குமாரன் பெத்தைய வாத்தியார் ஏடு. பிரம்மோத்தர காண்டம் எழுதினது. இராமன் சேர்வைகாரன் குமாரன் கிருஷ்ண சுவாமி எழுதினது.

## 414. திருக்காளத்திப் புராணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 267
ஆ. ப / 23

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. பரிமள கவிராயர் என்னும் ஆனந்தக் கூத்தர்
ஆ. திருக்காளத்திப் புராணம்
இ. தலபுராணம்
ஈ. செய்யுள் ; அச்சில் சுமார் 100 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 145 ஏடு; 290 பக்கம்.
ஆ. நீளம் 39.5 செ. மீ.; அகலம் 4 செ. மீ.

இ. இருபுறமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 9, 10, 11 வரி.

உ. தெளிவான கையெழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

## 4. சிறப்புச்செய்திகள்

அ. தொடக்கம்

முதல் ஏட்டில் இந்நூற் பகுதியல்லாத விநாயகர், கலைமகள் வணக்கங்கள் எழுதப்பட்டுள்ளன.

சீர்பூத்த பேரொளியாய்ச் சித்துருவாய்
நித்தமாய்ச் சிவமா யொன்றாய்
ஏர்பூத்த சத்தாகி நிருத்தமாய்
அநாதியாய் யாண்டு மாகிப்
பேர்பூத்த வகளமாய் அகண்டமாய்
உயிர்க்குயிராய்ப் பிரியா தோங்கும்
கார்பூத்த காவுசூழ் காளத்திப்
பரம்பொருளைக் கருத்துள் வைப்பாம். (1)

ஆ. முடிவு

பொருநைநதி யுவட்டெறியுந் தமிழ்நாட்டில்
அளகைநகர் பொருவும் வீரைக்
குரிசில்பரி மளகவிரா சன்தமிழ்தேர்
ஆனந்தக் கூத்தன் விண்ணோர்
பரவுமியற் காசிதனில் வாசமாய்
அகிலேசன் பாதம் பெற்றோன்
சுருதிபுகழ் காளத்திப் புராணத்தைச்
செந்தமிழாற் சொன்னா னன்றே.
திருக்காளத்திப் புராணம் முற்றும்.

இ. முற்குறிப்பு

அட்சய வருஷம் கார்த்திகை மாதம் காளத்திப் புராணம் எழுதினது.

ஈ. பிற்குறிப்பு

ராசகோபாலன் எழுத்து. ஸ்ரீராமசந்த்ராய நமஹ. (இது கிரந்தலிபி) பிரபவ வருஷம் ஆனி மாதம் வெள்ளிக் கிழமை நாள் பூச நட்சத்திரத்தில் காசைநகர் பெத்துமணியகாரன் பேரன் பெத்தய்யன் காளத்திப் புராணம் எழுதுவித்தது.

5. ....... ..........

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

25: 563; 31: 25, 26; 60: 300.

## 415. பகவத் கீதை

1. நூலகக் குறிப்புகள்

அ. 268
ஆ. ட/18

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..................
ஆ. பகவத் கீதை : தமிழ் மூலம்
இ. தத்துவம்
ஈ. செய்யுள் 564

3. தோற்றக் கூறுகள்

அ. 76 ஏடு; 152 பக்கம்.
ஆ. நீளம் 19.5 செ. மீ.; அகலம் 4 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 11 வரி.
உ. அழகிய தெளிவான கையெழுத்து.
ஊ. மிகமிகப் பழுதுற்ற நிலை. ஒரேடு கூட நன்றாக இல்லை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

முதல் ஏட்டில் ஒரு வரிகூட முழுக்கப் படிக்குமாறில்லை.

ஆ. முடிவு

ஆற்றி .. லவ .. ... ன்களைந்தையும்
பாற்றிய சங்கர பகவற் பாதனென்
றேற்றிய பெயரினா........ ருளினாலியா .......
சாற்றின னிப்பெருந் தரும நூலையே. (80)

சங்சேபவத்தியாயம் முற்றும். ஆக வத்தியாயம் 18க்குத் திருவிருத்தம் 564. பகவத் கீதை முற்றிற்று.

## 116. ரிபு கீதை

1. நூலகக் குறிப்புகள்

அ. 269
ஆ. ட/19

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..........................
ஆ. ரிபு கீதை
இ. தத்துவம்
ஈ. செய்யுள் 100

3. தோற்றக் கூறுகள்

அ. 25 ஏடு; 50 பக்கம்.
ஆ. நீளம் 35 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 6, 7 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. மிகமிகப் பழுதுற்ற சுவடி. ஒரேடுகூட நன்றாக இல்லை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அடையமிக வரிதாகிச் சார மான
  வாத்மாவின் மகிமையினை யறையக் கேளாய்
சடமல ... ......... ........ .. சுகமா ன்றாய்
  ........ ... மாத்மாவே யுளதா மெங்குந்
தடமரு .... ....... .... .. தானே யெங்குந்
  .............. .............. ............ ..............
கடபடமே முதலியதாய் நானா வாகக்
  காண்கின்ற விவையெல்லா மாத்ம ரூபம். (1)

இது பத்தாவது அத்தியாயத்தின் முதல்பாடல்.

ஆ. முடிவு

(மிகச் சிதைவு. ஒரு வரி கூட முழுக்கத் தெரியவில்லை.)

5. .... ...... ............

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1 : 270, 655, 678; 16 : ஆர். 1208, 1596, 1597;
18 : 8207ஏ, 8210 ; 32 : 147ஏ, 209.

## 417. ரிபு கீதை

1. நூலகக் குறிப்புகள்

அ. 270
ஆ. ட/20

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. .....................
ஆ. ரிபு கீதை
இ. தத்துவம்
ஈ. செய்யுள் 1925

## 3. தோற்றக் கூறுகள்

அ. 175 ஏடு; 350 பக்கம்.

ஆ. நீளம் 20 செ. மீ.; அகலம் 6 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 14 முதல் 19 வரை பலவித வரி.

உ. அழகிய தெளிவான கையெழுத்து.

ஊ. 131 ஆவது ஏடு காணப்படவில்லை. இடையிடையே சில ஏடுகள் மிகச் சிதைந்துள்ளன. பல ஏடுகளில் ஆங்காங்குத் தொளைகள் விழுந்துள்ளன.

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஆனைமுக னாறுமுக னருளாந் தேவி
யனந்தகண மளவற்ற முனிவர் தேவர்
ஏனையுள நல்லன்ப ரியாவ ராலும்
எப்பயனும் பெறவேண்டி இதயத் தின்கண்
ஊனமற உபாசிக்கப் பட்டன் னோர்க்கிங்கு
உவந்தபய னருள்கருணா மூர்த்தி யாகி
வானமென வகண்டசிதா காச மான
வஸ்துவதாம் பரசிவனை வணங்கல் செய்வாம். (1)

ஆ. முடிவு

தேசி கன்தெரி வித்த திறப்படி
தீர மாய்நிதித் யாசம் புரிந்ததால்
ஈச னல்லருள் பெற்றவர் முத்தியை
எய்த லாமென முன்பு விளம்பிமற்
றேசி லாவிந்த நூலின் மகத்துவ
மியாவு மோதி யிவற்றை முடித்திட
லாசி லானந்தத் தாண்டவ மாடுநம்
மபிகே சன்கண்ட சொரூபமே. (53)

இப்படி மகேதிகாசமான சிவரகசியத்தி னாறாமம்சத்திலுள்ள ரிபு கீதையில் நாற்பத்தி நான்காவதத்தியாய முற்றிற்று. ஆக அத்தியாயம் நாற்பத்தி நாலுக்குத் திருவிருத்தம் 1925.

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அருணகிரிநாதர்
ஆ. கந்தரநுபூதி
இ. சிற்றிலக்கியம்
ஈ. செய்யுள் 52

## 3. தோற்றக் கூறுகள்

அ. 26 ஏடு ; 52 பக்கம்.
ஆ. நீளம் 16 செ.மீ.; அகலம் 3 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 4 வரி.
உ. கிறுக்கலான கையெழுத்து.
ஊ. மிகமிகச் சிதிலமடைந்த நிலை.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

நெஞ்சக் கனகல் லுநெகிழ்ந் துருகத்
தஞ்சத் தருள்சண் முகனுக் கியல்சேர்
செஞ்சொற் புனைமா லைசிறந் திடவே
பஞ்சக் கரஆ னைபதம் பணிவாம்.

ஆ. முடிவு

உருவாய் அருவாய் உளதாய் ..........
(ம)ருவாய் மலராய் மணியாய் ஒளியாய்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே. (51)

## 5. பிற செய்திகள்

இச்சுவடியில் 26,30,33,41 50,51 ஆகிய ஆறு பாடல்களுக் குரிய சக்கரங்கள் உள்ளன. செபவிதி முதலியன கொடுக்கப் படவில்லை.

## 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

8 : 6இ, 143டி ; 16 : ஆர். 129, ஆர். 2015 ; 18 : 6369ஏ, 9069சி ; 25 : 774, 779, 780 ; 27 : 389, 509, 882சி ; 28 : 33717 ; 31 : 191ஏ ; 32 : 230டி ; 54 : 2573பி ; 55 : டி11ஏ ; 62:6 பி.யூ.பி.

## 7. வெளியீட்டுச் செய்திகள்

பல பதிப்புகள் வெளிவந்துள்ளன.

# 471. குன்றக்குடி முருகன் பதிகம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 321-1
ஆ. ய/23

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ...............
ஆ. குன்றக்குடி முருகன் பதிகம்
இ. சிற்றிலக்கியம்
ஈ. செய்யுள் 10

## 3. தோற்றக் கூறுகள்

அ. 10 ஏடு ; 20 பக்கம்.
ஆ. நீளம் 16 செ.மீ.; அகலம் 3 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 4, 5, 6 வரி.
உ. கிறுக்கலான கையெழுத்து. பிழைகள் மலிந்த சுவடி.
ஊ. மிகப் பழுதுற்ற நிலை.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

### அ. தொடக்கம்

பூரணிப ராசத்தி தேவியம் பிகைதரும்
புதல்வனே பொதிகைமலைவாழ்
புகலரிய குறுமுனிக் குத்தமிழ் உரைத்திடும்
புலவனே புலவர்கோவே
காரணிக றைக்கண்ட ருக்குவுப தேசமது
கருதுமெஞ் ஞான குருவே
கண்கள்ஈ ராறுடைய கத்(தனே) சுத்தனே
கரியவண்டு ஆர்கடம்பந்
தாரணி(யு) மார்பனே தமிழ்கொண்டு நக்கீரர்
தன்துயர் தீர்த்து அருள்செய்யும்
சத்திவடி வேல்கரத் தணியுமுரு க...... ன
தனையர்தந்து அருள்புரிகுவாய்
கோரணமி கு(ஞ்)சூர சங்கார வோங்கார
குறவள்ளி மணவாளனே
கொன்றைசூ டியகோல மன்றுளா டுவர்பால
குன்றைமா நகர்வேலனே.

### ஆ. முடிவு

திருவேஉ யர்ந்ததனி வாசம்மி குந்தேனே
தெவிட்டாத தெள்ளமுதமே
தித்திக்கும் மதுரமுக் கனியே கரும்பே
சிறந்தமுத் தேரத்னமே
அருவேவி ளங்கிவளர் திவ்யஉரு வேநல்ல
அகண்ட.வடி வேயப்பனே
ஆதிநடு முடிவாகி எங்கும்... சோதியே
அன்பர்வேண் டியதுஅளிக்கும்
தருவேசி க.......... ............ ... ..........
............. முத்திவித்தே
சண்முகா சரவணப வாகடம் பாசி...ர்
தந்தருளு வாய்சிவாய
குருவேம யூரவா கனஅகில நாயகா
குறவள்ளி மணவாளனே
கொன்றைசூ டியகோல மன்றுளா டுவர்பால
குன்றைமா நகர்வேலனே. (10)

5. .... .......

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

33 : 2.

## 472. பினாங்கு தண்ணிமலை வடிவேலன் பதிகம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 321-2
ஆ. ய/23

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..........
ஆ. பினாங்கு தண்ணிமலை வடிவேலன் பதிகம்
இ. சிற்றிலக்கியம்
ஈ. செய்யுள் 10

3. தோற்றக் கூறுகள்

அ. 9 ஏடு ; 18 பக்கம். (ஏட்டெண் 11 முதல்)
ஆ. நீளம் 16 செ.மீ.; அகலம் 3 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 5, 6 வரி.
உ. கிறுக்கலான கையெழுத்து. பிழைகள் மிக அதிகம்.
ஊ. இரண்டாம் பாடல் எழுதப்பெற்ற 12ஆம் ஏடு காணப்பட வில்லை. மிகப்பழுதுற்ற நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

........... ... வள்ளி தெய்வானை கேள்வனே
எங்கும ... ... ... பொருளே
ஈராறு ...யனே ஈராறு விழியனே
ஈராறு திண்டோளனே

குரவனே அரவிந்த சரணனே சேவலங்
கொடியனே ………
கோலமயில் வாகனா சீலமிகு தேசிகா
குஞ்சரமு கன்துணைவனே
அரவமிசை துயில்கண்ணன் மருகனே …… …
……… .. ……. …
அமரர்சே னாபதே குமரகுரு பரனேஎன்
அப்பனே . ஒப்பிலானே
சரவணப வானந்த னேகந்த னேஎங்கள்
சண்முகத் தம்பிரானே
தண்ணிலவை அணிகோல அண்ணல்அரு ளியபால
தண்ணிமலை வடிவேலனே. (1)

ஆ. முடிவு

மண்டலத் தில்உனது திருநாமம் ஓதிஉலை
வாயில்இடு மெழுகுபோல
மனம்உருகி இனிமையுடன் அநுதினமும் உனதுபத
வனசமலர் தனைவணங்கும்
தொண்டருக்கு எ…… அணுகாது நெஞ்சில்ஒரு
துயரமும்வ ராது ……
சொல்லரிய புத்திரசந் தானமும் ……
சுகமான வாழ்வுமுண் டாம்
பண்டைவினை எல்லா… …போம் அளவற்ற
பாக்கியம்உண் டாகும்முடிவில்
பரலோக மும்சேரும் அதனால்உன் மகிமையைப்
பார்மீதில்எவர் உரைப்பார்
தண்டையங் காலனே அண்டர்பணி லோலனே
சண்முகத் தம்பிரானே
தண்ணிலவை அணிகோல அண்ணல்அரு ளியபால
தண்ணிமலை வடிவேலனே. (10)

தண்ணிமலை வடிவேலர் விருத்தம் முற்றுப்பெற்றது.

## 473. வைங்காளம் தண்டபாணி பதிகம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 321-3
ஆ. ய/23

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..........
ஆ. வங்காளம் தண்டபாணி பதிகம்
இ. சிற்றிலக்கியம்
ஈ. செய்யுள் 10

3. தோற்றக் கூறுகள்

அ. 10 ஏடு ; 20 பக்கம்.
ஆ. நீளம் 16 செ.மீ.; அகலம் 3 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 5, 6 வரி.
உ. கிறுக்கலான எழுத்து. பிழைகள் அதிகம்.
ஊ. மிகப் பழுதுற்ற நிலை.
ஏ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

மணிகொண்ட .......... மணிமகுட முடியும்மலை
மகள்தன்முலை உண்டவாயும்
மலர்வதனம் ஓராறும் இலகுகரம் ஈராறும்
வண்கருணை பொழிவிழிகளும்
அணிகொண்ட மார்பிற்க டப்பமா லிகையும்மே
லானநீறு அணிநுதலு மேனியும்
அரியசே வற்கொடியும் வடிவேலும் முந்நூலும்
அத்தமிசை வைத்ததண்டும்
பணிகொண்ட பாதலம் பணிகின்ற உபயபொற்
பாதமும்என் கண்காணவே
பச்சைமயில் மேல்வள்ளி தெய்வானை யுடன்வந்து
பட்சம்வைத் தருள்புரிகுவாய்
திணிகொண்ட பன்னிருபு யாசலக் கடவுளே
தெண்டாயு தக்கந்தனே
செங்காவி வயல்சூழும் வங்காள நகர்மேவும்
சிங்கார முருகேசனே. (1)

ஆ. முடிவு

…. … நெடுந்தடங் கடல்விடந் தனையுண்ட
கயிலாச வாசனுக்கும்
……. மலை மகளாயு தித்தமங் கைக்கும்நல்
கங்கைக்கும் உரியசுதனே
வாரார்க னத்ததன மாதுதெய் வானைக்கும்
வள்ளிக்கும் மணவாளனே
மலரமளி நான்முகப் பிரமனுக் கும்இரதி
வரனுக்கும் உயர்மைத்துனா
நாராய ணற்கும்விண் ணவர்பிரா னுக்கும்நறு
நளினமா துக்கும்மருகா
நாகமுக னுக்கிளைய தோகைமயில் வாகனா
நவவீரர் முன்வந்தவா
சீரார்க டப்பமலர் மாலையணி மார்பனே
தெண்டாயு தக்கந்தனே
செங்காவி வயல்சூழும் வங்காள நகர்மேவும்
சிங்கார முருகேசனே. (10)

## 471. சிவகங்கை உலகநாதசுவாமி பதிகம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 321-4
ஆ. ம/23

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ……….
ஆ. சிவகங்கை உலகநாதசுவாமி பதிகம்
இ. சிற்றிலக்கியம்
ஈ. செய்யுள் 10

### 3. தோற்றக் கூறுகள்

அ. 10 ஏடு ; 20 பக்கம்.
ஆ. நீளம் 16 செ.மீ.; அகலம் 3 செ.மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 5, 6 வரி.
உ. கிறுக்கலான கையெழுத்து. பிழைகள் மிகுதி.
ஊ. மிகப்பழுதுற்ற நிலை.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பூமலிந் திடுசெய... ......... .........
புனிதஉயர் கருணைவிழியும்
பூரணம்இ லங்குசந்த் ரோதயமென் வதனமும்
பொ........ச மூறுவாயும்
தாமமது திகழ்கின்ற புயமும்மணி மார்பும்....
......... ........... புருவமும்
தங்கமய மாயிலங் கிடுவச்ர தேகமும்
தவளநீறு அணியும்நுதலும்
வாமமிகும் அடியவர்கள் தமைய.... தித்தருளும்
மலர்அபய கரம்இரண்டும்
மலவினைகள் அகலவென் கண்காண வருகுவாய்
மாசற்ற கருணாநிதே
மாமதியை ........... ......... எனையாள
வந்தபேர் இன்பவாழ்வே
மலரில்உறை திருமங்கை இலகிநிறை சிவகங்கை
வளர்உலக நாதகுருவே. (1)

ஆ. முடிவு

தலமீது நின்னையொரு தரம்நினைத் திடுமவர்கள்
சாலோக பதவியடைவார் ;
தன்மையுட னேரெண்டு தரம்நினைத் திடும்அன்பர்
சாமீப பதவிசேர்வார் ;
நலமாக மூன்றுதரம் உன்னும்மெய் அடியவர்கள்
நல்லசா ரூபம்உறுவார் ;
நாலுதரம் நினைகின்ற மெய்த்தொண்டர் சாயுச்ய
நவில்பதத் தினைஎய்துவார் ;

பலகால்நி னைத்திடுவர் பெறும்பதவி தனைஇன்ன
பதவியென நானறிகிலேன் ;
பணிபவர்கள் நெஞ்சினில் நினைத்ததெல் லாம்வரும்
படிசெய்வாய் தவமுயல்
வலனேஉன் மகிமைஎன் சொல்லுவேன் என்னைஆள
வந்தபே ரின்பவாழ்வே
மலரில்உறை திருமங்கை இலகிநிறை சிவகங்கை
வளர்உலக நாதகுருவே. (10)

## 475. சிவபுராணம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 322
ஆ. ண/20

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. மாணிக்க வாசகர்
ஆ. சிவபுராணம்
இ. சைவத் திருமுறை
ஈ. செய்யுள் 95 அடி

### 3. தோற்றக் கூறுகள்

அ. 6 ஏடு ; 12 பக்கம்.
ஆ. நீளம் 17.5 செ. மீ.; அகலம் 3 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 9 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. மிகமிகப்பழுதுற்ற நிலை.
எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

(முதல் ஏட்டில் ''தொல்லை யிரும்பிறவி'' எனத்தொடங்கும் வெண்பா இடம்பெற்றுள்ளது. இரண்டாம் ஏட்டில்தான் நூல் ஆரம்பிக்கிறது.)

நமச்சிவாய வாழ்க நாதன்றாள் வாழ்க
... ப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க
கோகழி ஆண்ட குருமணிதன் தாள்வாழ்க
ஆகமம் ஆகிநின்று அண்ணிப்பான் ... வாழ்க.

ஆ. முடிவு

சொல்லற்கு அரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தின் உள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரும் ஏத்தப் பணிந்து.

## 476. தட்சிணாமூர்த்தி யட்டகம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 323
ஆ. ய/24

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. நித்தியானந்த சுவாமிகள்
ஆ. தட்சிணாமூர்த்தி யட்டகம்
இ. சிற்றிலக்கியம்
ஈ. செய்யுள் 14

### 3. தோற்றக் கூறுகள்

அ. 8 ஏடு ; 16 பக்கம்.
ஆ. நீளம் 12 செ.மீ.; அகலம் 2.75 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 7,8 வரி.
உ. தெளிவாள கையெழுத்து.
ஊ. மிகப்பழுதுற்ற நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சீர்பூத்த மவுனமதாய் அருமறைமா முடிகள்
    திகழத ... பரப்பிரமதத்துவனையணிய... ....
நேர்பூத்த வுயர்சீட விருடிகணப் பிரம
    நிட்டர்கள்சூழ் தரநிறைமா மதியினைச்செங் கழுநீர்த்
தார்பூத்த குருபரனைச் சின்முத்தி ரைக்கை
    தரித்தவனை ஆனந்த மூர்த்தியைத்தன் மயனை
ஏர்பூத்த முதிதவதனனையெ... ஞான்று
    எழிலுறுசீர்த் தட்சிணா மூர்த்தியையேத் தெடுப்பாம். (1)

ஆ. முடிவு

ஆரியத்தில் உளதட்சி ணாமூர்த்தி
    அட்டகத்தை அன்பி னாலே
கூரியசெந் தமிழ்ப்பாவால் செய்துகொடுத்
    தனன்எவர்க்கும் குறைவு தீரச்
சீரியநற் குணங்களெலாம் திரண்டுவுருச்
    கொண்டு ... செகத்து எழுந்த
நேரியமெஞ் ஞானசிகா மணியாநித்தி
    யானந்த நிமலன் தானே. (14)

தட்சிணா மூர்த்தியட்டகம் முற்றும்.

5. பிறசெய்திகள்

இச் சுவடி முற்றும் எழுதப்பட்ட பிறகு திருத்தப்பெற்றுள்ளது.

## 477. சடாக்கர அந்தாதி

1. நூலகக் குறிப்புகள்

அ. 324
ஆ. ய/25

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அகத்தியர்
ஆ. சடாக்கர அந்தாதி (ஆறெழுத்தந்தாதி)
இ. சிற்றிலக்கியம்
ஈ. செய்யுள் 100

## 3. தோற்றக் கூறுகள்

அ. 47 ஏடு ; 94 பக்கம்
ஆ. நீளம் 15.5 செ.மீ.; அகலம் 3 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 4 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. மிகமிகப் பழுதுற்ற நிலை. அனைத்தேடுகளும் சிதைவு. 47 ஆம் ஏட்டிற்குமேல் காணப்படவில்லை.
எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

(ஏடு மிகச்சிதைந்துள்ளதால் படிக்க இயலவில்லை)

ஆ. முடிவு

முன்னிற்ப தாரவன் முன்னிற்ப தாரம் முருகனெவன்
வென்னிற்கும் வெம்பக லோவிரு ளோதெய்வம் வேறுளதோ
தன்னிற்குந் தன்னிழல் தன்னிட மானவத் தன்மையைப்போல்
உன்னிற்க முன்னிழல் நானுன் னிடத்தி லொடுக்கங்களே. (94)

இ. பிறசெய்திகள்

சடாட்சர அந்தாதி என்ற பெயரிலேயே தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் வேறு ஒரு சுவடியும் உள்ளது, (தொடர் எண் 820) ஆனால் இரண்டும் வேறுவேறு அந்தாதிகள். மாற்றுச் சுவடிகள் பற்றிய விவரம் பெயர் ஒன்றை மட்டும் கொண்டு தரப்பட்டதாகும்.

## 5. .... ...... .. ... .. ....

## 6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

8 : 6டி ; 16 : 250, ஆர். 1228, ஆர். 1890 ; 18 : 2421டி, 3799, 6259, 9149டி, 9190 சி, 9590, 9982 ஏ, 11316 ; 25 : 677, 678 ; 27 : 843 ; 28 : 4204 ; 31 : 189.

## 7. வெளியீட்டுச் செய்திகள்

இந்நூல் ஆறெழுத்தந்தாதி என்ற பெயரில் அச்சிடப்பட்டுள்ளது.

## 478. தட்சிணாமூர்த்தி யட்டகம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 325
ஆ. ய/26

2. உள்ளீடு : நூல்விவரம்

அ. நித்தியானந்த சுவாமிகள்
ஆ. தட்சிணாமூர்த்தி யட்டகம்
இ. சிற்றிலக்கியம்
ஈ. செய்யுள் 14

3. தோற்றக் கூறுகள்

அ. 5 ஏடு; 10 பக்கம்.
ஆ நீளம் 25 செ. மீ.; அகலம் 3.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ பக்கத்திற்கு 7 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. பழுதுற்ற நிலை. அனைத்தேடுகளிலும் தொளைகள்.

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு

தொடர் எண் : 323 காண்க.

5. பிறசெய்திகள்

நூலை அடுத்து இவ்வட்டகத்தின் முதல் நினைப்புச் செய்யுள் ஒன்று தலைப்புப்பாடல் என்ற பெய ருடன் கொடுக்கப்பட்டுள்ளது.

## 479. பஞ்சதசப் பிரகரணம்

1. நூலகக்குறிப்புகள்

அ. 326
அ. ட/57

## 2. உள்ளீடு : நூல்விவரம்

அ. ...............

ஆ. பஞ்சதசப்பிரகரணம் : முதலாவது தத்துவ விவேகம்

இ. தத்துவம்

ஈ. செய்யுள் 58

## 3. தோற்றக் கூறுகள்

அ. 7 ஏடு; 14 பக்கம்.

ஆ. நீளம் 60 செ.மீ.; அகலம் 3 செ.மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கம் 5 பத்தியாகப் பிரித்துக் கொள்ளப்பட்டுள்ளது; பத்திக்கு 4 வரி.

உ. தெளிவான கையெழுத்து.

ஊ. ஏடுகளில் ஆங்காங்கு தொளைகள்; சுமாரான நிலை.

எ. முழுமை.

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

திருவளர் சங்கரா னந்த தேசிகன்
பெருகுமா மோகமாம் பெருங்க ராத்தினைப்
பருகிஇன்பு அருளலே பரம வேலையாம்
மருமலி பாததா மரைவ ணங்குவாம். (1)

ஆ. முடிவு

தூண்டருஞ் சுடரே யாரும் சுகமுற மணிமன்று உற்றுத்
தாண்டவம் புரிந்துஎம் போல்வார் தளர்வற மேனி சாத்தி
ஈண்டுஅணைந்து எனையும் ஆட்கொண்டு எனதுஅகம் கோயில் கொண்ட
ஆண்டவன் என்நா மன்னி அருளினன் இதனை அம்மா. (58)

இத்தகைத் தத்துவவிவேகம் முற்றிற்று.

## 480. திருவாசகர்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 327
ஆ. ண/21

### 2. உள்ளீடு : நூல்விவரம்

அ. மாணிக்கவாசகர்
ஆ. திருவாசகம்
இ. சைவத்திருமுறை
ஈ. செய்யுள் 656

### 3. தோற்றக் கூறுகள்

அ. 197 ஏடு; 394 பக்கம்.
ஆ. நீளம் 25.5 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 6,7 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. சுவடியின் வலப்புறத்தில் பல ஏடுகள் சற்றே சிதைந்துள்ளன. சுமாரான நிலை.
எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு

தொடர் எண் : 2 காண்க.

## 481. வீராசாமி

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 328 - 1
ஆ. ட/58

## 2. உள்ளீடு : நூல்விவரம்

அ. சாந்தலிங்கர் - திருமழிசை
ஆ. வீராகமம் : மூலமும் உரையும்
இ. தத்துவம்
ஈ. செய்யுளும் உரைநடையும். அச்சில் ஏறத்தாழ 40 பக்கங்கள் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 73 ஏடு; 146 பக்கம்.
ஆ. நீளம் 26 செ மீ ; அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 6 வரி.
உ. தெளிவான கையெழுத்து, பிழைகள் மிகுதி. மெய்யெழுத்துகளைக் காட்டப் பெரியசுழிகள் எழுத்தை அடுத்து மேல்புறம் போடப்பட்டுள்ளன (இம்மாதிரி க° ங°).
ஊ. ஏடுகளில் ஆங்காங்குத் தொளைகள். சில இடங்களில் பழுது. மொத்தத்தில் சுமாரான நிலை.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ தொடக்கம்

அரிய சஞ்சித மகலவும் புரிஉ டம்பு இடர் ஒழியவும்
விரியும் நம்பவம் எரியவும் கரிமு கன்கழல் கருதுவாம்.

(எ து) அரிதாகிய சஞ்சிதமாகிய இருவினையும் அகலவும், உடம்பினுடைய துன்பமானது எரிந்து போகவும் ஆனை முகத்தினை உடைய விக்கினேசுரனுடைய பாதத்தைக் கருதுவாம் - தியானிப்பாம் என்றவாறு.

ஆ. முடிவு

மாரி நாளின் மதிமுன் அரம்பைநீர்
    ஈரம் மாற உலர்த்தி எரித்து அமுது
ஆர ஊட்டுவர் போல்என் அவாவினைச்
    சாரவும் நீத்தருள் தந்தவர் வாழியே.

(எ து) மழை நாளிலே சந்திரன் முன்னே வாழை மரத்தை உலரவைத்து அதனாலே அமுது சமைத்துப் படைத்தவரைப் போல அடியேனுடைய ஆசையாகிற தொடர்ச்சியை நீக்கி அருள் தரப்பட்ட மெய்ஞான குருவினுடைய பாதம் வாழ்ந்திருக்க என்றவாறு. (117)

வீராகமம் முற்றும்.

இ. பிற்குறிப்பு

ருத்ரோத்காரி வருஷம் மார்கழி மாதம் 19ஆம் தேதி சுக்கிர வாரம் கோக்காலடி கமலசித்த அய்யர் சுவடி.

## 482. பஞ்சசூதக நிவர்த்தி

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 328 - 2
ஆ. ட/58

### 2. உள்ளீடு : நூல்விவரம்

அ. ..................
ஆ. பஞ்ச சூதக நிவர்த்தி
இ. பல்வகை
ஈ. செய்யுளும் உரையும். அச்சில் 4 பக்கம் வரும்.

### 3. தோற்றக்கூறுகள்

அ. 3 ஏடு; 6 பக்கம். (ஏட்டெண் 74 முதல் 76 வரை)
ஆ. நீளம் 26 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 6 வரி.
உ. தெளிவான கையெழுத்து. பிழைகள் மிகுதி.
மெய்யெழுத்துக்களைச் சுட்ட அருகில் மேலே சுழிகள் உள்ளன (க° த° என்பன போல).
ஊ. நல்லநிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சாதி சூதகம் விலக்கல் :

குரவன்அரு ளால்சிறந்த கோதுஇல்இலிங் கம்தன்னில்
அரியலிங்க சம்மந்தம் ஆனோர் திருஉருவம்
ஆனசிவ லிங்கஉரு ஆதலால் சாதிஎனும்
ஈனமுறும் சூதகமே இல்.

ஆ. முடிவு

மரணம் :

சீரியலிங் கத்தொழிலே சேர்ந்து சிவாசார
தாரி பரியாமல் தான்அடைந்து—பேரருளால்
ஆண்டசிவ லிங்கத்து அடங்கு சரணனுக்கே
ஈண்டுஇறக்கும் சூதகமே இல்.

(எ... து) சர்வமும் லிங்கமே என்கிற பக்தியுடனே சிவாசாரதாரியாய்ப் பிரியா நிலைமையாயிருப்பதால் பெரிய அருளைஉடைய சிவலிங்கத்தில் அடங்கும் சரணராகிய அடியவர்க்கு பிறந்திறக்கும் சூதகம் இல்லை என்றவாறு. (5)

பஞ்சசூதக நிவர்த்தி முற்றும்.

இ. பிற்குறிப்பு

ருத்ரோத்காரி வருஷம் மார்கழி மாதம் 30 ஆம் தேதி மங்கள வாரம் சதுர்த்தி திதியும் சதைய நட்சத்திரமும் ரிஷபலக்னம் கூடிய சுபயோக சுபதினத்தில் கமலசித்த அய்யர் அவர்கள் குமாரன் சுப்ப அய்யர் எழுதி முற்றும். எடுத்து வாசித்த பேர் கேட்ட பேர் எல்லர்ருக்கும் சுவாமி மோட்சத்தை அநுக்கிரகம்பண்ணுவார்.

## 483. நலங்குப் பாடல்கள்

1. நூலகக் குறிப்புகள்

அ. 329
ஆ. ற/16

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..............
ஆ. நலங்குப் பாடல்கள்
இ. பல்வகை நூல்கள்.
ஈ. செய்யுள், அச்சில் ஏறத்தாழ 6 பக்கம் வரும்.

## 3. தோற்றக்கூறுகள்

அ. 8 ஏடு; 16 பக்கம்.
ஆ. நீளம் 26 செ.மீ.; அகலம் 3 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 6 வரி.
உ. தெளிவான கையெழுத்து பிழைகள் மிகுதி.
ஊ. சற்றுப்பழுதடைந்த சுவடி. சில இடங்களில் தொளைகள்.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஆறுமுக செயசெய தெய்வானை வள்ளி மணவாளன்
நீறுபுனை திருமேனி திக---ய------முராசதி
பரமசிவன் உமையவட்குப் பாலன்என வந்துஉதித்து
சரவணப்பூம் பொய்கையிற்சென் ---மரையாசந்த

ஆ. முடிவு

அய்யர் முருகேசருக்கும் ஆரிழை தெய்வானையற்கும்
தையல்வள்ளி நாயகிக்கும் சதா நித்ய சோபனமே
சோபனம் சோபனம் சோபனமே-நித்திய

சுபசெய சோபன மங்களம்

நீபமலர் மாலையற்கும் நித்திய சுபசெய மங்களம்.
மணமகளும் மணமகனும் வாழி நித்தியம் சுபமங்களம்.

இ. பிற்குறிப்பு

-------வருஷம் ஆனி மாதம் 30ஆம் தேதி கோக்காலடியில்
இருக்கும் கமலசித்த அய்யர் நலங்குப்பாட்டு.

# 481. பகவத் கீதை

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 330
ஆ. ட/59

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. பட்டர்
ஆ. பகவத் கீதை : மூலமும் உரையும்
இ. தத்துவம்
ஈ. செய்யுளும் உரைநடையும். அச்சில் ஏறத்தாழ 80 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 123 ஏடு ; 246 பக்கம்.
ஆ. நீளம் 35 செ.மீ.; அகலம் 3.5 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 6,7 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. 95 — 114, 134 — 137, 140, 142, 143, 146, 150க்கு மேல் இருக்க வேண்டியவை ஆகிய ஏடுகள் காணப்படவில்லை. உள்ளவை நல்ல நிலை.
எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஐவகைப் பொருளும் நான்கு கரணமும் குணங்கள் மூன்றும்
செய்வினை இரண்டும் ஒன்றி யாவரும் திகைப்ப நின்ற
பொய்யிருள் அகல ஞானப் பொருட்கதிர் விரித்த புத்தேள்
கைவளர் ஆழிச் செங்கண் கண்ணனைக் கண்ணுள் வைப்பாம்.

ஆ. முடிவு

ஒளியினால் உலகம் எல்லாம் ஒளித்தவை யூண்போ தாமை
வெளியினா நீட்டி நீட்டி வெறுஞ்சுவை கொள்ளாய் நின்றாய்
தெளிகலேன் உன்னை உன்றன் செய்கையுந் தெரிக்க மாட்டேன்
நளியினால் அடியேற்கு உன்னை உள்ளவாறு அருளிச் செய்வாய்.

(எ... து) ஞானப்பிரகாசத்தினாலே உலகம் எல்லாத்தையும் உண்டு ஒளித்து அதுபோதாமல் வெளியினில் நாவை நீட்டி நீட்டி ருசி இல்லாததை உள்ளே கொள்ள நினைந்தாய். ஆகையினாலே உன்னையும் அறியேன்; உன் செய்கையும் அறியேன்; உன் மகிமையைக் கிருபையினாலே அடியேனுக்கு உண்டானபடி தயவு பண்ணிச் சொல்லவே ..... (இதற்குமேல் ஏடுகள் இல்லை. இது 11ஆவது அத்தியாயம் 24ஆவது பாடல்)

5. ... .... .......... .... .. ....

6. மாற்றுச்சுவடிகள் காணுமிடம்

8 : 35 ; 16 : ஆர். 1067, ஆர். 7153, ஆர். 7237 ; 17 : 55, 162 ; 28 : 45899 ; 32 : 205.

## 185. சிதம்பர புராணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 331
ஆ. ப/25

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. திருமலை நாதர்—புராணம்
ஆ. சிதம்பர புராணம் மூலமும் சிவப்பிரகாச அய்யர் உரையும்.
இ. தலபுராணம்
ஈ. செய்யுளும் உரைநடையும். அச்சில் ஏறத்தாழ 300 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 268 ஏடு ; 536 பக்கம்.
ஆ. நீளம் 42 செ.மீ.; அகலம் 3.5 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 7 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. சில ஏடுகள் ஆங்காங்கு சிதைவு. பொதுவாகச் சுமாரான நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

வான நாடரும் மாதவ நாடரும்
மோன ஞானம் முழுதும் உணர்ந்திடத்
தானம் மேவும் தடவிக டாசலத்து
ஆனை மாமுகத்து அண்ணலை ஏத்துவாம்.

ஆ. முடிவு

அருமறையின் சிரத்துஒளியாய் ஆனந்த
  நாட்டியம்செய் அமலற்கு அன்பா
திருவருள்பெற்று உயர்சைவ புராணத்தில்
  சிதம்பரத்தின் திகழும் மேன்மைப்
பொருள்தெரியத் தமிழ்விருத்த யாப்பதனால்
  நவரசங்கள் பொலிய மன்னும்
திருமலைநா தன்புதல்வன் பரஞ்சோதி
  மாமுனிவன் செப்பி னானே.

(எ து) சகல வித்தைகளுக்கும் முதன்மையாய் உத்தம வித்தையாய் எழுதப்படாத வேதங்களின் சிரசுகளான உபநிடதங் களை விளக்கி ஆனந்த நடனம் புரியும் அம்பலவாண மூர்த்தி பாதார விந்தங்களிலே பக்திபூண்டு நிலையான கீர்த்தி தேகம் படைத்த திருமலைநாதன் செய்த தபோபலமே பிள்ளையாய் அவதரித்த பரஞ்சோதி மாமுனிவன் சிவானுக்கிரகம் பெற்று மேன்மையான சைவ புராணத்திலே பிரகாசிக்கும் சிதம்பரத் தலமகிமாதிசயத்தின் பொருளை நல்லோர்கள் அறியத் தக்கதாகத் தென்மொழி விருத்தப் பாவினங்களினாலே நவரச அலங்காரங்கள் வளர்ச்சிபெறப் பாடினார் என்றவாறு. (99)

செந்தமிழால் பிரபுலிங்க லீலை சொன்ன
சிவப்பிரகா சக்கடவுள் பின்னோன் பேரன்
சந்திரசே கரன்தலங்கள் என்றும் ஓங்கும்
சையகிரி காவேரி மகிமை சொன்ன
சுந்தரமாம் சிவஞான தேவன் மைந்தன்
துய்யசிவப் பிரகாசன் புலவோர் தங்கள்
சிந்தைகளி கூரவிராட் புருடன் உள்ளச்
சிதம்பரமான் மியஉரையைச் செய்தான் மன்னோ.

(எ....து) வீரபத்திரசுவாமி திருவாய்மலர்ந்தருளிய பிரபுலிங்க லீலையும், கூரம் புராணம், கோவை, வேதாந்த சூடாமணி, சித்தாந்த சிகாமணி முதலான சிவசாஸ்த்திரங்களைச் செம்மையான திராவிட பாஷையினாலே பாடின துறவியாகிய சிவப்பிரகாச சுவாமிகளுக்கு இளையவரான நல்லூர்ப்புராணம், திருப்படையூர்ப் புராணம் பாடின வேலாயுதமூர்த்தி சகோதரனான காளத்திப்புராணம் பாடின கருணைச் சிவப்பிரகாசமூர்த்தியின் குமாரன் வாலீஸ்பர புராணம், பழமலைக் கோவை பாடின சாமிநாதய்யர் புத்திரரானவர் ; சைய கிரியிற் பிறந்து வரப்பட்ட, இரு கரைகளிலேயும் சந்திரப்பிறையணிந்த சடாமகுட முடைய பரசிவன் தலங்கள் எங்கும் விளங்கும் காவேரிப் புராணம் சொன்ன சவுந்தரிய முண்டான சிவஞானய்யர் புதல்வனான சிவப்பிரகாசய்யர் பரிசுத்தராகிய கவிவாணர்கள் மனம் சந்தோஷிக்கத் தக்கதாக விராட்புருடனின் இதயாரவிந்தத்திலே ஞானாகாசச் சுரூபமாகச் சிவன் ஆனந்த நாட்டியம் செய்யும் கனகமயமான சிதம்பரத் தலபுராணத்தின் மகிமாதிசயத்தின் பொருளைச் சாலிய வாகன சகாப்தம் 1712க்கு மேல் செல்லாநின்ற விரோதிகிருது வருஷம் கார்த்திகை மாதம் 20ஆம் தேதி சுக்கிரவாரம் பூர்வ பட்சம் சப்தமியும், சதய நட்சத்திரமும் கூடின சுபதினத்தில் தோணின மட்டும் உரைப்படுத்தினார் என்றவாறு. (100)

துற்றரிசனச் சருக்கம் முற்றும். ஆகச் சருக்கம் 9க்குத் திருவிருத்தம் 815.

இ. முற்குறிப்பு

சாலீவாகனசகாப்தம் 1772. கலியர்ப்தம் 4951 இதன் மேற் செல்லாநின்ற சாதாரண வருஷம் வைகாசி மாதம் 26ஆம் தேதி

வியாழக்கிழமை ஏகாதசி நாழிகை 33¼ ரேவதி நாழிகை 7¾ இதன் மேல் அசுவினி சவுபாக்கிய நாமயோகம் நாழிகை 5¾ இதன்மேல் சோபனம். பவகரணம் நாழிகை 3¾ ராத்திரி நாழிகை 25¾ வர்ச்சியம். இந்தச் சுபதினத்தில் உதிச்சு சாமத்துக்குமேல் கடகலக்னத்தில் கடகலக்னத்துக்கு 3ஆம் பாதத்தில் யாருமில்லை. கும்பத்திலும் யாருமில்லை. இந்த வேளையில் முத்துச் சுவாமிக்குச் சிதம்பர புராணம் எழுதத்துவக்கினது.

## 5. பிறசெய்திகள்

சுவடியின் ஈற்றில் நூல், நூலாசிரியர், உரையாசிரியர் பற்றிய செய்திகள் நிறைய இருப்பதால் விரிவாகக் காட்டப் பட்டுள்ளது.

# 486. சூடாமணி நிகண்டு

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 332
ஆ. ச/20

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. மண்டல புருடர்
ஆ. சூடாமணி நிகண்டு : முதல் தொகுதி
இ. இலக்கணம்
ஈ. செய்யுள் 100

## 3. தோற்றக் கூறுகள்

அ. 13 ஏடு, 26 பக்கம்.
ஆ. நீளம் 24 செ.மீ.; அகலம் 3.5 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 9,10 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. சுவடியின் வலப்புறம் பழுது.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பொன்னும்நன் மணியும் முத்தும் புனைந்தமுக் குடைநி ழற்ற
மின்னுபூம் பிண்டி நீழல் வீற்றிருந் ...... ... ........
மன்னிய நிகண்டு சூடா மணிஎன ஒன்று சொல்வன்
இந்நிலம் தன்னில் மிக்கோர் யாவரும் ......... ........... (1)

ஆ. முடிவு

எழுத்துச்சொற் பொரு .. ... .... எழில்அலங் காரம் கற்ற
பழுத்தச்சொற் குணபத் திரன்தன் பதுமத்தாட்கு அன்பு பூண்டு
வழுத்தி ..... ...-...... விரை மண்டிலன் என்ற பேர்க்கு
அழுத்தமாய்த் திரட்டி நூறு யாப்பென வகுத்திட் டானே. (100)

முதற் பெயர்த்தொகுதி முற்றும்.

## 187. அருணகிரி அந்தாதி

1. நூலகக் குறிப்புகள்

அ. 333
ஆ. ய/27

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. குகை நமச்சிவாயர்
ஆ. அருணகிரி அந்தாதி
இ. சிற்றிலக்கியம்
ஈ. செய்யுள் 102

3. தோற்றக் கூறுகள்

அ. 26 ஏடு ; 52 பக்கம்.
ஆ. நீளம் 43 செ.மீ.; அகலம் 2.5 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒருபக்கம் இரு பத்தியாகப் பிரிக்கப்பட்டுள்ளது. பத்திக்கு 4 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சித்திதரும் புத்திதரும் செந்திருவைச் சேரவைக்கும்
பத்திதரும் மெஞ்ஞானம் பாலிக்கும் — கொத்தி
அரிமுகனைக் காய்ந்த அருணேசர் தந்த
கரிமுகனைக் கைதொழுதக் கால்.

ஆ. முடிவு

அருணையந் தாதி அழகுவெண்பா நூறும்
கருணையுடன் கற்றோரைக் கண்டால் — அருணையண்ணல்
வீறான பொன்னுலகை வேந்தர்க்கு மாற்றியங்கே
மாறாமல் வைப்பார் மகிழ்ந்து. (102)

இ. பிற்குறிப்பு

கோரல் கிராமத்தில் இருக்கும் ராமலிங்கம் பிள்ளை மகன் அருணாசலம் பிள்ளை அருணகிரியந்தாதி எழுதினது. முற்றிற்று.

5. ........... ... ........... ....

6. மாற்றுச்சுவடிகள் காணுமிடம்

16 : 238 ; 18 : 9132 : 19 : 2999எ ; 27 : 135 - 137, 480டி ; 60:386 எச்; 65:எண் இல்லை ; 68:எண் இல்லை.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 488. குமரன் தாலாட்டு

1. நூலகக் குறிப்புகள்

அ. 334
ஆ. ய/28

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ............
ஆ. குமரன் தாலாட்டு
இ. சிற்றிலக்கியம்
ஈ. செய்யுள் ; 45 கண்ணிகள்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 6 ஏடுகள் ; 12 பக்கம்.
ஆ. நீளம் 43 செ. மீ. ; அகலம் 2.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 4 வரி.
உ. தெளிவான கையெழுத்து. பிழைகள் மிகுதி.
ஊ. வாரிப் பதப்படுத்தாத இரட்டை ஓலையில் அப்படியே எழுதப்பட்டுள்ளது.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

வாளும் மயிலும் வடிவேலும் பன்னிரண்டு
தோளும் துணையாகத் தோன்றுமே—மாலின்
மருகா அறுமுகவா வள்ளி மணவாளா
முருகாஎன்று ஓதுவார் முன்.

ஆ. முடிவு

சத்திவேல் தானெடுத்துத் தானவரைச் சங்கரித்து
முத்திபெற மோட்சம் முனிவர்க்கு அளித்தாரோ ! (44)

குழந்தை வடிவாகிக் கோலமயில் ஏறிவந்து
தவழ்ந்து விளையாடும் சண்முகரைச் சொன்னாரோ. (45)

முற்றிற்று.

இ. பிற்குறிப்பு

சார்வரி வருஷம் ஐப்பசி மாதம் 26ஆம் தேதி கோரல் கிராமத்தில் இருக்கும் ராமலிங்கம்பிள்ளை குமாரன் அருணாசல பிள்ளை, குமரன் தாலாட்டு எழுதி முடிந்தது. முற்றும்.

# 489. தருமர் அசுவமேத யாகம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 335
ஆ. ம/5

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ...............
ஆ. தருமர் அசுவமேதயாகம்
இ. உரைநடை இலக்கியம்
ஈ. உரைநடை. அச்சில் ஏறத்தாழ 150பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 262 ஏடு ; 524 பக்கம்.
ஆ. நீளம் 41 செ. மீ. ; அகலம் 3.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பலவிதமான வரி.
உ. தெளிவான கையெழுத்து. பிழைகள் மிகுதி.
ஊ. 1, 10, 20, 21, 50, 58, 103, 104, 113, 154, 240, மேலும் 273க்குமேல் இருக்கவேண்டியவை ஆகிய ஏடுகள் காணப்படவில்லை. சுவடியின் பிற்பாதியில் வலதுபுறம் சிதைவு. பழுதுற்ற நிலை.
எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஒருநாள் தருமராசா கொலுவாயிருக்கும்போது அவ்விடத்திற்கு வேதவியாசர் எழுந்தருளினார். அவருக்கு ரொம்ப பக்தி விசுவாசத்துடனே பூசை நமஸ்காரம்செய்து உட்காரவைத்துக் கொண்டு ஒரு வார்த்தை சொல்லுகிறார்.

அ. முடிவு

குலதேசாதி மனுஷர்களும் நம்முடைய யாகத்திலே தன கனக வஸ்து வாகனங்களிலேயும் போஜன பட்சண வகைகளிலேயும் திருப்தி அடையாதவர் இல்லை. சகலமான பேரும் தணிஞ் சார்கள். இப்படி உங்களுடைய கிருபாகடாட்சத்து.... (மேலே ஏடுகள் இல்லை.)

5. ............

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

தொடர் எண் : 4 காண்க.

## 490. திருவாதவூரர் புராணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 336
ஆ. ந/47

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. கடவுள் மாமுனிவர்
ஆ. திருவாதவூரர் புராணம் : மூலமும் உரையும்
இ. காப்பியம்
ஈ. செய்யுளும் உரைநடையும். அச்சில் ஏறத்தாழ 300 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 165 ஏடு ; 330 பக்கம்.
ஆ. நீளம் 35 செ.மீ. ; அகலம் 3 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 6 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. 42 - 81, 115 - 131, 161, 181 - 183, 197 - 200, 214, 219, 220, 224 - 226, 228, 229, 232 - 238, 240 - 248 ஆகிய ஏடுகள் காணப்படவில்லை. இருப்பவை நல்ல நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தொடர் எண் 135 காண்க.

ஆ. முடிவு

பூதல மாது வாழ்க பொன்மழை பொழிந்து வாழ்க
வேதம்ஆ கமமும் வாழ்க வேந்தர்செங் கோலும் வாழ்க
தீதில்அஞ் செழுத்தும் நீறும் சிவனடி யாரும் வாழ்க
வாதவூர்ப் புராணம் ஓதிப் படித்திடக் கேட்டோர் வாழ்க.

(எ....து) பூதலமான பூமாதேவி வாழ்க வென்றதினாலே அந்தப் பூமிக்குள்ளே இருக்கிற சகல சீவராசிகளும் வாழ்க! வேதமும் ஆகமமும் சகல சாஸ்திர புராண கலைக்கியானமும் வாழ்க! ராசாவினுடைய செங்கோலும் நீதியும் வாழ்க! குற்ற மில்லாத அஞ்செழுத்தான பஞ்சாட்சரமும் திருநீறும் சிவ சமயமும் சிவனடியாரும் வாழ்க! என்றது எதனாலே என்றால் இந்த வாதவூரரின் புராணத்தை ஓதிப் படித்து வடித்துப் பொருள் சொல்லக் கேட்டவர் மகிழ்ச்சியாய் வாழ்ந்திருப்பதாக! இவை யெல்லாம் வாழ்க என்றவாறு. (33)

திருவடி பெற்ற சருக்கம் முற்றும். ஆகச் சருக்கம் 8க்குத் திருவிருத்தம் 543.

திருச்சிற்றம்பலம். தேவி சகாயம்.

## 491. அகத்தியர் குழம்பு

1. நூலகக் குறிப்புகள்

அ. 337
ஆ. ல/59

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..................
ஆ. அகத்தியர் குழம்பு
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 54

## 3. தோற்றக் கூறுகள்

அ. 5 ஏடு; 10 பக்கம்.
ஆ. நீளம் 32 செ. மீ.; அகலம் 3.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 11, 12 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. நல்ல நிலை.
எ. தெளிவாகத் தெரியவில்லை. முற்றும் என எழுதப்படவில்லை.

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பருவதந் தன்னில் வாழும் பரமனார் அருளி னாலே
பெருமையாய் உலகில் வாழும் புண்ணிய சனங்க ளுக்கு
ஒருபல வியாதி வந்தால் உண்மையாய்த் தீரும் என்று
பிரபல முனிவர் கூடிப் பேசிய மருந்து தானே. (1)

ஆ. முடிவு

காரால் வெணங்கன் சென்னகரைகாணி முருங்கை வாழையின்காய்
பாரில் நாரத் தங்காயாம் படர்ந்த தூது வளைவற்றல்
சேரும் ....... .. இதுவல்லால் செய்து பிழைகள் பண்ணாதே
வாரும் சென்னார் பொதிகைமுனி வகுத்துச் சொன்ன வாறிதுவே.

## 5. ..........................

## 6. மாற்றுச்சுவடிகள் காணுமிடம்

1 : 401, 804, 809; 4 : 9496 - 9498 ; 16 : ஆர். 3607, ஆர். 4713, ஆர். 4508, ஆர். 5814, ஆர். 5834; 27 : பா. 4. 253; 60 : 103இ.

## 7. வெளியீட்டுச் செய்திகள்

தமிழ்ப் பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ளது. (1986)

# 492. சானந்த கணேசர் புராணம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 338
ஆ. ந/48

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. பவழப்பாடிப் புலவர்
ஆ. சானந்த கணேசர் புராணம் : மூலமும் உரையும்
இ. காப்பியம்
ஈ. செய்யுளும் உரைநடையும். அச்சில் ஏறத்தாழ 250 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 77 ஏடு; 154 பக்கம்.
ஆ. நீளம் 40 செ. மீ.; அகலம் 3.5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 9,10 வரி.
உ. தெளிவான கையெழுத்து. பிழைகள் மிகுதி.
ஊ. 1 - 3, 12 - 14, 16, 18 - 33, 35, 54, 74, 92 - 100 ஆகிய ஏடுகள் காணப்படவில்லை. சிதைவுற்ற நிலை.
எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தாதவிழ் மலர்ப்பொழில் தருநி றைந்தது ஓர்
கோதறு நைமிச வனத்தில் கூடியே
போதமா முனிவரர் புகல ரும்தவச்
சூதனை நோக்கிமற் றினைய சொல்லுவார்.

(இது 14 ஆவது பாடல்)

ஆ. முடிவு

நிருமலம் உடையவெண் ணீறும் வாழ்கவே
வரமருள் கண்டிகை மாலை வாழ்கவே
ஒருதிரு வஞ்செழுத்து ஓங்கி வாழ்கவே
அரன்அருள் பெற்றபே ரன்பர் வாழ்கவே.

(எ—து) நிருமலமென்பது பரிசுத்ததமாய் விளங்கிய திரு வெண்ணீறும் வாழ்ந்திருக்கவும்! சிவனடியார்கள் கேட்ட வர மெல்லாம் கொடுக்கப்பட்ட ருத்திராட்சமும் வாழ்க! ஒருமைப் பாடாகிய திருமந்திரமும் ஆகிய பஞ்சாட்சரமும் வாழ்க! பரமேஸ் வரனுடைய கிருபாகடாட்சம் பொருந்திய சிவனடியார்களும் வாழ்ந்திருக்க என்றவாறு. (44)

கயிலைச்சருக்கம் முற்றும். ஆகச்சருக்கம் 8 க்குத் திருவிருத்தம் 495.

இ. பிற்குறிப்பு

கீலக வருஷம் ஐப்பசி மாதம் 21 ஆம் தேதி ஆவுடையார் பட்டி..... ரெட்டியார் குமாரன் முத்தாலு ரெட்டி ஓதிய சானந்த கணேசர் புராணம் எழுதி முகிஞ்சுது, முற்றும். சனிக்கிழமை சதயம் நவமி இந்தச் சுபதினத்தில் முடிவு ஆச்சுது. நல்லாற்றூர் செம்பு வய்யர் கையெழுத்து.

5. ........ ....

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1 : 477; 16 : 574, 575; 17 : 190; 25 : 473, 475; 32 :109எ.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 493. வில்லி பாரதம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 339
ஆ. ந/49

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. வில்லிபுத்தூரார்

ஆ. வில்லிபாரதம் : கண்ணன்தூது : மூலமும் உரையும்

இ. காப்பியம்

ஈ. செய்யுளும் உரைநடையும். அச்சில் ஏறத்தாழ 50 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 62 ஏடு ; 124 பக்கம். (ஏட்டெண் 76 முதல்)

ஆ. நீளம் 36.5 செ. மீ. ; அகலம் 3 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 5, 6 வரி.

உ. கிறுக்கலான கையெழுத்து. பிழைகள் மிகுதி.

ஊ. கண்ணன்தூது தொடக்கம் காணப்படவில்லை. 86ஆவது ஏடு இல்லை. உள்ளவை சுமாரான நிலை.

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

மன்றலந் தெரியல் வெய்யோன் மதலைஎன் மதலை என்பது
அன்று எனக்கு உரைத்தீ ராகில் அவனுடன் அணுக வொட்டேன்
சென்றுஉயிர் ஒழிக்கு மாறு செறுவினை விளைத்துப் பின்னை
இன்றுஎனக்கு உரைத்தீர் ஐயா எனநினைந்து என்செய் தீரே.
(158)

ஆ. முடிவு

தாம் தூதாகப் போய்த் துரியோதனனுடனே உங்கள் தாயாதி பட்சம் பாதி நாடு கேட்டருளியதும் அவன் நாடு கொடுப்பதில்லை என்றுரைத்த வர்த்தமானமும், யுத்தஞ் செய்ய உறுதியாகத் துணிந்ததும், விதுரன் தமக்கு உபசரணை பண்ணியதனாலே துரியோதனன் உதாசீனம் சொல்ல அதனாலே விதுரராசன் கோபித்து வில்லை முறித்ததும், ராத்திரி காலத்திலே நில வரையை மூடி அதன் மேல் இந்திரமானம் போலே அலங்காரம் பண்ணித் தம்மை அழைத்து அதன் மேலே இருக்கச் சொல்லி

சற்பனை பண்ணுவித்ததும், கர்ணனுடைய கவச குண்டலம் தேவேந்திரன் வாங்கினதும் குந்திதேவியம்மன்போய்க் கர்ணன் பால்வரம் வேண்டியதொன்றே யொழிய மற்ற வர்த்தமானம் எல்லாம் தம்முடைய மைத்துனரான தருமபுத்திராதி ஐவருக்கும் சொன்னார் ஸ்ரீ நாராயண மூர்த்தியான ஸ்ரீ கிருஷ்ணதேவர் என்றவாறு. (262)

கிருஷ்ணன்தூது எழுதினது முகிழ்ந்தது, ஸ்ரீ ராமசெயம், வெங்கடாசலம் கிருஷ்ணன்தூது.

## 494. திருவாலவாய்க் கட்டளை

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 340
ஆ. ட/60

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..........
ஆ. திருவாலவாய்க் கட்டளை
இ. தத்துவம்
ஈ. உரைநடை. அச்சில் ஏறத்தாழ 20 பக்கம் வரும்

### 3. தோற்றக் கூறுகள்

அ. 16 ஏடு ; 32 பக்கம்.
ஆ. நீளம் 23.5 செ.மீ.; அகலம் 3 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 8 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. நல்ல நிலை.
எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கைக்களிறே ஞானக் கடலே முக்கட நந்து
மெய்க்குலவும் சித்தி விநாயகா—பொய்க்குலவா
மட்டளவில் லாதசிவன் வாய்த்ததிரு வாலவாய்க்
கட்டளைக்குன் பாதமே காப்பு.

ஆ. முடிவு

ஞானநூல் ஓதிச் சிந்தித்து அந்தரியாகம் பண்ணவும். இப்படிச் செய்ய உண்மை வந்து கூடும். இந்தப்படி நேயத் தழுந்துதல் முதலாக எந்த நிலையிலே நின்றாலும் ஆசாரியாரையும் திருக்கோவிலையும் திருவேடத்தையும் மிகவும் வழிபடுவதுவே ஆன்மலாபமென்பன என்றவாறு.

திருவாலவாய்க் கட்டளை முற்றிற்று.

## 495. உபநிடதம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 341

ஆ. ட/61

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. கருணாகர சுவாமி

ஆ. உபநிடதம் : மூலமும் உரையும்

இ. தத்துவம்

ஈ. செய்யுளும் உரைநடையும். அச்சில் ஏறத்தாழ 50 பக்கம் வரும்

### 3. தோற்றக் கூறுகள்

அ. 30 ஏடு ; 60 பக்கம். (ஏட்டெண் 16 முதல் 46 முடிய)

ஆ. நீளம் 23.5 செ. மீ. ; அகலம் 3 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 8 வரி.

உ. தெளிவான கையெழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

மெய்யுடைய அடியார்மேல் விருப்புடையான்
கருப்பூர விளக்குப் போல்என்
பொய்யுடைய இருளகற்றும் பொருளுடையான்
அருளுடையான் பொறிஐந் தாலும்
மையுடைய மனத்தாலும் மயக்குடையார்
மதங்களைத்தாம் மதங்கள் ஆக்கும்
கையுடைய முகமுடையான் அகமுடையான்
தனைக்கருத்திற் கருதல் செய்வாம்.

ஆ. முடிவு

வேதத்திலுண்டான உப நிடதம் முப்பத்திரண்டினும் உண்டானது. எங்கோன் சொன்ன பொருளினைச் சவுபாக்கிய குருவென்றும் பெயரினோடும் இதயத்தில் மருட்சியகலும்படி அளித்த தமிழென்று சொல்லப்பட்ட கவியில் ஒருவழியறிந்த மாத்திரம் முப்பத்திரண்டு செய்யுளாக அருளாகி அகத்திலிருந்து சொன்ன அதியம் எவ்வதிசயமோ தெரியப்படுகிலேன் என்றவாறு. (36)

வேதாந்த சொருபானந்த உபநிடதம் முற்றும். திருச்சிற்றம்பலம்.

5. ..............................

6. மாற்றுச்சுவடிகள் காணுமிடம்

1 : 913 ; 18 : 2886பி ; 25 : 1849, 1850 ; 27 : 206ஏ,

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 496. கைவல்ய நவநீதம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 342
ஆ. ட/62

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. தாண்டவராய சுவாமி

ஆ. கைவல்ய நவநீதம் : தத்துவ விளக்கப் படலம்

இ. தத்துவம்

ஈ. செய்யுள் 110

3. தோற்றக் கூறுகள்

அ. 14 ஏடு ; 28 பக்கம்.

ஆ. நீளம் 23.5 செ.மீ.; அகலம் 3 செ.மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு 9 வரி.

உ. தெளிவான கையெழுத்து.

ஊ. நல்ல நிலை.

ஏ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தொடர் எண் : 311 காண்க.

ஆ. முடிவு

குலவுசற் குருவின் பாதக் குளிர்புனல் தலைமேல் கொண்டால்
உலகினில் தீர்த்தம் எல்லாம் உற்றபேறு உடையார் ஆவர்
நலமிகும் பொருட்கை வல்ய நவநீத, நூலைக் கற்றோர்
பலகலை ஞான நூல்கள் படித்தஞா னிகளாய் வாழ்வார். (110)

சுபமஸ்து. குமாரகுரு தேசிகன் முன்நிற்க. கைவல்லிய நவநீதம் பூர்வபடலம் தத்துவ விளக்கம் முற்றியது.

## 497. வீரசைவ நிட்டானுபூதி

1. நூலகக் குறிப்புகள்

அ. 343

ஆ. ட/63

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..............................
ஆ. வீரசைவ நிட்டானுபூதி
இ. தத்துவம்
ஈ. செய்யுள் 90

## 3. தோற்றக் கூறுகள்

அ. 14 ஏடு, 28 பக்கம்.
ஆ. நீளம் 23.5 செ.மீ.; அகலம் 3 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 8 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. கடைசி 7 ஏடுகள் வலப்புறம் சற்றே முறிந்துள்ளன ; சுமாரான நிலை.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சீர்பூத்த செஞ்சடையில் சுரநதியும்
பிறைமதியும் சேர்ந்து இலங்க
வார்பூத்த குயவனிதை ஒருபுறத்தில்
பசந்துஒளிர வரரி உண்ட
கார்பூத்த மணிவண்ணன் கண்கமலம்
இணைக்கமலக் கழலில் மேவ
ஏர்பூத்த கோவலில்வாழ் வீரட்டத்து
ஒருமுதலை இறைஞ்சு வாமே. (1)

ஆ. முடிவு

கோவல்வீ ரட்டா னுக்கிர கித்துக்
கொடுத்திடும் ஆகமம் வாழி !
(பாவ)னைக்கு அரிதாம் பரகதி அடையப்
பகரும்ஓர் சொற்பொருள் வாழி !

நாவலன் தீவோர் அகத்(திருள் நீங்க)
நற்சிவா தித்தனாய் வந்த
தேவனாம் ஆறு முகசிவ ஞான
தேசிகன் அடிகளும் வாழி ! (90)

## 498. குசேலோபாக்கியானம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 344
ஆ. ந/50

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. தேவராச பிள்ளை
ஆ. குசேலோபாக்கியானம்
இ. காப்பியம்
ஈ. செய்யுள் 772

### 3. தோற்றக் கூறுகள்

அ. 77 ஏடு ; 154 பக்கம்.
ஆ. நீளம் 31 செ.மீ.; அகலம் 4 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 10,11 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. 26 என்னும் ஏட்டெண் தவறாக இருமுறை எழுதப்பட்டுள்ளது. ஈற்றில் சில ஏடுகள் காணப்பட வில்லை. உள்ளவை நல்ல நிலை.
எ. குறை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கடல்உடைப் புவிவாழ் உயிரெலாம் களிக்கக்
காத்தருள் கண்ணனோடு அருநூல்
அடலுறப் பயின்று பின்அவன் அருளால்
அரும்திருப் பெறுங்குசே லன்தன்

மிடலுடைக் காதை விளம்பிட ஊறும்
விரவிடாது அளித்துஅருள் புரியும்
மடலுடைக் கடுக்கைச் சடைமுடிக் கபோல
மதக்கய மழவிளங் கன்றே. (1)

ஆ. முடிவு

அல்கலில் அன்பன் வார்த்தை அனைத்தையும் செவிம டுத்து
மல்குமா மறைகட்கு எட்டா மாயவன் முறுவல் பூத்துப்
பல்குதன் பொருள்வேண் டாது பயனின்றிக் கழிந்த தீய
நல்குரவு அளித்தி என்ற காரணம் நவிற்று கென்றான். (195)

## 499. சல்லியார்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 345
ஆ. ழ/6

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ......................
ஆ. சல்லியம் : மூலமும் உரையும்
இ. மாந்திரீகம்
ஈ. செய்யுளும் உரை நடையும். அச்சில் ஏறத்தாழ 50 பக்கம் வரும்.

### 3. தோற்றக் கூறுகள்

அ. 40 ஏடு ; 80 பக்கம்.
ஆ. நீளம் 30.5 செ.மீ.; அகலம் 3 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 6 வரி.
உ. தெளிவான கையெழுத்து.
ஊ. பல ஏடுகள் பழுதடைந்துள்ளன. 26 ஆம் ஏட்டில் இரு வரிகளே எழுதப்பட்டுள்ளன. மிகச் சிதைந்த நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஆதியாம் மாந்தி ரீகம் ஆய்ந்தவர் முனிவர் தம்மில்
நீதிசேர் சல்யன் என்போன்... .. ... ... நூலைத்
தீதறு தமிழி னாலே செப்பவே புழைக்கை யான்தன்
சோதிசேர் ........... ........... ........... சென்னி மீதே. (1)

ஆ. முடிவு

குருவரு ளாலே சல்யன் கூறிய தொழில்கள் எல்லாம்
குருவரு ளாலே கண்டு குறிப்புடன் அறிய வேணும்
குருவருள் தானே முத்தி குருஇரு பாதம் இரண்டும்
...... கொண்டனன் சென்னி மீதே. (100)

சல்லிய நூல் முற்றும்.

5. ..........................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

1 : 818 ; 16 : 1987, ஆர். 2490, ஆர். 4908, 6492 ; 17 : 236 ; 18 : 3972ஏ, 6284, 6400சி, 6683பி, 8088பி, 8848சி, 9288 ; 27 : பா. 4.246, 721ஏ, 929பி ; 28 : 10800.

## 500. அல்லமப்பிரபு சடுத்தலம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 346
ஆ. ட/64

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..........................
ஆ. அல்லமப்பிரபு சடுத்தலம்
இ. தத்துவம்
ஈ. செய்யுள் 48

## 3. தோற்றக் கூறுகள்

அ. 9 ஏடு ; 18 பக்கம்.
ஆ. நீளம் 31.5 செ.மீ.; அகலம் 3.5 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. பக்கத்திற்கு 7,8,9 வரி.
உ. அழகிய தெளிவான கையெழுத்து.
ஊ. நல்ல நிலை.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சிற்பரம தேசிகன்பொற் பாதம் போற்றித்
திகழ்பரம ரகசியத்தில் சிறந்து கூறும்
பொற்பமரும் சடுத்தலத்தை வல்ல வாறு
புகன்றதன்பின் அல்லமாப் பிரபு தேவர்
பற்பதவெற் பினிலிருந்து முனிவர் போற்றப்
பரிவினுடன் உதவுசடுத் தலமது ஆகும்
அற்புதமாம் அத்துவித சித்தாந் தத்தை
அரன்அருளால் அறிந்தபடி அறைய லுற்றாம். (1)

ஆ. முடிவு

ஆதி நாயகன் ஐந்தெழுத் தோங்குக
பூதி சாதனம் எங்நும் பொருந்துக
வேத வாகம நீதி விளங்குக
கோதி லாத்திருச் சங்கம மோங்கியே. (48)

திருச்சிற்றம்பலம். அல்லமாப்பிரபு தேவர் சடுத்தலம் முற்றும்.

## 5. ..............................

## 6. மாற்றுச்சுவடிகள் காணுமிடம்

32 : 110 சி.



பின்னிணைப்பு : 1

## நூலாசிரியர் அகர வரிசை

(எண்: நூல் வரிசை எண்)

மீனாட்சி சுந்தரம்பிள்ளை—90, 93, 104 165

பின்னிணைப்பு : 2

## நூற்பெயர் அகர வரிசை

(எண் : நூல் வரிசை எண்)

பின்னிணைப்பு : 3

## பொருட்பாகுப்பு வரிசை

(எண் : சுவடிகளின் தொடர் எண்)

### இலக்கணம்

(குறிப்பெழுத்து :ச)

27—30, 77, 100—102, 105, 111, 179, 188, 189, 191, 201 226, 243, 244, 258, 332 ஆக மொத்தம் 20 சுவடிகள்.

### உரைநடை இலக்கியம்

(குறிப்பெழுத்து : ம)

3, 4, 6, 228, 335 ஆக மொத்தம் 5 சுவடிகள்.

### காப்பியம்

(குறிப்பெழுத்து : ந)

17, 26, 70, 71, 79, 81, 82, 85, 86, 96, 104, 110, 112, 115, 135—138, 180—182, 193, 195, 199, 217, 224, 227, 230—238, 240, 241, 246—248, 255, 260, 266, 308, 313, 336, 338, 339, 344 ஆக மொத்தம் 50 சுவடிகள்.

### சிற்றிலக்கியம்

(குறிப்பெழுத்து : ய)

59, 107, 123, 129, 197, 198, 200, 202, 218—220, 242, 254, 259, 297—300, 310, 316, 319—321, 323—325, 333, 334 ஆக மொத்தம் 28 சுவடிகள்.

### சைவத்திருமுறை

(குறிப்பெழுத்து : ண)

2, 12—15, 53, 55, 61—63, 69, 72, 84, 98, 113, 120, 194 211, 277, 322, 327. ஆக மொத்தம் 21 சுவடிகள்.

## சோதிடம்
(குறிப்பெழுத்து : வ)

89, 90, 161, 175—177, 183, 205—207, 225, 239, 252, 253 ஆக மொத்தம் 14 சுவடிகள்.

## தத்துவம்
(குறிப்பெழுத்து : ட)

32, 88, 117, 121, 127, 192, 203, 208, 209, 213, 245, 249, 261—265, 268—276, 278—290, 292—296, 301—307, 311, 312, 314, 315, 326, 328, 330, 340—343, 346 ஆக மொத்தம் 64 சுவடிகள்.

## தல புராணம்
(குறிப்பெழுத்து : ப)

56, 58, 64, 66—68, 73—76, 78, 83, 106, 114, 124—126 134, 139, 140, 142, 251, 267, 291, 331 ஆக மொத்தம் 25 சுவடிகள்.

## நாட்டுப் பாடல்
(குறிப்பெழுத்து : ர)

5, 25, 54, 91 ஆக மொத்தம் 4 சுவடிகள்.

## நீதி நூல்
(குறிப்பெழுத்து : ள)

196, 214, 221, 256 ஆக மொத்தம் 4 சுவடிகள்.

## பதினெண் கீழ்க்கணக்கு
(குறிப் பெழுத்து : ங)

130—132, 178, 186, 190 ஆக மொத்தம் 6 சுவடிகள்.

## பல்வகை நூல்கள்
(குறிப்பெழுத்து : ற)

16, 31, 38, 60, 87, 118, 119, 184, 185, 187, 204, 250, 257, 309, 318, 329 ஆக மொத்தம் 16 சுவடிகள்.

## பாட்டும் தொகையும்
(குறிப்பெழுத்து : க)

128 ஒரு சுவடி மட்டும்.

## பிற தோத்திரங்கள்
(குறிப்பெழுத்து : த)

65, 92, 122, 143, 145, 215, 216, 222, 223, 229, ஆக மொத்தம் 10 சுவடிகள்.

## மருத்துவம்
(குறிப்பெழுத்து : ல)

1, 7-11, 18-24, 33-37, 39-52, 97, 144, 146-160, 162, 163, 166, 167, 170-173, 212, 337 ஆக மொத்தம் 59 சுவடிகள்.

## மாந்திரீகம்
(குறிப்பெழுத்து : ழ)

164, 165, 168, 169, 174, 345 ஆக மொத்தம் 6 சுவடிகள்.

## மெய்கண்ட சாத்திரம்
(குறிப்பெழுத்து : ரு)

57, 80, 93-95, 99, 103, 108, 109, 116, 133, 141, 210. ஆக மொத்தம் 13 சுவடிகள்.

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 2 | 4 | எழுந்து நிலை | எழுத்து நிலை |
| 20 | 13 | பெரிய புரணம் | பெரிய புராணம் |
| 22 | 24 | இவ்லையே | இல்லையே |
| 25 | 8 | — | எ. முழுமை |
| 26 | 20 | வரிசை எண் : 17 | தொடர் எண் : 14 3 |
| 35 | 6 | — | ப. குறை |
| 40 | 14 | கெரள்ளப்பட் | கொள்ளப்பட் |
| 71 | 19 | 54 | 51 |
| 76 | 19 | மாததகிகம் | மாத்தகிகம் |
| 84 | 3 | அருளனார் | அருளினார் |
| 90 | 21 | பமுதுற்ற நிலை | பழுதுற்ற நிலை |
| 98 | 11 | ைங்கரனைப் | ைறங்கரனைப் |
| 105 | 8 | தெளிவாளது | தெளிவானது |
| 106 | 21 | கிறிய | சிறிய |
| 108 | 23 | தமிமுண்மையை | தமிழுண்மையை |
| 117 | 23 | திருநயே | திருந்து...ய |
| 155 | 17 | 21 : 2 | 21 . . 2 |
| 162 | 33 | தபிரான் | தம்பிரான் |
| 171 | 2 | தத்துவ நரதர் | தத்துவ நாதர் |
| 175 | 8 | 35 செ.மீ. | 3.5 செ.மீ. |
| 176 | 2 | 317 | 31 - - 7 |
| — | 8 | செரக்கலிங்கம் | சொக்கலிங்கம் |
| 178 | 14 | 166 | 167 |
| 182 | 4 | 792 | 772 |
| 202 | 17 | 95 | 96 |
| 211 | 13 | எழுத்திகாரச் | எழுத்ததிகாரச் |
| 235 | 11 | 166 | 77 |
| 249 | 6 | வரூம் | வரும் |
| 274 | 2 | நாடியிலே | நாபியிலே |
|  | 12 | பஞ்ச கவவிய | பஞ்ச கவ்விய |
| 275 | 3 | தற்பிராசித்தஞ் | தற்பிராயச்சித்தஞ் |

| | | | |
|---|---|---|---|
| 279 | 14 | திரவியங்களைஞ் | திரவியங்களையுஞ் |
| 338 | 6 | - - - - - - - | அகத்தியர் |
| 343 | 7 | சிவமகத்தி | சிவமகத் |
| 358 | 10 | சென்னோன் | சொன்னோன் |
| 373 | 20 | 162-1 | 165-1 |
| 376 | 2 | 398 | 298 |
| 401 | 22 | பொண்ணொரு | பெண்ணொரு |
| 430 | 16 | பராாசர் | பரராசர் |
| 452 | 24 | தெரடக்கம் | தொடக்கம் |
| 453 | 15 | 349 | 339 |
| | 17 | 208 | 209 |
| 461 | பக்க எண் | 561 | 461 |
| 462 | 7 | குாவு | குரவு |
| 481 | 17 | 372 | 362 |
| 483 | 11 | 373 | 363 |
| 494 | 26 | பதிகத்திண் | பதிகத்தின் |
| 497 | 26 | சொனன | சொன்ன |
| 527 | 30 | னேசகன | னேசனக |
| 575 | 3 | நிவர்த்தியாதற்க | நிவர்த்தியாதற்கு |
| 576 | 7 | யிருக்சின்ற | யிருக்கின்ற |
| 628 | 24 | தெளிவாள | தெளிவான |
| 629 | 9 | தனனையெ | தன்னையே |
| 639 | 17 | சிதப்பரா புரணம் | சிதம்பர புராணம் |
| 642 | 4 | வர்ச்சியம் | வாச்சியம் |
| 645 | 30 | முுந்தது | முடிந்தது |
| 651 | 6 | பரிகத்ததமாய் | பரிசுத்தமாய் |
| 655 | 18 | சொரூபானத்த | சொரூபானந்த |
| 664 | 1 | கவிராயா | கவிராயர் |
| 672 | 21 | திருவாந்தாதி | திருவந்தாதி |
| 676 | 23 | [illegible] | விவேக சட்கம் |

